# செங்கோட்டை ஸ்ரீ ஆவுடை அக்காள்

(பக்தி, யோக, ஞான, வேதாந்த ஸமரஸ)

## பாடல் திரட்டு



ஸ்ரீ ஞானனந்த நிகேதன்

# செங்கோட்டை
# ஸ்ரீ ஆவுடை அக்காள்

(பக்தி, யோக, ஞான, வேதாந்த, ஸமரஸ)

பாட்டல் திரட்டு

*பதிப்பாசிரியர் :*

நித்யானந்த கிரி ஸ்வாமிகள்



2002

ஸ்ரீ ஞானானந்த நிகேதன்
ஸ்ரீ ஞானானந்த தபோவனம்
தபோவனம் அஞ்சல் - 605 756
விழுப்புரம் ரா.ப. மாவட்டம்
தமிழ்நாடு

10/2

# பொருளடக்கம்

# ஸமர்ப்பணம்

தமிழ்நாட்டின் பெருமை மிக்க பெண்டிர் ஞானிகளில் ஒருவரான ஆவுடையக்காளை பலரும் அறிந்திருப்பர். சுமார் 350 ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலி ஜில்லாவில் செங்கோட்டையில் ஒரு அந்தண குடும்பத்தில் பிறந்தவர். சிறு பெண்ணாகயிருக்கும் போதே உயர்ந்த தியான அனுபவங்களைப் பெற்று வந்தார். மிகவும் இள வயதிலேயே விதவையான அவர் செங்கோட்டைக்கு விஜயம் செய்த திருவிசைநல்லூர் ஸ்ரீதர வெங்கடேச அய்யாவாள் என்ற புகழ் பெற்ற மகானின் அனுக்கிரஹத்தைப் பெற்றார். அவரிடமிருந்து மந்திரதீக்ஷையும், வேதாந்த ஞான உபதேசமும் பெற்று, பகவத் கிருபையால் ஆன்மீக வாழ்க்கையில் வெகு விரைவாக முன்னேறினர். ஆத்மானுபூதியில் லயித்து உன்மத்தையாக இருந்தார். பண்டித பாமரர்கள் எல்லோராலும் கொண்டாடப்பட்டு மிக பிரபலமடைந்தார்.

ரிஷிகேசம் ஸ்ரீ சிவானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் ''மஹாத்மாக்கள் சரித்திரங்கள்'' என்ற நூலில் ஆவுடையக்காளின் வரலாற்றை எழுதியுள்ளார்கள். ''அவர் என்ன சொன்னாலும், பாடினாலும் அது அவரது ஆத்மானுபவத்தையே பிரதிபலித்தது. ஜனங்கள் எல்லோரும் அவரது அருளாசிகளுக்காகத் திரண்டு வந்தனர். பாட்டு மேல் பாட்டாக அவர் அருளிய அருட்பாக்களில் உபநிஷத்துக்களின் ஆன்மீக உண்மையே தொடர்ந்து இழையோடுகின்றது.''

நெல்லை வட்டாரத்தில் வீடுகளில் அக்காலத்தில் பேச்சு வழக்கில் இருந்த மிகவும் எளிமையான தமிழ்நடையில் உள்ள அக்காளின் பாடல்கள் ஆன்மீக அனுபவங்களையும் வேதாந்த உட் கருத்துக்களையும் அள்ளிக் கொட்டும் ஊற்றுக்கள். கிராமத்திலுள்ள சாதாரண காட்சிகளும் வீட்டு விசேஷங்களும் அரிய வேதாந்தச் சிந்தனைக் கிளர்ச்சியை தூண்டுவதாக அமைந்திருப்பது அவரது உயர்ந்த பிரக்ஞையையே வெளிப்படுத்துகின்றது. யோகவாஸிஷ்டம், பஞ்சதசீ போன்ற நூல்களிலிருந்து கதைகளையும் கருத்துக்களையும் கொண்ட கும்மி போன்ற நாட்டுப்புறப் பாடல்கள், 'வேதாந்தக் குறவஞ்சி', 'வேதாந்த ஞானரஸக் கப்பல்', 'வேதாந்தப் பள்ளு', 'வேதாந்த வித்தியா சோபனம்', 'சூடாலைக்கும்மி' போன்ற தொடர்பாடல்களும், ஞானரஸக் கீர்த்தனைகளும் மிகவும் பிரசித்தி பெற்றவை. ஒவ்வொரு பாட்டிலும் தமது குருவை வணங்குவதோடு, குரு

கிருபையில்லாவிடில் ஆத்மானுபூதி ஏற்படாது என்பதையும் அடிக்கடிக் குறிப்பிடுகிருர்.

அக்காளின் அருட்பாடல்கள் ஸாதனுமார்க்கங்களைக் காட்டுவதுடன் ஆன்மீக நிறைவையும் அமைதியையும் தருகின்றன. ஆகவே, திருநெல்வேலி வட்டாரங்களில் அவற்றை வீடுகள் தோறும் மாதர்கள் கர்ணபரம்பரையாகக் கேட்டுப் பாடம் பண்ணி காலாகாலங்களில் உள்ளக் களிப்பு அளிக்கும் பாடல்களாகவும் பூஜா காலங்களில் பாராயணமாகவும் ஓதப்பட்டு வந்துள்ளன. தமிழ்நாட்டு கிராமப்புறங்களில் எப்படி உயர்ந்த ஆன்மீகப் பண்பும் கலாசாரமும் ஈடுபாடும் மாதர்களிடையே தோன்றி பரவி வந்துள்ளது என்பதற்கு இது ஒரு சான்ருகும்.

ஸ்ரீ வைகுண்டத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி கோமதி ராஜாங்கம் என்ற ஒரு வித்த கர், ஆன்மீக எழுத்தாளர், பிற்காலத்தில் காசியில் சிருங்கேரி மடத்தில் பல வருஷங்கள் வாழ்ந்தவர். ஆவுடையக்காளின் பாடல்களில் மிகவும் ஈடுபாடு உடையவர். ‘‘தமிழ்உலகம் போற்றி வணங்கும் ஔவையாருக்கும் இணை யாகக் கூட ஆவுடையக்காளைக் கூறலாம்’’ என்கிறார். அவரது சித்தப்பாவான மகாகவி சுப்பிரமண்ய பாரதியாருக்கு அக்காள் பாடல்கள் என்ருல் உயிர் என் றும், அவற்றின் கருத்துக்களையொட்டியே அவரும் அநேக வேதாந்தப் பாடல் களைப் புனைந்திருக்கிருர் என்றும் கூறுகிருர்.

அக்காலத்தில் கர்ணபரம்பரையாக வந்த பாடல்கள் பக்தர்களால் எழுதி வைக்கப்பட்டு மற்ருேர்க்குத் தெரிய வந்தன. 1890-1910ல் ஸ்ரீ வைத்தியநாத பாரதியாரும், ஸ்ரீ இராமஸ்வாமி தீக்ஷிதரும் தஞ்சை திருவாதியில் சில பாட்டுக்க ளையும், தொடர்பாடல்களையும் சிறுசிறு பாட்டுப் புத்தகங்களாக வெளியிட்டனர். அக்காளின் பாடல்களில் பலவற்றைத் தொகுத்து வெளியிட்ட பெருமை ஸ்ரீ ஆய்க்குடி வெங்கடராம சாஸ்திரிகள் அவர்களைச் சாரும். 1953ல் பிரசுரமான அப்புத்தகத்தில் சில தொடர் பாடல்களும் பாட்டுக்களும் இடம் பெறவில்லை. பிற்காலத்தில் அவர் ஸ்ரீசிவானந்த ஆசிரமத்தில் சந்நியாச தீக்ஷை பெற்ற பின்பும் அவற்றை சேகரிப்பதில் தொடர்ந்து ஈடுபட்டிருந்தார் என்று தெரிகிறது.

சுமார் 15 வருடங்களுக்கு முன் காசியில் சிருங்கேரி மடத்தில் தங்கும் போது கோமதி ராஜாங்கம் அம்மையாரை அடிக்கடி சந்திக்க எமக்கு வாய்ப்பு கிடைத்தது. அவர்கள், அக்காளின் எல்லாப் பாட்டுக்களையும் தொகுத்து

இரண்டாவது பதிப்பை பிரசுரிக்க வேண்டும் என்று தெரிவித்தார்கள். நெல்லையைச் சேர்ந்த பல அன்பர்களும் தங்களிடமிருந்த பழைய சிறுபாடல் புத்தகங்களையும் கையெழுத்துப் பிரதிகளையும் மனமுவந்து கொடுத்தார்கள். அவர்களில், ஸ்ரீ ஞானனந்த தபோவன ஆசிரமவாசியான காலம் சென்ற சிவராமகிருஷ்ணய்யர், நெய்வேலி 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி ஹரிஹர கிருஷ்ணன், ல. ஸ்ரீனிவாசன் அவர்கள் பேருதவி செய்தார்கள்.

பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகளின் முன்னிலையில் ஆவுடையக்காளின் சில பாடல்களைப் பாடுவது வழக்கம். அப்பாட்டுக்களின் தொகுப்பை, ஆசிரமத்து ஆவணக் காப்பகத்திலிருந்து ஆசிரமத் தலைவர் ஸ்ரீ சுந்தர ரமணன் கொடுத்து உதவியுள்ளார்.

கர்ணபரம்பரையாக வந்ததினால், சிறுபாடல் புத்தகங்களிலும், ஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களின் தொகுப்பிலும், கையெழுத்துப் பிரதிகளிலும் பல பாட பேதங்களும் பிழைகளும் காணப்படுகின்றன. கூடிய மட்டும் அவற்றை சீராக்கி இந்த இரண்டாம் பதிப்பு வெளிவருகிறது.

முதல் பதிப்பில் உள்ளவற்றுடன் கீழ்க்கண்டவை இப்பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளன.

1. 1910ல் பிரசுரமான 'பிரம்மமேகம்' என்ற சிறுபாடல் புத்தகத்திலிருந்து 'ஆவிடையம்மாள் சரித்திரம்'.

2. ஸ்ரீமதி கோமதி ராஜாங்கம் எழுதிய
'ஸ்ரீ ஆவுடையக்காள்' (ஸ்ரீசங்கரக்ருபா, நவம்பர் 1964).
'சூடாலைக் கதை'' (ஸ்ரீசங்கரக்ருபா, நவம்பர் 1965).

3. சூடாலைக் கும்மி (ஸ்ரீசங்கரக்ருபா, பிப்ரவரி-ஜுன் 1966).

4. 'ஸ்ரீவித்தை சோபனம்' ஸ்ரீமதி கோமதி ராஜாங்கம் எழுதிய விளக்கங்களுடன் (ஸ்ரீசங்கரக்ருபா, ஜுலை-செப்டம்பர் 1965).

5. ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி படனம்

6. வாலாம்பிகை பந்து

7. அத்வைத தாலாட்டு

8 & 9. 'அனுபோக ரத்னமாலை', 'ஸ்ரீமத் பகவத் கீதா ஸாரம்' – இவை அதிகமாக பழக்கத்தில் இல்லை. சற்று முன்னும் பின்னுமாக சிதைந்திருப்பவை, சீராக்கப்பட்டுள்ளன. அக்காளுக்குக்குரியதான பாணியில் வேதாந்தபரமானவை.

'விவேக சிந்தாமணி' என்ற மிகவும் பழமையான பத்திரிகையின் ஓர் இதழைப் பார்க்க நேர்ந்தது. (மலர்-12, இதழ் 9, ஜனவரி 1904). அதில் ''பகவத் கீதை வசனம் என்னும் ஸ்ரீபகவத் கீதா ஸார ஸங்கிரஹம்'' என்ற தொடர்பாடல் காணப்படுகிறது. அதில் விபூதி யோகம், தசாவதாரம், விச்வருப தரிசனம் இவற்றைப் பற்றியே அதிகமாக இருப்பதால் அக்காளின் மற்ற பாடல்களிலிருந்து சற்று வித்தியாசமாகத் தோன்றலாம். எனினும் இது 100 வருடங்களுக்கு முன்னர் ஸ்ரீ முத்து ஐயர் என்பவரால் சோதிக்கப்பட்டது என்பதாலும்; ஆவிடையம்மாள் சரித்திரம் முகவுரையில் காண்பதாலும் இந்த ''ஸ்ரீமத் பகவத் கீதா ஸார ஸங்கிரஹமும்'' சேர்க்கப்பட்டுள்ளது.

இந்த நூலுக்கு அணிந்துரையுடன் தமது அருளாசியை வழங்கியுள்ள பரனூர் மஹாத்மா ஸ்ரீ கிருஷ்ணப்ரேமி ஸ்வாமிகளுக்கு எமது நாராயணஸ்மிருதி பூர்வகமான நன்றி.

இந்தத் தொகுப்பை பிரசுரிப்பதில் பலவிதமான உதவியளித்த எல்லா அன்பர்களுக்கும் இவற்றை கணிப்பொறியில் வடிவமைத்த ரிப்ளிகா நிறுவனத்தாருக்கும், அழகாக அச்சிட்டுத் தந்த ஸுதர்சன் கிராபிக்ஸ் ஸ்ரீ நா. சுப்பிரமண்யன் அவர்களுக்கும் எங்களது நாராயணஸ்மிருதி.

இந்த பாட்டுக்களைப் படிப்பதும் பாடுவதும், ஞானஸாதனமான ச்ரவணமாகும். இதில் உள்ள ஆழ்ந்த வேதாந்தத் தத்துவங்களை மீண்டும் சிந்தித்தல் மனனமாகும். மேலும் இடைவிடாமல் தியானித்து நிதித்யாசனம் செய்து ஸத்குரு கிருபையால் எல்லோரும் ஆத்ம ஞானானந்த அனுபூதியைப் பெற்றுய்ய வேண்டுமென்று பிராத்திக்கிறோம்.

ஆவுடையக்காளின் பாட்டுக்களில் ஸாதகர்களின் உத்ஸாகம் பெருகி வருகிறது. பன்னிரண்டு பாடல்கள் ஸ்ரீ நாகஸுந்தரம் அவர்களின் விளக்கவுரையுடன் 'தத்த பிரஸாதம்' என்ற சேந்தமங்கலம் ஸ்ரீ கிருஷ்ணானந்த அவதூத ஸ்வாமிகளின் ஆசிரமத்து மாதப் பத்திரிக்கையில் வெளியாகியுள்ளன.

ரிஷிகேசம் ஸ்ரீ சிவானந்தா ஸ்வாமிகளின் பல நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ள ஆன்மீக எழுத்தாளர் ஸ்ரீ மு. ஸ்ரீனிவாசன் அவர்களின் 'செங்கோட்டை ஞானி ஆவுடையக்கா' என்ற கட்டுரை கலைமகள் மார்ச் 2002 இதழில் பிரசுரிக்கப்பட்டு, பல அன்பர்களின் கவனத்தை ஈர்த்துள்ளது. அதில் அக்காளின் சரித்திரக்குறிப்புகளுடன், அவரது பாடல்களின் இலக்கியச் சிறப்பையும் எடுத்துக்காட்டியுள்ளார்.

இந்த தொகுப்பில் ஆய்குடி வெங்கடராம சாஸ்திரிகளின் பதிப்பிலுள்ள ஞானரஸக் கீர்த்தனைகள் மட்டும் இடம் பெறுகின்றன. இந்த நூலை அச்சிலேற்றும் தருவாயில் சில அன்பர்கள் மூலம் மேலும் சில பாடல்கள் கிடைத்துள்ளன. அவற்றைப் பரிசோதித்து விரைவில் ஸ்ரீ ஆவுடை அக்காளின் கீர்த்தனைகளை மாத்திரம் ஒரு தனி வெளியீடாக பிரசுரித்தால் மிகவும் உபயோகமாக இருக்கும் என்று கருதுகிறோம்.

ஆவுடையக்காளின் பாடல்களை மீண்டும் பிரபலமாக்கவேண்டுமென்று மிகுந்த ஆர்வம் கொண்டிருந்த கோமதி ராஜாங்கம் அம்மையாரின் ஸேவையை நினைவிற்கொண்டும், இந்த நூலைப் பிரசுரிப்பதில் ஊக்கமளித்த எமது குருவாகிய பரமபூஜ்ய ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகளை ஸ்மரித்துக் கொண்டும் இதை ஸத்குரு ஸ்ரீ ஞானானந்தகிரி ஸ்வாமிகளின் பாதாரவிந்தங்களில் ஸமர்ப்பிக்கிறோம்.

ஸ்ரீஞானானந்த நிகேதனம் — நித்யானந்தகிரி ஸ்வாமிகள்
ஸ்ரீஞானானந்த தபோவனம் 605 756
சித்ரபானு ஸு, சித்திரை மீ 13உ
பௌர்ணமி, 26.4.2002
வெள்ளிக்கிழமை.

# அணிந்துரை

ஸ்ரீ ஹரி:

தபோவனத்தில் வித்யானந்தகிரி என்ற ஒரு மஹான் இருந்தார். ஒரு ஸமயம் அவரிடம் நான் கேட்டேன் ''உலகத்திலிருந்து கொண்டே உலகம்பொய் என்று எப்படி சொல்வது?'' என்று. அதற்கு அவர் விடை அளித்தார். ''ஒரு ஸமயம் எனக்குத் தாளமுடியாத துயரம் ஏற்பட்டது. ஐயோ! இது எல்லாம் பொய்யாக இருந்தால் தேவலையே என்று நினைத்தேன். அப்போதுதான் ''பிரஹ்ம ஸத்யம் ஜகன்மித்யா'' என்ற அத்வைத ஸித்தாந்தம் எனக்கு நிம்மதி தந்தது. அதுபோல் அவரவர்களுக்கு அனுபவத்தால் வந்தால் தான் தெரியும்'' என்றார்.

அதுபோல் ஆவுடைஅக்காள் பால்யத்திலேயே விதவையாகி விட்டதால் அவளுக்கு வந்த துயரம் வைராக்கியத்தையும் ஞானத்தையும் தந்துவிட்டது. ஸ்வானுபவத்தினுல் பாடிய இந்தபாடல்கள் உலகில் யாவருக்கும் ஞானத்தையும் சாந்தியையும் தரும். முக்யம், பெண்கள்கூட உபநிஷத்து படிக்காமலேயே ஞானம் பெற இது ஸுலபமான வழி. இவை எளிய தமிழ் நடையில் நாட்டுப்பாடலாக அமைந்திருப்பதால் யாவரும் பாடலாம்.

தமிழகத்திலிருந்து ஔவையார், காரைக்காலம்மையார் முதலியவர் களைப் போல் ஆவுடையக்காளும் ஒருவள் என்று சொல்லாமலேயே விளங்கும்.

இதை வெளியிடும் தொண்டு சிறந்தது. ஞானதானமே அன்னதானத்தை விட சிறந்தது. யாவருக்கும் சாந்தி உண்டாகட்டும்.

– ஸ்ரீ கிருஷ்ணப்ரேமி அண்ணா

தபோவனம்
31.12.2001
ஸ்ரீ ஞானந்த ஸ்வாமிகள் ஆராதனே

# அன்பளிப்பு

(முதற்பதிப்பு)

ஆனந்தானுபவத்தின் மேலீட்டில் ஸ்ரீ ஆவுடையம்மாள் தயை மேற்கொண்டு ஸமஸ்த ஜனங்களும் ஆத்மஞானமடைந்து ஜீவன்முக்தர்களாக வேண்டி பரடியுள்ள பாடல்கள் இங்கு அச்சிடப்பட்டிருக்கிறவைகளை, பல இடங்களிலுமிருந்து எனக்கு கிடைக்கத்தந்த பலருக்கும், இந்த பாடல்களை இவ்வளவு அழகாகவும், வெகு காலத்துக்கு அளவிறந்த ஜனங்களுக்கு உபகாரமாகயிருக்கும்படியும், அச்சுப்போட்டு தந்து உதவிய ஸ்ரீ S.V. ஸ்வாமி அவர்களுக்கும், கொஞ்சமும் சிரமத்தைப் பாராமல் மிகுந்த அக்கரையுடன் அச்சிட்டுத்தந்த ஜெயம் கம்பெனி, பாலா அச்சுக்கூடப் பதிப்பாளருக்கும், பல தொந்தரவுகளிடையில், அச்சுப் போட்டு வருவதையெல்லாம் வெகு சிரத்தையுடன், சரிபார்த்து தந்த எனது மித்திரரான ஸ்ரீ நா. இராமசந்திரய்யருக்கும், இதற்கான எல்லா ஏற்பாடுகளையும் கவனித்து செய்து தந்த ஸ்ரீ வெ. குஞ்சிதபாதம் அய்யருக்கும், மற்றும் ஸகாயகாரிகளாயிருந்த எல்லாருக்கும் பரமகுரு ஸ்ரீவெங்கடேசுவரர், ஆவுடையம்மாளுடைய பரிபூர்ண கிருபையிருந்து இஷ்டார்த்த ஸித்திகளையடைந்து ஞானனந்த பிராப்தியுண்டாக மிகவும் வேண்டுகிறேன்.

இந்த புஸ்தகம் ஆஸ்திக ஜனங்களுள் அமர்ந்து கிடக்கும் ஆர்வத்தை தூண்டி பரமலக்ஷியத்தில் ருசியை உண்டாக்கி அதை அடைய கட்டாயம் வேண்டியபடி முயற்சிக்க செய்து ஞானனந்த பிராப்தியை நிச்சயம் செய்விக்குமென்பதில் கொஞ்சமும் ஸந்தேகமில்லை.

விஜய ஸூ சித்திரை மீ 16உ
1128, கொல்லம், பௌர்ணமி 23.4.1953
செவ்வாய்க்கிழமை

ஆய்குடி வெங்கடராம சாஸ்திரி

# முகவுரை

(முதற்பதிப்பு)

ஸ்ரீ சங்கர பகவத்பாதாள் திருவிசைநல்லூரில் ஸ்ரீவெங்கடேச்வரராய் அவதரித்து ராமநாம மகிமையை உலகமெங்கும் பரவும்படிசெய்து வரும்போது திருவனந்தபுரம் ஸமஸ்தானத்தை சேர்ந்த செங்கோட்டை ஆற்றங்கரை தெருவில் ஆவுடையம்மாள் என்ற மங்கை பால்யத்திலேயே கணவனை இழந்து நாம் இனி என்னசெய்வோம், கடவுளை வணங்கி இனிமேல் ஜன்மமேயில்லாதபடி எப்படி செய்வோம், என்று மகா தாபத்துடனிருக்க, பகவத்கிருபையினுல் அந்த ஸமயம் ஸ்ரீ வெங்கடேசுவரர் தாமே அவ்விடம் போய் ஆற்றங்கரை தெருவில் ராம நாமத்தையே உரக்க சொல்லிக் கொண்டு வருவதை அம்மங்கை கேட்டு மனம் கசிந்து அப்பெரியோர் பாதகமலத்தில் பணிந்து கை கூப்பி என்னை துக்ககடலில் நின்றும் கரையேற்றிவிட வேணுமென்று வினயவணக்கத்துடன் கேட்க, அப்பெரியோர் அந்நங்கைக்கு இரங்கி தலைமேல் கையை வைத்து அனுக்கிரகித்து உபதேசம் செய்து ஆத்மஞானத்தையும் அதற்கான ஸாதனங்களையும் அருளி, அடிக்கடி வந்து அவள் சரியாய் அப்பியசித்து வருகிருளா என்று கவனித்துவர, அம்மங்கை குருநாதனருளினுல் நிர்விகல்பஸமாதியுமிருந்து ஆனந்தத்தை யனுபவித்து, ஸந்தோஷம் மேற்கொண்டு, பரிபூர்ண தயவுடனே கலியிலுள்ளோர் அனைவரும் ஜன்மதுக்கத்தை யொழித்து ஆத்மானந்தத்தை யனுபவித்து ஜீவன்முக்தாளாகவேணுமென்று எண்ணி எத்தனையோ பாடல்கள் பாடினதில் ஏட்டு பிரதிகளில் அங்கங்கே சிதறிக் கிடந்ததை என்னுலானவரை தேடி விசாரித்து என்கையில் கிடைத்ததை எடுத்து, பெரியோர்களால் பார்வை யிடப்பட்டு, இந்த பாடல்கள் இங்கு தொகுத்து கோர்த்து அச்சிடப் பட்டிருக்கின்றன. 400 வருஷமாகியும், ஆவுடையம்மாள் திருக்குற்ருலம் மலையிலேறினவள் இன்னும் வரவில்லையென்று இன்றும் வழங்கி வருவது எல்லோருக்கும் தெரிந்ததே. ஆஸ்திக ஜனங்கள் யாவரும் ஸ்வானுபவத்தின் மேலீட்டினுல் வெளிவந்த இந்த பாடல்களை படித்து ஈசுவரனைப் பிரார்த்தித்து, பரமகுருவை நாடி, அவரருளும் உபதேசமும் பெற்று, ஸத்ஸங்கம்கொண்டு, ஸாதனங்களுடன் திடவிசுவாசத்தோடு தொடர்ந்து அப்பியஸித்து ஆத்ம ஞானனந்தத்தை அடைந்து பவஸாகரத்தை கடந்து முமுக்ஷுக்களாக வேணுமாய் மிகவும் பிரார்த்திக்கிறேன்.

சென்னை. ஆய்குடி அ.வெங்கடராம சாஸ்திரி

உ

சிவமயம்

சிவகணபதி துணை

# ஆவிடையம்மாள் சரித்திரம்

''பிரம்ம மேகம்'' எனும் சிறுபாட்டு பிரசுரத்திலிருந்து

1910ம் வருடப் பதிப்பு

மலையாள சமஸ்தானத்தைச் சேர்ந்த செங்கோட்டை என்னும் க்ஷேத்திரத்தில் சுமார் 100 வருஷத்திற்கு முன் அந்தணர் குலத்தில் ஆவிடையம்மாள் என்னும் ஓர் பெண் அவதரித்தாள். அப்பெண் மிகச் சாந்தையாய், உத்தம குணம் வாய்ந்தவளாய், புத்திசாலியாய் வளர்ந்து வருகையில் அவளுக்கு பதினொருமாண்டு அணுகவே, ''ஆ! கஷ்டம்! வினை கொடிது! கொடிது! ''முன் செய்த வினையோ இங்ஙனே வந்து மூண்டதுவே! எனும்படி, பெற்றோரால் பாலியத்தில் விவாகமடைந்த அவளது பர்த்தா பரகதி யடையவே தன் கெதியை நினைத்து நினைத்து ஆருத்துயரமடைந்து, பின் ஒருவாறு தன் விவேகத்தால் தேர்ந்து, உலகை வெறுத்து, ஒன்றிலும் பற்றுதலின்றி இருந்தாள். ஓர் நாள் உடம்பெல்லாம் வெண்ணீறு புசி, உருத்திராக்ஷம் பூண்டு, உள்ளம் பூரித்து, உமாஸகாயன் மேல் கீர்த்தனை பாடிக் கொண்டு வீதி வழியாக உஞ்சுவிர்த்தி வாங்கி வரும் பாகவதோத்தமரைத் தான் வீட்டினுள்ளிருந்தபடியே பார்த்து, வெளியில் வர வெட்கமுற்று, அருகிலிருந்த அன்னையை அழைத்து, ''அம்மா! அறமே உருவாய், அந்தணர் வடிவாய், இவர் நம்மை ஆட்கொள்ள வந்த அரமூர்த்தியாய்த் தோன்று வதால், அடியாளை அனுக்கிரகித்துப் போமாறு அவரை அன்போடு அழைத்து வா''வென, அவ்வாறே அன்னையும் பெண்ணின் பேச்சுக்கிரங்கி அப்பெரியோரை அழைத்து வந்தாள். உடனே ஆவிடையம்மாள் அந்தணர்க்கு ஆசனமிட்டு, அர்க்கிய, பாத்திய ஆசமனம் அளித்து, அமுதுபடி போட்டு, அடிபணிந்து, அடியாளை அனுக்கிரஹிக்க வேண்டுமென வேண்ட, அந்தணரும் அவளது பக்திக்குமெச்சி ஆசீர்வதித்துச் சென்றார். அன்று முதல் அம்மாள் அவரையே குருமூர்த்தியாய்க் கொண்டு எப்போதும் அவரது ரூபத்தையே தியானித்துக் கொண்டு நாளைக் கழித்து வருகையில், ஓர் நாள் ஆற்றுக்கு நீராடச் சென்ற போது தன் குரு தந்தசுத்தி செய்து கொண்டிருப்பதைக் கண்டு அவருக்குச் சமீபம் செல்லவும், பாகவதர் தாம் பல் தேய்த்த மாவிலையை எறிந்துவிட்டு பற்கழுவச் சென்றார். சென்றதும், அம்மாது அவரெறிந்த

மாவிலேயின் மிச்சத்தை எடுத்து மனதில் யாதொரு அறுவெறுப்புமின்றி தன் வாயில் வைத்துக் கொள்ள, அதை பாகவதர் பார்த்து அவளருகில் வந்து, ''அம்மணி! ஒருவர் உமிழ்ந்த எச்சிலே எடுத்துண்பது நீதியோ! அதிலும் உத்தமருக்கழகோ! இதென்ன விபரீதம்'' என்று கேட்க, அம்மாள் கூறுகின்ருள்:- ஐயா! ''சித்தந்தெளிந்தவர் சேடம் பருகிடின் முக்தியாம்'' என மூத்தோர் மொழிவதால், தேவரீர் உச்சிஷ்ட பிரஸாதம் உட்கொள்ளின் உத்தமவுலகு வாய்ப்பது திண்ணமென உண்டேன், ஓர் குறைவும் வாராது என மொழியவே, பாகவதரும் பதிற் சொல்ல வழியின்றி ''சித்தந்தெளிந்தோர் சாஸ்திரங்கடந்தோர்'' என்று எண்ணி அவளது பக்திக்கு மெச்சி பின்பு நீராடி நீறு தரித்து நித்திய கருமானுஷ்டானஞ் செய்து அருகில் இருந்த அரசமரத்தடியில் ஆஸனத்திருந்து ஜபம் செய்து கொண்டிருந்தார். ஆவிடையம்மாள் தானும் ஸ்நானஞ் செய்து குரு வீற்றிருக்கும் அரசமரத்தடி வந்து அங்கங்குழைந்து ஆனந்தம்மேற்கொண்டு, முன்னுள் கல்லாலேயடியில் ஸனத்குமாரர்களுக்கு அருள் புரிந்த பரமசிவம் இன்று இவ்வரசமரத்தடியில் இவ்வேடமாய் ஆவிர்பவித்தது போலுமென்று தன் குருநாதனேயே பார்த்த வண்ணம் மெய்மறந்து சித்தம் லயித்து நின்று விட்டாள். தியான சமாதியி லிருந்து கண் விழித்த பாகவத சிரேஷ்டர் அவளது உறுதிக்கு உவந்து அவளே நோக்கி, ''ஏனம்மா, வீட்டுக்குப் போகாமல் ஈரப்புடைவையுடன் இவ்வளவு நாழிகை இங்கு நிற்கின்ருய்?'' என்று கேட்க, அம்மாள், - ''ஓ, குருநாதா! இவ்விடம் விட்டகல என் மனம் வரவில்லையே, இன்று பகவத் கடாக்ஷம் தங்கள் மூலமாய் கிடைக்கப் போகிறதென்ற தோற்றத்தால் காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றாள். ஜன்மாந்தரத்தில் செய்த புண்ணிய விசேஷத்தால் அப்பெண்ணின் நிலேயையும் அவளது பக்தியின் முதிர்ச்சியால் பரிபக்குவகாலம் கிட்டியதையும் உணர்ந்த பாகவதர் அப்பெண்மணியை நோக்கி, ''இவ்வரசமரத்தடி வந்துட்கார்'' என்று சொல்லி ஆத்தும ஞானேபதேசஞ் செய்தருளினார்''. அவளது பரிபக்குவ விசேஷத்தால் அவ் வுபதேசமும் அதி தீவிரத்தில் பலிக்கவே அந்த க்ஷணமுதல் ஆத்துமநிஷ்டை கைகூடப் பெற்று ஆத்துமானந்த சுவானுபவம் அடைந்து, அத்வைத சிகாமணியாய், தமிழில் வேதோபநிஷத்தினது சாரமமைந்த கவி பாடுஞ் சித்தி பெற்று எல்லோருக்கும் தத்துவார்த்தத்தை போதித்து வந்தாள். அவ்வாறிருக்கையில் ஓர் நாள் தனது சிஷ்யவர்க்கத்தோடு ஆற்றுக்குச் சென்று எல்லோரும் ஸ்நானஞ் செய்து விட்டு அவ்வாற்றின் மணலில் உட்கார்ந்து கொண்டு சிவாராதனம் செய்கையில் திடீரென்று ஆற்றில் வெள்ளம் கரை புரளவே, சிலர் பூஜாரம்பத்தில் ஓடினர், சிலர் அபிஷேக மத்தியில் ஓடினர்,

வேறு சிலர் அருச்சனையில் ஓடினர், பின்னும் சிலர் நைவேத்திய மத்தியில் ஓடினர். ஆவிடையம்மாளோ ஆற்றின் நடுவிலுட்கார்ந்து கொண்டு ஆனந்த பரிதையாய் ஆத்ம பூஜை செய்கையில், வெள்ளம் வந்ததும் சீடர்களோடியதும் தெரியாது, நிஷ்டையில் இருந்து விட்டாள். அவளது நிஷ்டைக்கு விகாதமின்றி ஆற்றின் நீர் இரண்டாய் பிரிந்து அவளைச் சுற்றிச் சென்று சற்று நேரத்துக்கெல்லாம் வடிந்து விட்டது. கரையில் நின்றோர் யாவரும் இவ்வற்புத காட்சியை கண்டு களித்தார்கள். ஆவிடையம்மாள் இது போன்ற பற்பல சித்துகள் நடத்தி ஆத்மானந்தாப்தியில் ஆழ்ந்து பரம சிவானுக்கிரகம் பெற்றனள்.

ஆவிடையம்மாள் இயற்றிய பாடல்கள்:-

1. வேதாந்த குறவஞ்சி நாடகம்
2. வேதாந்த வித்தியா சோபனம்
3. வேதாந்த அம்மானை
4. வேதாந்தப் பள்ளு
5. வேதாந்த ஆண்டி
6. வேதாந்த வண்டு
7. வேதாந்த ஆச்சே போச்சே
8. ப்ரும்ம ஸ்வரூபம்
9. ''அன்னே பின்னே'' என்னும் வேதாந்த ப்ரத்தியோத்திரகும்மி
10. ப்ரும்மமேகம்
11. தக்ஷிணாமூர்த்தி படனம்
12. வேதாந்தபல்லி
13. பகவத்கீதா ஸாரசங்கிரஹம்
14. வேதாந்தக் கப்பல்

முதலிய இன்னும் அநேக பாடல்கள்.

திருவாங்கூர் சமஸ்தானம் திருநெல்வேலி ஜில்லாக்களில் மட்டும் மேற்கண்ட பாடல்களை வீடுகள் தோறும் பெண்டுகள் பூஜா காலங்களில் பாராயணமாகவும் கல்யாண காலங்களில் பாடியும் வந்தார்கள். திருநெல்வேலி ஜில்லா பக்கங்கள் தவிர, மற்றையவிடங்களில் உள்ளவர்களுக்கு ஷை பாடல்களில் சிலது மட்டுஞ் சிலருக்குச் தெரியுமே யல்லாது ஏனையோருக்குந் தெரியாத அவ்வெல்லாப் பாடல்களையும் தஞ்சாவூர் திருவாதி வடக்கு மட விளாகம் புஸ்தகவியாபாரம் நா.வைத்தியநாத பாரதி அவர்கள் தமிழ் நாட்டிலுள்ளார் யாவரும் பாடும்படி அச்சிட்டு வெளியாக்கினர்.

# ஸ்ரீமதி ஆவுடை அக்காள்

(ஸ்ரீமதி கோமதி ராஜாங்கம்)

(ஸ்ரீ சங்கர க்ருபா, க்ரோதி-கார்த்திகை 1964, நவம்பர்-டிசம்பர்)

அன்று காலையிலிருந்தே செங்கோட்டை ஊர் தடபுடல் பட்டது. ஏற்கனவே கிராமத்துப் பெண்மணிகள் அதிகாலையிலேயே எழுந்து விடுவார்கள். நான்கு மணிக்கே வாசல் துலக்கிக் கோலமிட்டு அழகு செய்ய ஆரம்பித்து விடுவார்கள். இன்றோ மூன்று மணிக்கே கோலமிட்டாகிவிட்டது. சிறு பையன்கள் முதல்நாள் மாலையிலேயே பறித்து வைத்திருந்த மாவிலைக் கொத்துக்களைத் தோரணங்களாகக் கட்டி வீதி எங்கும் அலங்கரித்தார்கள். பெரியவர்கள் எல்லோரும் ஸ்நானம் செய்து மடி உடுத்துக்கொண்டு தெரு முனையில் இருக்கும் பஜனை மடவாசலில் குழுமினார்கள். பூரணகும்பங்கள், பாலிகைகள், மாலைகள், விளக்குகள் எல்லாம் பஜனை மடத்துத் திண்ணையில் தயாராக வைக்கப்பட்டிருந்தன. நேரம் செல்லச் செல்ல, எல்லோருடைய உள்ளத்திலும் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. ஆமாம். இத்தனை ஏற்பாடுகளும் எதற்காக என்று நீங்கள் கேட்பீர்களல்லவா? ஆமாம். தமிழ்நாட்டில் பிரசித்தி பெற்ற ஒரு மஹான் அவர்களுடைய ஊருக்கு வரப்போகிறார். அவரை வரவேற்க வேண்டும். முதல் முதலில் அவருக்கு நல்வரவு யார் கூறுவது, என்பதைப் பற்றிப் பெரியவர்களுக்குள் வாக்குவாதம். என்ன, லேசானவரா வரப்போகிறவர்?

''திருவிசைநல்லூர் அய்யாவாள்'' என்ற கௌரவப் பேர் பெற்ற மஹா புருஷனான ஸ்ரீதர ஸ்ரீ வெங்கடேசர் அன்று அவ்வூர் மண்ணைப் புனிதமாக்கத் திருவுள்ளம் கொண்டார்போலும்! அந்த நாளில் மோட்டார், ரயில் வசதி எது? திருவிசைநல்லூரிலிருந்து கால்நடையாகவே பிரயாணத்தைத் தொடங்கி எங்கும் சஞ்சரித்து பகவந்நாம மஹிமையைப் பரவச் செய்து கொண்டு வருகிறார். குறிப்பிட்ட ஒருவர் வீட்டிலும் தங்கமாட்டார். எத்தனை நாட்கள் இருப்பார்? என்ன உண்பார்? எப்படிப் பேசுவார்? எங்கு தூங்குவார்? என்ற பிரச்னைகள் கேள்வி மேல் கேள்வியாக அலை மோதின. தென்காசியிலிருந்து குற்றாலம் சென்று விட்டு இன்று ஏழு மணிக்குள் வருவதாக கனபாடிகள் கூறினார்களே. ஏன் இன்னும் வரவில்லை. வயதானவராயிற்றே. என்பவை போன்ற கவலைகள் வேறு. ஆயிற்று மணி எட்டு. ஆகா! அது என்ன! தூரத்தில் ஜாலர் ஒலி கேட்கிறதே. சலங்கையின் 'ஜல் ஜல்' என்ற சப்தம் மனதைக் கவர்கின்றதே. ஆ..... யார் - அவரா? அவரே தான்! ஜனங்களுக்கு உத்ஸாகம்

கரைபுரண்டு ஓடத் தொடங்கியது. அருகில் வந்ததும் பார்க்கப் போகிறோமே என்ற பொறுமை ஒருவருக்கும் இல்லை. நான் முன்னே, நீ முன்னே என்று எல்லோரும் ஓடினார்கள். ஆனால் இமைக்கும் நேரத்திற்குள் பஜனை மட வாசலில் தோன்றினார் மஹான். அவர் திடீரென்று எப்படி அங்கு தோன்றினார்? அது ஆச்சர்யமே. அங்கு ஒருவர்கூட இல்லை. வாசல் திண்ணையில் வைத்துள்ள வரவேற்பு சாமான்களெல்லாம் யாரும் கவனிப்பாரற்று வைத்தது வைத்தபடியே இருந்தன. ஸ்ரீ அய்யாவாளும் அவைகளைப் பார்த்து லேசாகச் சிரித்து விட்டுத் தன் வழியே சென்றார்.

காலில் நாலைந்துச் சுற்றுகளாகக் கட்டப்பட்ட சலங்கைகள் நாட்டிய பாவத்தில் அவர் மெய்மறந்து ஆடும்போது லயமாக சப்தித்தன. வலது தோளில் சிறு தம்புரா. அது ''ஓம்'' என்று ரீங்காரம் செய்துகொண்டே இருந்தது. இடது கை சிப்ளா. ''ஜில் ஜில்'' என்று ஒலித்தது. தலையில் பட்டுத் தலைப்பாகையாகக் கட்டப்பட்ட சிகப்புத் துணி மயில் தோகை போல முதுகுப் புறம் சிறகு விரித்தாடியது. சிகப்புக் கயிற்றினால் கட்டப்பட்ட உஞ்சவிருத்திச் சொம்பு தோளில் தொங்கியது. ''கோவிந்தம் பஜ.... மனஸா'' என்ற நாமாவளியை கம்பீரமாக அலை மோதும் குரலில் பாடிக்கொண்டு மெல்ல மெல்ல நர்த்தன பாவத்துடன் கிராமத்துக்குள் நுழைந்தார் அவர்.

தெருப் பெண்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்றே புரியவில்லை. ஆனால் பாரத நாட்டுப் பெண்மணிகளுக்குத் தொன்று தொட்டுப் பெரியவர்களுக்கு ஸேவை செய்யும் பண்பாடு ரத்தத்திலேயே ஊறிக்கிடப்பதால் அவர்கள் தயங்கவிலலை. வாசலில் போட்டிருந்த கோலத்தின் மேல் மணைகளைக் கொணர்ந்து இட்டனர். ஸ்வாமிகள் அவைகளின் மேல் வந்து நிற்பார். செம்பில் தீர்த்தத்துடன் வந்து பெண்மணிகள் அவருடைய பாதங்களைப் பயபக்தியுடன் கழுவிவிட்டு தீர்த்தத்தை சிரஸில் தெளித்துக் கொள்வார்கள். பிறகு அரிசியோ, தானியமோ, பழவகைகளோ, கொணர்ந்து அவருடைய செம்பில் இடுவார்கள். அவர், செம்பிலிருந்து தானே சிறிது அக்ஷதையை எடுத்து அவர்களுடைய பாத்திரங்களில் போடுவார். அவர்கள் அதைத் தங்கள் வீட்டு அரிசிப் பானையில் சிரத்தையுடன் இடுவார்கள். அதனால் அவர்களுக்கு அன்னத்துக்கு பஞ்சம் வராது என்பது நம் நாட்டு மக்களின் நம்பிக்கை. மக்களின் கூட்டம் கூடியது. மெதுவாக ஒவ்வொரு வீட்டு வாசலிலும் நின்று நின்று உபசாரங்களைப் பெற்றுக் கொண்டு முன்னேறிக் கொண்டிருந்தார் ஸ்வாமிகள்.

ஒரு சிறு வீடு. அதன் வாசலில் குப்பையும் கூளமுமாகக் கிடந்தன. தெளிக்கவோ, கோலமிடவோ ஒன்றும் செய்யவில்லே. உள்ளேயிருந்து யாரோ விம்மி விம்மி அழும் குரல் லேசாகக் கேட்டுக் கொண்டிருந்தது. அவரைப் பின்பற்றிய ஜனக் கூட்டம் அவ்வீட்டருகில் வந்ததும் ஏதோ அருவருக்கத்தக்க பொருளை மிதித்து விட்டதுபோல் எதிர்ச்சரகு ஓரமாக ஒதுங்கியது. அந்த 'அருவருக்கத்தகுந்த' வீட்டுக்கு அடுத்த வீட்டுக்காரர்கள் ஸ்வாமிகளை வரவேற்க குதூகலத்துடன் நின்று கொண்டிருந்தார்கள். ஆனல்! ஸ்வாமிகள் அந்த வீட்டு வாசலிலேயே ஏன் தயங்கி நிற்கிருர்? அவரை எப்படி அங்கு நிற்க வேண்டாம் என்று சொல்வது? திடீரென்று ஸ்வாமிகளுக்கு உத்ஸாகம் அதிகரித்து விட்டது. தம்பூர் சுருதியுடன் கம்பீரமான குரல் இழைந்தது.

| | | | |
|---|---|---|---|
| பிருந்தாவன | விஹார | மோஹன | கிருஷ்ண |
| மந்தஹாஸவதன | ஜன | ரஞ்ஜன | கிருஷ்ண |
| கோபால | கோபஜன | வந்தித | கிருஷ்ண |
| கோவிந்த | நந்தகோப | நந்தன | கிருஷ்ண. |

பாட்டின் லயத்திற்கேற்ப கால் சலங்கைகள் 'ஜலுக் ஜலுக்' என்று ஒலிக்கத் தொடங்கின. ஆயிற்று. நாமாவளி சவுக்க காலம், மத்திமகாலம், துரித காலமென்று ஏறத் தொடங்கியது. ஸ்வாமிகளை ஜனங்கள் ஆச்சர்யத்துடன் பார்க்கிருர்கள். அவரோ அரைக் கண் மூடிய நிலேயில் ஆனந்தானுபவத்தில் மிதந்து கொண்டிருக்கிருர். திடீரென்று உள்ளேயிருந்து 'என்னை விடுங்கள், நான் போகத்தான் வேண்டும்' என்று ஒரு அலறும் குரல். வாசல் கதவு அதை ஒட்டிப் படீரென்று திறந்து கொண்டது. பதினறு வயதுள்ள இளம் மங்கை ஒருவள் துவண்ட வாழைத் தண்டென அவர் காலடியில் வந்து விழுந்தாள். கண்ணீர் ஆருகப் பெருகுகிறது. நெஞ்சு விம்மி விம்மித் தணிகிறது. ஸ்வாமிகள் திடீரென்று நர்த்தனத்தை நிறுத்துகிருர். கீழே குனிந்து கனிவு ததும்பும் கண்களால் அம்மங்கையை உற்று நோக்குகிருர். அவள் தலேயை மெதுவாக வருடுகிருர். ''குழந்தாய், வருந்தாதே, அஞ்சாதே, கடவுள் இருக்கிருர். அந்திநேரம் ஆற்றங்கரைக்கு வா'' என்ருர். இதற்குள் வீட்டிலுள்ளவர்கள் வந்து அர்த்தசேதன நிலேயிலிருக்கும் அப்பெண்ணைத் தூக்கிச் சென்ருர்கள். ஆயிற்று. அவ்வளவுதான். இத்தனை நேரம் பலாப்பழத்தை ஈ மொய்ப்பது போல் மொய்த்திருந்த கூட்டம் கல் விழுந்த காக்கைக் கூட்டமெனப் பறந்தது. எல்லோருடைய கண்களிலும் ஒரு கேலிப்பார்வையும், உதட்டில் ஏளனப் புன்னகையும் நெளிந்தன. தெருவில் பெண்மணிகளைத் தவிர வேறு யாரும்

இல்லை. அதன் பிறகு மீதி வீடுகளில் ஸ்வாமிகளுக்கு உபசாரமும், அப்படி அப்படித்தான்! ஸ்வாமிகள் பிறகு தெருவை ஏறிட்டுக் கூடப்பார்க்கவில்லை. மெதுவாகப் பாடிக்கொண்டே ஆற்றங்கரை மண்டபததை அடைந்தார் அவர்.

சுமார் 250 வருஷங்களுக்கு முன்னுல் திருநெல்வேலி ஜில்லாவில் திருவிதாங்கூர் ஸமஸ்தானத்தை யொட்டியுள்ள செங்கோட்டை யென்னும் ஊரில், ஆற்றங்கரைக்கு அருகில் உள்ள தெருவில் ஆவுடை அக்காள் பிறந்தாள் என்று சொல்லப்படுகிறது. சுமார் 20 வருஷங்களுக்கு முன் 'இண்டியன் இல்லஸ்ட்ரேடட் வீக்லி' என்னும் ஆங்கில பத்திரிகையில் ' ஸிஸ்டர் ஆவுடை' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வெளி வந்தது. துரதிர்ஷ்டவசமாக அப்பொழுது 'இங்கு' பக்தி ஞானமார்க்கத்தில் ஈடுபாடு அதிகம் இல்லாதபடியால் மேலெழுந்தவாரியாக அதைப்படித்தேன். இப்பொழுது, ஏன் அப்படி செய்தோம் என்று அங்கலாய்ப்பாக இருக்கிறது. அக்காலத்தில் அதைப்படித்தவர்கள் யாராவது ஸகோதர ஸகோதரிகள் யாராவது இருந்தால் .... இப்பொழுது அதைப்பற்றித் தெரியப்படுத்தினுல் நன்றியுடன் ஏற்றுக்கொள்வேன். ஸமீப காலத்தில் தான் செங்கோட்டையில் உள்ள சில சகோதரிகள் ஸ்ரீ ஆவுடை அக்காளின் ஞாபகார்த்தமாக ஸமாராதனை பஜனை முதலியவற்றுடன் கொண்டாடுவதாக ஒரு சகோதரி கூறினர்.

திருநெல்வேலி ஜில்லாவில் முக்கியமாக ''ஸ்ரீ அக்காள்' அவர்களின் பக்தி ஞானரஸப் பாடல்கள் பரவாத கிராமம் கிடையாது என்றே சொல்லலாம். அநேக ஸகோதரிகளுக்குப் பெரும்பாலான பாடல்கள் வாய்பாடம். ஆனுல் ஒருவராவது ''ஸ்ரீ அக்காள்'' அவர்களின் சரித்திரத்தை ஆராயப் புகவில்லை. ஈதேன் கூட்டுவது போல் பதினைந்து வருஷங்களாக அங்கொன்றும் இங்கொன்றுமாக அவளைப் பற்றி வெகு ஸ்வல்ப தகவல்களே சேகரிக்க முடிந்தது. அவற்றில் எவ்வளவு உண்மை என்பதும் ஊகிக்க முடியவில்லை. அவைகளை ஆதாரமாகக் கொண்டும் ஸ்ரீ அக்காள் அவர்களின் பாடல்களிலிருந்து சிலவற்றை கிரஹித்துக் கொண்டும், ஆவல் மிகுதியால் அவள் வரலாற்றை ஒரு ரேகை சித்திரம் மாதிரி எழுத முற்படலானேன். தவிரவும் சில தகவல்கள் சில மஹான்கள் மூலமாகவும் கேள்விப்பட நேர்ந்தது. ஸ்ரீ சுப்ரமணிய பாரதியார் அவர்களுக்கு ''ஸ்ரீ அக்காள்'' அவர்களின் பாடல்கள் என்ருல் உயிர். அவரும் ''ஸ்ரீ அக்காள்'' வரலாற்றை அறிய முயற்சி செய்ததாகத் தெரிகிறது. அவளுடைய அநேகப்பாடல்களின் கருத்துக்களை ஒட்டியே அவரும் அநேக வேதாந்தப் பாடல்களைப் புனைந்திருக்கிருர். அவர்

எனது தாயார் அவர்களுக்கு சகோதரியின் கணவராகையால் சிறு வயதில் அவர் மூலமாகவும் சில தகவல்கள் அறியும் பாக்கியம் கிடைத்தது.

பிறகு ஏழெட்டு வருடங்களுக்கு முன் காசிக்குச் சென்றிருந்தபோது மணி கர்ணிகா கட்டத்தில் எனக்குத் தெரிந்த ஸந்நயாசியான ஒரு மகானைத் தரிசித்தேன். அவர் வெகு சிரமப்பட்டு 'ஸ்ரீ அக்காள்' அவர்களின் பாடல்களைத் தொகுத்து புத்தக ருபமாக வெளியிட்டிருக்கிருர். அவர் எனக்கும் ஒரு புத்தகம் கொடுத்து சில தகவல்களும் கூறினர். இந்த எல்லாவற்றையும் ஆதாரமாகக் கொண்டு சில வருஷங்களுக்கு முன் சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்திலிருந்து வெளிவரும் ''ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்'' பத்திரிகையில் 'ஸ்ரீ அக்காளின் வரலாற்றை எழுதி உள்ளேன்.

இப்பொழுது 'ஸ்ரீ சங்கர க்ருபா' மூலம் அநேகருக்குத் தெரிய வருமே என்று ஆவலால் மீண்டும் எழுதலானேன். மேற்கூறிய மகான்கள் இருவருக்குமே கிடைக்காத தகவல்கள் எனக்கு எப்படி கிடைக்கும்? ஆனல் ஒன்று உண்மை. நம் தமிழ்நாட்டுப் புலவர்களின் முன்னணியில் நிற்கும் ஸ்ரீ ஔவைப் பாட்டிக்கு நிகரானவள் ஸ்ரீ அக்காள் அவர்கள் என்பதை மட்டும் துணிந்து கூறுவேன். இதுபோன்ற எத்தனை மாணிக்கங்கள் நம் நாட்டுப் புனித மண்ணில் மறைந்து கிடைக்கின்றனவோ, அவைகளை வெளிக் கொணர எத்தனை உ.வே. ஸ்வாமிநாதய்யர்கள் அவதாரம் செய்ய வேண்டுமோ? யார் கண்டார்கள்?

நிற்க. இப்பொழுது ''ஸ்ரீ அக்காளின்'' வரலாற்றை வெளிப் பார்வையினலாவது சிறிது கண்டறிய முற்படுவோம். அவள் பெற்ரோர்களுக்குச் செல்லப் பெண் என்றும். பாவாடைக் கூடக்கட்ட அறியாத பருவத்தில் மணம் முடிந்து, மஞ்சள் கயிற்றின் மணம் மாறும் முன், தலையில் பூவாடை மாறுமுன் அவளுடைய கணவன் பிணமானுன் என்றும் தெரிகிறது. அவளுடைய தாயாரும் சுற்றத்தார்களும் அழுவதைக் கண்டு, குழந்தைத் திகைத்தாளாம். ''ஏன் அழுகிறீர்கள்?'' என்று கேட்டதற்குக் காரணம் சொன்னதும் குழந்தை, ''அவாத்துப் பிள்ளை செத்துப் போனல் நீங்கள் ஏன் அழ வேண்டும்?'' என்குளாம். தாயார் விவேகியாதலால் சட்டென்று அழுகையை நிறுத்தி கொண்டாளாம். ஆமாம். குழந்தை கூறுவது உண்மையே. எதற்காக அழ வேண்டும்? அவன் யார், நாம் யார்? குழந்தைக்கு உண்டான விவேகம் நமக்கில்லையே என்று குழந்தையை வாரி அணைத்தாளாம் தாயார். அன்று முதல் குழந்தையை சிங்காரித்து அழகு பார்ப்பதும், தக்க

பண்டிதர்களைக் கொண்டு அவளுக்குக் கல்வி பயில்விப்பதுமாகக் காலம் சென்றதாம். ஆனால் கல்வி விஷயத்தில் ஒரு தடை குறுக்கே நின்றது. அவள் கைம்பெண். அடுப்பங்கரையேத் துணையாகக் கொண்டு மரணம் வரையிலும் காலம் கழிக்க வேண்டியவள் அவள். அவளுக்கு கல்வியாவது? சிங்காரமாவது? ஊர் வம்பளந்தது. கேலி செய்தது. குடும்பத்துக்குள்ளேயே பலத்த எதிர்ப்பு. எல்லாவற்றையும் தாயார் என்ற மஹா மேரு எதிர்த்து நின்றது.

இவ்வாறு செல்ல, இரவும் விடியாப் பொழுதுமாக நாட்கள் ஓடின. சிறிது காலம் சென்ற பின் குழந்தை பருவம் அடைந்தாள். தாயார் தலையில் பேரிடி விழுந்தது. சிங்காரித்து மகிழ்ந்த செல்வக் குழந்தைக்குத் தலையை மொட்டை அடித்து, வெள்ளை உடை உடுத்தி நெடுங்குரலிட்டு அழுதாளாம். கழுத்தைத் திருகிய கோழிக் குஞ்சு போல் ஒரு மூலையில் கிடந்தாளாம் அப்பெண். நாட்கள் செல்லச் செல்ல அக்காளுக்கு தன் நிலை நன்கு புரிந்தது. பிறகு கண்ணீரும் கம்பலையும், கதறலும் பிதற்றலுமாகக் காலம் ஓடியது.

தாயார் ஆயிரம் ஸமாதானம் கூறுவாள். இவ்வாழ்க்கைக்கு முடிவென்ன? இனி இக்கட்டைக்கு நடுக்கட்டையிலே கிடத்து மட்டும் கவலைதானா? என்று ஏங்கும் இச்சமயத்திலேதான் அவளுக்கும் மகிழ்ச்சி உண்டு என்பதையறிவிக்கவே ''ஸ்ரீ வெங்கடேச அய்யாவாள்'' அங்கு எழுந்தருளினார்கள் போலும்! ஆயிற்று. நேரம் செல்லச் செல்ல ஆற்றங்கரைக்குச் செல்வதைப்பற்றி ஆட்சேபணைகள், சமாதானங்கள் எழுந்தன. விவரம் தெரிந்த நாளிலிருந்து வாசல் நடைப்பக்கம்கூட வராத அப்பேதைக்கு எங்கிருந்தோ துணிவு வந்துவிட்டது. ஆற்றங்கரைக்குப் போகத்தான் போவேன் என்று ஒற்றைக் காலில் நின்றாள். தாய் செயலற்று நின்றாள். வீட்டில் உள்ளவர்கள் அவளைக் கண்காணிக்க ஒரு பெண்மணியை வைத்து விட்டு கோயிலுக்கோ, வேறு அலுவலாகவோ வெளியில் சென்றார்கள். இதுதான் சமயமென்று அக்காள் தனக்குத் துணையிருந்தவளையே நல்ல வார்த்தைகள் சொல்லி துணைக்கு அழைத்துக் கொண்டு வெளிக்கிளம்பினாள்.

சூரியன் மேற்கு தொடர் மலையில் மறைந்தான். மலையின் இருள் ஆற்றங்கரை மணலில் கவிந்தது. அக்காள் ஹிருதயம் படபடக்க மண்டபத்தில் ஓரம் வந்து நின்றாள். ஒரு கணம் அவள் தலை சுற்றியது. மறு க்ஷணம் அவள் கண்ணெதிரில் விபூதிருத்ராக்ஷதாரியாக ஸ்ரீ வெங்கடேசர் நின்று

கொண்டிருந்தார். மேகம் போல் கம்பீரமாக அவர் குரல் ஒலித்தது. அக்காள் கை கால்கள் நடுங்க அவர் பாதக் கமலங்களில் துவண்டு விழுந்தாள். அவருடைய அபயஹஸ்தம் அன்பாக அவளுடைய தலையை வருடியது. அன்புக் கரங்கள் அவளை ஆவலுடன் பிடித்து உட்கார வைத்தன. கர கமலம் அவள் தலையில் நீரைத்தெளித்தது.

''குழந்தாய்! கண்களைத் திற. என்னை குருவாக ஏற்றுக்கொள், உனக்கு இன்றையிலிருந்து ஞானவாசல் கதவு திறந்துவிட்டது. நான் உபதேசிக்கப்போகும் மந்திரத்தை நீ நிர்ப்பயமாக ஜபித்துக் கொண்டு வா. உலகம் உன்னை என்ன வேண்டுமானலும் சொல்லிக் கொள்ளட்டும், வருந்தாதே. நான் அடிக்கடி வந்து உன்னைக் கவனித்துக் கொள்கிறேன்''. என்று கூறி ஆசீர்வதித்தார். மறுகணம் இருளில் மறைந்தார். அவர் என்ன உபதேசித்தார்? அதன் பிரகாரம் அக்காளுக்கு ஸாதன மார்க்கம் எப்படி முன்னேறியது? என்பவைகளை அவள் திருவாயிலிருந்து மலர்ந்து உதிர்ந்த ''அத்வைத மெய்ஞான ஆண்டி'' ''பண்டிதன் கவி'' என்ற இரு பாடல்களிலிருந்தும் நாம் ஒருவாறு புரிந்து கொள்ளலாம்.

பிறகு அவள் ஆத்மானுபூதியில் லயித்து உன்மத்தையாக இருந்ததாகவும் ஊர்க்காரர்கள் அவளை ஜாதி பிரஷ்டம் செய்ய வேண்டும் என்று சொன்னதாகவும், பிறகு அங்கிருந்து குருதேவர் ஆக்ஞையின்படி கிளம்பி தீர்த்தயாத்திரைச் சென்றதாகவும், அங்கெல்லாம் தேவைப்பட்ட பொழுது குருநாதர் வந்து அவளுக்கு வழி காட்டியதாகவும், கடைசியில் துலாகாவேரி ஸ்னனத்துக்கு மாயவரம் வந்ததாகவும் அப்பொழுது அக்காளுக்கு பேதாபேதம் அற்று போய், ஸர்வ, ஸமரஸ பரிபூர்ணஸ்வானு போதம் கிட்டியதாகவும், அப்பொழுது அங்கு காவேரியில் ஸ்னனம் செய்யும் பொழுது ஒரு எச்சில் மாவிலை மிதந்து வர, அதை எடுத்து அக்காள் பல் விளக்கியதாகவும், அதைக் கண்டு அங்கு ஸ்னனம் செய்து கொண்டிருந்த பெண்மணிகள் அவளை நிந்தித்ததாகவும், அதனுல் அவள் மனதிற்குக் கொஞ்சமேனும் ஆயாசம் ஏற்படாமல் புன்சிரிப்புடன் ஸ்னனம் செய்து கரையேறியதாகவும், அங்கு அரச மரத்தடியில் ஸ்ரீ வெங்கடேசர் தோன்றி அவள் நாக்கில் பீஜாக்ஷரத்தை தர்ப்பையினுல் எழுதி அவளை ஆசீர்வதித்து, ''உனக்கு ஜீவன் முக்தி நிலை ஏற்பட்டுவிட்டது, இனி உனக்கு ஜனன மரணமில்லை. நீ எங்கிருந்தாலும் உன்னை கர்மபந்தம் அணுகாது, உன் சொந்த

ஊருக்கே சென்றிரு'' என்று உபதேசித்ததாகவும் கூறுகிறார்கள். இதற்குள் ஸ்ரீ அக்காள் அவர்களின் மகிமை எங்கும் பரவி அவளுடைய அத்வைத பாடல்களுக்கு பலரும் அடிமையாகி அவளுக்கு சிஷ்யர்கள் ஆனதாகவும், அவர்கள் பின்தொடர செங்கோட்டைக்கு வந்து, ஊர்க்காரர்களால் மிகுந்த மரியாதையுடன் வரவேற்கப்பட்டு, வெகுகாலம் அங்கு வசித்து, அத்வைத மணத்தை நான்கு திக்கிலும் கமழச் செய்யும் பத்மமாகத் திகழ்ந்ததாகவும் கூறுகிறார்கள்.

இப்படிச் சில நாட்கள் வருஷங்களாக மாறிப் பறந்தன. ஒரு ஆடிமாத அமாவாசை அன்று குற்றாலம் சென்று அருவியில் ஸ்னானம் செய்துவிட்டு, மலையின் மேல் ஏறிச் சிறிது நேரம் தியானம் செய்துவிட்டு வருவதாக சிஷ்யைகளிடம் கூறினாளாம். பிறகு புடவைப் பெட்டியுடன் மலை ஏறிச் சென்றவள் இன்று வரை என்ன ஆனாள் என்பது யாருக்குமே புரியாத ரகசியம். எவ்வளவு தேடியும் அவள் சடலம் கிடைக்கவில்லை என்று கூறுகிறார்கள். அவளுடைய பாடல்கள் கிட்ட தட்ட ஆயிரத்துக்கும் மேல் உள்ளனவாம். இத் திருநெல்வேலி வட்டாரத்தில் அவளுடைய பாடல்கள் மக்களுக்குப் புத்துயிரும், சாந்தியும் ஊட்டுகின்ற அம்ருதமாக திகழ்கின்றன. அநேக இடங்களில் பெண்கள் சங்கங்கள் அமைத்து, ஞான ஸாதனம் செய்து, முன்னேற ஸ்ரீ அக்காள் அவர்களின் பாடல்கள் வரப்பிரசாதமாக அமைந்துள்ளன. இப்பாடல்களை பகீரதப் பிரயத்தனத்துடன் ஒன்று சேர்த்து முதன் முதலில் புத்தகமாக வெளியிட்டப் பெருமை பூர்வாசிரமத்தில் ஆயக்குடி வெங்கடராம சாஸ்திரிகள் என்று பெயர் பெற்ற (தற்பொழுது சிவானந்தாச்ரமத்தில் (ரிஷிகேசம்) ஸந்நியாச தீக்ஷைப் பெற்றுச் சென்னையில் இருப்பதாக கேள்வி) மஹானைச் சாரும். அவர் அச்சிட்ட புத்தகத்திலும் சில பாடல்கள் வரவில்லை. அப்பாடல்களை அச்சிடும் தீவிரப் பணியில் அம் மகான் ஈடுபட்டுள்ளார் என்று கேள்வி. அன்னார் இருக்கும் திக்கு நோக்கி வந்தனம் செய்கிறேன்.

பின்குறிப்பு : இந்தக் கட்டுரை எழுதி சுமார் 10வருஷங்களாகிவிட்டன. ஸ்ரீ வெங்கடராமசாஸ்திரி அவர்களும் இப்பொழுதில்லை. அவர் பதிப்பித்தது போக இரண்டாம் பதிப்பிற்கு முயற்சி செய்யவில்லை. மேலும் அவர் போட்ட புஸ்தகத்தில் தனிப்பாடல்களாகவேயிருக்கின்றன. இதைத்தவிர ''அக்காள்'' அவர்கள் அநேகம் சரித்திரங்கள் முதலியவைகளை அந்தக் காலத்தில் பெண்கள் பாடும் கும்மிப்பாட்டாக அமைத்திருக்கிறார்கள்.

அவைகளும் பதிப்பில் வரவேண்டுமென்று அடியாளின் அவா. அதற்காக இவள்பட்ட கஷ்டங்கள் கொஞ்சம் நஞ்சமல்ல; அக்காள் திருநெல்வேலி ஜில்லாவின் எல்லையான செங்கோட்டையில் வாழ்ந்ததால் அவள் மீது (சிரத்தையும்) மதிப்பும், பக்தியும் அதிகம். அக்காலத்து இளம் விதவைகளுக்கு அக்காளின் பாடல்களே தாரகம். சுந்தரபாண்டியபுரம், சாம்பூர், வடகரை, ஆம்பூர், ஆழ்வார்குறிச்சி, நாகர்கோவில், வடுவீஸ்வரம், முன்னீர்பள்ளம், கல்லிடைக்குறிச்சி, முதலிய கிராமங்களில் மத்தியான உணவிற்கு பின் பத்துபேர்கள் பெண்கள் கூடிக்கொண்டு. அக்காள்பாட்டைச் சொல்லிக்கொண்டு தங்களுக்குள் ஆறுதல் அடைந்து கொள்வது வழக்கம். அவ்வூர்களில் எல்லாம் சென்று ஆங்காங்கு நாலைந்து நாட்கள் தங்கி மிகப்பிரயாசையுடன் அக்காளின் தொடர் பாடல்களின் நான்கை சேகரிக்க முடிந்தது.

அவையாவன; அனுபவ ரத்னமாலை - ஆவுடையக்காள் தனது குருநாதர் 'ஸ்ரீதர வெங்கடேச அய்யாவாள்' பிரிவிற்கு இரங்கி பாடியது. அந்தக் காலத்தில் இறந்த பிணத்தைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு, பெண்கள் பிரலாபித்து அழுவார்கள். அதற்கு பிலாக்கணம் என்று பெயர். இது அந்த மெட்டில் அமைந்தது. ஆனால் அத்வைத பரமானது.

இரண்டாவது, சூடாலைக்கும்மி: 'அக்காள்' அவர்கள் ஞானவாசிஷ்டத்திலிருந்து இரண்டு மூன்று கதைகளை பாடல்களாக அமைத்தார்கள் என்று கேள்வி. ஆனால் கிடைத்தது சூடாலைக்கும்மி ஒன்று தான். சூடாலை சிகித்வஜன் கதையை அழகான எளியபதங்களில் வேதாந்த உண்மைகளையடக்கி சாதாரணமாகப் படித்தவர்களுக்குக்கூட நன்கு விளங்கும்படி எழுதியிருக்கிறார்கள்.

மூன்றுவது, கீதை: இது அதிகமாகப் பழக்கத்தில் இல்லாதது. அதனல் சிலசில சொற்றொடர்கள் முன்னம் பின்னுமாக சிதைந்து காணப்படுகின்றன. அக்காளின் தனிப்பட்ட முறையில் அவளுக்கே உரியதான எளிய தமிழில் கீதைக்கு விளக்கம் கொடுத்திருக்கிறது ஆச்சர்யமான விஷயம்.

மற்றொன்று, வித்தை சோபனம்: அக்காலத்தில் பெண்கள் புஷ்பவதியானல் அவள் வாழ்க்கையில் முதல் படியில் காலை வைக்கும் திருவிழாவாகக் கொண்டாடுவார்கள். மூன்று நாட்களும் பெண்களை விலக்கி வைத்திருந்து அவளுடைய தோழிமார்களை அவளுக்குத் துணைக்கு வைத்து,

அத்தோழிப் பெண்களுக்கு விரும்பியதெல்லாம் தந்து உபசரிப்பார்கள். புஷ்பவதியான பெண் வெகுசீக்கிரத்தில் புருஷன் வீடு போவதால் அவர்களுக்கு விருந்துபசாரங்கள் செய்வித்து, இக்காலத்தில் கூறுவது போல் அவர்கள் இவளுக்கு Send off கொடுப்பதாக அர்த்தம். மூன்று நாட்களும் பொங்கல், பாயசம், புட்டு இவைகளுடன் விருந்து செய்வித்து அவர்களுக்கெல்லாம் புதுத்துணிமணிகள் வாங்கிக் கொடுத்து, உபசரித்து அனுப்புவார்கள். அப்பெண்களும் இவளை 'பெற்றிடுவாய் பெண்ணே, பெற்றிடுவாய். பிள்ளைப்பதினறையும் பெற்றிடுவாய், பல்லக்கிற்கேற்ற பதினறையும் பெற்றிடுவாய், தண்டிகைக்கேற்ற சமர்த்தரையும் பெற்றிடுவாய்' என்று வாழ்த்தி பரிசுப் பொருள்களுடன் வீடுகளுக்குச்செல்வார்கள். இந்தக் கருத்தைக் கொண்டுபாடினது ''வித்தை சோபனம்'' வித்தையென்னும் பெண் பூமலர்ந்ததும், அவளுடைய தோழிகளான ''உபநிஷத்'' பெண்கள் எங்கே எங்கேயென்று ஓடி வருவதும், அவர்கள் கேலி பேச்சாக மதங்களை நிந்திப்பதும், படிக்கப்படிக்க வெகு ரஸமாக இருக்கும். தற்காலத்து இவர்களுக்கு இவைகள் அர்த்தமேயாகாது. வீட்டில் பாட்டிகள் முதலியோரைக் கேட்டுத் தெரிந்து கொண்டால்தான் தெரியும். இருந்தாலும் ஒருவாறு விளக்கியிருக்கிறேன்.

சுபம்.

# ஸ்ரீமதி கோமதி ராஜாங்கம்

### சரித்திரக் குறிப்பு

### (எஸ். சுப்பிரமணியன்)

தெய்வீக மாதப் பத்திரிகைகளை படிக்கும் வாசகர்களுக்கு ''கோமதி ராஜாங்கம்'' கட்டாயமாக அறிமுகமாயிருப்பார். ஆன்மீகத்திற்கு வழிகாட்டும் பெண் எழுத்தாளர்களில் இவர் தனிப்பெருமை வாய்ந்தவர். திருநெல்வேலி ஜில்லாவில் கடயம் என்ற ஊரில் 1908-ல் உயர் குடும்பத்தைச் சேர்ந்த ராமஸ்வாமி ஐயருக்கும் சீதாலக்ஷ்மி அம்மையாருக்கும் கோமதி என்ற பெண் குழந்தை பிறந்தாள். தகப்பனுர் திருவிதாங்கூர் மஹாராஜா ஸமஸ்தானத்தில் பேஷ்கராகப் பணிபுரிந்து வந்தார். அந்தப் பெண் ஆரம்பகால வகுப்புகள் திருவனந்தபுரத்தில் படித்தாள். கோமதியின் சிறிய தாயார் செல்லம்மாள் என்று போற்றப்படும் மகாகவி சுப்பிரமண்ய பாரதியாரின் வாழ்க்கைத்துணைவி.

ஒன்பதாவது வயதில் கோமதிக்கு ஸ்ரீவைகுண்டம் என்ற ஊரில் புகழ்பெற்ற வழக்கிறஞரான எஸ்.கே. சுப்பையர் என்பவரின் மூத்த புதல்வர் ராஜாங்கத்துடன் திருமணம் நடந்தேறியது.

> ''நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
> நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்
> நிமிர்ந்த ஞானச் செறுக்கும்....''

என்ற மகாகவி பாரதியாரின் வர்ணனைக்கேற்ப ''புதுமைப் பெண்ணுகவே'' கோமதி ராஜாங்கம் திகழ்ந்தாள். தாய்மொழியான தமிழுடன் ஸம்ஸ்கிருதம், ஹிந்தி பாஷைகளையும் நன்கு கற்றுத் தேர்ந்தார். ஸ்ரீ வைகுண்டத்தில் அவர் வீட்டில் சத்திரம் போன்றே மக்கள், நண்பர்கள் குழுமுவர். பசியுடன் வெளியேறுவாரில்லை. வாரம் இருமுறை பஜனைகளும், நவராத்திரி போன்ற உத்ஸவங்களும் மிகவும் விமரிசையாகக் கொண்டாடுவார்கள்.

ஆனல் கோமதி ராஜாங்கம் தம்பதிகளுக்கு புத்திர பாக்கியம் இல்லை. அவர்கள் பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷியை தரிசிக்கச் சென்றபோது அவர் இதையே ஆன்மீக வாழ்க்கைக்கு அனுகூலமாகக் கருதலாமேயென்று அருளினர்.

ஸத்சங்கத்தில் திளைத்த அந்த தம்பதிகள் சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள் ஸ்ரீவைகுண்டத்தில் முகாமிட்டிருந்தபோது அவரை தரிசிக்கும் பாக்கியம் பெற்றனர்.

கோமதி அம்மையார் நல்ல எழுத்தார்வமும், ஆற்றலும் படைத்தவர். புராண இதிகாசங்கள், உபநிஷத்துக்கள் ஆகியவற்றிலிருந்து கதைகள் கட்டுரைகள் எழுத ஆரம்பித்தார். ''கல்யாண்'' என்ற ஹிந்தி பத்திரிகையிலிருந்து அரிய விஷயங்களை மொழி பெயர்த்துக் கட்டுரைகளாக வழங்கினர். ''ஸ்ரீசங்கர க்ருபா'', ''ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்'' போன்ற பத்திரிகைகளுக்கு எழுதி வந்தார். எல்லாமாக நூற்றைம்பதுக்கும் மேற்பட்ட கட்டுரைகள் எழுதியிருப்பார். அவை மிகவும் போற்றப்பட்டன.

அவரது தமிழ் நூல்களில் மிகவும் சிறந்தது ஸ்காந்த புராணத்தின் பாகமான ''காசி காண்டம்'' என்பதின் மொழிபெயர்ப்பாகும். சில மஹான்களின் சரித்திரங்களின் தொகுப்பாக ''ஸித்தர் சரித்திரம்'' என்ற நூலும் 1968ல் வெளிவந்தது. சிருங்கேரி குரு பரம்பரையைப் பற்றி அவர் எழுதிய ''ஆசார்யாள் பரம்பரை'' இன்னும் பிரசுரமாகவில்லை.

1967ல் தமது கணவரின் மறைவிற்குப் பிறகு கோமதி அம்யைார் தமது வாழ்க்கையை ஆன்மீகத்திற்கே அர்ப்பணித்துவிட்டார். காவியுடையணிந்து ஏகாந்தமாக காசி சிருங்கேரி மடத்தில் பல வருடங்கள் தங்கி 1992ம் ஆண்டு இறைவன் திருவடி சேர்ந்தார்.

கோமதி ராஜாங்கம் அம்மையார் ஆவுடையக்காளின் பக்தி ஞானப் பாடல்களினுல் உந்தப்பட்டு அவர்களின் சரித்திரத்தை ஆராயப் புகுந்தார். ஈதேன் கூட்டுவது போல் பதினைந்து ஆண்டுகளாகத் தேடியும் வெகு ஸ்வல்ப தகவல்களே கிடைத்தன. அவரது வரலாற்றை ''ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்'', ஸ்ரீ சங்கர க்ருபா'' பத்திரிகைகளில் எழுதினர். மேலும் 1953-ல் வெளியிடப்பட்ட அக்காளின் பாடல்களின் தொகுப்பில் தனிப் பாடல்கள் மட்டுமே இடம் பெற்றிருந்தன. அப்பதிப்பில் இல்லாத மற்ற தொடர் பாடல்களையும் கும்மிப் பாட்டுக்களையும் சேர்த்து இரண்டாம் பதிப்பு வெளியிடவேண்டும் என்பது கோமதி அம்மையாரின் அவா. ஸத்குருநாதரின் திருவருளால் அவரது ஸங்கல்பம் இப்பொழுது நிறைவேறுகிறது போலும்.

உ

ஸ்ரீ மகாகணபதி துணே

# ஆவுடையம்மாள் பாட்டு

## பண்டிதன் கவி

ப்ரளயகாலம் தன்னிலே பரிபூர்ணமான வஸ்து
பரம குருவாய் வந்து என் பவரோகம் போக்கவென்றே
பரம ரகஸ்யத்தை பாங்காகவே யுரைக்க
பழுதுகுறை வாராதே, பார்வதியே! முன்னடைவீர்!

தொப்பைகணபதியே! தந்தமுகத்தோனே!
விக்ன விநாயகரே! மூஷிக வாகனரே!
மோதகத்தை கையில் தரித்த கணபதியே! சசிவர்ண!
நீருமிப்போ சதுர்புஜ முள்ளோரே! சியாமளவர்ண!

விளம்பித சூத்திர! வாமனரூப! மகேச்வரனுர் புத்திரரே!
மஸ்தக பூஜையிலே மகிழும் தயாளுவே! மண்டையிலே குட்டி
வணங்கி தொழுதோர்க்கு அவர் விணேகள் போக்கி
வரம்கொடுக்கும் வஸ்துவே!

ஏகதந்தத்தாலே விளங்கும் முகத்தோனே!
பார்வதியாள் திருமகனே! பரமேச்வரனுர் புத்திரரே!
பண்டாலயிலேயில் பள்ளிகொண்டோர் மருமகனே!
ஸ்கந்தனுடனே கணபதியே!

எனக்கு சொந்தமுடனே கலங்காமல் தாருமையா!
அப்பம் பொரி அவலும், அதிரஸம் எள்ளுருண்டை
தேன்குழலு மிளநீரும் செங்கரும்பும் மாங்கனியும்
பக்குவமான நல்ல பலாப்பழமும், மோதகமும்

முப்பழமும்கூடி முழுதாக நான் படைப்பேன்
ஸத்குணனுர் லீலேகளே சற்றே தெரிந்துரைக்க
வாணி ஸரஸ்வதியே! வாக்கில் வரவேணுமம்மா!
மங்களநாயகியே! வாக்கில் வந்து முன்னடைவீர்!

அபிராமர் ஸுந்தரர் ஆதிகுருவாக வந்து
என்னூர்த்தி தன்னை போக்குதற்கு அதிரகஸ்ய மத்தனையும்
சொல்லுகிறேன் நான் உனக்கு, சோம்பாதே! கேள், தோழி!
ஜனனமரணமென்னும் தீர்க்கரோகம்பிடித்து

அஞ்ஞானத்தாலே ஆழ்த்தி அனுதியுமாய்
பூர்வகர்ம நோய்களெல்லாம் உடந்தையாகவே இருக்கும்
அதிலொன்றி லொன்றுசேராதே உபத்திரவங்கள் பண்ணுராப்போல்
மகத்ஸேவை யில்லாதே வந்த இடஞ்சலுமாய்

ப்ருவிருத்திக்கு நிவிர்த்தி என்றும் பசிதாகம்
தோனுதே ப்ருவிருத்தியுடனே ப்ரபஞ்சத்திலே முழுகி
அனர்த்த பரம்பரையாய் அல்லல் வந்து நேரிடவே
அகங்காரமாகிற அனர்த்த ஜன்னிதான் கிளம்பி

ஈஷணுத்திரயங்களென்னும் வாதபித்த சிலேஷ்மமதாய்
தாபத்ரயமென்னும் தாகமதிகமுண்டாய்
கண்டத்தில் கெட்டி கெத்கெதமாய் விளங்குராப்போல்
சோகமென்னு மூர்த்வசுவாஸமது கிளம்பி மோகமென்னும் மூர்ச்சை

அடிக்கடி போடலுமே தசேந்திரியங்களும் தன்வசமன்னியிலே
விஷயமதுகளால் ஸமயமிதுவென்றறிந்து
ஆசை என்னும் பாசக்கயிற்ருல் வரிந்துகொண்டு அதுவசமாய்

படுகிறவேளையிலே பண்டுசெய்த பாக்கியத்தால்
பரனே வடிவாகி சுத்தஸ்வருபமாய் தனுவெடுத்து எந்தனுக்கு
விகல்பங்களற்று ஸ்வருபமதுதான் தரித்து
எதிர்ச்சையினுலே எழுந்தருளி வந்தார் காண்!

அவர் தாமே வடிவெடுத்து தாகமெல்லாம் போக்கவென்று
பவரோகம் போக்க நல்ல பண்டிதராய் வந்தார் தான்
தீனதயாபரராய் தயவுடனே கிட்டவந்து நாடி
பரீக்ஷை எல்லாம் நன்ருகவே பார்த்து பரிவுடனே

குருநாடிகொண்டு முருவலுடனே என்ன சொல்வேன்
அனுதியாயுண்டான அஞ்ஞான நோய்களிது வந்து அடையவும்
விசாரிக்க தேவையில்லை சீக்கிரமாக சிந்தைபண்ணி
துவக்கத்திலே தான் வரித்தால் ஸுலபமாய் தீர்ந்துவிடும்

வைராக்கியமில்லாதே வந்த அனர்த்தமிது ஸஞ்சிதகர்மமிது
த்வம் த்வமாகவே இருக்கும் அஞ்ஞானநாடி அதிக்ரமித்து நிற்கிறது

ஜன்மவியாதிபிடித்து அநேக நாளாச்சுது தேகத்தில்
ஆஸ்தை ஸ்திரமாக இருக்கிறது விவேகமென்ற

தாதுவை காண கிடைக்கவில்லே
சிரத்தை என்ற நாடி ஸூக்ஷ்மமாய் தோன்றுகிறது
ஆகையால் நீயுமிப்போ அறிவுகலங்க தேவையில்லே
பிராணஹானி இல்லே பரிஹறிக்க ஏதுவுண்டு

கைகண்ட ஔஷதமிருக்கிறது நம்மிடத்தில்
கொடுத்து நிறுத்துகிறேும் குணம் காணலா மிதிலே
விச்வாஸமுடன் வினயத்தோடே உண்டுவந்தால்
ஸகல வியாதிகளும் சாந்தமாய் தீர்ந்துவிடும்.

பிரபலவியாதிகளும் பஞ்சுபோல் பறந்துவிடும்
பார்த்த இடங்களிலே பழுதொன்றும் வந்ததில்லே
விரோசனத்தாலே வெளியாக வேணுமிப்போ
விரோசனம்தான் ஏதென்ருல் வெளியாக சொல்லுகிறேன்

ஸ்ரீராமஸ்மரணமென்னும் குளிகையதால் அச்சுதபக்தி
என்னு மனுபானமும் சேர்த்து
கல்மஷங்கள் போககொடுத்தார், கருணேயுடன்
ஆத்மஞானமாகிற ஔஷதஸஞ்சீவியும்

பிரத்தியக்ஷமாக கொடுத்தார், கருணேயுடன்
ஆத்மஞானமாகிற ஔஷதம் ஜரிப்பதற்கு
சமதமங்களென்னும் திதிக்ஷை ஸமாதானம்
உபரதியாகிற கஷாயம் கொண்டுவந்து கொடுக்க

ஔஷதமும் ஜரித்து குணத்துக்கு வந்துவிடும்
ஔஷத சிகித்ஸை அபத்தியங்கள் வந்துவிட்டால்
பின் யாராலு மாகாது, அபத்யம்தான் எதுவென்ருல்
அடைவாக சொல்லுகிறேன் அவித்யையுள் ஸங்கம்

துஸ்ஸங்கம் வந்துவிட்டால் ஆபாஸம் போலே ஆசையது வந்துவிடும்;
ஆபாஸம் போலே ஆசையது வந்துவிட்டால், அதிலுலேபட்ட
துக்கந்தன்னே யறிந்துகொண்டு தைரியம் பண்ணி
அந்த ஸன்னிதானத்தில் வந்து அல்பகாலம் தன்னிலே

யடைந்துவிடுவாய், ஸுகத்தை சாஸ்திர ஸம்மதத்தால்
சற்றும் குறையாதே துர்ஜனங்கள் வார்த்தையை
செவியிலும் கேளாதே, மகத்துக்கள் ஸேவையைவிட்டு வெளி வாராதே

ஹரிநாம கீர்த்தனத்தில் அலம்புத்தி வாராதே
ஸ்வரூப விசாரத்தால் சோம்பலது வாராதே
ஸமாதி தானடைந்தால் ஸம்மதமே நமக்கு
சோம்பலது வந்தால் துக்கமது விருத்தியுண்டாம்

துக்கமடையும்போது ஸ்வரூபஸுகம் தோன்றுது
ஸந்தேகம் வந்து தடைபடும் அப்போது
ஸந்தேகம் வந்துவிட்டால் சரீரமெடுக்க வரும்
அதினாலே பட்ட துக்கம் தன்னை யறிந்துகொண்டு

ஆத்மாவிலே அனுதினமும் சிந்தைபண்ணி
ரத்னபரிக்ஷை தினம்தோறும் பண்ணிவந்தால்
ஸந்தேகங்களெல்லாம் ஸுலபமாய் தீர்ந்துவிடும்
அன்வய வியதிரேகத்தாலே ஆராய்ந்து ஸந்ததமும்

தத்வசிந்தனை ஸதாகாலமும் பண்ணிவந்தால்
ஆத்மஸ்வரூபம் ஸுலபமாயிருக்கும்
அஞ்ஞானவரண மத்தனையும் பஸ்மமாய்விடுமென்று
அவர் அன்புடனே சொல்லி அனுக்கிரகம் பண்ணிவந்தார்

அவர் பத்மமலரடியைபற்றி நமஸ்கரித்து, அஞ்சலிபண்ணி
அடக்கமுடன் கிட்டவந்து ஆகாமிஸஞ்சித பிராரப்தங்கள்
ஞானாக்னியால் தக்தமாய்விடுமென்று சொன்னீர்,
பிராரப்தம் சேஷிக்க காரியமேது சொல்லுமையா!

ஸந்தேகத்தை தீர்த்துவிடுமென்று தாளடி பணிந்தேன்;
ஸச்சிதானந்த ஸ்வரூபி சங்கையற்று தானென்றறிந்து
பிராரப்த கர்மத்தால் ஞானத்துக்கு ஹானியில்லை
ஆத்மஞானத்தினாலே பிராரப்தம் போகிறதில்லை

ஆகையினால் அன்னியோன்னிய விரோதம் சற்றுமில்லை
அரூபியாகையினால் அங்கீகரித்தார் பெரியோர்கள்
சின்மயமூர்த்தி திருத்தாளிலே பணிந்து
திரும்ப ஒரு சங்கைபண்ணி கேட்டேன் தயாளுவை

ஐயா! ஞானம் வந்தமாத்திரத்தில் தேகம் விழவேண்டாமோ?
தேகமிருந்த உளவு சொல்லும், நீர் தேசிகரே!
அம்மா! ஞானம் வந்த மாத்திரத்தில் தேகம் விழுமானால்
அஞ்ஞான ஜனங்களுக்கு யாராலே விமோசனமாம்?

சரீரமிருக்கிறது பலருக்கு உபகாரமன்றோ? என்று
காரணமூர்த்தி யுரைத்தார் கருணையுடன்;
ஐயா! பிராரப்த கர்ம பலன் நசித்துபோகுமளவில் சரீர
ஜகத்வாஸனைசெய்வதும் குறையாதே, பூர்வம்போல்

தோன்றுவதை போக்கும்வகை சொல்லுமையா!
பிராரப்த கர்மம் நசித்து போகுமளவில்
ஸுகதுக்கம் கூட உடந்தையாகவே யிருக்கும்;
கர்மம் நசிக்கும்போது காரியமும் தானே நசிக்கும்;

பரமார்த்த புத்தியினால் வாராது ஒருகாலும்
தக்தபடம்போல் ஜகத்தும் தேகமும்தோன்றும்,
வறுத்தவிரை முளைக்கமாட்டாது, அதுபோலே
புனஸ்ருஷ்டி வாராது, போக்குவரத்து மில்லை,

விஷப்பல்லை போக்கின வேகமற்ற பாம்புபோல்
மித்யை என்று பார்த்தவனை பந்திக்கமாட்டாது;
பிராரப்த கர்மம் திரிவிதமாகவே இருக்கும்
ஆரப்தபோகம் அவரவர் புசிக்கும் வேளையெல்லாம்

ஆஸக்திசூன்யராய் அசஞ்சலராய் பார்த்திருப்பார்;
திட ஞானத்துடனிருப்பார் ஜீவன் முக்தர்காண்!
ஜீவன்முக்தர்க ளவஸ்தையை சிந்தித்து சொல்லவென்றால்
அளவிடக்கூடாது அதிரகஸ்ய மத்தனையும்

அல்லல் பிறப்பற்று பரமானந்தத்திலேயே அமர்ந்து
ஜகத்தை விளக்கியே வைத்து ஜீவன்முக்தாள் ஸஞ்சரிப்பார்
ஜீவன்முக்தாள் தன்னவஸ்தையை சீக்கிரமா யப்பியஸித்து
அனேக சரீரத்தை பார்த்து சிரித்து முருவலிட்டு
தாமரை நாயகரை ஸந்ததமும் பூஜைபண்ணி

த்வைதவிருத்தி தோணாதே, ஸ்வரூபமாய் தோன்றி
பத்துஸ்தலத்தும் பரம்ஜோதியான வஸ்து சுத்தவெளியாய்
ஸ்வயம் ஜோதி ஸ்வஸ்வரூபம் தன்னில் ஆய்விடுவாய்
இன்னும் அவர்களுடைய கீர்த்தி எடுத்துரைக்க, நீ கேளாய்!

காம க்ரோதங்களென்னும் கள்ளர்களையும் தான் துரத்தி
ஆசைகளற்று அழுக்குகளேராதே ஆத்மநதியில் அனுதினமும்
ஸ்நானம் பண்ணி

நிராசை என்னும் வஸ்திரத்தை நிர்மலமாகவே தரித்து
கதாசிரவண மென்னும் கனககுண்டலமும் தான் தரித்து

அச்சுதர்பக்தி என்னும் அடைக்காயும் தானடக்கி
ஜெகத்தை விளக்கி வைப்பார் ஜீவன்முக்தர்கள் காண்!
அவர்கள் அன்புடனே தந்த ஔஷதம் ஜரித்தபின்பு
அனுதியாகவே துடர்ந்திருக்கும் அஞ்ஞானநோய்விட்டு

அகண்டரஸ மென்னுமிந்த அன்னத்தில் அபேக்ஷையுண்டாகும்
நித்தியஸுகமென்னும் நித்திரையுமுண்டாச்சு
ஜன்ம வியாதி எல்லாம் சிகித்ஸை பண்ணி போக்கிவைத்தவர்க்கு
என்ன கொடுப்போ மென்றெண்ணி மனஸிலுள்ளே

வையகத்தி லுண்டான வஸ்துவெல்லாம் கொண்டுவந்து
கூட்டிக்குமித்து கொடுத்தாலு மீடாகாது
கோடிதிரவியத்தை கொடுக்கிறோ மென்ருலும் அவர்
பண்ணும் கிருபைக்கு பிரதியாக மாட்டாது

பிரதக்ஷிணமாக வந்து பாதத்தின் கீழே பணிந்து அனேக
நெடுநாளாய் அகழில் கிடந்த என்னை விடுவித்து விடுதலை
கண்டாப்போல்
தீப்பட்டமாளிகையில் அகப்பட்ட பேர்களை கையைபிடித்து
வெளியேற்றி விட்டாப்போல்

ஆற்றிலே பெருகிவரும் ஜலத்தில் அமிழ்ந்துவரும் பேர்களை
கையை பிடித்து கரையேற்றி விட்டாப்போல்
சோகமென்னுமிந்த வடவாமுகாக்கினியில் பற்றி தீப்படுகிற
வேளையிலே
கிருபையினுலே உத்தாரணம் பண்ணிவைத்தீர்கள், ஈதொன்றே
போருமோ?

பிரத்தியக்ஷமாகவந்து பாதத்தின் கீழ்ப்பணிந்து
செந்தாமலரடிக்கே தெண்டனிட்டு பணிந்து

ஜன்மவியாதி எல்லாம் தீர்ந்ததென்று கொண்டாடி
தங்கள் தாளடிக்கே சிரத்தை யதிகமுண்டாய்

பவபயங்கள் போக்கி வைத்த பண்டிதனுர் கவி தன்னை
படித்தவர்கள் ஆனந்த ஸாகரத்தில் அமிழ்ந்து லயமாய் விடுவார்.



# அத்வைத மெய் ஞான ஆண்டி

பிரஹலாதருக் காகத்தாண்டி பெரும் தூணி லவதரித்தாண்டி
பழையவினை தீர்க்கத்தாண்டி பரமகுருவாய் வந்தாண்டி 1

எங்கிருந்தெங்கே வந்தாண்டி-அவன் எங்கும் நிறைந்தவன் தாண்டி
மாயையினல் மறைந்தாண்டி-இவன்மனதுக்குள்ளே இருந்தாண்டி 2

பரிச்சின்னம் பெத்து பெத்தாண்டி அவன் பரிபூர்ணமாயிருந்தாண்டி
பக்தாளுக்காகவேதாண்டி அவன் பாரி லவதரித்தாண்டி 3

நரமிருக ரூபமாய் வந்தாண்டி அவன் நாலுவித முக்தி கொண்டாண்டி
அவன் இரணியன் மாரிலே தாண்டி அவன் எளிதாகவே பிளந்தாண்டி 4

பேராயிர முள்ளோன் தாண்டி-அவன் பெண்களை விட்டு வாராண்டி
எவ்விதமோ இவன் தாண்டி அவன் இங்கே எழுந்தருளிஞனண்டி 5

கோடிப் பெண்களைத் தாண்டி-அவன் கோரணி கொண்டிருப்பாண்டி
வேஷதாரி போலே தாண்டி-அவன் வேண்டி யவதரித்தாண்டி 6

கோடி விஷயங்களை தாண்டி-அவன் கூடிக்கொண்டே புசிப்பாண்டி
வேஷம் மாறியே தாண்டி-அவன் விலக்ஷணமாக்கிக் கொள்வாண்டி 7

பக்குவச் சித்தாளைத்தாண்டி-அவன் பார்த்துப் பார்த்து பிடிப்பாண்டி
எத்தனை பேரையோ தாண்டி-அவன் ஏத்தியே மோக்ஷ மீன்ருண்டி 8

சித்தம் பொல்லாதவன் தாண்டி-அவன் சேராதபேரைச் சேர்ப்பாண்டி
ஸாதனுசதுஷ்டர்களைத் தாண்டி-அவன் தன்வசமாக்கிக்
கொள்வாண்டி 9

மாயை தமக்கிவன் தாண்டி தானும் வசமாகேனென்ருண்டி
பொல்லாதவ னிவன் தாண்டி பலர்சொல்லை கேட்டேயிருந்தேண்டி 10

நல்லவன்போ லிவன் தாண்டி இந்தநாட்டி லெழுந்தருளிஞனண்டி
மெள்ளமெள்ள யிவன் தாண்டி-அவன் வீட்டறதியில் வந்தாண்டி 11

பையபைய யிவன் தாண்டி பரப்ரம்மம் நீ என்று சொன்ஞண்டி
யாரென்றென்னை கேட்டாண்டி-ஒன்றும்அறியாது போலிருந்தேண்டி 12

அகங்கார அளவேத் தாண்டி-அவன் ஆற்றி யணைத்து விட்டாண்டி
அகத்திலேயிருந்து கொண்டாண்டி-அவன் அகமில்லை என்று
பண்ணிவிட்டாண்டி. 13

அஞ்ஞான பிராந்தியைதாண்டி-அவன்சற்றே கடைக்கண்ணால்
பார்த்தாண்டி
பார்த்த பார்வையால் தாண்டி-அவன் பவஸாகரம் வற்றடித்தாண்டி. 14

பக்தி துறட்டியால் தாண்டி-அவன் என்சித்தம்பறித்துக்கொண்டாண்டி
அரசடிக்கே யழைத்தாண்டி-அவன் அஹம் பிரம்மாஸ்மி என்றாண்டி. 15

தலைமேல் கையை வைத்தாண்டி-அவன் பிரம்மம் ஸத்தியம் ஸத்திய
மென்றாண்டி
உன்னை யறிவாயோ என்றாண்டி-அவன் ஒன்றும்
சொல்லா திருந்தேண்டி. 16

தன்னையறி என்றாண்டி-அவன் ஸமிக்ஞையாக சொன்னாண்டி
சேர்வையை கண்டபின் தாண்டி. திரும்பிபோகாமலே போனேண்டி. 17

மோகத்தை மாற்றிவைத்தாண்டி-அவன் மோக்ஷேச்சை யளித்தாண்டி
தாயோடு பிள்ளையைத்தாண்டி. ஸகலமும் நான் மறந்தேண்டி 18

பாத கமலத்தைத் தாண்டி. பரமென்றெண்ணிக் கொண்டேண்டி
அஞ்சினபேரை போலேதாண்டி. நானும்கொஞ்சம்
பயந்திருந்தேண்டி. 19

அனேக சுருதிகள் சொல்லித்தாண்டி-அவன் அனுபவித்து
பாரென்றாண்டி
ஸங்கல்பத்தாலே தாண்டி. தானேபிறந்தா யென்றாண்டி. 20

உன்னாலே கல்பித மென்றாண்டி-அவன் ஒளிக்குமொளி நீ என்று
சொன்னாண்டி
உனக்கு பயமில்லை என்றாண்டி. நானுமுற்றுற்று பார்த்திருந்தேண்டி. 21

வெறிக்கும் நிலவுபோல் தாண்டி-அவன் என்னை வெட்டவெளி
யாக்கினாண்டி
தர்ப்பண பிம்பம்போல் தாண்டி-அவன் ஜகதுத்பத்தி என்றாண்டி. 22

அத்தையறிந்து நான் தாண்டி அதிஷ்டானமா யிருந்தேண்டி
காரணமில்லாதே தாண்டி-அவன் இந்தகாரியம் கூடாதென்றுண்டி 23

பொன்னில் பிரிவுபோல் தாண்டி-அவன் உனக்கு பேதமில்லே
என்றுண்டி
த்ருபுடியை வெட்டி விட்டாண்டி-அவன் சித்ஜடத்தை யறுத்து
விட்டாண்டி 24

அறிவுக் கறிவினைத் தாண்டி நானப்போதே யுண்மை கண்டேண்டி
விருத்தி லயித்தால் தாண்டி இந்த விச்வமே தோணு தென்றுண்டி 25

ஸ்வானுபவத்தாலே தாண்டி-அவன் ஸுஷுப்திபோலிருக்கு
மென்றுண்டி
கடத்தை யிடித்தால் தாண்டி கடமாகாசமாகு மென்றுண்டி 26

புரத்தை யிடித்தால் தாண்டி பரிபூரணமாகு மென்றுண்டி
மரத்தை கடைஞ்சால் தாண்டி அதில் வஹ்னியிருக்கும்போல்
தாண்டி 27

அகத்தை யறிந்தால் தாண்டி அதிலேயிருப்பாய் என்றுண்டி
மூர்த்திகளை கோடிதாண்டி நானும் முட்டியே
குட்டிக்கொண்டேண்டி 28

ஏத்தியே போரு மென்றுண்டி-அவன் நீ எங்குமானுய் என்றுண்டி
நல்ல குறிக்காரன் தாண்டி-அவன் நானும் நாணயம்
கண்டுகொண்டேண்டி 29

கையை பிடித்தேதாண்டி-அவன் குறிகண்டாப்போல்
சொல்லிவந்தாண்டி
விதிநிஷேதங்களைத் தாண்டி நிமிஷத்தில் போக்கிவைத்தாண்டி 30

அதிசயமதிசய மிவன்தாண்டி யாரோடொப்பு சொல்வேண்டி
சொன்னபடிக்குத் தாண்டி நானும் சோதித்து பார்த்து
கொண்டேண்டி 31

ஒன்றென்றுகவே தாண்டி நானு முண்மை கண்டு கொண்டேண்டி
முண்டை யொருத்தி என்றுண்டி நானும் முடிவினை கண்டு
கொண்டேண்டி 32

மாயச்செருக்கியைத் தாண்டி வெளியே தள்ளுவாய் என்ருண்டி
இல்லத்து தீவினை தாண்டி உன்னீஷணை நீங்கு மென்ருண்டி 33

கன்னி யருளாலே தாண்டி கடும்வரத்தா யிருக்குமென்ருண்டி
பிரம்மத்தைவிட்டு நீதாண்டி பிரிந்து திரிந்தாய் என்ருண்டி 34

குருநாதனை பூஜித்தால் தாண்டி உனக்கு நன்மைவரு மென்ருண்டி
கும்பிக்கு சோறிடு என்ருண்டி-அவன் கூடைக்கு முத்திடு என்ருண்டி 35

கோதை யருளாலே தாண்டி உன்னை கூட்டி வைப்பா ளென்ருண்டி
வேலா முருகா வென்ருண்டி வெளியிலே வாரு மென்ருண்டி
கோலால் குறிகள் பார்த்தாண்டி குணங்களும் குற்றமென்ருண்டி 36

சித்தம்சுத்தி போருதென்ருண்டி ஸத்தியமாய் என்னைத் தாண்டி
ஸமரஸ மாக்கி விட்டாண்டி குலதேவதை குற்றம் தாண்டி
உன்னைசேரவிடலே என்ருண்டி 37

குருநாத னருளாலே தாண்டி உனக்கு நன்மை கிடைக்கு
மென்ருண்டி
ப்ரத்தியக் ப்ரம்மத்தை தாண்டி பரோக்ஷமென் றெண்ணுதே
என்ருண்டி 38

உக்கலில் பிள்ளைபோலே தாண்டி உனக்குள்ளே யிருப்பாய் என்ருண்டி
காக்காயக்ஷம் போலேதாண்டி யிதோகாட்டும் சுருதிகளென்ருண்டி 39

நேதிநேதி யாலே தாண்டி நீயுந் சேஷித்திருப்பாய் என்ருண்டி
பாலுக்குள்ளே நெய்போலே தாண்டி இந்த பாருக்குள்ளே
யுறைந்தாண்டி 40

தேவதத்தன் போலே தாண்டி ஜீவனே ஈச னென்ருண்டி
நானுபுஷ்பரஸம் தாண்டி ருட்டில் சேர்ந்தாப்போலேதாண்டி 41

ஜீவன் ப்ரம்மத்திலே தாண்டி சேர்ந்தால் திரும்பாய் என்ருண்டி
இன்ன புஷ்ப ரஸ மென்று தாண்டி என்றுமெடுக்கவே
கூடாதென்ருண்டி 42

ஜாதிபேதத்தை தாண்டி ஸமரஸ மாக்கி விட்டாண்டி
வடவிருக்ஷத்தின் கீழே தாண்டி-அவன் ஸாதுபோலே யிருந்தாண்டி 43

அனிருத ஜட துக்கம் போக்கி வைத்தாண்டி ஸத்துசித்து மயமாக்கி
விட்டாண்டி
பண்டிதன்போலே வந்தாண்டி-அவன் பக்கிரிகொண்டு வந்தாண்டி 44

எந்தெந்த வியாதியும் தாண்டி நானில்லாதே போக்கி வைப்பே
னென்றாண்டி
ஸம்ஸார வியாதியை தாண்டி-அவன் தாது பரிக்ஷை பார்த்தாண்டி 45

வெகுநாளை ரோக மென்றாண்டி-அவன் அதற்கு போத குளிகை
தந்தாண்டி
பத்தியம் காத்திரு என்றாண்டி சற்றும் பாமராளாகா தேன்றாண்டி 46

ஸத்ஸங்கம் கூட்டிக்கொள் ளென்றாண்டி-அது தானே குணமாகு
மென்றாண்டி
குருநாதன் சொல்படி தாண்டி கடும் பத்தியமா யிருந்தேண்டி 47

அஞ்ஞான வியாதிபோய் தாண்டி அபரோக்ஷ திட மாகினேண்டி
த்வைதமென்னும் பேயைத் தாண்டி-அவன் துரத்தித்
திருநீறிட்டாண்டி 48

மணிமந்திரம் போதித் தாண்டி நல்ல மந்திரவாதியிவன் தாண்டி
விருத்தி வாஸனைகளைத் தாண்டி சற்றும் தோன்றவிடாமலே
யடித்தாண்டி 49

அத்வைத வெளியிலே தாண்டி அம்பரம் போலாகினேண்டி
கர்ம ஸாகரத்தைத் தாண்டி கன்றுகுளம்புபோல்
தாண்டவைத்தாண்டி 50

தர்மாதர்மத்தைத் தாண்டி சற்றும் ஸாரமேயில்லை என்றாண்டி
லோகாதி லோகத்தைத் தாண்டி நொறுங்கவே பார்த்துவிட்டாண்டி 51

போகாதிகள் பொய்பொய் யென்றாண்டி பரிபூர்ணானந்தம்
மெய்மெய் யென்றாண்டி
துக்க ஸாகரத்தைத் தாண்டி-அதை தூரவே யிறைத்து விட்டாண்டி 52

ஸச்சிதானந்த வெள்ளத்தைதாண்டி-அவன் தாக்கியே
தேக்கிவிட்டாண்டி
சரீரம் மூன்றிலும் தாண்டி உனக்கு ஸம்பந்தமில்லை என்றாண்டி 53

அதை விசாரிக்கும்போது தாண்டி-அவன் அதற்குள் ஸாக்ஷியா
யிருந்தேண்டி
அவஸ்தை மூன்றிலும் தாண்டி உனக்கபிமான மில்லே என்றுண்டி 54

அதை யாராய்ந்து பார்க்கும்போது நான் தாண்டி அதற்கப்புறமா
யிருந்தேண்டி
பஞ்சபூதங்களைத் தாண்டி பதறவே பார்த்துவிட்டாண்டி 55

கோசபாவனே போய்த் தாண்டி கூடஸ்த ப்ரம்ம மானேண்டி
பஞ்சதன்மாத்திரையைத் தாண்டி பதறவே யடித்து விட்டாண்டி 56

என்சொல்வேன் என்சொல்வேனுண்டி இவனெங்கே யிருந்து
வந்தாண்டி
இன்னமின்னம் ஜன்மம்தாண்டி எடுக்கவே என்றிருந்தேண்டி 57

இதை விசாரித்தால் தாண்டி ஜன்மத்துக் கேதுவில்லே என்றுண்டி
பஞ்சகோசங்களைத் தாண்டி அடுக்கோடே சாய்த்துவிட்டாண்டி 58

ஈவிரக்கம் காணேண்டி-நான் இவனே என்னமாய் நம்பப் போரேண்டி
தேசாதி தேசமெங்கும் தாண்டி தேடிதிரியாதே என்றுண்டி 59

தசமனேபோலே தாண்டி சற்றே யறிந்துகொள் ளென்றுண்டி
சிலகால மாகவே தாண்டி இது ஜீவனே என்றிருந்தேண்டி 60

அஸிவாக்கியம் ஒன்றுலே தாண்டி ஐக்கியமாய் சேர்த்துவிட்டாண்டி
பதினாறு பேர்களைத் தாண்டி படையோடே சரித்துவிட்டாண்டி 61

தனியே யிருக்க வைத்தாண்டி-அவன் ஸாகஸமென்ன சொல்வேண்டி;
ஷண்மத வாதிகளைத் தாண்டி அவன் தன் வசமாக்கிக் கொள்வாண்டி 62

ஆறுவைரியைத் தாண்டி-அவன் அண்டவிடாம லடித்தாண்டி
தாறுமாறுக்காரன் தாண்டி-அவன் துரீய நிலேயைத் தந்தாண்டி 63

காமக்ரோதாதிகளைத் தாண்டி காறுவாறு தொடுத்தாண்டி
தொண்ணூற்ருருபேரை தாண்டி துண்டித்து போட்டு விட்டாண்டி 64

எத்தனை காலமோ தாண்டி எனக்கென்று பாடுபட்டேண்டி
அதை விஷமமாக்கினுண்டி அகர்த்தனுக்கி விட்டாண்டி 65

வெகுவான போகத்தை தாண்டி புசிக்கவே என்றிருந்தேண்டி
பார்வை யொன்றினுலே தாண்டி போகத்தை மாற்றியே
வைத்தாண்டி 66

பார்த்த இடமெல்லாம் தாண்டி பரிபூர்ணமாய் தோற்றி வைத்தாண்டி
வார்த்தைகளொன்றும் காணேண்டி மௌனமதாக்கி விட்டாண்டி 67

மரத்துக்குள்ளே யானை தாண்டி மறைத்தொளித்தாற் போலேதாண்டி
பரத்துக்குள்ளே தாண்டி துலங்கவே பார்த்துவிட்டாண்டி 68

மண்ணுக்குள்ளே பூதந்தாண்டி ஒருமித்திருந்தாப் போலேதாண்டி
தனக்குள்ளே தாண்டி-அவன் ஸாபல்லிய மாக்கி விட்டாண்டி 69

பூஷணம் பொன்னிலே தாண்டி வெகுவிதமானுப் போலேதாண்டி
எனக்குள்ளே என்னைதாண்டி ஏகமய மாக்கினுண்டி 70

ஏகாந்த ஸ்தலத்திலே தாண்டி அவன் எப்போதும் போலாக்கினுண்டி
ஸச்சிதானந்த மஞ்சத்தில் தாண்டி தூங்காமல் தூங்கவைத்தாண்டி 71

அத்வைத ஆண்டியை தாண்டி அதைகற்ருேரும் கேட்டோரும் தாண்டி
சித்ரூபமாவா ரென்ருண்டி திரும்ப ஜனியா ரென்ருண்டி 72



## வேதாந்த அம்மானை

அம்மானை அம்மானை ஆடுவேனம்மானை
யாரைப்பாடி ஆடுவேன் அம்மானை (அ)
ஸர்வத்ர பூதாத்ம ஸாக்ஷிக்கும் ஸாக்ஷியதாய்
சாந்தநரஸிம்மரென்னும் ஸத்குருவை நான் பாடி (அ)
ஸாம்பவியை ஸித்திவிநாயகரை முன்னிட்டு
ஸத்குருவை நான் பாடி ஆடுவேனம்மானை (அ)

ஏந்தி எறிந்தாட என்நாவில் வந்திருந்து ஸாந்நித்தியமாயெனக்கு
நான் நினைத்த காரியங்கள் ஸாதித்துத் தாடியம்மா தாயே,
பராபரையே (அ)
படைப்பேன் நான் பாற்குழம்பும் பானகமும் பாயஸமும்
வடைப்பருப்பும் மோதகமும் வர்க்கமாய் பலாச்சுளையும் (அ)
எடுத்துப்படைப்பேன் இதுசமயம் உன்றனுக்கு
உன்னைப்போல் எந்தனுக்கு உதவிசெய்வாராருமில்லை (அ)

பாடுதற்கு முன்னிடத்தில் பழுதுகுறை வாராமல்
நிறைவேற்றி வை தாயே எந்தன் மனோன்மணியே (அ)
அபத்தமதிருந்தால் அறிந்த மஹாத்மாக்கள்
பிழை இன்னதென்று சொல்லி பொறுத்தருள வேண்டுமம்மா. (அ)

### நூல்

மூலத்துக்குள்ளே முளைத்து முளை எழுப்பி
மாயை யதுவாகி மரித்துப் பரிணமித்து
ஸகல ஜகத்தையும் தெரியவிடாமல் மறைத்து
அஞ்சு பூதங்களென்றும் பஞ்சவர்ணத்தா லிழைத்து
கருப்பாய் சிவப்பாய் களங்கமற்ற வெள்ளையுமாய்
மூன்றுகுணமாய்ச் சமைந்த மூர்த்தமுள்ள அம்மானை

ஆதியிலே யுண்டான அம்மானை காணுமிது
சராசரமத்தனையும் தாமாய் நிறைந்துகொண்டு
பிரளயமதுவந்தால் பழையபடி ஒடுங்கி
மஹத்தத்வமென்னும் நல்ல மகத்தான பேழையிலே
வைத்திட்டுத் தாள் பூட்டி வைத்திருக்குமம்மானை

ஸ்ருஷ்டி ஸமயம் வந்தால் திரும்பி பரிணமிக்கும்
வேளையது வந்தால் விச்ரிம்பிக்கு மம்மானை
மாணிக்கப் பேழை வருக வருக இங்கே
வைபோகப் பேழை வருக வருக இங்கே
யாரறிவாள் அம்மானை யாரறிவாளம்மானை

அஞ்ஞானி ஜனங்களுக்காடவும் கூடாது
அந்தக்கரணம் தெளியாராடவும் மாட்டார்கள்
பாமரர்களாலே யிதை பார்க்கவும் கூடாது
பரிபக்வங்களாகி பழைய மலங் கழித்து
சித்தம் தெளிந்தார் தெரிந்தாடு மம்மானை

சிவதத்வங்களறிந்தார்தாமாடு மம்மானை
பச்சைமரத்தில் பணிந்திருக்கு மாணியைப் போல்
எங்கள் குருபக்தியிடைவிடாமலே யிருக்கும்
அந்த ஜனங்கள் எடுத்தாடு மம்மானை
எங்கள் குரு வம்சமெடுத்தாடு மம்மானை

ஈஷணைகள் விட்டு ராகத்வேஷ மொழிந்து
தீரவைராக்ய பக்தியுள்ளாள் திடமதியாள்
ஸாதனங்களுள்ளாள் சமத்தவ ளொருத்தி
தத்வ பேழை தன்னை தைய நல்லாள் தான் திறந்தாள்
அம்மானை தானிருக்கும் அறையையவள் பார்த்தாள்

பார்த்தாள் பிரமித்தாள் பரிசிழந்து மெய்சோர்ந்தாள்
நாளுட அறிவேனோ அல்லாமல் தோற்பேனோ
பாடஅறிவேனோ பரிசிழந்து நிற்பேனோ
ஏந்த அறிவேனோ இடையில் தவறிடுமோ
பரமஹம்ஸர் நம்மை பரிஹாஸம் பண்ணுவரோ

ஸ்வரூபநிலை கண்டார்க்கு தோற்றுக் கிடப்பேனோ
கர்மியுமன்று கரைகடந்த ஞானியுமன்று
இரண்டும் கெட்டாளென்று நிஷித்த முரைப்பாளோ
நாலுவிதமாய் ஜகத்தில் நஷ்டமாய் போவேனோ
நானுமதிலே ஒருவளது ஆகாமல்
திருடானுபவம் அளிப்பீர் தேசிகரே

நாலுவித மேதென்ருல் நானிப்போ சொல்லுகிறேன்
வேதாந்த சிரவணம் பண்ணும் விவேகமுள்ள கூட்டத்தில்
தானும் வந்து கூடவிருந்து தலேவணங்கித் தெண்டனிட்டு
ஸாதன ஸம்பன்னர் போல் தானும் வந்து கூடயிருந்து
தானு மறிவான்போல் தலேயசைத்துக் கொண்டாடி
மகிமையுள்ள வேதாந்தம் மகத்தென் றறிந்துகொண்டு
தேசிகரையும் சாஸ்திரத்தையும் தெருவிலே போய்த் தூற்றும்
அஞ்ஞானியோடு போய்த் தூற்றும் ஆகாது என்பாளோ
பொல்லாருடன் போய்த் தூற்றும் பொல்லாது என்பாளோ

பதிகடந்து மங்கையர்கள் பரபுருஷன் தேடுவர்போல்
ஸ்வய குருவைவிட்டு தேசாந்திரம்போயலேந்து
உபதேசகர்த்தாவை ஒருநாளு மறியாமல்
ஸாதனமும் ஸத்குருவும் ஸந்ததமும் வேண்டாமல்
எங்கெங்கும் வேதாந்தி இருக்குமிட மாராய்ந்து
அங்கங்கே போயிருந்தவர்கள் சொல்லே தான்கேட்டு
சப்த தன்மாத்திரையை யுக்தியிஞல் கிரகித்து
யதார்த்த மறியாமல் ஏதாகிலுமுளறி
சிலாகிக்கவேண்டிப் படித்த வித்தை யென்பாளோ

ப்ரதிஷ்டார்த்தமாக படித்தார்க ளென்பாளோ
பலமில்லே என்று பரமஹம்ஸ ரேசுவரோ
சிலகாலம் மெய்யரைப்போல் சுச்ரூஷை பண்ணிவந்து
தானும் சில கள்ளரைப்போல் தஸ்கரித்த வித்தை எல்லாம்
அறிவேன் நானென்று அகமே இறுமாந்து
வாய்ஜம்பமே யொழிய மனஸி லிரக்கமற்று
வயறுவளர்க்க உபாயமிது என்பாளோ
உதரம் வளர்க்க உபாயமிது என்பாளோ
ஆத்மானுபவ மறியாதா ரென்பாளோ

வேண்டும் வேடம் பூண்டு மேனிஎல்லாம் நீறணிந்து
கரைகடந்த யோகியர்போல் கண்ணே யிருகவிட்டு
சிவனே யறிவார்போல் சிவோகம் சிவோகமென்று
இவனேப் போல் வேதாந்தி உலகிலில்லே என்று
அனேவரும் தன்னேவந்து அடி பணிய வேணுமென்று
ஸகலரும் தன்னுடைய தாள்பணிய வேணுமென்று

போஜ்யங்கள் பண்ணி தம்மை பூஜிக்க வேணுமென்று
பூஜார்த்தமாக படித்தவித்தை என்பாளோ
பூர்ணவகை காணுமல் புலம்புகிரு ளென்பாளோ

நானிப்போ சொன்னவகை நாலேயும் தள்ளிவிட்டு
ஸாதனமும் ஸத்குருவும் ஸந்ததமும் கொண்டாடி
ப்ரதிபந்தரகிதருமாய் படித்து வேதாந்தத்திஞல்
சிரவண மனன நிதித்யாஸனத்திலே கூடி
அகம்தேகமென்னு மஸம்பாவனே மறந்து

ஹம்ஸோகமென்று மது திருடமாக
ஆத்மானுபவ மறிந்தே க்ருதார்த்தருமாய்
ஸச்சிதானந்த வஸ்து தாமென்றறிந்து கொண்டு
அத்வைதானந்தருமா யகண்டபரிபூர்ணருமாய்
சிதேகரஸானந்த ஜீவன்முக்தி யாஸனத்தில்
அந்த பதத்திலே அமைத்திடுவா யம்பிகையே

இந்த பதவி எனக்கருளு மென்குருவே
இந்த தத்வ ஸாகரத்தை நீந்தயறிவேனே
கைநீச்சாய் நீஞ்சிக் கரை ஏறவல்லமையோ
ஸத்குருவின் பாதமலர் தெப்பமது உண்டாஞல்
கண்சிமிட்டும் பொழுதில் கடந்து கரைகாண்பேனே - நான்

குறிகண்டாப்போலே உதிக்கின்ற தென்மனஸில்
ஆனபடியாகிறதென்று அம்மானேயாட எடுத்தாள்
அம்பாள் சரணமென் றம்மானே சென்றெடுத்தாள்
குருகிருபையாகிற குளிர்ந்த மலர்ப் பொய்கையிலே
மங்களஸ்ஞன வகை பண்ணியந்த மாதவத்தாள்

வகிடுவளர்த்தாத்தி மயிர்முடிந்து பின்போட்டு
சுத்தவெள்ளே பட்டுடுத்தி துய்யவெள்ளே நீறணிந்து
தைரியமாகவே சதுரமுத்து மண்டபத்தில்
ஆறுஸமாதி என்னு மாஸனத்தின் மேலிருந்தாள்

குருபாத பூஜையைக் குறையறவே நடத்தி
அம்பிகைக்கும் சங்கரர்க்கும் ஆராதனங்கள் பண்ணி
ஜயபத்திரி எனும் பூவை செவியிலெடுத்து வைத்தாள்

குரூர ஜனங்களுடன் கூடியிணங்காதே
ஏந்திழையாள் மோகமுடனிணங்கித் திரியாதே
க்ஷமையென்னும் நல்ல ஸ்தன உத்தரீயம் தானுடுத்தாள்

இடையிலிருக்கிக் கச்சை யிசைத்தாளழகாக
அம்மானேயாடுமவ ளழகை கூறவென்றால்
ஆயிரநாவுள்ள அனந்தனுக்கும் கூடாது
ஸத்குருவின் பாதமலர் தூளித் தலைக்கழகாய்
சந்திரப்ரபை சூட்டிச் சரங்கள் அதுவண்டசைய
சுத்தார்த்தம் கேட்கும் சுருள் குழலாளவள் காதில்
கட்டிமுத்துத் தோடு கொப்பு கம்பிக் கலகலென

கண்ணாடிபோலே கபோல மிருபுறமும்
இரத்ன மணிகுண்டலங்கள் நின்று நிழல்காட்ட
மறுவற்ற சந்திரனை வசைசொல்லி ஏசு மாப்போல்
மதியொத்த வான்முகமும் மந்தகாஸத்துடனசைய
பூரித்தவான் முகத்தில் புனுகுமணமிலங்க

வையகம் பதினான்கும் மத்தித்துச் சாந்தாக்கி
இளம்பிறைபோல் நெற்றியிலே யிட்டாள் திலகமதாய்
பச்சை இலைத் தாமரையில் பனிநீர்த் திவலைகள் போல்
முத்துமுத்தாக முகமண்டலம் வேர்க்க
ஆனந்தமாகவே யடைக்காய்ச் சுருளடக்கி

பதபதார்த்த மமைத்துப் பாடும் கனிவாய்தான்
சிப்பிமுத்து ஸம்புடம்போல் சற்றே முறுவலிட்டு
தெத்திட்ட பல்லும் திக்கெட்டும் நிலவெரிக்க
ஸஜ்ஜனங்கள் கூட்டுறவுமின்னும் ஸரப்பளி தான்
கண்டஸரமும் கனத்த முத்து மாலைகளும்
ஒளிபரந்த ரெட்டைகளும் ருத்திராக்ஷ மாலைகளும்

பருத்தகொடியும் பவழ வடமுடனே
பாரிஸ்தனத்தில் பதக்கம் துவண்டசைய
குலதேவதைக்கும் குலஜனங்கள் யாவருக்கும்
கைங்கர்யம் பண்ணுமிந்த கட்டழகி கைதலத்தில்
அடுக்குவளை நல்பவழம் அஸ்தகடகம் விளங்க

யிறுக்கியிட்ட பொன்னுழி எத்திசையும் ஜோதியிட
ஜகத்திலுண்டான சப்தவகைக ளெல்லாம்
அல்லவென்று பேசி கலகலவென் றம்மானே
போடுபோடம்மானே பொன்வளைக் கையால் பறிக்க
மாணிக்க வாழ்முகத்தாள் மனதிலொன்று எண்ணுவளாம்.

அரனர்கிருபையோ அடிநாளைப் புண்ணியமோ
பூர்வீகம் தான்செய்த பூஜாபலன் தானே
மகத்துக்களும் நம்முடைய மாளிகைக்கு வந்ததுண்டோ
ப்ரம்ம நிஷ்டாள் தங்களையும் பூஜைகள் செய்தோமோ
ப்ரம்ம நிஷ்டாள் கையில் பொன்னை ரொம்பயீந்தோமோ
யார் செய்த நற்றவமோ அம்மானை இவ்வகை யறிந்தோம்

ஆனந்த மிஞ்சிவிட அங்கம் புளகிதமாய்
ஆரித்துவிட்டது அங்கப்பணிக ளெல்லாம்
பூரித்துவிட்டது பொன்னணிந்த தன் தோட்கள்
ஏகாந்தமாகி யிருந்தாடும் வேளையிலே

ஈஷணைகள் வந்து யிடுக்கே தடுத்தாலும்
வாஸனைகள் வந்து மறித்தாணையிட்டாலும்
தாபத்திரயம் வந்து சண்டைபண்ணி விட்டாலும்
காமக்ரோதம் வந்து கட்டி பிடித்தாலும்
அகங்காரம் வந்து அழவே துவக்கினலும்
ப்ரதிபந்தம் வந்து பறித்தெறிந்து போட்டாலும்

கோபமது வந்தாலும் குற்றமென் றெண்ணுமல்
ஸ்வபாவமதா யெண்ணி ஸகித்துமதை தள்ளியவள்
யாரேது சொன்னலு மிவள் செவியிலேருதாம்
பாஹ்யத்தில் போகின்ற மனதையவள் திருப்பி
அந்தரத்தில் கொண்டு சென்ருள் அந்தர் முகமானுள்

அம்மானை போகின்ற நிலேயே குறிபார்த்தாள்
அறிவென்ற மான் விழிகள் ஆகாயத்தில் சுழல
மான்விழிகள் அம்மானையுடன் வாது பண்ணி பூசலிட
ஆனந்தபாஷ்ப மடித்துக் கரைபுரள
அஞ்ஞான மென்னும் அஞ்சனங்கள் தானழிந்து

மெய்ஞான சக்ஷுஸ் மேனோக்கியே சுழல
ஆடத்தொடுத்தாளே யாருக்கும் நிகரில்லாதாள்
பாடத்தொடுத்தாளே பவளக்கனிவாய் திறந்து
முக்குணமாமம்மானே மூன்று வர்ணமாக வென்றால்
இவ்வணங்கை வெண்விழியை எத்துடனே ஒப்பிடலாம்

கறந்தபாற் கொப்பிடலாங் கட்டழகி வெண்விழியை
கடைக்கண் சிவப்போடு கரிவிழிகள் நன்றாட
நெற்றிப் பிறையாட நேரே எதிராட
கொப்பு நிழலாட கூடே எதிராட
மாது முகமாட வாதுபண்ணித் தானாட

சரிந்து ஸ்தனமாட தானுமெதிராட
தான் பாடியாட உத்தரியமுடனாட
ஸத்திய லோகம் கேட்டு தானுமுடனாட
கொம்புக் கிளிபோலே கோவைக்கனிவாய் திறந்து

கூவும்குயில் போலே பாடி யிவளாட
தாழாது வம்மானே தானும் கலகலவென்னும்
சினத்து மெறிவாள் திரும்பி வந்து கையில் விழும்
மறித்து மெறிவாள் வணங்கி வந்து கையில் விழும்
அந்தரத்தே போயொளிக்கு மாகாசத்திற் சுழலும்

கண்சிமிட்டும் போதுக்குள் கட்டழகிக் கையில் விழும்
சினத்துச்சினத்தெறிய திரும்பி வருகிறதும்
மறித்து மறித்தெறிய வணங்கி வருகிறதும்
மாது எறிகிறது மம்மானே வருகிறதும்
இவ்வகைகளிரண்டையு மெத்தோ டொப்பிடலாம்

ஸரஸபுருஷன் சருவி வந்து கைப்பிடித்து
சிக்கெனவே தள்ளி சினத்தகல நின்றாலும்
மன்மதப் பரவசத்தால் சருவவருவான் போலே
சட்டை பண்ணாமல் சருவவருவான் போலே
கடுகடுத்து முகத்தை விடுவிடென்று சொன்னாலும்
நயந்துநயந்துபேசி நகைத்து நகைசெய்வான்போல்
இவ்வகைக் கொக்குமென்று எந்தனுக்குத் தோன்றுவது
இந்தவகையாக யிவ்வழகை வர்ணித்தாள்

இளங் கோகிலம்போலே யிவள்பாடி யாடுவதை
தும்புருவின் வீணைச் சுருதிபோல் பாடுவதை
ஸத்திய லோகத்து ஜனங்க ளதுகேட்டு
தெய்வலோகத்து ஸபைகள் துவறிந்து
பூமியிலேதோ புதுமை தோன்றுகிற தென்று
கடல்போற்றிரண்டு காணவெகு ஆசையுடன்

இந்திரரும் சந்திரரு மீசருடன் விஷ்ணுவும்
தும்புருவும் நாரதரும் சொல்லரிய கின்னராளும்
வசிஷ்டர் யாஞ்ஞ வல்க்யர் சூதர் மகாஜனகர்
ஏற்றமுள்ள ப்ரம்ம நிஷ்டாள் ராஜரிஷி தேவரிஷி
ஸ்வயம்ப்ரபை சூடாலே காச்யபர் மைத்திரேயர்

சபரிஸுசீலேயுடன் சங்கையற்ற ஸேனே எல்லாம்
எள்ளுவிழ யிடமின்றி நின்றது ஸேனே யங்கே
நிற்கவிடமற்று நெருங்கிற்று ஸேனேயெல்லாம்
மாயாகுணத்தோடே வாதுபண்ணிப் பூசலிட
ஆத்மவர்க்கமெல்லா மறிந்துமிவள் பாடுவதை

ஒருவரை யொருவர் பார்த்துவமையிட் டேது சொல்வார்
அஸுரர்களமரர்கள் அறமுனிவ ரந்தணர்கள்
அஷ்டதிக்கு பாலகருமாட வறியார்கள்
ஏகதேசத்திலிருந்த கோவர்த்தனத்தை
எளிதாக விஷ்ணு எடுத்தாரே யென்றுசொல்லி
அதுவே புதுமை என்று எல்லோரும் சொல்லுவரே

பூமியைச் சேஷன் பொருத்தே சிரசின்மேல்
தரித்தாரென்று சொல்லி சிலாகித்துச் சொல்லுவரே
அண்டம் பதினுலு மம்மானேயாய்த் திரண்டு
மூன்று லோகங்களிந்த முக்குணத்துக்குள் ளொடுங்கி
இருக்கின்றதினுலே எவராலே நாடுவது

மாயா குணத்தின் வகைகண்டா ரொருத்தரில்லே
மகாமோகம் தன்னே வகையறிந்தார் யாருமில்லே
மாதொருத்தி யான்தவிர மற்றெருத்தி யாரறிவாள்
தைய லொருத்தி தவிர தத்வத்தின் கூறறியாள்
அருமை அருமை என்று ஆச்சரிய பட்டபேரும்
பூவர்ஷந் தூவி புகழ்ந்தே நமஸ்கரித்தார்

மாது ஜயித்திடுமோ அம்மானே வலுத்திடுமோ
யார்க்கு ஜயமாவதென்று அறிந்திடுவோம் நாமேயென்று
இமையோ டிமையை பொருந்தாதே எல்லோரும்
சித்திரத்து பொம்மைபோல் பார்த்தே திகைத்திருந்தார்
ப்ரம்மஸபை தேவஸபை பூமியிலே யுள்ளஸபை

இந்த மகா ஸபையைக் கண்டு மனதில் விசாரமாகி
ஆயிர வருஷந்தான் ஆடினுே மானுலும்
மாயை நமக்கு வசமாகப் போவதில்லே
வாணி கிருபைகொண்டு வசைசொல்லி ஏசினுல்தான்
மாயை நமக்குவசமாக்கி கொள்ளலாமென்று

ஏசத் தொடுத்தாளே ஏற்றமுள்ள பெருமாட்டி
அம்மானே உன்னுடைய அடமெல்லாம் நானறிவேன்
அம்மானே உன்னுடைய அடிவேரும் நானறிவேன்
சித்தினிடத்தில் ஜெனித்தாயே அம்மானே
திரைச்சீலேபோலே மறைத்தாயே அம்மானே

ஸத்தைவிட்டு நீயும் தரியாயே அம்மானே
ஆனந்தந்தன்னே அறக்கெடுத்தா யம்மானே
அன்ருத ஜட துக்காத்மா வானுயே அம்மானே
அகடவிகடங்கள் படித்தாயே யம்மானே
அண்டமெல்லாம் கைவசமாய்க் கொண்டாயே யம்மானே

மூலப்ருகிரதி என்று பேர்பெற்ருயே அம்மானே
முக்குணமு மொன்ருகி முளேத்தெழுந்த அம்மானே
அஞ்சுபூதமாய்ப் பிரிந்தாயே யம்மானே
பஞ்சீகரணமாய்க் கலந்தாயே யம்மானே
ஆருருதத்துவமா யானுயே யம்மானே

அதுபெருகி தொண்ணூற்ருரு தத்துவமானுயம்மானே
தோஷஜகத்தை யுண்டாக்கினேயே யம்மானே
ஓகோகோ! அம்மானே உன் கூத்து ரொம்பவுண்டே
சாச்வதரை ஸத்வகுண உபாதியோ டம்மானே
கூட்டிவைத்து கூத் தாட்டம் கொண்டாயே யம்மானே

தத்வத்துக் கப்புறம் நிற்கும் நிருபாதியரை
ஸர்வக்ஞனென்னு மொரு தாழ்வுரைத்தா யம்மானே

நாமரூபமில்லாத நாசரகிதருக்கு
நாலைந்து பேரிட்டழைத்தாயே யம்மானை
அன்யோன்ய மத்யாஸம் பண்ணினையே யம்மானை

அயப்பிண்டம் போலே நீயானுயே யம்மானை
முடியாமுடி முடிய கற்றுயே யம்மானை
மும்மூர்த்திகளுக்கும் பேரிட்டாயே யம்மானை
சித்தையும் ஜடத்தையும் கலந்தாயே யம்மானை
சித்ஜடகிரந்தி முடித்தாயே யம்மானை

ஜலத்தில் ப்ரதிபிம்பம் மாயைதா னம்மானை
அந்தக்கரணத்தோ டொன்றுயானுயே யம்மானை
சிதாபாஸனென்று மறைத்தாயே யம்மானை
ஸகலத்துக்கும் கர்த்தாவாய் நீயானுயே யம்மானை
ஆசைஎன்னும் பாசவலையிலே யம்மானை
அசைக்கப்படாமல் காலையிறக்கினையே யம்மானை

அடிக்கடி ஜனனமரணத்தி லம்மானை
அலைவாய் த்ருணம்போலே யலையவைத்தா யம்மானை
ஸ்வர்க்க நரகமென்றும் கல்பித்தா யம்மானை
ஸுகம்போலே ஸம்ஸாரம் தோன்றவைத்தா யம்மானை
ஆத்மஸன்னிதான விசேஷம்கொண் டம்மானை

அயஸ்காந்தம்போலே யாடுகிறு யம்மானை
சுத்தஸ்படிக ஸன்னிதானத்திலே யம்மானை
தோற்றும் சிவகுஸும உபாதிபோ லம்மானை
கூடஸ்த ப்ரம்ம குணரகிதமான வரை
பஞ்சகோசத்தினுலே மறைத்தாயேயம்மானை

அக்கினியை தூமம் மறைத்தாப்போலம்மானை
அதிஷ்டானம் தன்னை மறைத்தாயம்மானை
பானுவை மேகம் மறைக்கு மதுபோல
பரமார்த்தம் தன்னை மறைத்தாயே யம்மானை
ஸ்வயம் ஞானம் தன்னை மறைத்தாயே யம்மானை

ஸ்வயம் ப்ரகாசம் கொண்டன்றே விளங்குகிறு யம்மானை
அண்டரண்ட லோகமெல்லாம் அறியாளே யம்மானை
அறிந்தபேருன்னை அஸத்தென்பாளம்மானை

ஆனாலுமங்குஷ்ட ஸ்த்ரீபோ லம்மானே
அறியாதபேரை அதட்டுவாயம்மானே

அறிந்த பேரை கண்டா லஞ்சுவையே யம்மானே
இன்னமின்ன மம்மானே எத்தனையோ உன்கூத்து
ஸத்தென்று லம்மானே நீதானே உறவாவாய்
அஸத்தென்றால் அம்மானே தானுமதுகூடாது
ஸத்துமஸத்தும் தானுமே கூடாயே
பின்னாபின்ன மென்றால் ப்ரம்மவகை யிரண்டாச்சு

அபின்னமென்று லுந்தனுக்கு அநேக நாமங்களுண்டோ
பின்னாபின்ன மென்றால் பெரியோர் ஸம்மதியார்
ஆமென்று லம்மானே அத்வைத ஹானிவரும்
சொன்னேமேயானால் சுருதிக்கு விரோத முண்டாம்
நிமித்தமென்று லம்மானே நீயுமன்றே ஸத்தாவாய்

ஊர்ணநாபி போலே ஈச்வரனார் தம்மிடத்தில்
உபயகாரண மிரண்டுமுண்டாயிருக்கையிலே
இத்தனை தோஷங்களிருப்பதினா லுன்னிடத்தில்
அன்ருத ஜடதுக்க மென்றறிந்து மகாத்மாக்கள்
சசவிஷாணம் போலே சங்கையற நிச்சயித்து
தள்ளிவிட்டா ருன்னை ஸகல பெரியோரும்

உத்தமமான சுருதிகளு முபநிஷத்தும்
அநுஸ்யூதமும் உன்னை அஸத்தே யஸத்தென்று
முக்காலு முன்னை முழுப்பிரட்டு என்று சொல்லி
முக்குகள் தோறும் முறையிட்டு கூவுவது
எங்கள் ஆசார்யரு மப்படியே சொல்லுகிறார்

எங்களனுபவத்தில் அறிந்துவிட்டோ முன் நடத்தை
ஆகையினா லம்மானே என்னண்டையிலே நில்லாதே
நிமிஷப் போதானாலும் நில்லாதே சொன்னேன் நான்
க்ஷணிகபோதானாலும் தாமஸங்கள் பண்ணாதே
நீலித்தனங்கள் பண்ணி நில்லாதே சொன்னேன் நான்

பண்டு வெகுகாலம் பழகியிருந்ததினால்
கோடி ஜன்மம் உன்னிடத்தில் கூடியிருந்ததினால்
இரக்கமாய்ச் சொல்லுகிறேனினிதப்பு அம்மானே
தர்மமாய் சொல்லுகிறேன் தப்பிவிடம்மானே

நேதிநேதி என்று நிக்ரஹித்து மாயைதன்னே
கண்டித்து மாயை தன்னே பரிபூர்ணத்தோ டொன்ருக்கி
பாகலெக்ஷணேயினுலுபாதி பரிதியாகம்பண்ணி
ஜீவன்பரனேடே சேர்ந்தானே ஐக்கியமாக
நித்யோஹம் முக்தோஹம் மோக்ஷஸ்வரூபோஹம்

நிர்விகல்போஹம் நிரதிசயானந்தோஹம்
ஸர்வமிதம் ப்ரம்மோஹம் தாரகானந்தோஹம்
அஸங்கோஹமென்று அமர்ந்தாள் ஸமாதியிலே
தன்யோஹமென்று தழைத்தாள் பிரபஞ்சமெல்லாம்
சப்தம் பிறந்தவிடம் ஸகலகலேயு மொடுங்கி

ஓமும் ஒடுங்கிவிட்டு உட்புறமும் பூர்ணமதாய்
கல்விகளும் கேள்விகளும் விட்டே கவலேயற்று
அஷ்டாங்கயோக அவஸ்தை ஐந்துமொடுங்கி
விட்டேறிப்போனுள் வெளிக்கும் வெளிதன்னிலே
மேலாம்பதத்தில் மௌனநிலே கண்டுகொண்டாள்

## பலன்

அம்மானே சொல்லி அருகிலிருந்து கேட்டோர்கள்
திரும்பிப் பிறவாத சித்து மயமாவார்கள்
மரித்தும் பிறவாத வஸ்து மயமாவார்கள்
புனர்சிருஷ்டி யன்னியிலே பூர்ணமயமாவார்கள்
ஸத்குருவின் பாதத்திலே சிரத்தை யதிகமதாய்
ஆனந்த ஸாகரத்தில் அமர்ந்து லயமாவார்கள்.



## வேதாந்த ஆச்சே போச்சே

ஆதியந்த மற்ற ஆசாரியர் கிருபையினுலே
ஆனதும் போனது மன்பாகச் சொல்வேன் கேட்பாய் 1

ஆசைக் கயற்றூஞ்சலாடித் திரிந்ததும் போச்சே
அசஞ்சலமான வகண்டஸ்வ ரூபமாச்சே 2

ஆணென்றும் பெண்ணென்று மலைந்து திரிந்ததும்போச்சே
அசையாமல் ஞானஸ்தலத்தி லிருக்கவுமாச்சே 3

அனந்த ஜன்மத்திற்கு அடியிட்டிருந்ததும் போச்சே
அனந்த ஜன்மங்களு மில்லாதிருக்கவு மாச்சே 4

அந்தகனுலே யதட்டி பயந்ததும் போச்சே
அவஸ்தை மூன்றுக் கப்புறப்பட்டவனு மாச்சே 5

அகங்கார துக்கமசூயை இடும்புகள் போச்சே
தூங்காமல் தூங்கி சுகமாயிருக்கவு மாச்சே 6

ஆறுகுளங்களும் ஆடித்திரிந்ததும் போச்சே
அதுவே வடிவாய் திடமாயிருக்கவு மாச்சே 7

அலையில் துரும்புபோலலைந்து திரிந்ததும் போச்சே
அசையாத பருவதம் போலே யிருக்கவு மாச்சே 8

ஜன்மேந்திரியங்கள் ஜரையும் தொடர்ந்ததும் போச்சே
ஜகமெல்லாம் சித்துமயமா யிருக்கவுமாச்சே 9

தான்பிறரென்கிற தாழ்த்தி யுயர்த்தியும் போச்சே
சாஸ்திர வேதத்திற்கப் புறப்பட்டவனுச்சே 10

நாமரூபம் நாமென்றபேரெல்லாம் போச்சே
நான்முகனுலே யறியப்படாதவனுச்சே 11

நீரில்குளித்ததும் நீரில்களித்ததும் போச்சே
நித்தியநிர்மல ஸ்வரூபமே நானென்பதாச்சே 12

ஸ்தாவர ஜங்கமம் ஸத்தியமென்பதும் போச்சே
ஸகல லோகங்களுக்கும் சின்மாத்திரம் மிச்சமதாச்சே 13

பசிக்கிரைதேடி பண்ணுமுபாயங்கள் போச்சே
பவ்யங்களுக்குள்ளதும் தானே வருமென்பதாச்சே 14

என்ன செய்வோமென் றேக்கம்பிடித்ததும் போச்சே
ஏதேது வந்தாலும் எல்லாம் ஸ்வபாவமுமாச்சே 15

காம குரோதாதிகள் காயக்கிலேசங்கள் போச்சே
காலத்திரயத்திலும் காணுத இன்னவனுச்சே 16

லோகாதி லோகங்க ளெனக்குள்ளிருந்ததும் போச்சே
ஒன்றுமில்லையென்று தானுயிருக்கவு மாச்சே 17

கோத்திரங்கள் கல்பிதங்குணங்கள் குடிகளும் போச்சே
குணுதீதமான பரபிரம்மம் நானென்பதாச்சே 18

இனமும் பிள்ளை நானென்ற பேரெல்லாம் போச்சே
எப்போதும் பிரம்மஸ்வரூபமே நானென்பதாச்சே 19

வேத்துருவமாக பார்த்து இருந்ததும் போச்சே
வேருென்று மில்லாமல் தானுயிருக்கவுமாச்சே 20

புத்திரனுலே கதியுண்டென்பதும் போச்சே
புத்திரதாராதி பொய் பூர்ணம் நானென்பதாச்சே 21

பொய்யை மெய்யென்றெண்ணி போகம் புசித்ததும் போச்சே
மெய்யை மெய்யென்றெண்ணி மெய்யாயிருக்கவுமாச்சே 22

யக்ஞ யாகங்களும் ஏற்றவிதிகளும் போச்சே
யக்ஞாதி கர்மங்கள் என்னை பஜிக்கவுமாச்சே 23

பஞ்சகவ்வியத்தால் பலன்வருமென்பதும் போச்சே
பஞ்சதன்மாத்திரைக்கு பலனுயிருக்கவு மாச்சே 24

ஜனனமரணம் எனக்குள்ளிருந்ததும் போச்சே
ஜனனமது பொய்யென்று சோதித்திருக்கவு மாச்சே 25

சந்தைக் கூட்டம் வாழ்வுதானே மதித்ததும் போச்சே
அந்தக் கூட்டம்விட்டு ஆனந்தரூபமு மாச்சே 26

ஸப்தகோடி மந்திரம் சாஸ்திரங்க ளுள்ளதும் போச்சே
ஸத்துமயமான ஸாக்ஷியே நானென்பதாச்சே 27

மாயையை உபாஸித்தால் வரு மோக்ஷமென்பதும்போச்சே
மாயைக்கு அதிஷ்டானம் மாயாவி நானென்பதாச்சே 28

எனக்கெதிராக வெகுவாகப் பார்த்ததும் போச்சே
ஏகமேகமென்று எங்கும் நிறைந்தவராச்சே. 29





உ

சிவகணபதி துணை

# மனம் புத்தி ஸம்வாதம்

## அன்னே பின்னே

எனும் வேதாந்த ஸார

## பிரத்தியோத்திரக் கும்மி

தனம் மாதர் மோகந்தன்னை ஸாமான்ய மாகப் பார்த்து
ஸத்குருவின் பாதமலர் சூடித் தலைமேல்
மனம்புத்தி மகள்தாயார் மகானுபாவர் சேதி சொல்ல
வாக்தேவி வந்துநன்று யெனக்குத் துணைவா (1)

அன்றிருவர் தேடியோடி அடிமுடி காணாத
ஆதிவஸ்து அருகில்வந்து சொன்னதே தன்னே
இன்னும் நம்மைக் கிருபையினு லீடேத்த வேணுமென்று
எளிதாக சேர்வைதர வந்தார்காண் பின்னே (2)

ப்ரம்மாதிதேவதைகள் பேரறியாப் பேரறிவு
பேசிவார்த்தை சொல்லிவந்த தேதடி யன்னே
காமாதி வாஸனைகள் கட்டுவிட்ட பட்டயமாய்க்
கையும்வாயும் கொண்டுவந்த கண்ணன்னு பின்னே (3)

வற்றாத ஆசைக்கடல் வத்திப்பித் தெழுந்துபோன
மாயமென்ன மாயஞ்சொல்லு மாதாவே யன்னே
கற்றூர்கள் வித்தைபோல அன்றிவர் கற்றவித்தை
கடலோசோறும் சொன்னேன் கண்ணன்னு பின்னே (4)

ஒருக்காலும் வற்றாத ஒப்புகிற துக்கக்கடல்
ஒன்றாய்ச் சிதறிப் போன தேதடி யன்னே
அருக்கணி முசற்கொம்பு போலேஜகம் மித்தை யென்னு
ஆதிகுரு தன்கிருபையால் போச்சுது பின்னே (5)

ஆனந்த ஸாகரத்தி லேதுளைந்து விளையாட
யார் நம்மைக் கொண்டுவந்து விட்டார்சொல் லன்னே

மோகாந்த மற்றகுரு மொழியி னொளியினாலே
    மூழ்கிக் கரைந்துபோக விட்டது பின்னே (6)

நித்யானந்த ஸாகரத்தில் நிரந்தர மாய்த்துளைய
    நிமிஷத்தில் கொண்டுவந்து விட்டதா ரன்னே
அத்யாரோப மபவாதம் அற்றிருக்கு மாதிவஸ்து
    ஆலடியிற் பார்த்தபார்வை விட்டது பின்னே (7)

ஸத்துச்சித் தானந்த ஸர்வாதீத ஸாகரத்தில்
    ஸந்ததம் துளையவைத்த தாரடி யன்னே
அன்ருதஜெட துக்கமென்னும் அந்தகார காடுவெட்டி
    அகண்டவெ ளியைக்காட்டி விட்டது பின்னே (8)

ஸுகதுக்க மானஅலை சோகமோக ஸாகரத்தில்
    தொடர்ந்து தொடர்ந்தடித்த தெங்கடி யன்னே
ஜெகம் மித்தை யென்றுசொல்லி தள்ளிதிடம் தரவந்த
    தேசிகரை கண்டொளித்துப் போச்சுது பின்னே (9)

இட்டுவிட்ட நாமரூப மெப்படிப்போ யெதாச்சு
    இதிலொரு திருஷ்டாந்த மெனக்குச்சொல் லன்னே
கட்டை முட்டை காஷ்டபேதம் காட்டுத் தீயில் கண்டதுண்டோ
    காலதேச நாமரூபம் கண்டுகொள் பின்னே (10)

அண்டாத ஆத்மசுகம் அனுபவித் தேசுகிக்க
    யாரிந்த ஆதிக்கத்தைத் தந்தார்சொல் லன்னே
பண்டாலின் கீழிருந்து பார்த்தபார்வை யும்மொழியும்
    பாக்கியத்தைப் பெயர்த்தெடுத்து தந்தது பின்னே
    ஞான-பாக்கியத்தை பெயர்த்தெடுத்து தந்தது பின்னே (11)

ஜகத்தெல்லாம் தூங்கிறதி லேவிழித்துச் சஞ்சரிக்க
    தயவுபண்ணி னகுருவைத் தெரியச்சொல் லன்னே
மகத்தான பேர்களோடு தூங்கிறதி லேவிழிக்க
    மகானுபாவர் கோபாலர் காரணர் பின்னே (12)

கண்ட திருச்யம் கண்டிடத்தே கண்டிருக்கக் காணாதே
    கறுத்துப்பொய் யாயொளித்த தேங்கடியன்னே
உண்டென்று கானற்சல மோடுவதும் பொய்போல
    ஒத்துப்பார்த்தா லுல்லாஸ புத்புதம் பின்னே (13)

நித்யதிருப்தி யாய்நிறைந்து நிருபாதி யாய்மகிழ்ந்து
நீயிருக்கும் நேர்த்தியெனக் குச்சொல்வா யன்னே
போகாந்த திருப்தியிலே போட்டகைகள் போட்டார்போல்
பூர்ண கிருபை யால்நிறைந்தொ ழிந்ததுபின்னே (14)

அஞ்சடக்க முக்தியென்று ஆகமமவே தங்கள் சொல்ல
அத்தனை யருமையோ வறிந்துசொல் லன்னே
பஞ்சுபோல் பறக்குமஞ்சேன் பராபரத்தி லேநிறுத்த
பக்குவனுக் கேயொழியக் கூடாது பின்னே,
பரி-பக்குவனுக் கேயொழியக் கூடாது பின்னே (15)

அந்தபரம்பரையாய் வந்துஜகத் பிராந்தியை
அழித்துக் கெடுக்கிறது எப்படி யன்னே
ஸந்தேகங்க ளன்னியிலே ஸத்குருவின் வாக்கியத்தில்
ஸாகஸ மாய்த்துணிந்தால் தானேபோம் பின்னே (16)

முக்தியெது பந்தமெது முன்னும்பின்னு முள்ளதெது
மூன்றுமொன்றி லேகாணத் தெரியச்சொல் லன்னே
விருத்தியுத யமேபந்தம் விருத்திநாச மேமோக்ஷம்
விட்டிடலே இருக்குமெப் போதும் பின்னே (17)

எங்கெங்கு மேகரஸ மாய்நிறைந்தி ருக்கிறதை
எவ்விடத்தில் விருத்திமுன் றிருக்குஞ்சொல் லன்னே
பொங்குங்கரு ணைபுசிக்க மாட்டாத புத்தியிலே
போக்கழிக்க வனந்தவிருத்தி கற்பிக்கும் பின்னே (18)

எல்லாவி ஷயங்களு மெப்போதும் போல்புஜித்து
எனக்கில்லை யென்னுந்திறம் எப்படி யன்னே
சொல்லாலும் மனத்தாலும் தோன்றுகிற ஜாக்கிரத்தை
சொற்பனம்போல் நிச்சயித்த துணிவுகாண் பின்னே (19)

ஸுஷுப்திபோல் ஜாக்கிரத்தி லேயிருக்கும் சுகந்தன்னை
சொல்லலாம் போலிருந்தால் சொல்லுவா யன்னே
விழித்துறங்கி விவகாரம் பண்ணுகிற வனைவிழுங்க
வேணுங்காண் பின்னையொன்றும் வேண்டாங்காண் பின்னே (20)

ஜாக்கிரத்தி லந்தியம் போலும் நித்திரையி லாதிபோலும்
ஸஞ்சரித்தி ருக்கிறது எப்படி யன்னே

பார்த்துக்கேட் டலேந்தமனம் பற்றுவிட்டு சித்தாய்போனல்
பதின்மடங் கதைப்போலி ருக்கலாம் பின்னே (21)

குருவாகி வந்தவனர் சிஷ்யனுகிப் போனவனர்
கூசாம லெந்தனுக்கு தெரியச்சொல் லன்னே
'தத்' என்னும் பதம்குரு 'த்வம்' என்னும் பதம்சிஷ்யன்
சோதித் தால்சப் தமிரண்டும் சுத்தப்பொய் பின்னே (22)

எங்குஞ்ச ராசரங்க ளாய்நிறைந்தி ருக்கிறதை
எவ்விடத்தில் ஸத்துசித்து இருக்குஞ்சொல் லன்னே
அங்கங் கதுவதுவாய் அக்கினியும் புகையும் போல்
அண்டபிண்ட லோகமெல்லா முண்டாச்சு பின்னே (23)

ஸத்துசித் தானந்தத்தி லேஜகத் துண்டான
ஸாகஸ வாச்சரிய மேதடி யன்னே
சித்தையும் ஜடத்தையும் நன்ருய் தீரவிசா ரித்துப்பார்த்தால்
தெரியலா மதுவிரண்டும் வெறும்பொய் பின்னே, (24)

உற்பத்தி லயங்கள் ஒருக்காலு மற்றிருக்க
உண்டாய் லயிக்கிறது மெப்படி யன்னே
கற்பித்த வம்புதியைக் கடக்காத பேர்களுக்குக்
காலும்நூலு மாகமண்டி கற்பிக்கும் பின்னே (25)

என்னிடத்தி லேயுதித்து என்னைப் பயமுறுத்தி
யெனக்குப் பயந்தொளித்த தெங்கடி யன்னே
தன்னை மறந் தாலுருக்கும் தன்னையறிந் தாலொளிக்கும்
சற்றுநீ யுற்றுப் பார்த்துச் சந்தோஷி பின்னே (26)

கரையில்லா தானந்தம் கண்ட விடமெல் லாம்பெருக
கானற்சலம் பானம்பண்ணப் போவானே னன்னே
விலையில்லா நவரத்னம் வேண்டியபடி யிங்கிருக்க
வெருங்கல்லை வேண்டிக் கொள்ள போவார்காண் பின்னே (27)

பார்த்த விடமெல் லாம்பரமாய்ப் பரிபூரண மாயிருக்கப்
பாடுபட்டுத் தேடுந்தெய்வ மேதுசொல் லன்னே
ஆப்தவாக்கி யத்தைக்கேட்டு அறிவுக்கண் ணால்விழித்தால்
அப்போதுநீ சொன்னதற்கு அர்த்தமாம் பின்னே (28)

ஆதியந்த சூனியராய் அகண்டபரி பூரணராய்
அறிவேயறி வாயிருந்த லேவானே னன்னே
ஜோதியான உள் கண்ணைச் சுத்தப்பொய் கொள்ளக்குறி
துலங்கப் பறிகொடுத்த தோஷங்காண் பின்னே (29)

மஹானுபாவர்க் கிச்சை வரப் போகிறதென்று மஹாவிஷ்ணு
தலைமேற் சுமக்கிறது யெப்படி யன்னே
தன்னைத் தானே நாசம்பண்ணி ஸர்வத்யாகி யாயிருந்தால்
தலைமேற்சு மக்கிறத ருமையோ பின்னே (30)

'தத்வமஸி' யென்னும்பத சாஸ்திரக்கட் டுநழுவ
தாமரைப்பூக் கண்ணாலே பார்த்ததா ரன்னே
சித்திரம்போ லேஜகத்தை சித்தமென்னும் படத்திலே
தெரியக்காணப் பண்ணினார் கோபாலர் பின்னே (31)

அனந்தவித உபநிஷத் தாருசாஸ்த்ர வாகமங்கள்
யாரிடத்தி லுண்டான தறிந்துசொல் லன்னே
மனந்தனி லுள்ளசத்தம் வாக்கினாலும் வசனிக்க
மகாமோக மாயனத்த மகாமோகன் பின்னே (32)

ஜீவனிருந் தாலன்றோ தேகேந்திரிய விஷயங்கள்
ஜெனித்து மரித்தலையப் போகிற தன்னே
பாவனையெனும் ச்ருதியுக்தி யனுபவம் வந்தவர்க்கு
சொற்பனத்திற் கற்பிதம்போல தோற்றுங்காண் பின்னே (33)

ஸ்வதஸித்த மாயிருந்து ஸ்வயமாய் விளங்குவதை
சொல்லப்போவ தேதுவேத சாஸ்திர மன்னே
சதிபண்ணும் மனம்மாயை ஸத்குரு வருமுன்னே
தானும் 'தத்வமஸி' யென்று சாதிக்கும் பின்னே (34)

ஸோகம் ஸ்வரூபமென்று சொல்லற்றி ருந்திடத்தே
சொல்லுகிற தேதுபேதம் சொல்லுவாயன்னே
அகம்இதம் மமதையெனு மவாந்திரக் கற்பித்ததால்
அண்டபிண்ட லோகமெல்லா முண்டாச்சு பின்னே (35)

அத்தைக் கண்டு தத்துவம் மனதிற்குள்ளே போயொளித்து
ஆத்மாவைத் தேடுபவ ளரது அன்னே
உத்துப் பார்த்து ஒத்துக் கொள்ளமாட்டாத வகங்காரி
ஊறுபாடா யுபாதிகளைத் தேடுகிறான் பின்னே (36)

பதினுயி ரங்கோடி பாஸ்கரவுதயம்போல
    பளிச்சென வேதெரியப் பார்த்தா ரன்னே
ஹ்ருதயாந்த காரந்தன்னை யெளிதாக வெளியாக்கி
    ஈடேற்றி விட்டராஜர் கோபாலர் பின்னே (37)

சொர்க்காதி போகம்முதல் த்ருச்யமென்று தள்ளிவிட்ட
    சுகத்தையிதி காஸத்தைச் சொல்லுவா யன்னே
சொர்க்கத்தி லிருக்கிறது சுகமென்று சொல்லும் சற்றே
    சொற்பனமே சொர்க்கமன்று சொல்லலாம் பின்னே (38)

நாலுவேத ஆகமங்கள் நாதனைக்கண் டுநடுங்கி
    நானுனக்குச் சொல்லவில்லை யென்கிற தன்னே
கால்தலையில் லாவிடத்தே கற்பித்த கவடுகண்டு
    கண்ணைக்குத்தி தள்ளப்போமு னென்றஞ்சும் பின்னே (39)

பண்டுநாள் பலச்ருதிகள் பார்த்துக் கேட்ட தாயிருக்க
    பரமார்த்தம் நானறியே னென்கிறதே யன்னே
கண்டசர்க்க் ரையைக்கண்கள் கண்டுருகி காணுத
    கண்டகண்க ளுண்டருசி சொல்லுமோ பின்னே (40)

அடிநாளே ஆலின் கீழே ஆரண முள்ளதெல்லாம்
    அடித்துப் பறித்துக்கொண்ட தாரது வன்னே
குடிகுலம் குணம் கர்மம் புத்திசக்தி யுள்ளதெல்லாம்
    கொள்ளையிட்டுக் கோலங்கொண்ட கோபாலர் பின்னே (41)

ஆகாசசரீரமென் றனுபவித்தே ச்ருதிகள் சொல்ல
    பிராரப் தமங் கீகரித்த தேதடியன்னே
ஸாகஸ மாய்த்துணிந்து தன்னைநாசம் பண்ணறியா
    அஸத்துக்கள் புத்திக்கது நிச்சயம் பின்னே (42)

வெட்டார வெளியிலே வெவ்வேறுய்த் தோன்றுமெல்லாம்
    விஸ்தரித் தெனக்குநன்ருய்த் தெரியச் சொல் லன்னே
எட்டாதஸ்வ ஸ்வரூபம் எளிதாக இங்கிருக்க
    இருக்கும்மாயை முக்குணமும் முன்னறிபின்னே (43)



## மெய் பொய் விளக்கம்

### (ராகம் - ஆனந்தபைரவி)

ஸ்வபிரகாச ஸுகஸ்வ ரூபம் தானடா, நீ தானடா
சுக்தி ரஜதம்போல் ஜகம் மித்தையது ஆமடா
அப்பிரகாச அவித்யாதி ஆவரணம் பொய்யடா
அந்ருத ஜட துக்கமில்லா அகண்ட ரஸம் மெய்யடா *1*

அண்டபிண்ட பிரம்மாண்டமெல்லாம் அத்தியாஸம் பொய்யடா
ஆதி அந்தமத்யமில்லா அறிவே நீ மெய்யடா
சம தமாதி ஸாதன சதுஷ்டயங்களும் பொய்யடா
ஸாத்திய ஸாதக மற்ற கர்மஸாக்ஷி நீ மெய்யடா *2*

ராக துவேஷ காம குரோத லோபாதிகள் பொய்யடா
ராஜஸாதி தமோ ஸத்வ வேஷமற்றயிடம் மெய்யடா
பஞ்சபௌதிக பஞ்சவிஷய பாபபுண்ணியம் பொய்யடா
பரபிரம்மானந்த ஸுகம் பரமாத்மா மெய்யடா *3*

ஜாதி வர்ண குலகோத்திர ஆசிரமாதிகள் பொய்யடா
ஸத்தியஞானனந்த ஸுகஸாகரம் நீ மெய்யடா
சிரவண மனன நிதித்யாஸன சித்தவிப்பிரமம் பொய்யடா
சின்மயமே தன்மயமாம் சிந்தையற்றயிடம் மெய்யடா *4*

ஜாக்கிர ஸ்வப்ன சுஷுப்தியாதி அவஸ்தைகள் பொய்யடா
தரங்கபேன புத்புதங்கள் தனக்கில்லை மெய்யடா
கர்மேந்திரியம் மனம் பிராணன் சித்தபுத்திகள் பொய்யடா
ஞானரஸ சித்ஸ்வரூபம் நீ மெய்யடா *5*

ஞாதுருஞான ஞேயத்வாதி திரிபுடிபேதம் பொய்யடா
ஞான விஞ்ஞான பிரகாசானந்தகனம் மெய்யடா
அஸ்தியாதிஸ்தூலதத்வமும் ஐயைந்தும் பொய்யடா
அசலமான சித்ரூப அன்வயம் நீ மெய்யடா *6*

விச்வன் தைஜஸ பிராஞ்ஞ விராட் இரண்யகர்ப்பர் பொய்யடா
விவிதநாம ரூப ரஹித விமலபோதம் மெய்யடா
ஸ்தூல ஸூக்ஷ்ம காரணத்திரய காரியங்களும் பொய்யடா
ஜோதிர்மயானந்த ஸுகஸ்வரூபம் நீ மெய்யடா *7*

அனுஷ்டான கர்த்திரு கர்ம காரியாதிகள் பொய்யடா
அகம் பிரத்தியகாத்மா உற்று பார்த்தனுபவித்தால் மெய்யடா
ஜனனமரண சோகமோக ஸுகதுக்கபாதைகள் பொய்யடா
தேசகால வஸ்துகிருத பரிச்சேத ரஹிதம் மெய்யடா *8*

நிரம்சத்தில் அம்சமுண்டோ நிஜம் பாராய் பொய்யடா
நிஜ போதாந்த ஸுகஸாகரம் நீ மெய்யடா
பொய்யும் மெய்யுமாக தோன்றும் புத்திகல்பிதம் பொய்யடா
புத்திவிருத்திகளற்ற போதானந்த ஸுகபோதம் நீ மெய்யடா *9*

திவ்யமங்கள மூர்த்தி வெங்கடேசுவரர் குரு கிருபையினுல்
தினகரன்போல் விளங்கும் ஞானபிரகாசம் நீ மெய்யடா *10*



# சூடாலை கதை

(ஸ்ரீமதி கோமதி ராஜாங்கம்)

(ஸ்ரீ ஆவுடை அக்காள் ஸ்ரீ ஞான வாஸிஷ்டத்திலுள்ள சூடாலையின் கதையை எளிய கும்மி மெட்டாக அமைத்துப் பாடி இருக்கிருள். அந்தக் கதையின் ஸாரம் இங்கு சுருக்கி எழுதப்பட்டுள்ளது.)

மாளவ தேசம் வீரத்திலும் ஸௌந்தர்யத்திலும் இணையற்று விளங்கியது. பிரகிருதிமாதா தன் ஸம்பத்தை அள்ளிக் கொட்டியிருந்தாள். எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போல்,பொன் மலர் நாற்றமுடைத்து என்றபடி அரசி சூடாலை ஞான மலராகப் பொலிந்து விளங்கினுள். அரசன் சிகித்வஜனைப்பற்றிக் கேட்கவா வேண்டும்! ஸ்ரீராமரே ஸீதை சொல் கேட்டாரே. தன் மனைவியின் இன்பத்தில் சிகித்வஜன் ராஜ்யத்தை மறந்தான். இவ்வாறு எட்டு ஆண்டுகள் கழிந்தன.

காலம் செல்லச் செல்லப் பனிமலரில் புழுவென ஏதோ ஒன்று அவனைக் குடைய ஆரம்பித்தது. சூடாலை ரோஜாவாகத்தான் திகழ்ந்தாலும் ஒரு முள் கூட குத்துகிறதே, அது ஏன்? மனைவியைக் கண்டதும் மரியாதை கலந்த அச்சம் மனதில் எழுகிறதே, அது ஏன்?

ஒருநாள் அந்தி நேரம். உலகமே சூன்யமாகத்தோன்றியது. ஸந்தியா தேவி ஸ்னனம் செய்து செம்பட்டு உடுத்தி ரக்தவர்ண புஷ்பங்களைக் கையிலேந்தி தன் நாயகன் கதிரவனின் சிதையில் ஸதியாவதற்குத் தயாரானுள். கதிரவனும் தன் கிரணங்களான பொன்னை வாரி இறைத்து தானம் செய்துவிட்டு அந்தியாகிய சிதையில் பிராயோபவேசம் செய்யத் தயாரானுன். சிகித்வஜனும் தன் காதலியின் வரவைநோக்கி நந்தவனத்தில் உலாவிக்கொண்டிருந்தான். தன் காதலியை சந்தியாதேவியுடன் ஒப்பிட்டு நோக்கினுன். மலின முகத்துடன் கூடிய ஸந்தியா எங்கே? அருணைவைப்போல் எழிலுடன் விளங்கும் சூடாலை எங்கே? ஆனுல் அதே அருணதானே இதோ ஸந்தியாவாக மலினமுற்று நிற்கிருள். நம் சூடாலையும் இதுபோல் ஆகிவிடுவாளோ? அவன் மனம் திகிலடைந்தது. அதே ஸமயம் சூடாலையும் பொன்மயமான பட்டுடுத்திச் சண்பக மலருடன் தன் கணவன் பாதத்தில் வணங்க வந்து சேர்ந்தாள். இன்று ஏனே இவ்வெட்டு வருடங்களிலும் இல்லாத சோபையுடன் விளங்குகிருள்.

சிகித்வஜன் அவளை அணைத்தான். ''கண்ணே, இவ்வெட்டு வருஷங்களிலும் இல்லாத பிரகாசம் உன் முகத்தில் வீசுகிறதே, அது ஏன்?'' என்ருன்.

''அரசே, தங்கள் மனத்தின் விகாரம் எனக்கு நன்ருக விளங்குகிறது. இருட்டில்தானே வெளிச்சம் நன்ருகத்தெரியும். தங்கள் மனம் மோஹாந்தகாரத்தில் முழுகியிருப்பது எனக்குத் தெரிகிறது. அதுதான் காரணம்'' என்ருள்.

''கண்ணே, இத்தீர்க்க திருஷ்டி இத்தனை நாளும் இல்லாமல் உனக்கு எவ்விதம் ஏற்பட்டது'' என்ருன் அவன். வியப்பினுல் அவன் கண்கள் மலர்ந்தன.

''ஆர்யபுத்ர, இது ஒன்றும் அதிசயமில்லை. பிரகிருதி நிமிஷத்துக்கு நிமிஷம் மாறுகிறது. அருணுவாகப் பிரகாசித்து இப்பொழுது ஸந்தியா தன் அந்திம நிமிஷத்தை எண்ணிக்கொண்டிருக்கிருள். நமக்கும் இதே கதிதானே. நாமும் பிரகிருதிக்குட்பட்டவர்தாமே. தங்கள் பிரிவாற்ருமையென்னும் தீயில் பொசுங்க நேரும் என்ற எண்ணமே என்னைப் பொசுக்கியது. அதனுல் அமரநிலை எய்த வழியில்லையாவென்று தவித்தேன். பல நூல்களைப் படித்தேன். எனக்கு விடை கிடைத்தது. ஆத்மவிசாரணையால் சோக மோக தாபங்களை வெல்லலாம் என்று உணர்ந்தேன். அதனுல் பிரம்மபதத்தில் மனத்தை நிறுத்த முயற்சித்ததினுல் அது முகத்தில் பிரதிபலிக்கிறது போலும்'' என்ருள்.

மன்னன் சிரித்தான் ''ராஜபோகம் நுகர்ந்து வரும் உனக்கு பிரம்மமாவது யோகமாவது'' என்ருன். ''ஐயோ, இவர் மோகம் பலமானதாக இருக்கிறதே. இதிலிருந்து எப்படி இவரை விடுவிப்பது'' என்று எண்ணி அரசி கலங்கினுள். அது முதல் அணிமாதி அஷ்ட ஸித்திகளை குருமுகமாக கற்கத்துடங்கினுள். இவ்விதமாக காலவெள்ளத்தில் சில வருஷக்குமிழிகள் கிளம்பி மறைந்தன. சூடாலையின் இடைவிடாமுயற்சியினுல் மன்னன் மனதில் அக்ஞான இருள் கொஞ்சம் விலகியது. சிறு தடாகத்தின் அலைபோன்றது செல்வபோகம் என்பதை உணர்ந்தான். தானதர்மங்கள், க்ஷேத்ராடனம் முதலியவைகளைச் செய்தான். அமைதி பிறக்கவில்லை. ஒரு இரவு சூடாலையிடம் தன் மனத்துயரைத் தெரிவித்தான்.

''அன்னமே, எண்ணற்ற ஸத்கருமங்கள் செய்தேன். மனதில் அமைதியில்லை. யானுகிய என்னை விழுங்கமுடியவில்லை. இல்

வாழ்க்கையிலும் மனம் செல்லவில்லை. சிறிதுகாலம் வனம் சென்று அமைதி என்னும் அரசியுடன் வாழவிரும்புகிறேன். விடை கொடுப்பாய், கண்ணே'' என்றான்.

''ஸ்வாமி, தங்கள் மனக்கலக்கம் எனக்குப்புரிகிறது. எங்கு சென்றாலும் நம் நிழல் நம்முடன்தான் இருக்கும். எங்கு சென்றாலும் நான், எனது என்ற எண்ணமும் கூடவேவரும். முதிர்ந்த பக்குவமில்லாமல் வனம் போய் பிரயோஜனமில்லை. வயோதிகப் பருவத்தில் வனம் போகலாம். இப்பொழுது வேண்டாம்'' என்றாள் சூடாலை.

உத்தமி உரைத்த மொழிகள் அவன் செவியில் ஏறவில்லை. ஆழ்ந்த கானகத்தின் அகத்தே மௌன நிலை அடையலாம் என்றே கருதினான். அதனால் ஒரு இரவு இச்செல்வஸுகபோக வாழ்க்கையையும் உயிருக்கும் மேலாக மதித்த சூடாலையையும் துறந்துக்கானகம் ஏகினான். பன்னிரண்டு நாட்களாக அலைந்து மந்தரமலையை அடைந்தான். பாடிவரும் நதிக்கரையில் மோன நிழல் தரும் தருவின் சாயையில், பிளந்த வாயையுடைய இருள் நிறைந்த குகையில் மனத்திருள்போக்க எண்ணி காவி உடுத்தான். கர்த்தனை சிந்தையில் சிக்கெனப் பிடிக்க எண்ணினான்.

இங்கு சூடாலை அரசனைக் காணுமல் மறுகினாள். செய்வதறியாமல் திகைத்தாள். சித்தத்தை அலைபாயாமல் தடுத்து நிறுத்த அரண்யத்தில் மன்னன் மோகமயக்கமுற்று அலைவதை யோகஸித்தியால் பார்த்தாள். ''ஐயோ, இந்தத் துன்பத்தை நீக்க வழி இல்லையா'' என்று ஏங்கினாள். கடைசியில் இம் மயக்கம் அனுபவித்தால் தான் தீரும். இப்பொழுது அங்கு போவதில் பிரயோஜனமில்லை என்றுணர்ந்து தைரியத்தையும் செங்கோலையும் கையில் ஏந்தினாள். பன்னிரண்டு வருஷம் அரசாட்சியை வழுவுறாமல் அன்பெனும் செங்கோலால் நடத்தினாள். ஒருநாள் மன்னனைப்பார்க்கும் இச்சை தீவிரமாக எழவே, வியக்கத்தக்க முனிகுமாரன் உருவில் அரண்யத்தில் அலையும் அரசன் முன் தோன்றினாள்.

ஏகாகியான மன்னன் முனிகுமாரனை நோக்கி உருவெளித் தோற்றமோவென்று பயந்தான். ஆனால் முனிகுமாரன் வாய்திறந்து பேசவே உறுதுணை கிடைத்ததென உளம் மகிழ்ந்து ''முனிவரே, தாங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று வினவினான்.

சூடாலை கூறினாள். "மன்னவரே, நான் நாரதரின் வீணையின் குடத்திலிருந்து பிறந்தவன். என்னைக் கும்பன் என்றழைப்பார்கள். க்ஷேத்ராடனம் செய்யும் வழியில் இங்கு வந்தேன். தாங்கள் யார்? சக்ரவர்த்திக்குரிய லக்ஷணங்களுடன் இவ்விதம் அலைவானேன்?' என்றாள். அரசனுடைய துக்கம் வார்த்தைகள் மூலமாக மடைதிறந்த வெள்ளம்போல் பெருகியது.

"ஸ்வாமி, என் பெயர் சிகித்வஜன். மாளவ தேசத்து மன்னன். என் மனைவி ஒரு ஞானி. அத்தகையவளுடன் இருந்தும் மனச்சஞ்சலம் ஒழியவில்லை. இங்கு ஏகாந்தத்தில் இருந்தால் அமைதியுறலாம் என்று இங்கு வந்தேன். இங்கும் என் அகத்தில் இருப்பதுபோலவே புறத்திலும் இருக்கிறது" என்பது அவன் கூறியதின் ஸாரம்.

முனிகுமாரனும் "அரசே, எதை அடையவேண்டுமென்ற தீவிர இச்சை ஏற்பட்டுள்ளதோ, அதை முதலாவதாக விடவேண்டும். அதற்கு ஸாது ஸங்கம் அவசியம். அது ஏற்பட்டால் ஸாக்ஷாத்காரம் கிட்டும். பிராந்தி ஒழியும். அதற்குண்டான ஸாதனத்தைத் தேடிக்கொண்டு உங்கள் ஸந்தேஹத்தை ஒழியுங்கள்" என்றான்.

அரசன் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. "முனிவரே, எங்கு சென்று குருவைத்தேடுவேன்? நீரே எனது குரு. எனது அஜ்ஞானத்தைத் தாங்கள்தான் ஒழிக்கவேண்டும்" என்றான். சூடாலைக்குத் தேடிவந்த காரியம் தெய்வாதீனமாக நிறைவேறியது. அவள் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. தான் கற்ற ஸித்திகளை உபயோகித்து மன்னன் மனதை மாற்ற அன்று முதலே சாதனங்களைத் துடங்கினாள்.

"அரசே, இரு கதைகள் கூறுகிறேன் கேளுங்கள். அவற்றின் பொருளை அறிந்தீர்களானால் ஸாதன மார்க்கத்தில் முன்னேறுவது மிகவும் எளிது" என்று கூறித்துடங்கினாள்.

"ஒரு காலத்தில் ரத்ன வியாபாரி ஒருவன் இருந்தான். அநேக ரத்னங்களை சேகரித்தான். ஒருவர் கூறினார் சிந்தாமணி ரத்னம் ஒன்றுதான் சிறந்தது என்று. அவன் அதைத்தேடி வெகுகாலம் அலைந்தான். அதிருஷ்ட வசத்தால் அது கிட்டியது. ஆனால் மனப்பேய் ஸந்தேஹம் கொண்டு அது சிந்தாமணி அல்லவென்று உதறித் தள்ளிவிட்டது. மறுபடியும் அலைந்தான்.

சிந்தாமணியைக் காட்டிய பெரியார் மறுபடிவந்தார். 'இந்தா சிந்தாமணி' என்று ஒரு கூழாங்கல்லை அவன் முன் போட்டார். அவன் ஸந்தோஷத்துக்கு அளவில்லை. ''இவ்வளவாவது இந்த மணி கிடைத்ததே இதை ஊருக்குக் கொண்டு சென்ருல் யாராவது பறித்துக்கொண்டு போய்விட்டால்,'' என சந்தேகம் எழவே அந்த கூழாங்கல்லுக்காக தன் வீடு வாசல் ஸொத்து சுதந்திரம் யாவற்றையும் இழந்தான்'' எனக்கூறி கும்பமுனியாகிய சூடாலை வினவினுள். ''மன்னவரே, இக்கதையின் பொருள் உங்களுக்கு விளங்குகிறதா?'' என்று மன்னனும் ''ஐயோ, என் பேதமைக்குணமே எனக்குச் சத்துருவாயிற்றே. என்னுல் அறிந்துகொள்ள முடியவில்லையே'' என்று அங்கலாய்த்தான்.

முனிகுமாரன் கூறினுன் ''அரசே, சிந்தாமணியைப் போன்ற ஸ்திரீ ரத்னம் தங்களுக்குக் கிடைத்தும் உதறி தள்ளிவிட்டு வறட்டுத்தவத்தினுல் பிரம்மத்தையடைய முடியும் என்று வந்தீர்களே. நீங்களே அந்த ரத்ன வியாபாரி. அதிருக்கட்டும். மற்றுமொரு கதை கூறுகிறேன் கேளுங்கள்'' என்று கூறித்துடங்கினுன்.

''ஒரு மாவுத்தன் காட்டிற்குச்சென்று ஒரு யானையைப்பிடிக்க எண்ணினுன். தற்செயலாக யானை தென்படவே ஒரு பலத்த சங்கிலியை எடுத்து அதன் கால்களைக் குறித்து லாகவமாக வீசினுன். ஆனுல் யானை பயங்கரமாக சப்தித்து சங்கிலியை அறுத்துக்கொண்டு ஓடிவிட்டது. நல்லகாலமாக மாவுத்தனை ஒன்றும் பண்ணவில்லை இப்பொழுது மாவுத்தன் கேவலம் பலத்தால் மட்டும் ஒரு காரியத்தை சாதிக்கமுடியாது. அறிவும் தந்திரமும் வேண்டுமென்பதை உணர்ந்தான். பிறகு பெரிய பள்ளம் வெட்டி அதில் பள்ளம் தெரியாமல் இலைகளைப் பரப்பிக் காத்திருந்தான். யானையும் வந்தது. பள்ளத்தில் விழுந்தது. பத்துநாட்கள் அங்கு கிடந்து பட்டினியால் வாடி பலவீனமுற்றது. இப்பொழுது அதைச் சங்கிலியால் பிணைத்து மாவுத்தன் விரும்பிய இடத்துக்குக் கொண்டு சென்ருன். அம்மாவுத்தனைப்போல் தாங்களும் மனமெனும் யானையை ஸங்கற்பம் என்ற சங்கிலியால் பிணைக்க முயன்றீர்கள், தோல்வியுற்றீர்கள். மனமெனும் யானையை ஆசாபாசங்களாகிய உணவைக் கொடுக்காமல் அறிவு என்னும் குழியில் தள்ளினுல் அது உம் வசமாகும். துறவினுல் இச்சை அழிந்ததுபோல் தோன்றும். ஆனுல் அக்ஞானம் முதிரும்போது பைசாசம்போல் சுற்றிக்கொள்ளும். விவேகத்தினுல் அதைத் துண்டிக்கவேண்டும். ஆசாபாசங்களை விடுவதே துறவு. அரசைத் துறந்து வருவது தியாகமாகாது'' என்ருன்.

அரசனுக்குக் கண்ணைக்கட்டி காட்டில் விட்டதுபோல் இருந்தது. ''அரசையும் ராஜபோகங்களையும் விடுவது தியாகமில்லை என்றால் என்னிடம் வேறு என்ன உள்ளது தியாகம் செய்ய? வேண்டுமானால் இந்த தண்ட கமண்டலங்களையும் ஊத்தையான சரீரத்தையும் விட்டுவிடுகிறேன்'' இவ்வாறு கூறிக்கொண்டு அரசன் தண்ட கமண்டலங்களைக் கனலிலிட்டுக் கொளுத்திவிட்டு ஒரு மலைமீதேறி சரீரத்தையும் துறக்கத்துணிந்தான். கற்றும் ஒன்றும் அறியா மன்னனைக்கண்டு கும்பமுனியின் மனம் பரிதாபத்தால் இளகியது. மன்னனை மெதுவாகக் கையைப் பிடித்து அழைத்து வந்து தன் எதிரில் இருத்திச் சொல்லத்துடங்கினன்.

''அரசே, தேகம் ஜடம்.. அது உம்முடையதா? நீர் அதைப் பிறப்பித்தீரா? அதை அழிக்க உமக்கு என்ன அதிகாரம்? அதை ஆட்டுவிக்கும் மனதை அல்லவா அழிக்கவேண்டும். அரசே, அதை அழிக்க வகை உள்ளது, கூறுகிறேன் கேளும். மனதையும் ஆட்டுவிக்கும் பொருள் ஒன்று உள்ளது. அதற்கு வாசனை என்று பெயர். அப்பொருளின் வித்துக்குப்பெயர் மமகாரம். அதனின்றும் அகங்காரம் என்னும் முளைகிளம்பும். அதனின்றும் காமம் மோகம் ஸங்கல்பம் விகல்பம் என்று அது காடாகப்பரவும். அவ்விதம் பரவவிடாமல் விவேகம் என்னும் கோடாரியினல் அம்மரத்தை வெட்டவேண்டும். துறவு என்னும் கத்தியால் வேரைக்கிளப்பவேண்டும். பின் ஸன்மார்க்கம் எனும் நெருப்பினுல் அவ்வேரைச் சுட்டெறிக்க வேண்டும். ஞானமெனும் சிக்கிமுக்கிக்கல்லினல் ஸன்மார்க்கமாகிய நெருப்பை மூட்டவேண்டும். இப்படிச் செய்தால் ஸமதர்மமெனும் மைதானத்தில் சாந்தி எனும் பிரகாசம் பரவும். இப்பொழுது கூறும் ''நீர் யார்? மனம் என்பது என்ன? அதை மாற்ற வழி என்ன?'' என்று.

மன்னன் தீவிரமாக ஆலோசிக்கத்துடங்கினன். இவ்வாராய்ச்சி நீண்டுகொண்டேபோயிற்று. கடைசியில் ஸாதன மார்க்கமே சிறந்ததெனக் கண்டான். உவகையுடன் கும்பமுனியை நோக்கி ''ஸ்வாமி, நான் யார், யார், யார்? என்று விசாரித்துக்கொண்டே சென்றேன். முடிவில் சுத்த சூன்யமான ஒரு இடத்தை அடைந்தேன். எங்கிருந்தோ ஒரு அமுத ஒளி வந்து என்னைச் சூழ்ந்துகொண்டது. குருதேவா, இவ்வித ஆனந்தமயமாக இருக்கும் என்னை அகங்காரம் எவ்விதம் வந்து கவ்விக்கொள்ளுகிறது? தள்ளத் தள்ள பலமாக வியாபித்துக் கொள்ளுகிறதே? அது ஏன்?'' என்றுன்.

ரிஷிகுமாரன் கூறினன். ''வெப்பம் பொருந்திய ஐம்பொறி கூட்டத்தின் தாபத்தினல் மயக்கமுற்றிருக்கிறீர். அதனுல் சைதன்யம் மறைக்கப்பட்டிருக்கிறது. வாஸனு விருக்ஷத்தை நச்சுமரம் என்று கருதாமல் அதன் பழத்தை புஜித்து லோகத்தில் ஆழ்ந்துள்ளீர்'' எனப் பலவாருக உபதேசித்த சூடாலைக்குச் சீக்கிரமே பலன் கிட்டியது. மன்னன் இடைவிடாச் சிந்தனையிலாழ்ந்து தீவிர விராகியானுன். நாளுக்கு நாள் மெல்ல மெல்ல மனம் உபசாந்தியுடன் கூடிற்று. உறங்கிய மீனையுடைய தடாகம்போல் அவன் மனம் நிர்மலமாகியது.

மாதம் நான்கு, இறக்கை கட்டிப் பறந்தும் மன்னன் உணர்வுற்று கண்விழிக்கவில்லை. சூடாலைக்கு மெய் சிலிர்த்தது. எண்ணலானுள். ''ராகதுவேஷமற்ற கணவன் உபசாந்தி அடைந்துவிட்டார் போலும். இப்பொழுது நாம் அரண்மனைக்குச் சென்று அரசகாரியங்களைக் கொஞ்சம் கவனிப்போம்.'' இவ்விதம் கருதி அரண்மனை யடைந்தாள் அவள். மூன்று ஆண்டுகள் காலவெள்ளத்தில் நீர்க்குமிழி யென மிதந்தன.

மன்னனைக் காணும் அவா ஒருநாள் மேலோங்கவே மீண்டும் வனத்துக்கு வந்தாள். காற்றில்லா இடத்து தீபமென சுடர்விட்டான் மன்னன். கையால் அசைத்துப் பார்த்தாள். மரக்கட்டையென இருந்தது சரீரம். ஒருகால் மன்னன் மனம் பரதத்வத்தில் லயித்து மகா ஸமாதியாகிவிட்டதோ என்று துணுக்குற்ருள். பின் வெகுவித பிரயோகத்துக்குப் பிறகு தானே பரகாய ப்ரவேச சக்தியால் மன்னனது சரீரத்துள் புகுந்தாள் இந்திரியங்களை மனோபலத்தினின்றும் பிரித்தாள். உடனே வெளியேறி தன் சரீரத்துள் புகுந்தாள். அரசனது தாமரைக் கண்கள் மலர்ந்தன. எதிரில் தவமே உருவான கும்ப முனியைப் பார்த்ததும் உணர்ச்சியும் ஆனந்தமும் ஒன்றையொன்று போட்டியிட நாத்தழுதழுக்கத் தன் அனுபவத்தைக் கூறலுற்ருன்.

(மன்னன் எவ்வாறு விளக்கினுன் என்பது என்போன்ற பேதமையுடையாருக்கு எவ்விதம் விளங்கும்? மேலும் விண்டவர் கண்டிலார், கண்டவர் விண்டிலார் என்ற அனுபவம் வேறு உள்ளதே. ஆதலால் எனக்கு இதை விளக்குவதற்கு அருகதையில்லை. கதையில் உள்ளதை உள்ளபடி எழுதினேன். ஸாரமறிந்தோர் ஸகித்துக்கொள்ளவேண்டும். கற்றறிந்த ஞானிகளே அநுபவித்து அவ்வநுபவத்தை உணரட்டும்)

குருவும் சிஷ்யனும் ஆனந்த வாரிதியில் அமிழ்ந்து எத்துணை நாட்கள் செயலற்று இருந்தார்களோ தெரியாது. பின்னும் சூடாலைக்குத் திருப்தியுண்டாகவில்லை. மன்னனைப் பின்னும் பரிசோதிக்க நினைத்தாள்.

அந்தி நேரம், ஆரம்ப ஸாதகனின் மனம் போன்று ஒளி மங்கியும் மங்காமலும் இருந்தது. சூடாலை நவயௌவன மங்கையாக மாறி அண்ணலின் முன்நின்ருள். மன்னன் திகைத்தான். ''யாரம்மா நீ?'' என்ருன். அவள் கூறினுள் ''அரசே, என்னைத் தெரியவில்லையா? நேற்று நீராடும்போது துர்வாஸர் வந்தார். நான் அவரைக் கவனிக்கவில்லை. அவர்மிகக் கோபப்புடன் தோன்றினுர். அவர் தள்ளாடி நடப்பதைப் பார்த்ததும் பெண்கள்போல நடக்கிறீர்களே என்று சிரித்தேன். அவர் கோபத்தைப் பார்க்கவேண்டுமே! பெண்ணுகக் கடவாய் என்று சபித்துவிட்டார். இப்பொழுது நான் என்ன செய்வேன்?'' எனக் கோவென்று கதறி அழுதாள். பேதமற்ற மன்னன் சாந்தமாகப் பதிலளித்தான். ''குருதேவா, விவேகிகள் சோகமடைவார்களா? வரும் தீங்குகளெல்லாம் உடலுக்கே அல்லவா. தீங்குகளும் உடலும் ஒன்றை ஒன்று பார்த்துக்கொள்ளட்டும். பசு கோணலாக இருந்தால் பால் கோணலாகுமோ?'' என்ருன். பெண் சரீரத்துடன் வளைய வரும் குருவிடம் ஒரு பேதமும் அவன் மனதில் தோன்றவில்லை. விகல்பமின்றி அருகில் படுத்தார்கள். குளித்தார்கள் உண்டார்கள். சர்ச்சை செய்தார்கள். சூடாலை இதற்கும் திருப்தி அடையவில்லை. மன்னன் மனதைத் திரும்பவும் தன் மாயையால் கலக்கத் தீர்மானித்தாள்.

மற்ருெருநாள், ''அரசே, கன்னிகையாக இருந்து கொண்டு உம்முடன் நெருங்கிப் பழகினுல் உலகம் என்ன சொல்லும்? ஞானியானுலும் உலகத்துடன் ஒத்துவாழ வேண்டாமா? என்னை மணந்துகொள்ளுங்கள்'' என்ருள். மன்னனும் அதை குருவின் ஆணையாகவே மதித்தான். நெருப்பை நெருப்பு அணுகினுற்போலவே அவர்கள் மண வாழ்க்கை அமைந்தது. நிர்விகாரமாக மன்னன் மனம் பிரம்மபதத்தில் நின்றது. சூடாலை நினைத்தாள். ''என் மன்னன் மாசற்ற தங்கமாகிவிட்டான். இருந்தாலும் ஒரு அக்னி ஸ்புடம்போட்டு பார்த்துவிடவேண்டும்'' என்று தீர்மானித்தாள்.

மற்ருெருநாள் நதிக்கரையில் அரசன் அநுஷ்டானம் முடிந்து ஜபம் பண்ணிக்கொண்டிருந்தான். அடுத்தாற்போல் ஒரு மணல் திடலில் அன்னிய புருஷன் ஒருவனுடன் சூடாலை ஸல்லாபம் செய்துகொண்டிருந்தாள். மன்னன் உற்று நோக்கினுன். தன் மனதைப் பரிசோதித்தான். அங்கு ஒரு விகற்பமும் ஏற்படவில்லை. மட்டிலா மகிழ்ச்சியுடன் மன்னன் ஆசிரமத்துக்குத் திரும்பினுன். சற்று நேரத்துக்கெல்லாம் வாடிய முகத்துடன் தன் எதிரில் எழிலாள் வந்து நிற்பதைக் கண்டான். புன்முறுவலுடன் ''பெண்ணே, ஏன்

வந்து விட்டாய்? உன் இஷ்டத்துக்கு நான் தடங்கல் செய்வேனே வென்று பயந்தா வந்துவிட்டாய்? காமக்ரோதம் அற்றவருக்குக் கர்மபந்தம் ஏது? அவனவன் கர்மத்துக்கு அவனவன் பொறுப்பாளி. அதனால் உன் குற்றம் என்னை என்ன செய்யும்? பேதையே, தளராதே'' என்றான்.

மன்னனின் அன்பில் தோய்ந்த சொற்களை அமுதெனப் பருகினாள் சூடாலை. அவள் தாபம் தீர்ந்தது. அவளுடைய கணவன் பேதமற்றான் என்பதைப் பெருமையுடன் கண்டாள். சற்று நேரத்திற்கெல்லாம் அவன் முன்பு சூடாலை பெண் உருவத்தில் வந்து நின்றாள். மன்னன் கண்டான் மனைவியை. ''கண்ணே சூடாலை, நீ இங்கு இக்கானகத்தில் எவ்விதம் வந்தாய்''? என்றான். கணவனின் அடி கமலங்களில் பணிந்தாள் சூடாலை ''ஆர்ய, என்னைத் தெரியவில்லையா? தாங்கள் நகர்விட்டு வந்ததுமுதல் நானும் நிழலெனத் தங்களைப் பின்பற்றினேன். கும்பமுனியாக நானே வந்தேன். பிறகு துர்வாசர் சாபத்தால் பெண் உருவிலும் வந்தேன். என் கணவர் உண்மையில் ஒரு ஜீவன் முக்தர் என்று கண்டேன். சற்றுமுன் தாங்கள் கூறியதுபோல் காமக்ரோதமற்றவரை கர்ம பந்தம் அணுகாதானால் நாடானால் என்ன? காடானால் என்ன? நம் நாட்டை ஆள நாம் செல்வோம்'' என்றாள். மன்னன் மகிழ்ச்சியுடன் எழுந்தான். அரசியைப் பலவாறாகப் புகழ்ந்தான். இருவரும் நகரமெய்தினர். மந்திரி பிரதானிகள் எக்காள முரசுடன் பூர்ண கும்பம் தாங்கி எதிர்கொண்டு அழைத்துச் சென்றார்கள், பற்றற்று அரசன் சிம்மாஸனத்தைப் பற்றினான். நெடுநாள் ஆண்டான். இவ்விதம் சூடாலை தன் மனோநியோகத்தாலும், வைராக்யத்தாலும் தன் புலன்களை அடக்கியது மல்லாமல் கணவனையும் கர்மயோகியாக்கினாள். ஆசாபாச எல்லையைத் தாண்டி இருவரும் பரமானந்த வெளியில் கலந்தனர்.

**வாழ்க சூடாலை! வாழ்க சிகித்வஜன்!!**

**வாழ்க ஸ்ரீ ஆவுடை அக்காள்!**



# சூடாலைக்கும்மி

மாது சூடாலையின் மகிமையுள்ள கதை சொல்ல
தீதுகளைத் தீர்த்து வைக்கும் திவ்யமுக விநாயகரின்
பாதம் பணிந்து கொண்டேன் பக்தியுடன் கைகூப்பி
(கேளடா, ஜீவா நீ)

தேச மெங்கும் புகழ்படைத்த தெய்வானை தன் நாதன்
வாசமுள்ள மாலையணி வள்ளியுட மாணவாளன்
ஈசனருள் சுப்ரமண்யன் என்றும் நம்மை காக்கவேணும் (கேளடா)

மதுரைநகர் பதிமீனும்பிகையுடைய கோயிலிலே
சதுராக வீற்றிருக்கும் ஸர்வசக்தி மகாமுனியின்
கதிர் வீசும் கண்கள் தன்னை கைதொட்டு கும்பிட்டேன் (கேளடா)

வேதகுலத்துதித்த வெங்கடபதி எனும் தீரன்
வாதுல கோத்திரத்தில் வந்தருளும் குணசீலன்
ஸாது ஸங்கத்தில் முழுகி ஜகத்தவித்தை என்றறிந்தேன் (கேளடா)

நாடெல்லாம் பார்த்தாலும் நம்மைவிட வேறில்லை
காடே போய் திரிந்தென்ன, காணும்பயன் என்னவென்று
வீடேயிருந்து மோக்ஷவீடடைந்தார் எங்களையர் (கேளடா)

ஆதிவஸ்து தன்னுடனே அறிவாய் கலந்து பவ
வியாதி சற்றும் இல்லாதோன் வாஸ்தவத்திலே நின்றோன்
ஜோதி வடிவாகி நின்று ஸூக்ஷ்மமாய் கலந்துவிட்டான் (கேளடா)

தேகத்தை விடும்போது தரிசனம் எனக்குத்தந்து
மோகத்தை வெல்லாமல் மோசம் போகாதேயென்று
விவேகத்தையுரைத்த குரு வெங்கடபதி பதம் துணையே (கேளடா)

குருமுதலாய் தேவர்களைக்கும்பிட்டுக் கொண்டவர்கள்
இருபாதம் சிரஸில் வைத்து இயம்புகிறேன் கும்மிப்பாட்டை

மாளவ தேசத்தில் மன்னன் சிகித்வஜ ராஜன்
ஆளவே நாள் சிலது அவன் மனைவி சூடாலை
மாள்வது நிஜம் என்றெண்ணி மனம் நடுங்கி செய்த கதை (கேளடா)

பாரினில் பெரியோரைப் பரிவாகத் தானழைத்துப்
பார்த்திட்டாள் பலநூல்கள் பர்த்தாவுடன் கூடி
தீர்ந்திட்டாள் அவள் தானும் தீவிரமாய் விசாரிக்க (கேளடா)

நான் என்னும் அப்பொருளும் நான்சொல்கிறேன் என்ற
தான் என்ற அம்மோகம் யாருடைய தெவ்வாரோ
ஏனோ இது, இந்த வகை ஏகுமிடம் எங்கென்றாள் (கேளடா)

தேகத்தை நான்என்றால் தீதாம் சுத்த ஜடமாகும்
பாதம் ஈரைந்தான பாணி இந்திரியங்கள் நான் அல்ல
விவேகம் நிறை புத்தியினால் முட்டியது தள்ளப்படும் (கேளடா)

மனமுமே புத்தி வழி மாறாமலே நடக்கும்
தினமுமே புத்தியது தீய அகங்காரவழி
க்ஷணமுமே திரிந்து வரும் இத்தை நீ அறிந்துகொள்வாய் (கேளடா)

தெரிந்து கொள்ள ஆங்காரமும் சேஷ்டை செய்யும் புத்திவழி
அறிந்துகொள்ளாததின் குணத்தை அறிவுகெட்டு போகாதே

அகங்காரம் எனும் குழந்தை அசைந்திடுவான் ஜீவனால்
ஓங்கார ப்ரும்மத்தால் உள்ள ஜீவன் மாய்ந்திடுவான்
பாங்காக சூடாலை பார்த்திருந்தாள் இந்தவகை (கேளடா)

மோகமது ஸித்திகொண்ட மகாமயக்கமாமதுவும்
போகியான ஜீவனுக்குப் பொருந்தும் சித்துக்கல்ல வென்று
யோகியான சூடாலை உற்றறிந்தாள் உள்ளபடி (கேளடா)

எல்லையில்லாப் பேரறிவு எங்கும் நிறைந்திருக்கும்
தொல்லையில்லா அந்தநிலை தோர்வு இல்லா மகாசப்தம்
கல்லைப்போல் வந்த வகைகண்டு கொண்டாள் சூடாலை (கேளடா)

விருப்பு வெறுப்பில்லாத விந்தையான தன் நடையால்
கற்பு மிகு சூடாலைகண்டு பரமாய் விளங்க
ஒப்பில்லா சிகித்வஜனும் வேண்டி ஒரு சொல் சொல்வான்
(கேளடா)

என்ன பெண்ணே சூடாலை ஏதுனக்கு இவ்வழகு
கன்னல் மொழி மாதே கவடறவே சொல்வாயென்றான்

சொல்லுவேன் கேள் மன்னு சோகதாப மோகமெல்லாம்
வெல்லுவேன் என்றிப்படி வேரறுத்தே என்மனதை
நில்என்று பிரும்மபதம் நிறுத்தினது அழகென்ருள் (கேளடா)

என்று சொல்ல மன்னவனும் ஏதுசொல்வான் நகைசெய்து
இன்று வரை ராஜபோகம் இசைந்து வரும் உந்தனுக்கு
நின்றதோர் பிரும்ம பதம் நேரிழையே எங்கே யென்ருன் (கேளடா)

நலமான தன் புருஷன் நல்லறிவில்லாமலே
பலமான மோகத்தில் பதிந்திருந்தான் அதைப் பார்த்து
குலமாது சூடாலே குருவாக ஸித்தி கற்ருள் (கேளடா)

அணிமாதி அஷ்டஸித்தி அவள் தானும் கைப்பற்றி
மணிமகுட மன்னனுக்கு மாது சொன்ன போதறியான்
பிணியான அபக்குவத்தில் பிரயாசை ஏதும் செல்லாதென்ருள்
(கேளடா)

வஞ்சி சூடாலேயுடன் வாசம் செய்த மகிமையதால்
கொஞ்சம் அக்ஞான இருள் பஞ்சாய்ப் பறந்திடவும்
நெஞ்சிலே சிகித்வஜனும் நில்லாது செல்வமென்றறிந்தான்
(கேளடா)

அறிந்தவனும் அக்ஞானம் அகலவே வேணுமென்று
தெரிந்தவனும் வெகுகாலம் செய்தான் பலவாறு

அறியதோர் தானதவம் அடங்கலுமே செய்துமவன்
வறியதோர் தன்மனதில் பெற்றிலான் வருந்தாமை
எறியுதே சூடாலே என்ன செய்வேன் என்று சொல்வான் (கேளடா)

மடியிலே அவளை வைத்து மன்னவனும் ஏதுசொல்வான்
மிடிமையாம் இவ்வாசைக்காமம் ஏனோ போகவில்லை
நொடிக்குள்ளே நான் வனம் போய் நாயகியே
ஸுகிக்கப்போகிறேன்
(கேளடா)

பற்றற்ற மனதுடனே பைங்கிளியே வசிக்கப்போறேன்
குற்றமில்லா மனதுடனே கூடியே நான் இருக்கவேணும்
கற்றறிந்தசூடாலே கடுகி வனம் அனுப்பு என்ருன் (கேளடா)

நிறைந்த யௌவன காலம் நீர்வனத்தில் போவீரோ
தளர்ந்த வயதில் நாம் தப்பாமல் வனம் போவோம்
பகிர்ந்த பக்வம் இல்லாமல் பலிக்காது ஸித்தி என்ருள் (கேளடா)

உத்தமியாம் சூடாலே உரைத்தமொழி கேளாமல்
சித்தமே வருந்துகின்ற சிகித்வஜராஜனப்போ
குத்தமில்லாமல் பத்தினியை காரிருளில் விட்டகன்ருன் (கேளடா)

மூடமாம் செல்வமே முக்திவழி நான் போறேன்
கூடவராதே என்று கும்பிட்டுத்தான் நடந்தான்

நடந்தான் பன்னிரண்டு நாள் நல்கினன் மந்திரமலே
இடந்தான் என்று கண்டான் இருந்தான் தவவேஷம்பூண்டு
கடந்தான் கையில் கொண்டு கர்த்தனை நினைந்துகொண்டு (கேளடா)

இவ்விதம் மன்னவனும் இருந்தான் மலைச்சாரல்தன்னில்
அந்தமங்கை சூடாலே அரசனைக் கண்காணமல்
எந்தவிதமென்றறிய எடுத்தாள் யோகநிலே மார்க்கம். (கேளடா)

வானத்தில் தான்பறந்து மன்னன்தனைப் பார்த்து,
ராகத்தின் குணமற்ற பின் ராஜனை நாம் சேர்வோமென்று
ஞானத்துடன் சூடாலே நகர்புறத்தில் வந்தமர்ந்தாள். (கேளடா)

ஆனபன்னிரண்டு வருஷம் அரசாட்சி செய்துமவள்
மானைஒத்த சூடாலே மன்னன் தனைக்காண வென்று
கானகத்தில் வந்திறங்கி கண்டாள் கணவனைத்தான். (கேளடா)

கருகியமேனி உள்ளகணவன் தனைப்பார்த்து
உருகியே சூடாலே உள்ளத்தில் ஏது செய்தாள்
மறுகியே அக்ஞானத்தால் மன்னன் மயக்குற்ருனென்ருள் (கேளடா)

மயக்கத்தை தீர்த்திடவே மகரிஷிபோல் வேஷம் பூண்டு
தயக்கத்தை தீர்த்திடுவேன் திண்ணமிது வென்றுசொல்லி
வியக்கத்தக்க ரூபத்துடன் விண்ணினின்றும் கீழே வந்தாள்
(கேளடா)

இந்தவிதம் சூடாலே இறங்கி வந்தாள் வனத்தில்
மன்னன் கண்டான் க்ஷணத்தில்

வந்தவகை விபரமெல்லாம் வாஞ்சையுடன் கேட்டான்.
கேட்டவுடன் சூடாலே கிட்டவந்து சொல்வாள்
மனக்கஷ்டமெல்லாம் விள்வாள்.

வாட்டமில்லா என் தகப்பன் மகரிஷி நாரதரே
நாரதரின் கடந்தனிலே நான்வளர்ந்தபடியால்
நான்முகன் சொற்படியால்
நலமான கும்பனென்ற நாமமெனக்கிட்டார்
எந்தன் வகை இதுவாகும் உந்தன்வகை எது
அத்தைச் சொல்லும் இப்போது
அந்தவகை தெரிந்துகொள்ள வாஞ்சை கொண்டேனென்ருள்

என்றவுடன் மன்னன் சொல்வான் என்பேர் சிகித்வஜனே,
நான் அரசில் சிறந்தவனே.
நின்ருல் உடல் நிலையாதென்று நினைத்துவந்தேன் வனத்தில்
கானகத்தில் வந்ததனுல் காணேன் துக்கநிவர்த்தி,
இங்கே இல்லை சற்றும் பிரவிருத்தி,
என்னகத்தில் இருப்பதுபோல் எங்குமிருக்கு தென்ருன்?

என்று சொன்ன மன்னனுக்கு ரிஷிகுமாரன் உரைப்பார்,
அவர் மனதைக் கரைப்பார்.
கொன்றுவிட்டால் வாசனையை கேளும் பிரும்மம் தோன்றும்
இந்தவிதம் குருமுகமாய் நீர் அறிந்துகொள்ளும்,
மனத்துன்பம் தீர்த்துக்கொள்ளும்.
அந்தவிதம் தெரியாமல் அறிவு மயங்குவாரோ.
ஸாதுஸங்கம் வந்தாக்கால் ஸாக்ஷாத்காரம் வருமே,
மனபிராந்தி தீர்ந்துவிடுமே
ஸாதனத்தைத் தேடிக்கொண்டு சங்கை தீருமென்ருர்

தீருமென்று சொல்லலுமே தீரன் கண்டு சொல்வான்
ரிஷியை வேண்டிக்கொள்வான்.
திரளான மோகம் தீர்க்கும் திவ்ய குருவும் நீரே
நீரே பிதா குரு தெய்வம் செய்யும் உபதேசம்,
நான் வைப்பேனே விசுவாசம்
நீரே குருவாய் இருந்து நீக்குவீர் அக்ஞானம்
அக்ஞானம் நீக்குமென்று அரசன் சொன்னபோதே
அதைத் தீரும் என்றபோதே
மெய்ஞானம் உணர் கும்பமுனி மெல்ல ஒருசொல் சொல்வான்

சொல்லும் பொருள் யாவற்றையும் சொல்வேன் நானிப்போது
அதை மறுத்துக் கேளாய் இப்போது
வெல்லும் வகை ஈதென்று விரைவில் சொல்வேன் என்றான்
என்ற குருதனைப்பார்த்து ஏற்றமான சிஷ்யன்
மனம் கரைந்து உருகும் புருஷன்
இன்றுமுதல் உமதுவார்த்தை எமக்கு வேதமென்றான்
வேதமென்ற வேந்தனுக்கு வேதியர் எடுத்துரைப்பார்
அவன் மனதைக் கரைப்பார்
ஜோதியான சிந்தாமணியின் சூக்ஷ்ம கதையைச் சொல்வார்

சொல்லும் கதையின் பொருள் உனக்குச் சொல்வேன்
நான் இப்போது, அதை சோர்வில்லாமல் கேளாய்
வெல்லுவதற்கு அரிதான வீரன் ஒருவன் இருந்தான்
இருந்தான் அவன் வெகுகாலம் எல்லா சாஸ்திரம் அறிவான்
ஞானம் ஒன்றுமட்டும் அறியான்
வருந்தி வெகுநாள் காலம் வளர்மணியைத் துடர்ந்தான்
தொடர்ந்த சிந்தாமணி தோன்ற துர்புத்தியுள்ள கேடன் அறிவு
சற்றுமில்லா மூடன்
உயர்ந்தமணி இதல்லவென்று உதறித் தள்ளிவிட்டான்

தள்ளிவிட்ட மணிதானும் தப்பியோடி மறைக்க அவன்வேறே
தேடிபிடிக்க
புள்ளினம்போல் வெகுகாலம் பூமியெங்கும் திரிந்தான்
திரிந்தவனைப்பார்த்து ஒரு ஸித்தர் பித்தன் இவனென்று நினைத்தார்,
பரிகாசம் செய்ய நினைத்தார்
முறிந்த வெள்ளைக்கல் ஒன்றை மூடன்முன்னே போட்டார்.

## வேறு மெட்டு

போட்டக் கல்லைப் பார்த்துமவன் இது வாட்டமில்லா சிந்தாமணி
என்றான்
கையிலே தானெடுத்து அவன் பையிலே ஸாவதானமாக வைத்து
புறப்பட்டான், வனம்விட்டு அவன் வரப்பட்ட வழியில் ஒன்று
தோணப்பட்டு
சிந்திப்பான் இந்தவிதம் நம்நாடு புத்தியில்லா துஷ்டர்கள்
வாழுமிடம்
அந்தவிடம் நாம் போனால் அவர் இந்தமணி பறித்தோடிடுவார்
என்றவனும் போகாமல்நின்ற பொருள் யாவற்றையும்
நீக்கிவிட்டான்

மன்னு, நீர் கேளுமென்று மாதவன் இன்னெரு கதையை
இயம்பலுற்ருன்
கானகத்தில் ஓர் கரியை மாவுத்தன் கனமாய் விலங்கிட்டு
இழுத்துகட்ட
ஸாதுவில்லா அவ்வானே சப்தித்து பாதவிலங்கைப்
பையமுறித்திடவும்
பார்த்திட்டான் மாவுத்தனும் பயத்தினுல் வேர்த்து அங்கு
கீழேவிழவும்,
கிருபையினுல் அவ்வானே மாவுத்தனே கருவையாமலே காடேக
திரும்பவும் மாவுத்தன் யானேயை விரும்பியே சிலநாள் தேடிவந்து
இருந்திட்ட காட்டில் கண்டு யானே தெரிந்திடாதபடி கொப்பம் கட்டி
தள்ளினுன்

யானேதனே அது துள்ளிதுடித்து மதிமயங்கி நிற்க
அத்தியும் முன்புதான் மாவுத்தனே குத்தி தள்ளிவிட்டதால்
மயங்காதே
பலத்தினுல் மிக்க வேழம் அற்ப பலமுள்ள மாவுத்தனுல்
அடங்கினுற்போல்
நிறைவான ஞானம் தன்னே உனது குறைவான ஸங்கற்பத்தால்
குறையாதே
என்று கும்பமுனி சொல்ல ராஜனும் ஒன்றும் விளங்கவில்லே
என்றுரைத்தான்
உரைத்திட முனி சொல்வாராம் அது மறைத்துச் சொன்னேன்
நீதானென்ருர்

சாஸ்திரம் பலக்கற்றும் ஞானம் மாத்திரம் இல்லாமல் வருந்துகிருய்,
சிந்தாமணிக் கதையில் சிறப்புள்ள அந்த மணியைத்தேடி
அலேந்தவன்போல்
ஸர்வத்யாகம் செய்யவெண்ணி வெகுகர்வமாய் தவசுக்கு
வனத்தில் வந்தாய்
மனமெனும் மாவுத்தனுல் மெய்ஞானம் தெரியாமல் மயக்குகிருய்

விலங்கென்றும் யானேயென்றும் உனது ஆசாபாசங்களே
என்று கொள்ளும்
இரும்பினும் இச்சைவலிது அதை விரும்ப விரும்ப
மிகத்துடர்ந்துவரும்
ஆசைதனே ஒழித்திட்டால் மோசம் செய் அக்ஞானம் வளராதே

புறத்துறவால் இச்சை மறந்தால் அது கனவில் பிசாசம்போல் வந்து
சுற்றும்
விவேகத்திஞல் விரட்டிவிட்டால் உன்னே அவிவேகம் சற்றும் வந்து
அணுகாது
மன்ஞ, நீர் கேளும் என்று மாதவன் பின்னும் ஒருமுறை விளங்கச்
சொன்ஞர்
ஸர்வதியாகம் செய்யவேண்டும் என்று முனி கர்வமாய்
சொன்னதை அரசன் கேட்டான்

## வேறு மெட்டு

இந்த விதம் கும்பன் சொல்ல ஏது சொல்வான் மன்னவனும்
பாரை விட்டேன் பார்யை விட்டேன் பார்த்திபன் என்ற பேரை
விட்டேன்
மைந்தர்களைத்தானும் விட்டேன் மகத்தான செல்வம் விட்டேன்
இதுவல்லால் சகலதியாகம் எதுவாகும் என்ருன் மன்னன்
மன்னன் உரை செய்திடவும் மாமுனியும் ஏதுசொல்வார்
மண்ணுடனே பெண்ணேவிடல் மகத்யாகமாகாது
ஸகலத்திலும் உந்தனுக்கு ஸர்வதா ஆசையுண்டு
அந்த ஆசையை ஒழித்தால் அடைவாய் பிரும்மானந்த ஸுகம்

என்று கும்பமுனி சொல்ல எழில் மன்னன் ஏது சொல்வான்
நாடுவிட்டு நகரம் விட்டு நலமாம் என்று காட்டில் வந்தேன்
காட்டில் வைத்த காக்ஷியெல்லாம் கடுகியிப்போ நான்விடுவேன்
விட்டுவிட்டால் ஸகலத்யாகம் வேறு உண்டோ என்ருன் மன்னன்
இத்தை விடில் போதாது இச்சையற வேணும் காணும்
அத்தை விடில் பரமஸுகம் அடையலாம் என்ருன் கும்பன்.

ரிஷி சொன்ன மொழிகேட்டான் ரிஷியாக வந்த மன்னன்
மண்பாண்டம் மான்தோலும் மகிமையுள்ள ருத்ராக்ஷமும்
கமண்டலமும் கௌபீனமும் காலின் பாதக்குறடுமுதல்
கனல் வளர்த்துக் கொளுத்திவிட்டான் கண்ட கும்பன் ஏதுசொல்வான்

ஸகலத்யாகம் இதுவல்ல ஜாலமிது வென்று சொல்ல
சற்றே மன்னன் ஆலோசித்து சரி இது வென்றே நினைத்து
கள்ளமில்லா மனதுடனே கானகத்தின் மலையேறி
கையைநீட்டி விழநின்ருன் கற்ருென்றும் அறியா மன்னன்
நின்றவனேப் பார்த்து கும்பன் நில்லும் புத்திகெட்ட மன்ஞ

அறிவில்லாத தேகம் தானும் ஐயோ உம்மை என்னசெய்யும்
அதை அசைக்கும் மனதைக் கண்டு அழித்துவிட்டாலது ஸுகமே
ஸகல தியாகம் இதுவாகும் ஸத்துக்கள் சொற்படியே

கும்பமுனி இதுசொல்ல குறிப்பாய் மன்னன் ஆலோசித்து
மனதுக்கு இடமேது மயக்கும் வழி எவ்வாறு?
தேகம்தான் அதற்கேது? சொல்லுமென்று மன்னன்கேட்க
சொல்லு மென்ற மன்னனுக்கு சோகமற்ற முனியுரைப்பார்

மனதுக்கு வாசனையே மகத்தான வித்தாகும்
நானென்னும் அகங்காரம் நலமான குருவாகும்
அதிலுண்டாம் அகங்காரமுளை அநுபவமாய் நிச்சயமாய்
வடிவமது இல்லாமலே வந்துதிக்கும் அத்தைமேலோர்
புத்தி என்ற பேரிடுவோர் புத்தியது வளர்வதையே
ஸங்கல்பம் என்பார்கள் சாஸ்திரத்தின் படிதானே
மதம் புத்தி மனமெல்லாம் சிறிய அகங்காரத்தின் பெயர்
மனமென்னும் மாமரத்தை மாற்றவழி கேள் மன்னா.

## (இதுவுமது)

கொடிய அந்த மரத்திடையே கொழுந்துஇலையவைகளை
கோடாலிக்கொண்டு தினம் கொய்திட வேணும்
வாசனை எனும் கிளைகள் வெகு காய்கள் காய்க்கும்
விவேகம் எனும் கத்தியினால் வெட்ட நசிக்கும்

விரைவுடனே ஆசைதனை நீக்கி மௌனியாய் நேர்ந்தோர்
நிந்தனை செய்யும் மனது நிர்மலமாகும்
மரத்தினது கிளை பறித்தால் மகா வனமாகுமன்னா
அது வேரறுத்தல் மகாமுக்கியமாமே

ஆதலினால் ஸன்மார்க்கத்தால் அம்மரத்தின் வேரென
அகம்பாவத்தை சுட்டாலப்போ அடையலாம் சுகம்
என்று கும்பமுனி சொல்ல ஏது சிகித்வஜன் சொல்வான்
என் குருவே வேரைச்சுட ஏது நெருப்பென்றான்

வேந்தனுரைக் கேட்டேச் சற்று வேதியன் சொல்வான்
வேறு நெருப்பொன்றுமில்லை விளம்பக்கேளும்
நான்யார் என்று பார்க்கும் ஞானவிசாரமே
நலமாய் புத்தி முளைக்கெடுக்கும் நல்நெருப்பென்றார்

மன்னன் இதுகேட்டு சற்றுமனதில் சிந்தித்து
மலமாமுடல் ஜடமிந்திரிய மனமும் நானல்ல
தொடர்பான புத்தியுடன் தோற்றுமகங்காரமும்
திடமாய் நான் அல்ல வென்று தீரன் சொல்வான்

மகிமையுள்ள கும்பமுனி மன்னனைப்பார்த்து
மறைக்காமலே சொல்ல வேண்டும் மற்றவை நீ ரென்றுன்
சொல்வேன் கேளும் முனியேயென்று சோகமில்லா மன்னவனும்
செல்வமிகு சிதாகாச சைதன்யம் நானென்றுன்

இவ்விதமாய் ஞான ரூபமான என்னை
எவ்விதமோ சோகம் வந்து மனதை மூடுதே
தள்ளத்தள்ள ஓடிவந்து தாக்குதய்யா தடுக்கும் வகை
எந்தனுக்கு தயவாக சொல்லும் நீர் என்றுன்

காரணம் இல்லாமல் காரியம் சற்றுமுண்டாகாது
கண்டு சொல்லும் அகங்காரத்தின் காரணத்தை என்றுன்
அகத்துக்கு காரணம் அறிவுதானேயாம்
அவ்வறிவு இவ்விடத்தில் அடங்கும் விதம் ஏன்

திருசியத்தில் அவ்வறிவு தினமும் எழுதலால்
தீய அந்த திருசியத்தை தீர்க்கும் வாறு ஏதோ
ஏதோ வென்ற மன்னனுக்கு ஏற்ற குரு ஏது சொல்வார்
ஏதுவாகும் அறிவுக்கு ஏற்ற காரணம்
அறிவுடைய காரணத்தை அப்போ நீ சொன்னுல்
அப்பவே நான் சொல்வேனது விளங்கும் காரணம்
என்று கும்பமுனி சொல்ல ஏது சிகித்வஜன் சொல்வான்
எங்கும் பொருள் பொய்யானுல் மெய்யெதுவாகும்?

## வேறு மெட்டு

அபயமாகத்தோற்றும் உடல்தன்னை அல்லவென்று தினம் சொல்லவே
பவபயம்தீர எந்தனுக்கு குருபாங்காய் உரைத்திட வேணுமென்றுன்
வேணுமென்று சொன்ன வேந்தனுக்கு நல்லவேதம் படித்தவரேது சொல்வார்

தோணுதிந்த உந்தன் காயத்துக்கு மன்னு தோற்றும்
காரணமில்லாவிடில்
பொருந்திய போதம் சற்றுமில்லை காணும் பொய்யாகவே
அதுமயக்கமன்றோ
வருந்திய ஜகம் சற்று மில்லையப்பா வந்தது ரஜ்ஜுவில் ஸர்ப்பம்
போலே இன்னபடி என்று ரிஷியும் சொல்லிட ராஜன் தடுத்து
மறுத்து சொல்வான்

முன்னமே தோன்றிய பிரும்மம் ஜகத்துக்கு முந்திய காரணம்
ஆகாரோ
அவர்தான் காரணம் ஆகாதமார்க்கத்தை அய்யனே சொல்லிடும்
என்று சொல்ல
எவனிருப்பதாய் தோன்றினுலும் மன்னு ஏதோன்றுமில்லை
படைப்புக்கு முன்
உபசாந்தமான ப்ரும்ம ஸ்வரூபமே ஒன்முக நின்றது இரண்டறவே
அபாவமான பிரும்மன் இந்த ஜகத்துக்கு ஆகான் காரணம் என்முன்
கும்பன்

காவலன் கேட்டு ஏது சொல்வானய்யா காரணம் ஆகாரோ பிரும்மம்
என்முன்
கேவல ரஜ்ஜுவில் ஸர்ப்பம்போல் பிரும்மனும் கர்த்தாவும்
போக்தாவும் ஆகார் என்முன்
ஆதலினுல் ஜகம் யாரோ ஒருவனுல் ஆகியதென்று நீ எண்ணுதே
ஆகையினுலிது உண்டானது மிகக்கற்பனையல்லது வேறுள்ளதோ
பிரும்மத்தினுடைய ஸங்கற்பம் தானே சிறந்த ஜீவனும்
ஜகத்துமாச்சு
இத்தையறிந்தபின் எல்லா பொருளுமே இயல்பாய் ஞானமாய்த்
தோன்றும் என்முன்
இந்த நிச்சயம் கொண்டு இருந்திட்டால் இறந்துபடும் அக்ஞானம்
என்முன்
இவ்வித மார்க்கத்தைக் கண்டுகொண்டே நீரும் அடையலாம் சுகம்
என்முன் கும்பன்

இம்மொழிக்கேட்டு மன்னவன் அப்போது இதைவிட வேறில்லை
என்றறிந்து
சொந்தகுரு சொன்னவழியே கண்டவன் சொல்லுவான் பின்னும்
ஒரு மொழிதான்

மோகத்தைத் தீர்க்கும் குருமுனியே நான் முன்னம் அறியாத
காரணமாம்
அவிவேகத்தைச் சொல்லவேணும் என்றவுடன் வேதியரும்
அதற்கேதுரைப்பார்

அப்பா அப்போ நீ எள்ளளவாகிலும் அடைந்திட்டாயில்லே
சாந்தபீடம்
வெப்பம் பொருந்திய ஐம்பொறிக் கூட்டங்கள்
வெகுண்டுன்னுள்ளம் அடங்கவில்லே
காஞ்சிரங்காயென்று போகத்தைக்கண்டு நீ கழித்துண்ணுமல்
இருந்ததில்லே
வாஞ்சையுடனத்தை வாரி புஜிப்போர்க்கு வாராதிந்த
வழிகளெல்லாம்

கும்பமுனி சொன்னவழி விடாமலே கூர்மையுள்ள சிகித்வஜனும்
அகம் புறமும் உள்ள வாசனையை விட்டுவிட்டு ஐம்புலன்களேயும்
உள்ளடக்கி
கண்டபடி பிரும்மானந்தத்தில் நின்று காலம் கழிக்க மனதிலெண்ணி
சந்திரன் போன்ற மனமுடையானவன் மனதில் மகா
உபசாந்தத்துடன்.

ஸமாதி நிஷ்டையில் ஸஞ்சரித்தானத்தை ஸந்தோஷமாய் கண்ட
சூடாலே
நாம் ஆதி நகரத்துக்கேகுவோம் என்றவள் நாட்டம்கொண்டு
பெண்வேஷத்துடன்
அரண்மனேவந்து அந்தப்புரம் சென்று அரசியல் வேலேகளேப்
பார்த்து
வர்ணுசிரமங்கள் தப்பாமல் அவள் வல்லமையாக நடத்திவந்து,
ஆண்டு மூன்று கழிந்தபின்பவளும் அரசனேக்காண வனத்தில் வந்தாள்

பூண்ட தபசில் இருப்பவனேப்பார்த்து புண்யவதி ஏது
செய்யலுற்ருள்
தூணேப்போல் அசையாமல் இருப்பதைப் பார்த்து துறவியான
சூடாலே
வீணே சிங்கம் போன்ற நாதத்தைச்செய்தான் மன்னன்
விழித்துப்பார்க்கவில்லே

இணையில்லா கணவனுக்கு ராகத்வேஷம் இல்லாமல் போனது
நிஜமானால்
துணையாக அவன்பின் நாம் செல்வோமென்றே துணிவாக அவன்
மனதில் தோன்றிற்றன்றே

சிங்கநாதத்தை செய்திட்டாள் அப்போ சிறிதும் விழித்துப்
பார்க்கவில்லை
அங்கத்தைத் தொட்டு அசைத்திட்டாள் அப்போதும் அறிவு
சற்றுமுண்டாகவில்லை
ராகத்துவேஷம் இருக்குதோ என்றவள் தன் சரீரம் விட்டு
வெளிவந்து
மெத்த அறிவினால் அவனகம் புகுந்து பிரித்திட்டாள் மனகரணங்களை
நித்திரை செய்து விழித்தவன் போலவே புத்திதெளிந்து வெளிவந்து
பக்தியுடன் கும்பமுனி தன்னைப்பார்த்து ஒருவார்த்தை
சொல்லுற்றான்.

## வேறு மெட்டு

ஸமாதியிலே ஏலேலோ உபாதியில்லை சோகமில்லை ஏலேலோ
தாகமில்லை
போகமில்லை ஏலேலோ கோபமில்லை, நினைவில்லை ஏலேலோ
கனவில்லை
ஆசையில்லை ஏலேலோ பாசமில்லை, தொழிலில்லை ஏலேலோ
அழிவில்லை
என்று சொன்னாள் ஏலேலோ அன்றுமுதல் இருவருமாய் ஏலேலோ
இருந்தார்கள்

வனம் தனிலே ஏலேலோ அலைவார்கள் வனத்தினிலே ஏலேலோ
கனத்த நாள்கள்
வாழ்ந்தார்கள் ஏலேலோ தாழ்ந்தவர்போல், கும்பமுனி ஏலேலோ
வம்பு செய்வார்
இந்திரனிடம் ஏலேலோ தந்திரமாய், போகவென்று ஏலேலோ
எண்ணியவர்
புறப்பட்டார் ஏலேலோ வெற்பைவிட்டு கோவில் வந்தான்
ஏலேலோ சாவிலாளும்
காரியங்கள் ஏலேலோ சரியாய் செய்து, திரும்பினாள் ஏலேலோ
விரும்பிவனம்

வந்து நின்ருள் ஏலேலோ சோர்ந்து முகம், மன்னன் கண்டான்
ஏலேலோ தன்னவளை
என்ன சோகம் ஏலேலோ முன்னதில்லை, விவேகிகள்தான் ஏலேலோ
சோகிக்கார்கள்
என்ன வென்று ஏலேலோ மன்னன் கேட்டான். மாதவரும்
ஏலேலோ உவந்துரைப்பார்

இந்திரலோகம் விட்டு இறங்கி வரும்போது
வந்திட்டார் துர்வாசரும் மன்னு கேள் வழிமார்க்கம் தனிலே
வந்தவர்தனைப்பார்த்து நிந்தை செய்ய நினைத்து
சோர்ந்தாயோ பெண்ணே என்றேன் மன்னவா சீக்கிரம் அவர்
சபித்தார்.

பெண்ணின் வடிவெடுத்து பிறர் நகை செய்திடவும்
மண்ணில் திரிவாய் என்ருர் மன்னு கேள் மகரிஷிகோபம் கொண்டு,

ராத்திரி பெண்வடிவம் இருப்பாய் நீ என்று சொல்லி
சாஸ்திரம் கற்றமுனி மன்னு கேள் சாபமிட்டோடி விட்டார்
அழகிய பெண்வடிவம் அடைவேன் நான் என்றுசொல்ல
பழகிய மன்னவனும் ஸ்ரீராமா பார்த்தொரு மொழி கூறுவான்

ஏதேது வந்தாலும் ஏங்கினுல் என்ன பலன்
அதுவது தானே வரும் குருநாதா ஆதியாம் கர்மப்படி

வருகிற துன்பம் எல்லாம் வலிய உடலுக்கல்லால்
அறியாமைதான் அறிவுக்குண்டோ குருநாதா அனுபவித்தே தீரும்
என்ருன்
இப்படியாக இருவரும் இருக்கையில்
வந்தது பெண்வடிவம் குருவுக்கு வானத்தின் இருள் வலைபோல்

செந்தாமரை முகமும் செழுங்குவளைக்கண்களும்
பந்துபோல் இரு ஸ்தனமும் ஸ்ரீராமா பசுமையுள்ள தேகத்திலே

கழுத்திலே ஆபரணம் கைகளில் தங்கவளை
அழுத்தமான தேகத்திலே ஸ்ரீராமா ஆண் ரூபம் சற்றுமில்லை,
பார் என்று குரு சொல்லப்பார்த்தே அறிந்தமன்னன்
யாரால் விலக்க வசம் அய்யனே அப்பாலே தள்ளும் என்ருன்.

இப்படியாகவே இருவரும் ஒரு பாயில்
ஸந்ததம் படுத்துவந்தார் ஸ்ரீராமா சற்றும் விகல்பமற்று

கன்னியழியாமல் காமநோய் கொள்ளாமல்
கன்னிபோல அந்த பெண்ணும் ஸ்ரீராமா வசித்து வந்தாள் வெகு
காலம்

மன்னவன் தனை மீண்டும் மனது சோதிக்க எண்ணி
என்னத்தை செய்தாய் என்றால் ஸ்ரீராமா - இயம்பிடக்கேட்பாயப்பா.

மன்னவனே எந்தனுட மனக்கருத்தைக் கேளும்
அன்னம் போலே பெண்வடிவம் அடைந்திருக்கேன் காணும்
என்னமாய் புருஷன் அற்று இருப்பேன் காண் மன்னா
உம்மை மணம் செய்திடுவேன் உறுதியிது வென்றாள்.

சொன்ன மொழி தன்னைக் கேட்டு சோகமில்லா மன்னன்
கன்னல் மொழிமாதே உன்னைக்கை பிடிப்பேன் என்றான்
மன்னன் இது சொல்லிடவே மதனிகையாம் பெண்ணும்
சொன்னபடி இருவருமாய் சுபமுகூர்த்தம் தனிலே

மின்னலொளி மதனிகைக்கு மங்கலியம் தரித்தார்
ஆன இருவருமாக ஆண்டு சில கழித்தாள்
மன்னவனை விட்டிரவு மாளிகைக்குச் செல்வாள்
தன்னவன் தானறியாமல் திரும்பிவந்து படுப்பாள்.

கன்னிகையும் காவலனும் கலக்காமல் இருந்தாள்
பின்னம் சில சோதனைகள் செய்ய அவள் நினைத்தாள்
தன்னுடைய மாயையாலே தந்திரங்கள் செய்வாள்
பொன்னகரின் இந்திரன் புருடவடிவம் வந்தான்

தன்னுடைய செல்வமெல்லாம் தருவேன் என்று பகர்ந்தான்
அன்னவன் தன் வார்த்தைகளை அரசன் இகழ்ந்து விட்டான்
பின்னைவந்த தேவரெல்லாம் பிரிந்து போனவுடனே
அன்னநடை சூடாலை அரசரை சோதிப்பாள்.

ஆற்றங்கரை யோரத்திலே அஸ்தமன வேளையிலே
சித்தன் சிகித்வஜராஜன் செய்யும் தவகாலத்திலே
மாதுசூடாலையும் - மன்னன் மனம் சோதிக்க
மலராலே மண்டபம் மகிழ்வுடன் செய்துமவள்
மாயையாலே ஒருவனுடன் மகிழ்வதுபோல் காட்டினளே.

காட்டியதைக் கண்ட மன்னன் கண்குளிரப் பார்த்துமவன்
வீட்டினிடம் திரும்பிவந்து விமலமுள்ள மனதுடனே

அட்டிசெய்யாமலே அரஹராவென்று சொல்லி
திட்டமாய் சமாதியில் திடமாய் இருந்திட்டான்
வாட்டமுள்ள மனதுடனே வஞ்சிநல்லாள் வந்துநின்ருள்

நின்றவளைப் பார்த்துமவன் ஞாயமோ நீதான் வந்தது
குன்றணைய முலையாளே கூசாமலே நீபோவென்ருன்
தேடி நான்வரவில்லை தேன்மொழியே போவென்ருன்
பேடிகள் தன்மைபோல பேதமெல்லாம் அற்றமன்னன்
கருத்ததிலே கோபம்தானும் கார்குழலே வாராதென்ருன்.

என்றவுடனே சூடாலையும் எண்ணுவாளே மனதுதன்னில்
இன்றுமுதல் ராஜனை நாம் எழுப்பிடுவோம் நகரினுக்கே
நகருக்கழைத்திடுவோம் நலமான கணவனை
பகவானது கிருபையினுல் பாபங்கள் பறந்துபோச்சு
சுகமாக அவன் இருப்பான் சோகம் சற்றும் அணுகாது.

சோகமற்ருன் மோகமற்ருன் பேதாபேதம் தானும் அற்ருன்
கோபம் அற்ருன் காமம் அற்ருன் மேதினியில் ஆசையற்ருன்
ஆசையில்லாதவன் மோசம் போகாதவன்
விசையில்லா மனத்தோன் அசைவில்லா குணத்தோன்
வாசனைகள் அற்றதனுல் வந்துநின்ருள் மன்னன் முன்னே.

சூடாலைப்பெண் தானும் சுயமாயவள் ரூபம்கொண்டு
வாடாத மன்னன் முன்னே வந்து நின்ருள் அதைப்பார்த்து
பார்த்திட்டான் மன்னவனும் பசும்பொன் மதநிகையை
தீர்த்திட்டான் அவன்தானும் தேவிசூடாலை என்று
சூடாலைப்பெண்ணே அன்னமே நீ சொல்லி விடுவாய் உன்வரவை.

மன்னவனே ஸ்ரீ ராமா மகிழ்வுடன் கேளும்
என்றுசொன்ன மன்னனுக்கு இயம்பினுள் சூடாலை
நன்றுஎன்று கானகத்தை நாடியே நீர்வரவும்
அன்றுமுதல் இன்றுவரை அடிக்கடி நான்வந்து உந்தன்
சென்றகால பந்தமெல்லாம் சிதறிட நான் செய்தேனென்ருள்.

கும்பமுனி என்று நானே குருவாய் வந்துநின்றேன்
வம்பு செய்யும் உம்மனதின் வலுவையெல்லாம் வென்றேன்
அம்புவியில் உந்தனைப்போல் அருந்தவம் செய்து முடித்தோரில்லை
நம்பும் எந்தன் வார்த்தையைத்தான் நாடாளப்போவோ மென்ருள்

மதநிகையாய் உம்மனதை மறுபடி சோதித்தேன்
பேதமில்லா மன்னனென்று பெருமையுடன் கண்டேன்
பாதகங்கள் இனிமேல் இல்லை பாராளப் போவோம் வாரும்
சோதனைகள் செய்துவிட்டேன் கோபமெல்லாம் அற்றதென்றாள்

நாமருப ஜகத்துடனே நாம் கூடியிருப்போம்
நமக்கதனால் என்னகுறை நாடாளப்போவோம்
காமக்ரோதம் அற்றவரை கர்மபந்தம் அணுகாது
நம்முடைய நாட்டிற்கு நாம் ஆளப்போவோமென்றாள்

வாருமென்று சூடாலை வாஞ்சையுடன் சொல்ல
மேருமலை போலசைய மென்மையுள்ள மனத்தோன்
கார்குழலே சூடாலை தட்டேன் உந்தன் வார்த்தையைத்தான்
நம் நாட்டை ஆள்வதற்கு நாம் போவோம் என்றுரைத்தார்.

பாவாபாவமற்றதொரு பரம்பொருள் ஆனேன்
தேவி சூடாலையுடன் தேசம் புகழ் மன்னன்
நவமணியின் கிரீடம் சூட்டிநாடாள மனதிலெண்ணி
பவபயங்கள் அற்றமன்னன் புறப்பட்டான் ரதமேறி

மாளவதேசத்திற்கு மகிழ்வுடனே வந்து
தானாளவேணுமென்று அமைச்சர் எதிர்வந்தார்
எக்காள முரசுடனே எதிர்கொண்டு வந்தழைத்தார்
மங்களங்கள் தான்பாட மன்னன் பதி வந்து சேர்ந்தான்

சேர்ந்தவனும் வெகுகாலம் சிறப்புடனே நாட்டை
வார்குழல் சூடாலையுடன் வளமாக ஆண்டான்
பாருலகில் இவர்களைப்போல் பிரும்மபதம் அடைந்தோர் இல்லை
யாரிவருக்கிணை என்று அநுதினமும் துதி செய்வோம்

இந்தவிதம் ராமருக்கு இயம்பினார் வசிஷ்டர்
அந்தமன்னன் சிகித்வஜன்போல அரசாளும் என்றார்
ஸந்ததமும் மனம் தானும் சலியாமலே நின்றால்
பந்தமெங்கே மோகமெங்கே பார்த்துக்கொள்ளும் இது உண்மை.

மன்னன் சிகித்வஜராஜன் மனைவியுடன் வாழ்க
செந்நெல் விளை அயோத்யா நகர் ஸ்ரீராமர் வாழ்க
இந்நிலத்தில் மானிடரும் இந்த கும்மிசெய்தவரும்
தன்னிலையில் வாழ்ந்திடவே நாதன் கிருபை செய்திடுவார்.

சுபம்



## வேதாந்த கும்மி

கும்மியடி பெண்கள் கும்மியடி அகோர ஸம்ஸாரஸாகரத்தில்
ஜென்மக்கடலே கடத்தினவர்பாதம் சிந்தித்து கும்மியடியுங்கடி
தினம் வந்தித்து கும்மியடியுங்கடி 1

ஆதிகணபதியைப்பணிந்து எங்களை ஆண்ட ஸத்குருவைப் பணிந்து
ஜோதிர் மயமாய் கும்மியடிக்கவே ஸொகுஸாய் எல்லோரும்
வாருங்கடி-வந்து எல்லோரும் நில்லுங்கடி 2

ஆரடியோ யிங்கே வாருங்கடி ஆத்மசாஸ்திர பெண்களெல்லாம்
நேரடியே நிர்மலவாசலிலே நிறைந்து எல்லோரும் நில்லுங்கடி
நீங்கள் அறிந்த உண்மையை சொல்லுங்கடி 3

நீராடி நல்ல துகிலுடுத்தி நெற்றியிலே சாந்துப்பொட்டுமிட்டுகொண்டு
சீராக கொண்டை முடித்து மலர்சூடி செம்பொன்னலங்காரம்
செய்யுங்கோடி-நீங்கள் இன்பம் மனஸிலே வையுங்கடி 4

சந்தனம்வில்லே ஜவ்வாது பரிமளம் ஜாதிப்பொடிகள்
அணிந்துகொண்டு
வித்தை மகிழ்வாயில் வெத்திலேயும் தின்று வேடிக்கை ராகங்கள்
பாடுங்கடி - நீங்கள் ஜோடித்து வந்திங்கே நில்லுங்கடி 5

மத்தளம்துத்தி புல்லாங்குழல் தாளம் மறையோர்கள் கூடும் ஸபை
முழங்க
தத்வவிக்ஞான கும்மி அடிக்கவே தன்னிலே தான்பார்த்துக்
கொள்ளுங்கடி-நீங்கள் மண்ணிலே உள்ளோர்க்கு
விள்ளுங்கடி 6

இந்திராதிதேவர் முனிவர்தொழும் எங்கள் ஈசன் குரு
வெங்கடேசுவரரை
மந்திரங்கள் சொல்லி மலரடிபோற்றியே மனதிலே கொண்டாடிக்
கொள்ளுங்கடி - இன்பம் தனதுள்ளே கொண்டாடி
கொள்ளுங்கடி 7

தேசிகர் சேஷஹரி உபதேசகர் திவ்ய இனர் அருள்தேசிகராம்
என் உபதேசகுரு வெங்கடேசுவரர் ஸன்னதி தெரிந்து
கும்மியடியுங்கடி - அறிந்து கும்மி அடியுங்கடி 8

நித்யாநித்ய விவேகத்தினுல் நீதி அறிந்து நினைவுடனே
ஸத்யமில்லை இகபரங்களென்றும் ஸாதித்துக் கும்மியடியுங்கடி
ஸதா சிந்தித்துக் கும்மியடியுங்கடி. 9

சமதமங்களுண்டாக்கிக்கொண்டு நல்ல ஸாதகமாமுபரதியுடன்
க்ஷமையுடனே திதிக்ஷை ஸமாதானம் சேர்ந்து கும்மியடியுங்கடி-
வட்டம் சேர்ந்து கும்மியடியுங்கடி. 10

சிரத்தையுடன் ஆறுவகைகளாம் அதை ஸம்பாதித்துக்கொண்டு
தீவிரமாய்
வித்தை மொழிந்ததோர் மோக்ஷ இச்சையை விரும்பிக்
கும்மியடியுங்கடி-
எங்கும் பரவி கும்மியடியுங்கடி. 11

ஸாதனமில்லாத பேருக்கு உலகத்தில் ஸாத்யமில்லையது
ஆகையினுல் வேதம் மொழிந்ததோர்
ஸாதனம் நாலும் விசாரித்து கும்மியடியுங்கடி. - நன்ருய்
விசாரித்து கும்மியடியுங்கடி. 12

அத்வைத ப்ரும்மத்தில் ஐக்யமென்பது யாருக்கு உலகத்தில்
ஆகுமென்ருல்
அத்வைத ஞான அறிவுள்ள பேர்களுக்கா மென்று கும்மியடியுங்கடி-
அவர்களுக்காகுமென்று கும்மியடியுங்கடி. 13

புத்திரன் தன்னுடன் தாராதிகள் பஞ்சபூதவிகார விபவமெல்லாம்
அஸ்திரமாமென்று அறிந்துகொண்டால் அவர்க்காகுமென்று
கும்மியடியுங்கடி. - அவர்க்காகுமென்று கும்மியடியுங்கடி. 14

தாபத்ரயங்களினு லடிபட்டுள்ளம் தயங்கி ஸத்குருநாதனைக் கண்டு
எந்தன் ஆபத்தை தீருமென்றடுத்த பேர்களுக்கு ஆகுமென்று
கும்மியடியுங்கடி. - அவர்க்காகுமென்று கும்மியடியுங்கடி. 15

பொன்னில் பலவித பூஷணமெப்படி பேதம்கெட்டதோர்
ஆத்மாவில்
மண்ணில் பிறந்த சராசரபேதத்தை உரைத்துக் கும்மியடியுங்கடி
அஹம்கரைத்து கும்மியடியுங்கடி. 16

அத்யாரோப அபவாதத்தினுல் அல்லாமல் பிரும்மஸ்வரூபம் இது
நித்யகர்மத்தில் தெரியாதென்று நீதியாய் கும்மியடியுங்கடி-
மனம் தாவிக் கும்மியடியுங்கடி. 17

பாண்டபேதங்கள் மண்ணல்லவோ பரபிரும்மத்தை விட்டு
பலதும்உண்டோ
எங்களாண்டவன் ஸத்குருநாதன் மொழிந்ததை யறிந்து
கும்மியடியுங்கடி-
அவர்க்காகுமென்று கும்மியடியுங்கடி 18

அந்த உண்மையறிவது எப்படியானல் ஆத்மவிசாரத்தினுல்
சிந்தைமகிழ்ந்து சிதானந்தமாகவே ஸேவித்துக் கும்மியடியுங்கடி-
மனம் கோஷித்துக் கும்மியடியுங்கடி 19

தேஹத்தை நானென்றிருக்காமல் எங்கள் தேசிகர் சொல்படி
கண்குடத்தின்
அஹத்தில் வைத்த விளக்கென்ற பேர்களுக் காகுமென்று
கும்மியடியுங்கடி-
அவர்க்காகுமென்று கும்மியடியுங்கடி 20

ஐந்துதத்வமும் ஒன்ருய்க்கூடி ஒரு ஆள்ரூபம் அறிவுமில்லே
ஐந்துபூத விகாரத்தினுள் ஸ்வபிரகாசத்தை மேவியே கும்மியடியுங்கடி-
மனம்தாவியே கும்மியடியுங்கடி 21

ஸாக்ஷிதானென்று அறிந்துகொண்டு இந்த ஜகத்திலே வேறற்று
பூரணமாய்
காக்ஷிகண்டு இனி காலனில்லே என்று களித்து கும்மியடியுங்கடி-
மனம் தெளிந்து கும்மியடியுங்கடி 22

காயம்மறந்து கனவு ஊரிலே சென்று காரியம் செய்வது
கண்டிருந்தும்
நாறும் உடலே நானென்ற மூடற்கு நகைத்துகும்மியடியுங்கடி
மனம் நகைத்து கும்மியடியுங்கடி 23

ஆறுவி காரங்கள் போக்குவரத்துடன் கூடி மற்றும்
ஜாதிவர்ணுசிரமங்கள்
நாறும் உடல் தன்னே நானென்ற மூடர்க்கு
நகைத்துகும்மியடியுங்கடி-
மனம் நகைத்து கும்மியடியுங்கடி 24

தன்னே பிரிந்ததொரு தேஹாதிகளுக்கு தானேகாரணமாய் விளங்கும்
மண்ணுதிபேதம் மறந்து நிலேக்கடல் வாழ்த்தி கும்மியடியுங்கடி
மனம் சேர்த்து கும்மியடியுங்கடி 25

தன்னையறிந்தவர் பின்னே சரீரத்தை தானென்றது துர்ப்புத்தி
வாராமல்
முன்னேயிருந்ததோர் மூடபாவத்தை முறித்துக்கும்மியடியுங்கடி
அகங்காரத்தை போக்கி கும்மியடியுங்கடி 26

ஸாக்ஷியமென்பது காலதிரயத்திலும் சசவிஷாண மதுவானல் ஸர்வ
ஸாக்ஷியென்பது எப்படியாகுமென்று ஸாதித்துக்கும்மியடியுங்கடி-
மனம் தாவி கும்மியடியுங்கடி 27

ஆரோபம் நாமில்லையென்று அதிஷ்டானம் அங்கீகரிக்கவேணும்
ஆரோபத்துக் கவகாசமில்லை என்ருகியே கும்மியடியுங்கடி
அனுகூலமாகியே கும்மியடியுங்கடி 28

இந்திரியம் பத்துடனே மனம்புத்திகள் இசைந்த பிராணன்கள்
ஐந்தாகும் மந்திரஸமாஜங்கள் போலே தமக்கென்று வாழ்த்திக்
கும்மியடியுங்கடி - மனம் தெளிந்து கும்மியடியுங்கடி 29

ஸ்தூலபிரபஞ்சமும் தன்னுடலுமெப்படித்தோன்றும் பஞ்சதன்
மாத்திரைகளாம்
அதினலேபிரித் தறிவார்கள் என்று கும்மியடியுங்கடி - காலம்
போக்கி கும்மியடியுங்கடி 30

ஸூக்ஷ்மதேகத்திலுள்ளதெல்லாமிப்போ சொல்ல வெகு தொல்லை
யாகையினல்
ஸூக்ஷ்மதேஹத்தை ஸூக்ஷ்மமாகச் சொல்லியே கும்மி
யடியுங்கடி-மனம் அள்ளியே கும்மியடியுங்கடி 31

ஆனலும் ஸூக்ஷ்ம மாராய்ந்தால் அங்கே அறிவுசேஷிக்கும்
அங்கம்போல் தோன்றினலும் பஞ்சதன்மாத்திரைகளுண்டென்று
கும்மியடியுங்கடி
- நன்ருய் சொல்லியே கும்மியடியுங்கடி 32

ஸூக்ஷ்மப்ரபஞ்சமெல்லாம் சொல்லிய சூன்யத்திலுண்டாகும்
மூலமிதுவென்று காரணதேஹத்தை முனிந்து கும்மியடியுங்கடி
முழுதும் முனிந்து கும்மியடியுங்கடி 33

அஞ்சுக்குமன்யோன்ய ஆச்ரயதோஷத்தை அறிந்துகொண்டால்
மாயமயமாய் பஞ்சதன்மாத்திரை விசாரத்தினலே பிழை பார்த்து
கும்மியடியுங்கடி -
உற்றுபார்த்து கும்மியடியுங்கடி 34

பாவாபாவத்தை விட்டகன்று பரிபூரணப் பால்குடித்து ஆனந்தமாய்
தேவாதிகளுக்கும் தெரியாத துரீயத்தை தெரிந்து கும்மியடியுங்கடி-
மனம்பூரித்து கும்மியடியுங்கடி 35

பாழ்நிறைந்தது பாழாமோ அந்தபாழும்வாழும் பிரபஞ்சமெல்லாம்
பாழென்றுவந்ததோர் வாழும் பிரபஞ்சத்தை பாழென்று
கும்மியடியுங்கடி-
அது வெறும் பாழென்று கும்மியடியுங்கடி 36

துரியநிலைக்கொரு தோஷமுண்டாமோ துவைதவிகாரமில்லாமல்
வரியனுமாய் வரிஷ்டனுமாகியே வாழ்த்தி கும்மியடியுங்கடி-
வட்டம் சூழ்ந்து கும்மியடியுங்கடி 37

நித்யாநித்ய ஸ்வரூபத்தில் நின்று மறந்து நினைவழிந்தேன்
ஸத்யானந்த ஸ்வரூப ஸ்திதிகளை ஸாதித்து கும்மியடியுங்கடி-
நித்யம் ஸாதித்து கும்மியடியுங்கடி 38

நிர்விஷயானந்த நிலையறிந்து நிவாதஸ்தலதீபம் நின்றதுபோல்
அறிவுமிழந்து நிஷ்களானந்த மாகியே கும்மியடியுங்கடி-
பேரானந்தமாகியே கும்மியடியுங்கடி 39

தார்ஷ்டிகமாகவே தானென்று தோன்றாமல் தானேதானாக
இருந்ததுவே
தூஷ்ணி அனுபூதிஸ்திதிகளைச் சொல்லியே கும்மியடியுங்கடி-
மனமன்னியிலே கும்மியடியுங்கடி 40

துரீயாதீத ஸ்வஸ்வரூபத்திலே ஒரு துவைதகாரணமில்லாமல்
ஸர்வாதிஷ்டான ஸாக்ஷி என்பது ஸாதித்து கும்மியடியுங்கடி-
ஸ்திரம் ஸாதித்து கும்மியடியுங்கடி 41

அறிவிலே அறிவால் அறிவாய் அறிந்து அதை அறிவாய்
அறிவுமாத்திரம் ஆகஇருந்ததை அறிந்து கும்மியடியுங்கடி-
தன்னை அறிந்து கும்மியடியுங்கடி 42

மோசப்படுத்தும் உபாதிபலத்துக்கும் மூலநாசம்வந்தால் அதுவே
அஸம்பிரக்ஞாத ஸமாதிக்கு அனுகூலமாகுமென்று
கும்மியடியுங்கடி-
பேரனுகூலமாகுமென்று கும்மியடியுங்கடி 43



## கோலாட்ட பாட்டு

ஆதியில் ஒன்ருனுய் கோலே அப்புறம் இரண்டானுய் கோலே
வேதமும் அறியாக்கோலே வேதாந்தகோலே *1*

காடுமேடெல்லாம் திரிந்தாய் காமவேதை கொண்டலைந்தாய்
வீடறியாமல் மெலிந்தாய் மெத்தவே நொந்தாய் *2*

சொன்ன வகையை மறந்தாய் ஸ்வயபுத்தியை துறந்தாய்
என்ன மெய்யென்றிருந்தாய் ஏண்டா பிறந்தாய் *3*

நத்தையாய் புழுவாய் நண்டாய் நரியாய் பரியாய் வண்டாய்
எத்தனை ஜென்மமோ கொண்டாய் என்னத்தை கண்டாய் *4*

எப்போதும் நன்மைவேணும் ஈச்வரானுக்கிரஹம் வேணும்
ஸாதனஸம்பத்து வேணும் ஸத்குருவேணும் *5*

காசிராமேசுவரம் சென்ருய் காகம்போல் முழுகியே நின்ருய்
உன்னுசை போச்சோ மூடா என்ருல் ஆச்சுதோ நன்ருய் *6*

அண்டகோளம் எல்லாம் சுற்றி அணுவணுவாக பற்றி
ஒண்டியாய் திரிந்தாய் யுக்தி ஒஹோ உன்புத்தி *7*

போற்றியார் அடிபணிந்து பந்துக்களும் வீடும்விட்டு
கூற்றுவனழைக்கும்போது கூடவராது *8*

புருஷன் பெண்டாட்டி பொய்யே புத்திரன் பிதாவும் பொய்யே
பெருமை சிறுமை பொய்யே பிரம்மமே மெய்யே *9*

ஆகாவழிக்கதிதூரம் ஆத்ம அனுத்மவிசாரம்
தொகுத்து பார்க்க இதுநேரம் தோன்றுமே ஸாரம் *10*



## வேதாந்த ஞான ரஸ கப்பல்

அகண்ட ஸச்சிதானந்தம் சிவோஹம் சிவோஹம்
பரிபூர்ணமாய் விளங்கும் அஹோபிலர் ஆத்மதத்துவர்
ஸ்ரீ நரஸிம்ஹ குருமூர்த்தி அபரோக்ஷ குருசரணம் தன்னில்
அனுதினமும் நான் பணிந்தேன் பரஞ்ஜோதியாய் விளங்கும்
பிரணவமென்னும் கணபதிக்கும் சிவரூபிலக்ஷ்மிக்கும்
ஸரஸ்வதிக்கும் சாம்பவிக்கும் கதலீப்பழம் நாளிகரம்
கடலைப்பொரி அவல்பயறும் விடுதயிரால் பச்சடியும்
வெண்மையான பொரிக்கரியும் துய்யவெள்ளை சால்யான்னமும்
சேர்ந்ததொரு பால் குழம்பும் குரு உமக்கும் பூஜைசெய்தேன்
குறையறவே நிறைவேற்றும், இந்த தொலையாத ஜன்மந்தனை
எடுத்து
நித்யம் அலுத்தெனக்கும் உம்முடைய ஹிதமாகிய வாக்கியத்தால்
என்னை எளிதாகக்கரையேற்றும் இந்த பவமாகிற ஸாகரத்தை
கன்று குளம்படிபோல் கடத்தி ஸுகமாகிற கரைசேர்த்தால்
ஸ்வப்ரகாசர் பதம் துணையே இந்த கலியுகத்தில் அகம் மகிழ்ந்து
அவித்யாகல்பிதத்தால் நிஜம்மறந்து தன்னுடைய
ஸ்வரூபஸுகமறியாமல், இந்த ஜகம் அலைந்துபோகிறதென்று அந்த
ஷண்மதத்தை கண்டித்து ஸ்வாமி ஸர்வக்ஞ பீடமேறி தம்முடைய
வித்தையினால் ஸ்வாமி! ஸர்வாபீஷ்டமடைந்தோம். உயர்த்தியுள்ள
அத்வைத நிஜத்தை உத்தரிக்க வந்துதித்தீர்! அதை கப்பலதாய்
நான்பாட -
ஸ்கந்தன் கணபதியே! முன் நடவும்.

சிவோஹம் சிவோஹம்

## (முடுகு)

ஆகம புராண வேதமோடு கீதை அறுபத்திநாலுகலை அறு நான்கு
தத்துவம்
சதுர்வேத சாஸ்திர தர்க்க சாஸ்திரத்தில் ஸாரமதை தெரிந்தெடுத்து
தன்மயத்தைப் பார்த்து
ஸாதன புராண சுருதி சதுரான வாக்கியத்தில்
ஸாரமதை தெரிந்தெடுத்து தன்மயத்தைச் சேர்த்து
ஆரணத்தில் உபநிஷத்தில் கோடிகிரந்தம் பார்த்து உபநிஷத்
வாக்கியத்தால்

வேதாந்தம் ஸாதித்த காரணமான ஆசாரியர் கைவல்யம் தந்தார்
அந்த நிஜமதை நான் ஓடமதாய் பாட குருநாதர் உண்டு துணையே.
- ஏலேலோ ஏக ரஸம்

நித்திய ரத்தினபலகை சேர்த்து நிர்மலமாய் ஆணியிட்டான்
ஸத்திய வஜ்ர தூண் நாட்டி. ஸமரஸமாய் வளைபோட்டான்
சொல்லற்ற போத ரஸம் ஸ்வரூபமதில் மேல் மேய்ந்தான்
கரடில்லா ஆணி முத்துசரங்கள் கட்டி எங்கும் அலங்கரித்தான்
நிகரில்லா தாழ்வரையும் நிகரற்ற கொடுங்கைகளாம்
நிர்ப்பயமாய் கப்பலிலே ஓடவைத்த தங்கமிட்டான்
நிர்மலமாய் முகப்பு ரவிஸ்புரணை யொத்த ஜாதிரத்தினம்
சதுரமொத்த படியழகும் கோசாதீதமான நல்ல வஜ்ர
கொடிமுடியும் வாசல்களாம் ஸர்வாதீதமான ஸர்வோன்னத
குருவிருக்கும்
உன்னதமாம் வாசல்களும் உயர்த்தியுள்ள மேடைகளும்
அவர் தாமே தாமாய் விளங்கும் வஜ்ரதலையணையும் மெத்தைகளும்
ஸ்வர்ண தூக்கு மஞ்ச சியாமலையும் அவர் ஸ்வயமே தாமாய்
விளங்கும்
சுத்தார்த்தமாய் விளங்கும் ஸாதனம் தொட்டாட்ட சங்கிலியும்
குருபக்தி என்னும்
கொடுங்கையினுல் விசிறி பரிமளிக்கும் குமகுமென
ஸ்வப்ரகாச கண்ணுடி கட்டி துலங்கும் நல்ல ஜாலர்களாம்
பிரம்மவித்தையென்னும் ஸ்வயம்ஜோதி ஸ்வரூபம் விளங்கும்
நல்ல தீபங்களாம்
உபமானமற்ற கப்பல் அதற்கு ஓடவைத்த தங்கமிட்டான்
நித்தியரென்னும் சங்கரரை ஆசாரியராய் நிர்ணயித்தான்
கப்பல் தன்னில் நிஷ்களங்க வேதாந்த ரத்னம் தன்னை
சேர்த்துவைத்தான் அத்புதமாம் ரத்னம் தன்னை எடுத்து
வகைவகையாய் வாரியிட்டான் மஹாவாக்கிய சுருதி உபநிஷத்தால்
செட்டி வளைய எங்கும் காவல் வைத்தான்
பரஞ்ஜோதியாய் விளங்கும் பிரணவமென்னும் முத்திரையிட்டான்
ஜாக்கிர ஸ்வப்ன ஸுஷுப்திகளுக்கும் ஸாக்ஷியாகத்தானிருந்தான்
- சிவோஹம் சிவோஹம்

## (முடுகு)

ஸச்சிதானந்த ஸ்வரூபமென்றே சொல்லு
தன்னைவிட வேறே ஜகமில்லை என்றெண்ணு
நித்தியமாய் கப்பலிதை நிர்ணயமாய் தள்ளு
ஸத்யமிது ஸத்யமிது ஸத்யமே என்று சொல்லு

நாராயண ஏவ பிரம்மை வாஹம் நாமரூபமறிந்து தள்ளு
காமகுரோதமற கப்பல் தன்னில் கள்ளரெல்லாம் மெள்ள வாரார்
பையதப்பிபோறூர் போடுபீரங்கி - போடு பிரணவம்
போடு தத்வமஸி பீரங்கிகுண்டை
- ஏலேலோ ஏகரஸம்

## வேறு

பவமாகிற ஸாகரத்தில் அனாதிவாஸனையாகிற மகர மத்ஸ்யம்
அதற்கு ஈஷணை மூன்றையுமே இரையாக பலிகொடுத்தான்
ஸாதுஸங்கம்தனை கூடி தப்பி கடத்திவிட்டு
மெள்ள மெள்ள அகம் மமதை என்னும் முதலை
கப்பலை ஆழிதன்னில் ஆழ்த்திவிடும்
உம்முடைய ஹிதமென்ற வாக்கியத்தால் எளிதாக கடத்திவிடும்
அகங்கார இருளான அவித்யை என்னும் நீர்மனுஷ்யன்
கண்தூங்காமல் துறையிருந்து
தினமும் வழிமறைப்பன் கப்பல் தன்னை
நீங்காத ஸ்வரூபசுகம் தன்னில் நிதித்யாஸத்திலிருந்து
பவமாகிற ஸாகரத்தில் பயங்களுண்டு வழிதன்னிலே -
கலங்காமல் பார்த்தும் அதை கானல் ஜலமென்று மருளாமல்
- சிவோஹம் சிவோஹம்

## (முடுகு)

அலையாமல் மனம் நிறுத்தி அந்தரத்தை பார்த்து
பொய்மைகளற்று செய்கைகளற்று கல்விகளற்று காரணத்தையுற்று
சொல்லுகளற்று ஸ்வரூபத்திலுற்று அந்தண மறை யோகியர்க்கும்
வந்தனம் அளித்து
வந்த குரு சொன்னதொரு மந்திரத்தைப்பெற்று

வித்தை கற்று பந்த மற்று மோக்ஷமுற்று
அந்தமற்று ஆதியற்று ஆத்மஸுகம் பெற்று
- ஏலேலோ ஏகரஸம்

## வேறு

ஸத்தியமாம் கப்பல் தள்ள அதற்கு ஸாதனங்கள் நாலுமுண்டு
பிரம்மம் நித்தியம் என்னும் சுருதியாகிற கம்பால் பலத்தூன்றி நிலே
பார்த்தான்
ஜகம் அநித்தியம் என்ற சொல்லாகிற துடுப்பால் திசைநோக்கி
துளேந்து வந்தான்
யுக்தியினுல் ஓடிவரும் அதற்கு ஓங்கார பாய்மரமாம்
சிரத்தை என்னும் வழியறிந்தும் கப்பல்தனித்துவரும் வெள்ளத்திலே
சித்த பிரமையாம் திட்டு இருந்து கப்பல் சின்னம் தட்டிப்
போகாமல்
பிரமையில்லா பிரக்ஞையினுல் அதிதூரம் நடத்திவந்தான்
பாவமென்னும் பாழ் தன்னிலே பாய்ந்தோடம் தாக்காமல்
நிற்பாவமென்னும் தண்டெடுத்து நிர்ணயமாய் நடத்தி வந்தான்.
குரோதமென்னும் குணத்ரயத்தால் கொடுங்காற்று வீசாமல்
உபசாந்தமென்னும் தண்டெடுத்து யுக்தியினுல் நிச்சயமாய்
தள்ளிவந்தான்
அவித்யையான ஆழிமுதலே அடித்துக் கப்பல் அலேயாமல்
- சிவோஹம் சிவோஹம்

## முடுகு

பிரக்ஞை யென்னும் பதமெடுத்து பிரணவம் தன்னே சேர்த்து
பரபிரம்ம வஸ்துதனே பதராமல் பார்த்து
அத்வைத பிரம்மம் தன்னே அசையாமல் நிறுத்தி
தன்மயமேயாகி நிஜ ஸாராம்சத்தை பார்த்தான்
- ஏலேலோ ஏகரஸம்

## வேறு

காமகுரோத கள்ளருண்டு கப்பல் கரையோரம் போகாமல்
தாமஸ ராஜஸகுணமாம் அலேயை நிறுத்தி மெள்ள ஸாத்வீகத்தால்,
ஏகவெளிதனே காட்டி கப்பல் இறங்காமல் பாம்பனுற்றில்

போதமென்னும் கப்பல் தள்ள செட்டி வெகுஜன்மமாய்
பழகிவந்தான்
மோசமது வாராமல் கப்பலே முன்னதாக நடத்திவந்தான்
- சிவோஹம் சிவோஹம்

## முடுகு

வேதாந்தமான தொரு கப்பல் வருகுதப்பா
மெய்ஞ்ஞான ஜனங்களுக்கு பார்ப்பதற்கு மெய்ப்பாய்
மோஹாந்தகாரம் தள்ளி முக்தி வருகுதப்பா
ஏகாந்தமான துறை இறங்கியது காண் கப்பல்
- ஏலேலோ ஏகரஸம்

## வேறு

ஸ்வஸ்வரூப செட்டியவன் துறை அறிந்தே நடத்தி வந்தான்
லக்ஷியத்தால் பார்த்து அவனும் நிர்ணயமாய் நடத்தி வந்தான்
அசையாமல் இருபுறமும், அம்பரத்து அம்புலிபோல்
விசையாக நடத்திவந்தான் விஞ்ஞான கப்பல் தன்னே
நாதாந்த வழிநாடி நாமம் இல்லா இடம் தேடி
ஜோதிர்மய துறைசேர்ந்து கப்பல் சிவோஹமென்று நிலேத்தது காண்
- சிவோஹம் சிவோஹம்

## முடுகு

காலத்திரயங்களென்னும் தீவுதன்னே கடந்து
அவாச்சியமாய் வந்ததாம் விஞ்ஞான கப்பல்
சரீரதிரயமென்னும் தாழ்வரையை கடந்து
யதார்த்தமாய் வந்ததாம் மெய்ஞ்ஞான கப்பல்
அவஸ்தாத்ரயங்களென்னும் அரண்யம் கடந்து
ஸாக்ஷியாய் வந்ததாம் சைதன்ய கப்பல்
பஞ்சகோசங்களென்னும் பட்டணம் கடந்து
பரமார்த்தமாய் வந்ததாம் பரிபூர்ண கப்பல்
- ஏலேலோ ஏகரஸம்

## வேறு

கல்மஷங்கள் அற்ற கப்பல் கரையோரம் போகாமல்
நிச்சயமாம் இந்த மனுவசனம் நிறைந்த க்ஷமை, புத்தி மந்திரி -
சின்மயத்தில் நிறைந்திருக்கும் ஜீவனென்னும்
ராஜனவன் பல ஜன்மமாய் பழகிவந்தான்
எத்தனையோ கோடி ஜன்மம் இருந்து தபஸு பண்ணும் யோகிகட்கும்
கிட்டாத போதரத்னம் துருஸாய் கிட்டிவந்தான் துறைசேர
இக்ஷணமே நீங்கள் சென்று இறக்கி கப்பல் வருமென்றான்
சட்டமிடும் மந்திரியும் புத்திதளவாயும் அனுப்பிவைத்தான்
ஏகரஸ பலப்ராப்தி அடைய ஏத்த ரத்தின ஜோடணிந்தான்
மோக்ஷஸாதனமாய் இருக்கும் தேஹத்தங்க தண்டிகை மேல்
ஏறிவந்தான்
- சிவோஹம் சிவோஹம்

## முடுகு

சித்துதய முக்தி பெண்கள் தோகையர்கள் பாட
பேத லவலேசமற்ற பேரிகைகள் அடிக்க
நாலுவித சாஸ்திரத்தால் நாதஸ்வரம் ஊதி வர
வைராக்கிய கத்திகொண்டு வளையவந்து ராஜன்
எதிரற்ற செட்டியுடன் எதிர்கொண்டு ராஜன்
எல்லையற்ற செட்டி தன்னை - மன்னவனும் பார்த்து மனமகிழ
செட்டியவன் எதிர்கொண்டு வாரான்
- ஏலேலோ ஏகரஸம்

## வேறு

வர்த்தகனை வரவழைத்து ரத்தினம் மதிபார்ப்போம் விலைகூறி
புத்தியுக்திவர்த்தகனும் போக்குவரவு அற்ற செட்டி
நிரதிசயமாம் கப்பலிலே - அதிலே அத்வைத ரத்தினமுண்டு
நலமுடைய வஜ்ரமுண்டு - அதிலே ராகமில்லை துவேஷமில்லை
மஹிமையுள்ள முத்தும் உண்டு புடைத்து வாழ்ந்திருப்பீர் சுகமாக
இதையறிந்திருந்தும் வெகுஜனங்கள் உற்று அனுபவிக்க அறியாமல்
அகம்மதியால் அறிவு அழிந்து அவித்தையின் வசம் சேர்ந்து
பிரமையதினால் பிறந்திறந்து - பேரின்பம் தன்னை மறந்து

தன் கழுத்தில் தரித்த ரத்தினம் தான் மறந்து தேடுவர்போல்
வந்து ஒருவன் காட்டையிலே கழுத்தில் மறந்த ரத்தினம்
பூண்டவர்போல
பந்தமென்னும் ஸம்ஸாரம் தன்னிலே - உழலுகின்ற வெகுஜனங்கள்
தொந்தமென்னும் அவித்தையுடன் கூடி விஷயஸுகம் தன்னை
புஜித்தான்
அதிதூரம் அதிஸமீபம் அதிஸுக்ஷ்மம் அதிசுலபம்
அருமையான ஆத்மவித்தை - அதையறிந்த பேர்க்குலகு இதுதான்
அவர் மஹிமை அறியவென்றால் ஆதிசேஷனுக்கும் அரிது அரிது
- சிவோஹம் சிவோஹம்

## முடுகு

வஸ்துவே ரத்தினம் - பச்சை வஜ்ர வைடூரியம்
மரகத மாணிக்கம் நீல நல்ல பவழம் புஷ்பராகம்
சிவப்பு கோமேதகமென்னும் பார்க்க இரண்டில்லை
ஸாக்ஷியான ரத்தினம்
- ஏலேலோ ஏகரஸம்

## வேறு

ஸ்வப்ரகாச ரத்தினமிது ஸ்வயம்ஜோதியான முத்து
அக்ஷரத்தில் ஒட்டாத அபரோக்ஷ ஸ்வரூபமிது
எத்திசைக்கும் ஓர் ஒளியாய் விளங்கும் நவரத்தினமிது
- சிவோஹம் சிவோஹம்

## முடுகு

ஏகம்ஏவ அத்விதீயம் பிரம்மைவாஹம்
எங்கும் வெளி இடையில்லாமல் நிறைந்ததொரு பிரம்மம்
வாக்கு மனதுக்கு அகோசரமாய் வஸ்துமய ரத்தினம்
ஜாதி வர்ணநாம ரூபம் தள்ளி ஒளியாய்,
போதமயமாய் நிறைந்ததொரு ஜோதியான ரத்தினம்
- ஏலேலோ ஏகரஸம்

## வேறு

குருகிருபையால் வந்த கப்பல் குணாதீதமாயிருக்கும்
நிர்க்குணத்தில் நிலைத்ததொரு நித்தியமாம் கப்பல் இது
மஹாவா க்கியார்த்த கப்பல் இது வஸ்துமயமாயிருக்கும்
என்று வர்த்தகனும் சொல்லலுமே செட்டி மனமகிழ்ந்து
தான்பார்த்து
ப்ரக்ஞையினால் பார்த்தவனும் பிரம்மம் என்று தான் அறிந்து
-- சிவோஹம் சிவோஹம்

## முடுகு

'அஹம் பிரம்மாஸ்மி' என்னும் ஆனந்தத்தை அடைந்து
'தத்வமஸி' வாக்கியத்தால் தாமே தாமாகி
'அயமாத்மா பிரம்மம்' என்னும் ஐக்கியம் தன்னை அடைந்தான்
மஹிமையுள்ள கப்பல்தன்னை மஹாத்மாக்கள் பார்த்து
மஹத்குரு பாதத்தில் வந்துமவன் பணிந்தான்
பணிந்தவரை ஆதரித்து பரமகுரு அப்போது
பரமான ஹஸ்தத்தை மஸ்தகத்தில் வைத்து
பாங்காக மோக்ஷஸுகம் தன்னை அளித்தார்
கேட்டவர்கள் எல்லோரும் கிலேசமற்றிருப்பார்
பார்த்தவர்கள் எல்லோரும் பரிபூர்ணமாயிருப்பார்
அத்வைதியானவர்கள் அனுபவத்தை அடைவார்
அபரோக்ஷானுபவத்தில் ஆனந்தமாய் இருப்பார்
-- ஏலேலோ ஏகரஸம்



## வேதாந்தக் கப்பல்

அகண்ட ஸச்சிதானந்தம் - சிவோஹம் பரிபூர்ணமாய் விளங்கும்
அஹோபலர் அனந்த தத்வம் நரசிம்ம குருமூர்த்தி
தாயான ஸரஸ்வதிக்கும் சாரதைக்கும் சியாமளைக்கும்
ஸர்வாபீஷ்டங்கள் தரும் - எங்கள் சாந்தலக்ஷ்மி ஸத்குருக்கும்
கதலீபலம் நாளிகேரம் - கடலைப்பொரி அவல் பயறும்
வடைப்பயறும் மோதகமும் வரிக்கி நல்ல பலாச்சொளையும்
உறை தயிரும் பச்சடியும் வெண்மையான பொரிக்கரியும்
தூயவெள்ளை சால்யான்னமும் சேர்ந்ததொரு பால் குழம்பும்
மந்தாரை பாதரியும் - மணமுள்ள கதம்பப்பூவும்
கொட மல்லிகை சம்பகப்பூ கொழுந்து பிச்சி வேருடனே,
பாக்குடனே வெற்றிலையும் குமுகுமுவென லவங்கமுடன்
பரிமளிக்கும் கலவை கந்தம் - பச்சைப் புனுகு ஜவ்வாதுடனே
தோராமல் பூஜை செய்வேன் தொப்ப கணபதியே முன் நடத்தும்
கலியுகமே அகமிகுந்து - அவித்தியா கல்பிதத்தால்
நிஜம் மறந்து ஸ்வரூபஸுகம் அறியாமல் இந்த ஜகம் அலைந்து
போகிறதென்றே
ஷண்மதத்தைக் கண்டித்து ஸ்வாமின் ஸர்வக்ஞ பீடமேறி
தன்னிடத்திலே வித்தையினுல் ஸர்வாபீஷ்டமடைந்தார்
உசத்தியுள்ள அத்வைதத்தை நிஜத்தை உத்தரிக்க வந்துதித்தார்
அந்தக்கப்பல்தனை நான்பாட கந்தன் கணபதியே முன் நடத்தும்
-சிவோஹம் சிவோஹம்

### முடுகு

மூலமெனும் கிரந்தவகை கோடிவகை சேர்த்து
ஆரணத்தின் ஸாரமெல்லாம் ஆராய்ந்து பார்த்து
அத்துவைத சாஸ்திரத்தால் அந்த ஜன்மம் தீர்த்து,
காரணமான உபநிஷத்தை பாஷியமாய் கோத்து
கப்பலென்னும் பாட குரு கருணையுண்டு நமக்கு
ஏலேலோ ஏகாந்தரஸம் சிவோஹம்
ஏலேலோ வேதாந்த ரஸம்

### வேறு

அநேக ஜன்ம ஸஞ்சிதத்தால் ஆணிவைரத்தால் கடைந்தான்
சுக்கில சோணிதங்கள் என்னும் சேர்மானம் தான் சேர்த்தான்

அன்னை பிதா என்னும் சிற்ப ஆசாரியினால் செய்தான்
கர்ப்பகோள ஸ்தலம் தனிலே, கப்பலுக்கு கருப்பிடித்தான்
ஆண் பெண் இரண்டு வகுப்பாகி அடிசேர்ந்தான் கப்பலுக்கு
என்சாணில் அளவெடுத்து இலக்கு நூறு வயசுமிட்டான்
இருபாதமெனும் தூண் நிறுத்தி பஞ்சப்பூதப் பலகை சேர்த்தான்
பஞ்சகோசக்கொடுங்கையினால் குணத்திரயத்தால் வளைபோட்டான்
எங்கெங்கும் இசைவு வைத்து எருக்கி நரம்பால் இசைத்தான்
அங்கங்கே அசையாமல் அஸ்தியென்னும் ஆணி தைத்தான்,
த்வக்கும் சர்மம் ரோமங்களினால் துவங்குமெங்கும்
மேல்மேய்ந்தான்
உதிர மாம்ஸ தெந்தங்களினால் ஒப்பமிட்டு முகப்பரிந்தான்
நிர்மலமாம் கண்ணெதிரே நிலக்கண்ணாடிதான் புதைத்தான்
ஷடாதாரமேடையிலே தாரணையாய்ப் படிகள் வைத்தான்
தங்கத் தாரணையாய் படிகள்வைத்தான்
நவத்துவாரவாசலிலே நவரத்தினம் பல்கணி யிட்டான்
நாமரூப நங்கூரத்தை நாலுதிக்கிலும் போட்டான்
மனஸென்னும் மதகுதன்னில் ஆசை வற்றாத ஜலம் நிறைத்தான்
சுகதுக்கமான வஸ்து சுமைசுமையாய் தான் போட்டான்
அகங்கார அபிமானியை அசையாமல் காவல் வைத்தான்
– சிவோஹம் சிவோஹம்

## முடுகு

அறுநான்கு மாசத்திலே ஐம்பூதக் கப்பல் அத்புதமாக வந்து
அவதரித்ததப்பா
காயக்கப்பல் நேர்த்திதனை கண்டு மனமகிழ்ந்து
போதமெனும் சரக்கெடுக்க புத்தியென்னும் செட்டி
விவேகமென்னும் தேரிலே சீக்கிரமாய் ஏறி
தேசிகனார் தாம் இருக்கும் தீவு அறிந்து துளைந்தான்
ஏலேலோ ஏகாந்த ரஸம் – சிவோஹம்
ஏலேலோ வேதாந்த ரஸம்

## வேறு

அநேக ஜன்மம் ஸத்வாஸனையால் ஆரண்ணியமெல்லாம் கடந்தான்
இகபரமாம் காடுவெட்டி எதிராறு நீஞ்சிவந்தான்
ஸகலத்தையும் ஸஹித்துக்கொண்டு ஸாவதானமாய் நடந்தான்

சமம், தமம் உபரதியாம் சிரத்தா பக்தி வழி நடந்தான்
வேதங்களெல்லாம் தேடி - மெய்பொருளைக்காணுமல்
தேசிகனுர் தாமிருக்கும் அந்தத் தீவுதன்னில் போய் சேர்ந்தான்
வினயத்துடன் அபிமுகமாய் விக்ஞாபித்தே வேண்டி நிற்பான்
தாபத்ரய சங்கடத்தால் தவித்து மிக நொந்தேன் அய்யா என்
தேகத்ரய சங்கடத்தை தீர்த்தும் என்னை ஆளும் என்ருன்
பரிபக்குவமாம் செட்டியவர் பார்த்து மந்தஹாஸத்துடன்
அற்புதமாம் சரக்கேற்ற அதிகாரியாகும் இவன்,
பிரக்ஞையுள்ள ரத்தினம் தன்னை பரிபூர்ணமாய் அளித்தார்
ஸ்வரூபமய கனக ரத்தினம் - ஸுகமாகத்தான் கொடுத்தார்
உசத்தியுள்ள ஆணி முத்து உன்னக்ஷயமென்றே கொடுத்தார்
ஆனந்தமாம் ஐக்கியம் சேர அனுப்பிவிடைதாரும் என்ருன்
ஸப்தஸாகரம் போல் தயவுவைத்து ஸமிக்ஞையுடன்
விடைகொடுத்தார்
- சிவோஹம் சிவோஹம்

## முடுகு

சொல்லறிய வேதாந்த துறைதனிலே கப்பல்
துரவறிந்து வழிநோக்கி துளைந்து மெள்ள திருப்பி,
வள்ளல் குரு கிருபையினுல் நல்லகளை ஊனி
தள்ளப்பா தள்ளு தத்பதத்தில் தள்ளு,
பையபைய்ய பரப்பிரம்மத்தில் தள்ளு

ஏலேலோ ஏகாந்த ரஸம் - சிவோஹம்
ஏலேலோ வேதாந்த ரஸம்

## வேறு

கர்மம் என்னும் காத்து வந்து கப்பலைக்கருக்குழியில் கடத்தாமல்
வர்ம மதாய்க்களையூனி வழிபார்த்தே நடத்தி வந்தான்
பந்தமென்னும் பார்தன்னிலே - கப்பல் பாஞ்சோடை தருகாமல்
நிர்தொந்தமென்னும் களையூன்றி நிலைபார்த்தே நடத்திவந்தான்
சோகமென்னும் சுழிகள் வந்து சுழித்து கப்பல் தாழாமல்
அசோகமென்னும் களையூனி ஆனந்தமாய் நடத்தி வந்தான்
மாயையென்னும் மகர மத்ஸ்யம் மறித்து கப்பல் தாழாமல்
சிவகாமி கிருபை அனுக்கிரஹத்தால் - சிவமயமாய் நடத்தி
வந்தான்

பேதமென்னும் நீர் மனுஷன் பிடித்துக் கப்பல் - கவுக்காமல்
அபேதமென்னும் கனாயூனி ஆனந்தமாய் நடத்தி வந்தான்
மோகமென்னும் முதலைவந்து முழுகிக் கப்பல் கவுக்காமல்
நிர்மோகமென்னும் கனாயூனி நிலைபார்த்தே நடத்திவந்தான்
ஆசை யென்னும் அலைகள் வந்து அடித்துக் கப்பல் உடையாமல்
நிராசையென்னும் கனாயூனி நிலைபார்த்தே நடத்திவந்தான்
பாவமென்னும் பாம்பனுத்தைப் பார்த்து கப்பல் பிரமியாமல்
வைராக்கியமென்னும் கனாயூனி வழிபார்த்தே நடத்திவந்தான்
– சிவோஹம் சிவோஹம்

## முடுகு

ஆறுமதவாதிகளும் அடுத்தவரை எதிர்த்து,
வாதயுத்தம் வேணுமென்று மறிச்சு அவரைத்தடுத்து,
கூறுடனே வேதாந்தி கோபமுடன் எதிர்த்து
தள்ளப்பா தள்ளு ஷண்மதவாதிகளைத்தள்ளு
தொடுத்து அடுத்து முடிக்கித் தள்ளு
சோகமென்னும் ஸாகரத்தை அப்புறத்தில் தள்ளு
ஏலேலோ ஏகாந்த ரஸம் சிவோஹம்
ஏலேலோ, வேதாந்த ரஸம்

## வேறு

வேதாந்தம் என்னும் ஸாகரத்தை வெகு ஸாதனையாலே கடந்தான்
தத்பதமாம் துறைதனிலே சேர்ந்ததையா சிவகிருபையால்
நல்துறையில் சென்றதென்று ராஜனுக்கு உரையுமென்றார்
கேட்டும் அந்த ராஜேந்திரன் கிருபைகடலில் தானமர்ந்தான்
நிர்மலமாம் ஜோடணிந்து நித்தியம் பொறுமை யென்னும்
பணிபூண்டான்
ஏகரஸ பலப்ராப்தி அடைய ஏத்த ரத்தின ஜோடணிந்தான்
வாயுவிலும் வேகமுள்ள மனக்குதிரை மேலேறி புத்தியெனும்
செட்டியரில் போய்ப் பணிந்தான் ராஜனவன்
கொண்டாடியெல்லோரும் கோடிதனம் வெகுமானித்தார்
எடுத்தவரும் கொண்டாடி ஏகஸிம்மாஸனத்திருந்தார்
பார்த்தவரும் கொண்டாடி நல்ல பரஞ்ஜோதி வஸ்துவென்றார்
ஆத்மரத்தினம் மதிப்புப் பார்க்க அனுபோகாளை அழையுமென்றார்
வஸ்துரத்தினம் மதிப்புபார்க்க வர்த்தகாளை அழையுமென்றார்,

போதரத்தினம் மதிப்புபார்க்க நல்லபுத்திமானை அழையுமென்றார்
ஆத்மரத்தினம் மதிப்பு பார்க்க அனுபோகநிஷ்டர் வந்தார்
சாயமணி அல்ல இது நல்ல தத்துவத்தால் விளைந்த ரத்தினம்
ஆதியில்லை அந்தமில்லை அழிவுமில்லை கழிவுமில்லை
ஒளியுடைய ரத்தினமிது உரையுமில்லை மாத்துமில்லை
அறிவோர்க்கெளிய ரத்தினம் அக்ஞானுக்கு அதிதூரம்
அறிவுடைய ரத்தினம் தன்னை - சிஷ்யனை ஆளும் என்றே
கைகொடுத்தார்.
- சிவோஹம் சிவோஹம்

## முடுகு

அறிவுடைய ரத்தினமென்று அறிந்தும் அந்த ராஜன்
இஷ்ட மோக ராக த்வேஷாதிகளைத்தள்ளி,
தத்போதமதாகி எங்கும் தன்மயமாகி
எப்போதும் ஏகசக்கிராதிபதியாகி
துவைதமென்னும் கள்ளன் அதோ துள்ளியதோ வாரான்
போடு போடு அத்வைத பீரங்கிக்குண்டை
ஏலேலோ ஏகாந்த ரஸம் - சிவோஹம்
ஏலேலோ வேதாந்த ரஸம்



## கண்ணிகள்

### (1)

ஆரோபித்த ஜகத்தெல்லா மாத்மஸ்வரூபம்
அதற்குப் பிரமாணம் சொல்வேன் ''அயமாத்மா பிரம்மம்'' 1

எல்லாமாத்மாகாரமானு லெதிர் தோற்றுவானேன்
பொல்லாத ஸம்சயம்போக்கி பரிபூரணமாக்கைய்யா 2

தோற்றுகிறது நீயோ நாமரூபமோ பாராய்
நேதியான நாமரூபம் நீயாவாயோ போடா 3

நாமரூபமாமேயானுல் நம்புமோ வேதம்
ஆமோ நாமரூபம் பிரம்மம் ஐயா நீர் சொல்லும், ஐயா நீர் கேளும் 4

அம்மா நீகேளாய் ஆத்மா நாமரூபமாகும்
தப்பாமலே ஆத்மா நாமரூபமாகும் 5

ஐயாயிது ஆச்சரியம் யாரறிவார்கள் மெய்யென்றெண்ண
யுக்திசொல்லும் வேதாந்தகுருவே வேதாந்தகுருவே 6

யுக்திசொல்லுகிறேன் பக்தியுடன் கேட்பாயானுல்
முக்தியடைவாய் அதற்குமேலே முக்தன் நானென்பாய் 7

அலையிலிறங்கி ஸ்நானம் செய்தேனென்பாரே ஜனங்கள்
அலை ஜலம் தான் ஜலம் அலைதானுனதே யுக்தி 8

நாமரூபமாகுமேயானுல் நால்வேதமேது
காமமறக் கேட்டு கற்ருல் கர்மம் தானேது 9

சுருதியுக்தி அனுபவத்தால் வேறில்லைகண்டாய்
போதிப்பித்த வெங்கடேசுவரர் கிருபையினுல் 10

### (2)

ஸ்ரீகுருவை சிந்தனை செய்து தியானம் பண்ணவே
தேவிவாணி நாவில்வந்து முன் நடக்கவே
தக்ஷிணுமூர்த்தி ஸ்வரூபம் ஸ்ரீ வெங்கடேசுவரர்
சிந்தைதன்னில் நித்தியமாய் சின்முத்திரையுடன் 1

ஜீவபராள் ஐக்ய யுத்தி சொல்லியே வந்த
தேசிகனூர் பாதமி ரண்டும் துணையதாகவே
அரவணைத்து காற்றினல் அலைகுமிழியுடன்
ஆகாரமாய்தோன்றி ஒன்ருய் ஐக்கியமானுப்போல் 2

ஆத்மாகாரம் தன்னிலே மாயையாம் காற்று
அடித்து அண்டபிண்டாதிகள் உண்டாய் லயிக்கும்
மாயையென்னும் காற்றமர்ந்து வஸ்துமாத்திரமாய்
வாரிதிமாத்திரமதாக ஏகரூபமாய் 3

இயமநியமாஸன பிராணுயாமங்கள் பிரத்தியாகார
தாரண தியான ஸமாதிகள்
எட்டுவிதமான ஸமாதிதன்னிலே - ஏகாக்கிரமாய்
புத்தி ஸாமர்த்திய மிருந்தாலும் 4

அநேகவித கிரந்தங்க ளோதி யிருந்தாலும்
ஆதிகுரு பூரண கிருபை யில்லாமல் போனல்
ஆகாசாதி வாயுதன்னை கையில்பிடித்து
அம்மானை ஆடினுலும் அறியவே மாட்டார் 5

தியான சூரர் ஆசாராதி நித்தியகர்மங்கள்
சாஸ்திர வித்தை தன்னிலே ஸமர்த்தர் நாமென்றும்
நல்ல க்ஷேத்திரவாஸி நாங்கள் தீக்ஷிதரென்றும்
நல்லகுல நல்லகுணஜாதி நாமென்றும் 6

அகமதி அடைந்து கர்வ பர்வதமேறி
அந்த லோகம் தன்னிலே சுகம்உண்டு என்றும்
புத்திரர் மித்திரர் பந்து தன வித்தையுண்டென்றும்
பூமியிலே என்னை மிஞ்சி யாருண்டு என்றும் 7

அனுதினமும் ஸ்வர்க்கம் தன்னில் ஏறிவிழுந்து
அலைகடல் துரும்புபோலலைந்து திரிவார்
யாரறிவாரென்று கேட்டால் ஆதிஜோதியை
ஆதிகுரு பூர்ணகிருபையாலே யறிவார். 8

எப்படி என்ருல் இதில் யுக்தி சொல்லுகிறேன்
ஏகாக்கிரமாய் தியானம் பண்ணும் கிருமிகளைப் போலே
இப்படிப்பட்ட குருவை ஏகாக்கிரமாய்
ஈசஜீவாளென்னு மிந்தபேரை மறந்து 9

வினயத்துடனே வணங்கி விசுவாஸமாக வேண்டி
நமஸ்காரம் பண்ணி பக்தியுடனே
அநேகவித யுக்தி தன்னில் மூடனானாலும்
அஞ்ஞானாதி அஸ்தமித்து ஞான உதயமாய் 10

ஸத்துசித்தானந்த ஸர்வாதீதராய் ஹஸ்தகர பாணிபோல்
பேதம் இல்லாமல் விருத்தி பஞ்சகங்களிலே ஞாபகமாக
விச்வகாரண குருவை வேறே எண்ணாமல்
திரிவிதபரிச்சேத ரஹிதமான வஸ்துவை 11

ஸ்ரீமத் வெங்கடேசுவரரென்றும் நிச்சியித்தாக்கால்
ஜனனமரணாதி என்னும் பீதிநாசமாய்
சிதாகாச சைதன்யமாய் சின்மயமாவார்
சிதாகாச சைதன்யமாய் சின்மயமாவார் 12

## குரு

சீர் பெருகும் ஸச்சிதானந்த தேசிக சின்மயனே-குருநாதா!
பார் முழுதும் பரமாகி நிறைந்திடும் பாக்கியமே-குருநாதா! 1

பேரறிவாகிய பிரம்ம நிலைக்கடல் பேசறியேன் - குருநாதா!
ஆர் அறிவார் எனக்கருளின அனுபவம் ஆண்டவனே! - குருநாதா! 2

மரமேறிக் கைவிட்ட மானிடர் போலவே மாண்டு பிறவாமல்
- குருநாதா!
திறமெனக் கீந்ததும் தேவரீரல்லவோ தேசிகனே! - குருநாதா! 3

பந்தமோக்ஷமெனும் பேச்சறியாததோர் பேதையாம் என்னை
- குருநாதா!
ஸந்ததம் அனுபவமாக வேதாந்தம் சாற்றி வைத்தாய் - குருநாதா! 4

ஸரஸபேச்சினிலே ஸச்சிதானந்த நிலை தந்த சாச்வதனே! - குருநாதா
பக்திவைராக்கிய பதமெனக்கருளின பாக்கியமே! - குருநாதா! 5

அந்தகன் போலவே அலைந்து திரிந்த என்னை ஆண்டவனே!
- குருநாதா!
சிந்தை மகிழ்ந்திட சிவபதம் அருளிய தேசிகனே! - குருநாதா! 6

புத்திக்கும் ஸாக்ஷியாய் போதமாகிய பரிபூரணனே!-குருநாதா!
அனைத்திற்கும் ஸாக்ஷியாய் அறியும் அனுபவம் ஆர் தருவார்?
- குருநாதா! 7

முக்தி பரமசுகம் தனக்குள் தானே என்றும் இருந்தாலும் குருநாதா!
பரம ரஹஸ்யம் பழ மறை நூல்களின் பரம் பொருளே! - குருநாதா! 8

சுக்தியில் ரஜதம் போல் பிரபஞ்சம் மித்தையென சொன்னீரே! - குருநாதா!
சுருதி யுக்தியனுபவம் சொல்லி உலகப் பேயை ஒழித்தீரைய்யா!
- குருநாதா! 9

நித்ய நிரஞ்ஜன நிர்குணமாகிய விமலனே! குருநாதா!
ஸத்திய ஞானனந்த மதாகிய சாசுவதனே! குருநாதா! 10

பர்வதமாம் பிரதிபந்தம் அறுத்ததுன் பாதமல்லவோ - குருநாதா!
ஸர்வமும் தானாக ஸமரஸபதம் தந்த ஸர்வேச்வரனே! - குருநாதா! 11

அந்தரங்கமறியாது அலைந்து திரிந்தேன்! - குருநாதா!
ஸந்ததம் குருபக்தி அருளிய அன்புருவே! - குருநாதா! 12

துர்விஷயங்களைத் துரத்தி தூளாக்கிய என் துரைநீர் தானே! - குருநாதா!
நிரதிசயானந்தம் என்க்கீந்த நிர்மலனே! - குருநாதா! 13

காசம் படர்ந்த கண்ணுக்கு ஒளி காட்டி வைத்த காரணனே! - குருநாதா!
நாசப்பிறவி நீக்கி நாடெனக் கருளின நாயகனே! - குருநாதா! 14

பாசமகற்றி பதி தன்னில் சேர்த்து வைத்த பண்டிதனே! - குருநாதா!
தேசமெங்கும் புகழ் ஸ்ரீ வெங்கடேசுவர தேசிகரே! - குருநாதா! 15



## கிளிக் கண்ணி

எத்தனையோ கோடி ஜென்மம் எடுத்தேன் கணக்கில்லாமல்
போத மிழந்துவிட்டேன், கிளியே - புத்தி மயக்கத்தினால் 1

போதம் தெளிவேனோடி போக்குவரத்தை விட்டு
தேறித்தெளிவேனோடி, கிளியே - சித்துதயத்தைக் கண்டு 2

செப்பிடி வித்தைபோலே யிந்த ஸூத்திரமான தேஹத்தை
எப்படி நான் சுமப்பேனடி, கிளியே - இனி என்னாலாகாதடி 3

வேதாந்த ஸாரமென்னும் விருக்ஷத்தைக் கண்டவுடன்
தேடியிருப்பேனடி, கிளியே - இந்த நிழலைக்கண்டு 4

ஆனந்தமான பழம் அளவதியாய் கிடக்க
ஸச்சிதானந்த மென்றும், கிளியே - காண அரிதேயடி 5

தேடக்கிடையாதடி தெகட்டாத வஸ்துவடி
அறிவுள்ளோர்க்கானந்தமடி, கிளியே - அதிகமதுரமடி 6

காணக்கிடையாத பேர் கசத்தில் விழுவாரடி
பிறப்பதும் இறப்பதுமாய், கிளியே - பிரமை பிடித்தலைவாரடி 7

பரப்பிரும்ம வஸ்துவன்றோ பரமகுருகிருபையால்
பற்றிப் பிடிப்போமடி, கிளியே - இந்த பவமும் துலையுமடி 8

எட்டாத கொப்படியோ என்னால் முடியுமோடி
தட்டிப் பறிக்கவென்றால், கிளியே - ஸாதுக்கள் வேணுமடி 9

ஆதி அந்தமற்ற ஆசாரியர் கிருபையினாலே
எட்டிப்பறிப்போமடி, கிளியே - எல்லோரும் புஜிப்போமடி 10

பற்றிப் பறிப்போமடி கிளியே - பிரம்மரஸத்தை
எல்லாரும் புஜிப்போமடி, கிளியே - எல்லாரும் புஜிப்போமடி 11



## குயில் கண்ணி

ஸ்ரீ குருபாதம் தன்னை, குயிலே! சிந்தித்திருந்தாயானால்
சிரஸின் மேல் கையை வைத்தால், குயிலே பறந்திடும் ஜென்மவினை

வினைகள் தீரவென்றால், குயிலே-வினயம் வேணுமடி
கவலையேதுக்கடி குயிலே-மாயாகல்பிதமடி

முக்திவேணு மென்றால் குயிலே-யுக்தி வேணுமடி
பக்தியுதிக்குமடி, குயிலே-சிரத்தையதாகுமடி

பொறுக்கவேணுமடி குயிலே - பொல்லாத துக்கங்களை
தள்ளவேணுமடி, குயிலே - தத்வதிருஷ்டியினால்

வெறுக்கவேணுமடி, குயிலே - விஷயபோகங்களை
இழக்கவேணுமடி, குயிலே - இந்திரியவிருத்திகளை

மனமும் பொய்யடியோ, குயிலே - மனக்கூடும் பொய்யடியோ
இனமும் பொய்யடியோ, குயிலே - தனமும் பொய்யடியோ

பிரம்மானந்தத்திலே, குயிலே - பூரணமானவஸ்து
காமகுரோதங்களற்றால், குயிலே - ஆத்மவிசாரணையால்

பக்குவம் வந்தபேர்க்கு, குயிலே - பழுதில்லை நிச்சயமே
அஞ்ஞானகாரணத்தை, குயிலே - பழுதில்லை நிச்சயமே

மாயாபிரபஞ்சம் தன்னில், குயிலே - மனதை நான் வைத்திருந்தேன்
மஹாகுருபாதம் கண்டு, குயிலே - மறந்தேன் இகத்தாசை

நேரில் இழுத்தாரே, குயிலே - அகோரஸம்ஸாரம் தன்னை
நிச்சயமாய் நம்பி இதை, குயிலே - அல்பஸுகம் கொண்டேனிப்போ

ஸம்ஸாரம் தன்னை நம்பி, குயிலே - தலைகீழ் தெரியாமல்
அறிவில்லாமலிருந்து, குயிலே - ஆசை வில்லை பூசிக்கொண்டேன்

சித்திரபடம்போலே, குயிலே - தோன்றும் பிரபஞ்சமெல்லாம்
இதுக்கர்த்தமில்லை என்று சொல்லி, குயிலே - அனுகிரஹித்தார் ஸத்குருவும்

குருவை வணங்காமல், குயிலே - கோடி ஜென்மமிருந்தேன்
ஸ்ரீ வெங்கடேசுவர குருவால், குயிலே - துரீயநிலையடைந்தேன்



## பராபரக்கண்ணி

தூணிலுதித்தார் பாதம் தொழுதே மலர் சூடி
ஆணவமும் மும்மலமு மற்றேன் (பராபரமே)
என் குருவை போற்றி இரு கமலம் பூசை பண்ணி தன் பதவி
நோக்கி தவம் பெற்றேன் (பராபரமே)

தாயே! ஸரஸ்வதியே! ஸந்ததமும் பூசைபண்ணி ஸச்சிதானந்த
மயமானேன் (பராபரமே)
அலேயா தலேமோதும் மனம் கலேயாத ஆரூடமான தன்மை
யடையக் கண்டேன் (பராபரமே)

அஞ்ஞான காஷ்ட மடிவேர் பறித்தெறிந்து விஞ்ஞான ஸாக்ஷி
வெளியானேன் (பராபரமே)
அகமென்னு மஸ்திரத்தா லகங்காரம் தன்னே வேரறுத்து
பிரியாத பதவி பெற்றேன் (பராபரமே)

தாபாக்கினியால் குருசிரவணத்தா லறிந்துகொண்டு பாப புண்ய
மிரண்டு பலமுமற்றேன் (பராபரமே)
ஓயாத ஜன்மமொழிந்தே துடக்கறுத்து மாயாபுரியை
கடந்தேன் (பராபரமே)

நிலேயா பவக்கடலே நீந்தி கரையேறி அலேயாத அகண்ட
மயமானேன் (பராபரமே)
துக்கக்கடலே துளேந்து கரையேறி வெட்கம் குலேந்து ஜன்மம்
விட்டேன் (பராபரமே)

வம்பரெல்லாம் தானுகி வையகத்தே பேதமற்று அம்பரம்போல்
வடிவானேன் (பராபரமே)
ஓதிவரும் நூல்களெல்லாம் கரைந்துவரும் கந்தையைப்
போலாதியந்த மற்று அகண்டமய மானேன் (பராபரமே)

அகம்தேகமென்னு மபிமானம் தன்னேவிட்டு ஸோஹமென்று
அறிந்து துணிந்தேன் (பராபரமே)
பிரவிருத்தி என்னும் பாழ்பேரூர் பார்வையினுலே தெரிந்து
நிவிருத்தி வழிகாட்டி நின்றேன் (பராபரமே)

மூர்த்திகளும் பாழாகி முக்குணமும் நிர்குணமா யாசைதெளிந்து
சுகமானேன் (பராபரமே)
பிந்துநாதங்களென்றும் விச்வமயமாயிருக்கு மந்த உண்மை
சற்றும் அறியார் (பராபரமே)

சுஷுப்திபோல் ஜாக்கிரத்தில் தூங்காமல் தூங்கி யசுத்தி
சுத்தி யிரண்டு மற்றேன் (பராபரமே)
கோபமோடு ஆசைகுலேந்து அங்கே போகியபின் பேச
ஒருவருமற்றுப் போனேன் (பராபரமே)

ஆசிரயித்த அவஸ்தை எல்லா மப்புறமே போகிய பின்
ஸாக்ஷியதாய் நான் அஸங்கமானேன் (பராபரமே)
சத்துருக்க ளாறுவைரிகளும் செத்தபின்பு மிருத்யு
ஜயமானேனென்று நின்றேன் (பராபரமே)

ஆரங்குலத்தா லங்கேபோயிங்கு வரும் மாறி வந்ததேது
வகை சொல்லாய் (பராபரமே)
வான்புருஷாதிகள் போல் மறந்தே விஷயசுக முபகெந்தியை
நானுகந்து கண்டுணர்ந்தேன் (பராபரமே)

க்ஷுத்பாதைக்கு அன்னம் செலுத்தி யவ்விதமுள்ளம் நிறைந்து
திருப்தனுனேன் (பராபரமே)
மனமொடுங்கி மறுபொருளுடனொன்ருகி உற்றயிடம்
கண்டுகந்தேன் (பராபரமே)

தந்தைதாய் பெண்டுபிள்ளை சந்தைகூட்டங்களென்று
மந்தையி லாயன் கணக்காச்சே (பராபரமே)
தூக்கத்தில் கையின்வஸ்துசோர்ந்து விழுமாப்போ லேக்கங்கள்
தீர்ந்திருந்தேன் (பராபரமே)

பாமராளாடும் பலநதிகள் தள்ளி ஆத்மநதிகண்டு அமிழ்ந்தேன்
(பராபரமே)
உன்மத்த நண்டு உயர்ந்த மச்சம் தவளை ஆமை எல்லாம்
மோக்ஷமடைந்ததோ (பராபரமே)

வீடுபோல் தேகம் விஷயமாகி போகியபின் மாடுகன்று
சுற்றம் மறந்தேன் (பராபரமே)
ஜாதி லிங்கம் தன்தோதுபிரமை போக்கி ஜோதிலிங்கம்
கண்டு தொழுதேன் (பராபரமே)

கீழ்வாசலடைத்து இடைவாசல் திறக்க மேல்வாசலது
வெட்டவெளியாச்சே (பராபரமே)
எவ்வுருவும் தானுகி எவ்வுருவு மென்வடிவா யெவ்வுருவும் நீயே
யென்றிருந்தேன் (பராபரமே)

ஓமென்று முடி நடுவே த்வனி கிளப்பி ஓமென்று தனியே
யிருந்தேன் (பராபரமே)
பூசையினுல் வாசிநடுவே மனேன்மணியாய் பேசி நின்றுண்மை
சொல்லப் பெற்றேன் (பராபரமே)

எச்சிலெச்சிலென்று புலம்புகிருய் மானிடர்க ளெச்சிலில்லாத
யிடமில்லே (பராபரமே)
சில்லெச்சில் மூர்த்தி கையில் ஈ எச்சில் தேனல்லவோ
என்றைக்குமுண்ணும் தாய்முலே எச்சிலன்ருே (பராபரமே)

மச்சமெச்சில் நீரில்வந்து முழுகும் மறையோர்க ளெச்சில்
பச்சைக்கிளி கோதும் பழ மெச்சிலன்ருே (பராபரமே)
தேரை யெச்சில் தேங்காய் சிறுபூனே எச்சில் தேசமெல்லாமே
யெச்சிலென் றறிவேன் (பராபரமே)

நாதமெச்சில் பிந்துவெச்சில் நால்மறையோர் வேதமெச்சில்
மந்திரங்கள் சொல்லும் வாய் எச்சிலன்ருே (பராபரமே)
அண்டபிண்ட லோகமெல்லா மடங்கலு மெச்சிலாச்சே
வண்டமத வாதிகளுக்கு வாயுமுண்டோ (பராபரமே)

எச்சிலுந்தன்வாயும் உடலு மேகமாயிருக்கையிலே பாதம் எச்சி
லென்று அலம்ப சுத்தமாச்சோ (பராபரமே)
ஈசரொருவருண்டே எச்சிலில்லாத வஸ்து தான் பாடக
வாசகரும் காணு ஜோதி (பராபரமே)

தீட்டென்று சொல்லி சில தூரம்போய் நிற்கும் மாயையாட்டி
வைக்கும் ஸூத்திரத்தை அறியார் (பராபரமே)
தீட்டு திரண்டுருண்டு சிலேபோலே பெண்ணுகி வீட்டிலிருக்க
தீட்டோடிப் போச்சோ (பராபரமே)

மாதிளமாங்கனி தன்னே பார்த்தே மதிவசமாய் சோணிதமாய்
சுக்லத்தை தொழுதாள் (பராபரமே)
ஸ்ரீகரமாம் சோணிதத்தால் திடமாய் முளேமுளேத்து
பாரி வஞ்சு கொப்பு மாச்சே (பராபரமே)

சுக்லத்தால் தீட்டுறைந்து தொண்ணூற்றுறுமாகி
எக்குலமும் ஸத்குலமாச்சே (பராபரமே)
ஆளாளாய் காச்சு அவனியில் நிற்கையிலே
மாளாமயக்கம் வரலாமோ (பராபரமே)

முறைமுறையாய் தீட்டு வகை வகையாய்நிற்கையிலே
மாறிவந்த தேதுவகை சொல்லாய் (பராபரமே)
உக்கத்து பிள்ளையும் உன் கக்கத்து தீட்டன்றோ
உன்னுடைய வெட்கத்தை யாரோடு சொல்வேன்
(பராபரமே)

முந்தின தீட்டெடுத்து முத்தமிடும் தொட்டிலிலே
கர்த்தனோடு சூத்திரத்தை காணுர் (பராபரமே)
காமதீட்டுரைந்து கைக்குழந்தையாயிருந்து
ஆமையைப்போலே முழுக சுத்தியாச்சோ (பராபரமே)

சாஸ்திரமாய் கோத்திரமாய் ஜாதிவர்ணுசிரமுமாய்
ஸத்பாத்திரமும் தீட்டல்லவோ அறியாள் (பராபரமே)
சக்திசிவமே சராசரமாய் நிற்கையிலே எதுவும்
கர்மமூடருக் கிருட்டாச்சே (பராபரமே)

தீட்டில்லா வஸ்து ஒருவருண்டே சித்ரூபர்
பகல்கோட்டான் குறிக்கு குறியாச்சே (பராபரமே)
ஆலமுண்டஜோதி அகமென்று கண்டறிந்து
காலங்கள் மூன்றும் கடந்தேன் (பராபரமே)

கொள்ளித்தேள் கொட்டி குதிக்குமிந்த அகங்காரம்
கள்ளமனம் துள்ளுவதை காணேன் (பராபரமே)
தேடும் திரவியமும் செம்பொன் மணிபெட்டகமும்
கூடவரும் துணையோ கூருய் (பராபரமே)

கல்லாய் கரும்பாய் கல்கண்டாய் சர்க்கரையாய்
எல்லாமனமு மொன்ருமோ (பராபரமே)
கல்லிடுக்கில் பாசிகலங்கி தெளிவதுபோல்
சொல்லறிந்த ஞானிகளுக்கு தோன்றும் (பராபரமே)

பித்தனைப்போல் புலம்பி பிணம்போலே மத்தனைப்போல்
தேகம் மறந்தேன் (பராபரமே)
அவிசாரி அவிசாரி என்றலத்து மவிசாரியர்கள்
விசாரியாரன்றோ அவிசாரி (பராபரமே)

உள்ளிருக்கும் ஜோதி ஒளியை விசாரியாதே
கள்ள அவிசாரி என்று கவிசொல்லுவார் (பராபரமே)
கண்டத்தி லாத்மாவை கண்டுவிசாரியாதே
வண்ட அவிசாரி என்று வைவார் (பராபரமே)

சித்தத்தி லாத்மாவை தீரவிசாரியாதே
தேச அவிசாரி என்று சொல்வார் (பராபரமே)
ஆத்மானுபவ மறிந்து விசாரியாதே
தோல்பாடி யவிசாரி என்று சொல்வார் (பராபரமே)



## பிரம்மம் ஏகம்

சிருஷ்டிக்குமுன் ஸச்சிதானந்தமாகிய பிரம்மம் ஏகம்
கோடி திருசிய பிரபஞ்சம் நசிக்கும் பிரளயத்தில் பிரம்மம் ஏகம்
வியஷ்டி ஸமஷ்டி விதமாயிருந்தாலும் பிரம்மம் ஏகம்
கோடி வேதாந்த சாஸ்திரம் விசாரித்து பார்த்தாலும் பிரம்மம் ஏகம்

மூலபிரகிருதிக்கு முன்னேயும் பின்னேயும் பிரம்மம் ஏகம்
மாயை முக்குணமாகியே நிர்குணமானாலும் பிரம்மம் ஏகம்
காலத்திரயத்திற் கப்பாலு மிப்பாலும் பிரம்மம் ஏகம்
மாயை காரண காரியம் போலே யிருந்தாலும் பிரம்மம் ஏகம்

கர்ம விதத்தில் வெகுவிதமானாலும் பிரம்மம் ஏகம்
இந்த காரிய மிருபத்தினாலாயிருந்தாலும் பிரம்மம் ஏகம்
ஸத்துமஸத்தும் ஸதஸத்து மானாலும் பிரம்மம் ஏகம்
வேத சாஸ்திரங்களாலே யறியகூடாது காண் பிரம்மம் ஏகம்

அந்த பரபிரம்மத்தினிடத்தி லுதித்தமாயை - துச்சம்
ஆனாலும் வஸ்துவைப்போல் மயக்கும் காண் அந்த மாயை
சுத்த ஸ்படிக நிறம் போலிருக்கும் காண் அந்த மாயை

தோன்றி தோன்ருதிருந்து அந்தகாரம்போல் மூடும்காண் அந்த மாயை
எந்தப்படி வேணுமோ அந்தப்படி செய்யும் அந்த மாயை
ஜகதீசுவரராலே யறியக் கூடாதுகாண் அந்த மாயை

சுத்தகுணம்போலே கோலம் கொள்ளச் சொல்லும் அந்த மாயை
பலகோலமும் ஸ்தூலமும் காலவசமாக்கும் அந்த மாயை
மெத்தசுகம் போலே தோற்றிய துக்கம் காண் அந்த மாயை
வெகுமேதையாய் போதமாய் பேதமாய் காட்டும்காண் அந்த மாயை

அந்தமாயா குணம் சொல்லித்துலேயாது ராமராமா
இந்த ஆச்சரியத்தை யாருடன் சொல்வேன் ராமராமா
த்வந்த வலேயில் சுழலாதபேருண்டோ ராமராமா
கள்ளசூதும் கபடும் வினேகளும் இதற்குண்டு ராமராமா
எந்ததேகாதியு மிந்தவி தமாச்சே ராமராமா

காசினியி லுள்ளோரும் பாசம்மேலாச்சே ராமராமா
மாயாகுணத்தாலே ஜனனமெடுத்ததும் போரும் போரும்
இந்த மண்ணில் பிறந்திறந்தது மெண்ணித் துலேயாது ராமராமா
ஓயாத ஜன்மமொழிந்து துலேந்தது ராமராமா
உத்பத்தி நாசத்திஞல் பயம் தீர்ந்தது ராமராமா

வாருங்கள் ஜீவாளே ஜனனமெடுத்ததும் போரும் போரும்
நீங்கள் மாண்டு பிறந்து வளர்ந்து திரிந்ததைப் பாரும் பாரும்
பேரும் பெருவாழ்வும் மெய்யென்றிருந்ததும் போரும் போரும்
ஆதிபிரம்மாவும் செத்து பிணமாய்க் கிடந்ததை பாரும் பாரும்

தேவபூஜை யாகங்கள் ஜபங்கள் தவங்கள் போரும் போரும்
நல்லஸித்த புருஷாளே தேடி விசாரித்து பாரும் பாரும்
மூக்கைப் பிடித்து முழுமோசம் போனதும் போரும் போரும்
நமக்குள்ளீசன் நடுவாயிருப்பதை பாரும் பாரும்

காவேரியாடி கலங்கித்திரிந்ததும் போரும் போரும்
கர்ம காயத்துக்குள்ளீசன் காக்ஷிகொடுப்பதை பாரும் பாரும்
ஸேதுவும் காசியும் தீர்த்தமும் சேர்வையும் போரும் போரும்
ஞானதேசிகராரென்று தீரவிசாரித்துப் பாரும் பாரும்

ஜடையோடு தாவடம் ஸ்திரமாயணிந்ததும் போரும் போரும்
ஆதிஸச்சிதானந்தம் ததும்பியிருப்பதைப் பாரும் பாரும்
ஆலயந்தோறும் அலைந்து திரிந்ததும் போரும் போரும்
மன தாலயம் தன்னில் அரனுரிருப்பதைப் பாரும் பாரும்

உன்தெய்வ மென்தெய்வமென் றுழன்றதும் போரும் போரும்
தன்னுள் தெய்வமென்றெண்ணி தானுயிருப்பதை பாரும் பாரும்
ஒதிப் படித்ததோர் மந்திர கர்மங்களும் போரும் போரும்
புத்தியுக்தி யனுபவத்தால் முக்தி கிடைத்ததைப் பாரும் பாரும்

நந்தவனந் தோறும் நன்மலர் கொய்ததும் போரும் போரும்
உன்சிந்தை வனத்தில் சிவனுரிருப்பதைப் பாரும் பாரும்
தேகாபிமானங்கள் விட்டுவிடுமிது போரும் போரும்
நல்ல ஜீவனை யாரென்று தீரவிசாரித்துப் பாரும் பாரும்

காரணமில்லாத காரியமேதென்ரு ரெங்கள் தேசிகர்
ஜகத்தை கானல் ஜலம்போலே கண்டுகொள்ளசொன்னு ரெங்கள் தேசிகர்
வேருென்றினுலேயு மறியப்படாதென்ரு ரெங்கள் தேசிகர்
பிரம்மவிசாரத்தினுலே யறிந்துகொள்ளச் சொன்னு ரெங்கள் தேசிகர்

சராசரத்தைப் பிரித்தறியசொன்னுரெங்கள் தேசிகர்
ஸச்சிதானந்த ஸ்வரூபம்தானே விளங்குமென்ரு ரெங்கள் தேசிகர்
கூர்ம புத்தியினுல் தத்துவம் காட்டினுரெங்கள் தேசிகர்
பஞ்சகோசச் சுவர்போனுல் வெட்டவெளி என்ரு ரெங்கள் தேசிகர்

மூடத்தனமான புத்திக்கு இருட்டென்ரு ரெங்கள் தேசிகர்
ஞானமேகமாம் புத்திக்கு சந்திரோதயமென்ரு ரெங்கள் தேசிகர்
கூடஸ்தரான பரபிரம்மவஸ்துகாண் எங்கள் தேசிகர்
குரு அகண்ட வெங்கடேசுவர மூர்த்தி காண், எங்கள் தேசிகர்



# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி படனம்

## காப்பு

ஆதி முதலே! அகண்ட வெளியானவரே! மேக நிறத்தாரே! விவேக முரைத்தவரே! ஞானம் உரைப்பதற்கு ரூபமெடுத்தவரே!
என் அஞ்ஞானம் போக்குவதற்கு அவதாரமானவரே! சுத்த ஸ்வரூபி!
சுருதி மறைப் பொருளே! சுருதி சொல்லுக்கு எட்டாதவரே!
ஆத்ம ஸ்வரூபி! அகண்ட ரஸமானவரே! ஆக்ஞை ஸ்தானத்தே
ஆடுமென்று சொன்னவரே! ஜெனன வியாதிக்கு ஔஷதமிட்ட
தேசிகரே! தீருமய்யா ஜென்மவினை!
உம்முடைய சீர்பாதம் சரணம்! சரணம்!

சின்மய ஸ்வரூபமான தக்ஷிணா மூர்த்தி ராஜர்
தேசிகராய் வந்து எனக்கு சற்றும்
சந்தேகமன்னியிலே அண்டமெல்லா மேகமாகி
சொல்லெனக்கு வாக்கியஞ் சொல்வார் *(1)*

வெள்ளை நிறமாயிருக்கும் வேதாவின் நாயகியே
விளங்கியெந்தன் நாவில் வருவாய் சற்றும்
கங்குகரை காணாத ஸம்ஸார ஸாகரத்தில்
என்செய்வே னென்றலையும் போது *(2)*

செந்தாமரைப் பாதத்தில் சேர்வைபண்ணி தினந்தோறும்
சிந்தைவடிவு கொண்டே அமர்ந்தேன் அவர்
அஞ்சாதேயென்று சொல்லி அமிர்ததிருஷ்டி யாலேபார்த்து
என்தாபம் மூன்றையும் போக்கி *(3)*

பொங்கித் ததும்பும் மனம் சிரவணத்தால் ஒழிவடைய
போதித்தார் நீ கேள், மனதே
சந்ததமுந் தைலதாரைபோல பக்தி பண்ணிவந்தால்
சத்புருஷா ளான வஸ்துவை *(4)*

அவர் - தாளடியிலே வணங்கி சரணமென்று சொன்னவர்க்கு
தாமுரைக்கும் வாக்கியஞ் சொல்வர்
பூதமஞ்சைப் பிரியென்பர் போதந்தன்னை அறி என்பர்
போக்குவரத்தில்லை நோக்கென்பர். *(5)*

ஆசைதன்னை ஒழியென்பர் ஆத்மவிசாரணை பண்ணென்பர்
ப்ரம்மானந்த மாய்நீ இருவென்பர்
ஸாதுஸங்க வாஸனையை ஸந்ததம் விடாதேயென்பர்
உபசாந்தி தாந்தியோடே இருஎன்பர். (6)

விஷயத்தை விடுஎன்பர் வேதாந்தம் கேளென்பர்
மோகாந்தகாரம் தள்ளென்பர்
ஏகாந்தமாயிருந்து ஆராய்ந்துபாரென்பர்
வாராது வாஸனையென்பர் (7)

சப்தஸ்பரிசரூப ரெஸகெந்த மிந்திரியங்களை
தைரியத்தினாலே அடக்கென்பர்
கட்டுப்படாமனதை மடக்கித் திருப்பிமெள்ள
ஸத்வாஸனைக்கே விடென்பர் (8)

பக்திவிரக்திதனை பிரதிதினமும் பண்ணிவந்தால்
பந்தமுனக்கு வாராதென்பர்
ஸாகஸமாய்த்துணிந்து ஸர்வத்திலும் பற்றற்று
ஆகாசம் போலிரு வென்பர் (9)

மனசு புத்தி அகங்காரம் சித்தத்தை சிவத்துடன்
ஒத்து லயமாக்கிப் பாரென்பர்
மலடிமைந்தன் போலேயிந்த மனதினால் வந்ததெல்லாம்
பதினாலு லோகமு மென்பர் (10)

சற்றும் பிரமிக்காதே பாரென்பர் பார்க்கரெண்டு இல்லையென்பர்
அசையாமலேயிரு நீயென்பர்
ஜீவாத்மபுத்தி தேகபுத்தி அதுரெண்டு மவித்தையென்பர்
அறிந்ததை விட்டுவிடென்பர் (11)

தீர்க்ககால பிரமைதன்னை தினந்தோறுஞ் சிரவணத்தால்
போக்கிவிடு என்றுசொல்வர்
மனனத்தைப் பண்ணென்பர் வஸ்துதானே நீயென்பர்
இருதயகிரந்தி யறுவென்பர் (12)

நிதித்தியாஸ னத்திலிருந்து நிர்விகாரி யாயிருந்தால்
இரண்டுமில்லை பிராந்திகாணென்பர்
பொறுமையுடனேகூடி பூததயை பண்ணிவந்தால்
பூர்ணவடி வாகலாமென்பர் (13)

அருமையான ஆத்மஞான மறிதலெளிதென்பர்
அதிர்ஷ்டமுள்ள பேர்களுக்கென்பர்
காலமென்றுந் தேசமென்றுங் கலங்காதே நீ யென்பர்
கற்றுணர்ந்து உற்றுப்பாரென்பர். (14)

தர்ப்பணத்தில் பிரதிபிம்பம் போலே ஜகம் தள்ளென்பர்
தக்தபடம் போலே இருவென்பர்
சுஷுப்திபோலே ஜாக்கிரத்தில் சுகதுக்கமிரண்டையும்
சமபுத்தியாலே பாரென்பர் (15)

சொப்பனங்கா ணிப்பிரபஞ்சம் சுத்தப்பொய் காணென்று சொல்வர்
செப்படி வித்தைபோலே பாரென்பர்
தத்பதமும் த்வம்பதமும் சோதித்துப் பாரென்பர்
தோற்றுமப்போது தன்வடிவென்பர். (16)

மூலாதாரத்திருந்து மூச்சடக்கித் தினந்தோறும்
மூல விருத்தி தியானம் பண்ணென்பர்
ஆருதாரந்தன்னில் அதிஷ்டான தேவதையே
யார் இருக்கிறுர் பாரென்பர். (17)

ஸஹஸ்ர தளத்தின்மேலே சக்தியோடு சங்கரனும்
தாமிருக்கிறுர் பாரென்பர்
உத்ஸாகத்துடனிருக்கும் உவமையற்ற ஞானியர்க்கு
இந்த உண்மை தோன்றிடுமென்பர் (18)

அறிவற்ற அஜ்ஞானிக ளதைவிடப்போருளென்று
ஆலயத்தில் ஈசன் உண்டென்பர்
பெரியவாளிருக்கிற தெல்லாம் சிவஸ்தலம் தரணியெல்லாம்
புண்ணியதீர்த்தம்
பார்த்ததெல்லாம் மூர்த்திகாணென்பர் (19)

எத்தைஎத்தைச் சொன்னுலும் எல்லாமிது தானென்பர்
இன்னஇன்னதெனக் கூடாதென்பர்
இருதயமான ஆகாசத்தில் உதயமான சூரியன்போல்
இரவுபக லிரண்டில் லையென்பர் (20)

மூனு குண மாய்ப்பிரித்து தோன்றுகிற லோகமெல்லாம்,
முயல்கொம்புபோலே பாரென்பர்
வேதமோடு சாஸ்திரங்கள் வித்தை அறு பத்தினாலும்
கற்றும் ஜன்மம் போகாதென்பர். (21)

ஸப்தகோடி மஹாமந்திரத்தால் ஜனன மரண முதலான
சித்தபிரமை போகாதென்பர்
ஆசையோடு மோகமற்று அனைத்தையு மொன்ருய்ப்பார்த்தால்
அப்போவாக்கும் ஜன்மம் போமென்பர். (22)

ஆசையற்ற சுகம்போலே வேறு சுகமில் லையென்பர்
அனுபோகமுனக்கு இதுதானென்பர்
விஷயமற்ற சுகம்போலே வேறுசுகமில் லையென்பர்
மெய்யோ பொய்யோ நீயே பாரென்பர் (23)

சத்துருவை விடு என்பர் பந்துவை தஹியென்பர்
வீடும்மாடும் அஸத்தியமென்பர்
சத்துருவை மித்திரனை ஸமனுகப்பாரென்பர்
தரணியெல்லாம் நீதானேயென்பர் (24)

உத்தமபக்தருக்கு ஒருவாக்கியத்தி னாலேதானே
சுவானுபோக முண்டாகுமென்பர்
பரிபக்குவ சுத்தருக்கு சத்குருவின் கிருபையினால்
சந்தேகங்கள் போய்விடுமென்பர். (25)

வஸ்துவெனக்குச்சொல்லிவந்த மஹாபோத ஸங்கிரஹத்தை
கற்றுணர்ந்து உத்துக்கேட்டார்க்கு
ஸத்தியமாய்ச் சொல்லுகிறேன் ஸந்தேகங்களன்னியிலே
ததாகார மாகிவிடுவார். (26)



## அத்வைத ஏலேலோ

| | | |
|---|---|---|
| 1. | பூரணமாம் ஏலேலோ புருஷனுக | (அயிலேலோ) |
| 2. | புத்தியென்னும் ஏலேலோ பெண்ணுடனே | (அயிலேலோ) |
| 3. | காரணங்கள் ஏலேலோ உண்டு பண்ணி | (அயிலேலோ) |
| 4. | கல்பிதமாய் ஏலேலோ ஜகங்களுண்டாய் | (அயிலேலோ) |
| 5. | ஜெனனமென்னும் ஏலேலோ ஜீவன்தன்னே | (அயிலேலோ) |
| 6. | ஜென்மம் என்னும் ஏலேலோ செடி முளைத்து | (அயிலேலோ) |
| 7. | விருத்தியென்னும் ஏலேலோ வேரூன்றி | (அயிலேலோ) |
| 8. | க்ரோதமென்னும் ஏலேலோ கொடிபடர்ந்து | (அயிலேலோ) |
| 9. | சுதர்மம் என்னும் ஏலேலோ சரகு உதிர்த்து | (அயிலேலோ) |
| 10. | அப்படிபோல் ஏலேலோ இப்பிரபஞ்சம் | (அயிலேலோ) |
| 11. | ஆசை தள்ளி ஏலேலோ ஒழிமனமே | (அயிலேலோ) |
| 12. | ஆசை என்னும் ஏலேலோ அரும்புவிட்டு | (அயிலேலோ) |
| 13. | கோசமென்னும் ஏலேலோ கொழுந்துவிட்டு | (அயிலேலோ) |
| 14. | மோக்ஷமென்னும் ஏலேலோ மொட்டுகட்டி | (அயிலேலோ) |
| 15. | போதமென்னும் ஏலேலோ பூ பூத்து | (அயிலேலோ) |
| 16. | புத்தியென்னும் ஏலேலோ பிஞ்சுவிட்டு | (அயிலேலோ) |
| 17. | காமம் என்னும் ஏலேலோ காய்காய்த்து | (அயிலேலோ) |
| 18. | கருணையென்னும் ஏலேலோ காவலிட்டு | (அயிலேலோ) |
| 19. | பக்தியென்னும் ஏலேலோ பழம் பழுத்து | (அயிலேலோ) |
| 20. | பார்த்தவர்கள் ஏலேலோ ப்ரமிக்கும்படி | (அயிலேலோ) |
| 21. | அப்படிபோல் ஏலேலோ இப்பிரபஞ்சம் | (அயிலேலோ) |
| 22. | ஆசை தள்ளி ஏலேலோ அழிமனமே | (அயிலேலோ) |
| 23. | பக்தியுள்ளோர் ஏலேலோ பழம் பறிச்சு | (அயிலேலோ) |
| 24. | பரிபூர்ணமாம் ஏலேலோ ரஸம்பிழிந்து | (அயிலேலோ) |

25. அகண்டரஸம் ஏலேலோ அறிவுடனே (அயிலேலோ)
26. ஆனந்தமாய் ஏலேலோ ரஸம் புஜித்து (அயிலேலோ)
27. வர்மமுள்ள ஏலேலோ மண்டபத்தே (அயிலேலோ)
28. மதவாதியர் ஏலேலோ கூட்டம் கூடி (அயிலேலோ)
29. ஆங்காரத்தை ஏலேலோ அமுத்திவிட்டு (அயிலேலோ)
30. அவனிதனில் ஏலேலோ ஆசையற்று (அயிலேலோ)
31. பிள்ளைமேலே ஏலேலோ பிரியமற்று (அயிலேலோ)
32. புருஷன்மேலே ஏலேலோ மோகமற்று (அயிலேலோ)
33. பெண்டுமேலே ஏலேலோ பிரியமற்று (அயிலேலோ)
34. கானல் ஜலம் ஏலேலோ நீரெண்ணி (அயிலேலோ)
35. கன்றுகுடி ஏலேலோ தீர்ந்ததுபோல் (அயிலேலோ)
36. இலவுகாத்த ஏலேலோ கிளியது போல் (அயிலேலோ)
37. மனதுபடி ஏலேலோ ப்ரமிக்கும்படி (அயிலேலோ)
38. அத்தனையும் ஏலேலோ கிரஹிச்சுத்தள்ளி (அயிலேலோ)
39. அனுக்ரகித்தார் ஏலேலோ குருவாய் வந்து (அயிலேலோ)
40. முத்திரையாய் ஏலேலோ முடிந்துகொண்டேன் (அயிலேலோ)
41. வெங்கடேசர் ஏலேலோ குருவாய் வந்து (அயிலேலோ)
42. உகந்து நின்றார் ஏலேலோ சன்னதிக்கே (அயிலேலோ)



# வேதாந்தப்பள்ளு

## காப்பு
## விருத்தம்

சாந்த நரஸிம்ம ரென்னும் ஸத்குருவைப் பணிந்து
ஸந்ததமும் வேதாந்தப் பள்ளீ நான் பாட 1

ஸரஸ்வதியே பாரதியே ஸாரங்கி சியாமளீயே
ஸந்ததமும் நாவில் வந்து விளீயாட வந்த மயிலே 2

கோமளமே சியாமளமே கொந்தளமே குயிலே
குறைவு ஒன்றும் வாராமல் நிறைவேற்ற வேணும் 3

பானகமும் மோதகமும் பொங்கல்புளி அமுதும்
ஆனபடி நான் படைப்பேன் ஆனே முகத்தோனே 4

என்னுடைய பிழை பொறுத்து முன் நடத்தவேணும்
தன்னுடைய புத்திரன் சொல் அன்னே உகந்தாப்போல் 5

அபத்தமது யிருந்தாலும் வேதாக்ஷரத்தைத் தவிர
அது அல்லாமல் இல்லே யென்றறியும் பெரியோர்கள் 6

பொரி கனியும் மோதகமும் பொங்கல் பிடியமுதும்
அடைவுடனே நான் படைப்பேன் ஆனே முகத்தோனே 7

அண்டபிண்ட லோகமெல்லாம் அஞ்ஞானத்திலொடுங்கி
அகில ஜகமத்தனேயும் பிரளயந்தனில் மூழ்கி 8

இப்படியே வெகு காலமிருக்கிறபோது, வஸ்து
வீக்ஷணேயினுலே ஒரு மாயை வந்து பிறந்தாள் 9

பர பிரும்மம் மாயிலே பிரதிபிம்பமும் கூடி
பாங்குடனே ஈசுவரனுராகி அவதரித்தார் 10

அதிஷ்டான அவித்தையிலே பிரதிபம்பமும்கூடி
அடைவுடனே ஜீவனுமாகி அவதரித்தார் 11

வந்ததொரு மாயை தன்னில் மஹத்தத்துவமாகி
மஹதகங்காரத்தோடேயது மூன்று குணமாச்சு 12

தன் மாத்திரையோடு பஞ்ச பூதங்களும் கூடி
க்ஷணிகத்திலே ஸூக்ஷ்மமென்று தேஹமுமுண்டாச்சு 13

## விருத்தம்

தோன்றியே அந்தரியாமி ஜகத்ஸ்ருஷ்டியைப்பண்ண எண்ணி
ஜீவப்பள்ளனைப் பார்த்து ஈசன் செய்திகள் பலவும் சொல்வார்
பிரளயாக்கினியால் பஸ்மமாய் போச்சு உலகம் பயிரில்லா
தாழ்வினலே பரிதாபம் மெத்தக்கொண்டு
ஜகம் பயிரேறவெண்ணி பிரமன் உரைக்கலுற்றான்
பரஞ்சதோர் பரமனோடே பள்ளன் ஓர் உத்திரம் சொல்வான்

## பாட்டு

கைவிலேகொண்ட நாயன் - கட்டளையிட்ட வேலையை
அஞ்சியே அடிமைசெய்வோம் அதற்கு மாறு சொல்வதில்லை
காலமோ பிந்திப்போச்சு கனலோகமோ கம்மலாச்சு
கண்ணூற்றையடைக்க வேணும் கால்கரை சுமக்கவேணும்
மாடது மறக்க வேணும் மரமடி தட்டவேணும்
போடது அடைக்கவேணும் பெரம்படி தட்டவேணும்
ஊழியம் கொத்தாள் கூட்டம் உலகத்தி லொருவர்காணேன்
ஸகாயமாய் ஆளுண்டானல் ஸாதிப்பேனென்றான் பள்ளன் 1

சொன்னதோர் பள்ளனோடு பரமனும் மறுஉத்தரம் சொல்வார்
ஆளைநாம்வருத்தித்தாரோம் அதற்கு நீ அஞ்சவேண்டாம்
ஸகாயமாக யிருந்து வாரோம் தடுத்து நீ முடக்க வேண்டாம்
ஸமாதியில் இருந்து ஈசர் தியானம் பண்ணலுற்றார்
ஸதாசிவன் மகேசுவரர் ருத்திரன் சதுர்முகன் சக்கிரபாணி
பார்வதிவாணி லக்ஷ்மி பராசக்தி பத்திரகாளி
அனுகூல இச்சாசக்தி ஞானசக்தி கிரியாசக்தி
ஸகலரும் ஸஹாயமானர் க்ஷணிகமாத்திரத்துக்குள்ளே 2

ஆளை நாம் வருத்தி தந்தோம் அழைத்து நீ வேலை கொள்ளு
ஆஜ்யம் ஹவிஸூ மந்திரம் அக்ஷதை புரோடசத்தால்
அக்கினிமுகமே நடத்தி அனைவரையும் திருப்திபண்ணி

விருத்திகள் வேறுபட்டு வேலைகள் முடக்கமற்று
கொத்தது நித்தியம்போட்டு ஒரு குழிநிலம் தரிசில்லாமல்
அற்றைக்கும் பருவம் பார்த்து அரமனைக்குறைவில்லாமல்
அடிக்கடி வளவில் வந்து அன்றன்று சேதிசொல்லி
ஆதார தேவதையை அவஸ்தைகள் மூன்றும் பெற்று
ஆசைக்கண்ணுற்றுப் போக்கை ஆண்டு கொள்மானியமாய் 3

தேஹத்திரய மென்னும் வீடுதன்னில் ஸ்திரமாகயிருந்துகொண்டு
பஞ்சகோசங்களென்னும் நல்லகொடுமுடி மேடைமேலே
அஞ்சனை முழியாள் உலகம் அமட்டுவாள் அவித்தை வித்தை
வஞ்சகக்காரன் பள்ளன் இரண்டு வைப்பையும் வைத்துக்கொண்டு
கொஞ்சியே விஷயபோகம் குறைவற புஜித்து நித்தியம்
ஆரப்த வசத்தினாலே வருமான லாபத்திற்கு
எல்லாம் அடிக்கடி வளைவில் வந்து
அன்றன்று சேதி சொல்வான் அப்பப்போ பள்ளன் தானே 4

கர்த்திருத்வம் ஜீவன்மேலே கட்டளையிட்டுப் போட்டு
அகர்த்திருத்வமாகி ஈசன் அதிகாரியாய் பார்த்திருந்தான்
முத்திரைவாங்கி ஜீவன் முடிமேலே சூட்டி கொண்டு
நாயன் கட்டளையிட்டவேலை கடுகவே செய்யலுற்றான். 5

## பாட்டு

தலையைமுடிந்து கொடியை வரித்து தாய்ச்சீலைகட்டி யிறுக்கியே
பள்ளன்
சதிரான நெற்றியில் வெண்ணீறு பூசியே
தாக்கியே கஞ்சிகுடித்தானே பள்ளன் கஞ்சிகுடித்தானே 1

பருத்தமண்வெட்டி தொடுத்துதோளிலே பாக்குவெற்றிலை பிடித்து
அவன்
பழக்கம்பேசியே பள்ளியாளுடன் சுறுக்க
வேலைக்குப் போனானே பள்ளன் வேலைக்குப் போனானே 2

அடைவுடன் அஞ்சுபூதம் பிரித்து ஆகநாலுடன் கலந்தவன்
ஆகாசம் வன்னிவாயுவாகிற
ஆடும் பசுவும் கடத்தினான் பள்ளன் ஆடும் பசுவும் கடத்தினான் 3

அப்புவாகிற மடையை திறந்து அண்டம் ஈரேழு லோகமும்
அங்கங்கே கவில்உடைந்து பாயாமல் அடைத்து
தண்ணீரை பாய்ச்சினான் பள்ளன் தண்ணீரை பாய்ச்சினான் 4

கர்மமாகிற கயிறும் கொழுவும் கலப்பை நோக்காலும் எடுத்தவன்
காலமாகிற காளையிரெண்டையும் பூட்டியே
ஏரை கூட்டினான் பள்ளன் ஏரைகூட்டினான் 5

வேளை என்கிற மோளிபிடித்து மூன்றுமூன்று சால் ஓட்டியே
வீறுடன் பள்ளன் ஏழுழவையும் உழுது
புழுதியாக்கினான் பள்ளன் புழுதியாக்கினான் 6

சீருடன் சுக்கில சுரோணித த்துடன் ஜனித்து மழைகள் பெய்யவே
எங்கும் ஸ்திரீ புருஷர் ஸம்யோகமாகிற
ஜீவப்பட்டமு மாச்சுது நல்ல பருவப்பட்டமு மாச்சுது 7

வாணியென்கிற சக்தியுடனே விராட்டிலே யந்தர்பூதமாய்
பிரம்மன் வாக்குடனே ஸ்ருஷ்டி வல்லமையாகி
வேலைக்கு போனானே பள்ளன் வேலைக்கு போனானே 8

ரஜோகுணத்துடன் கூடி பிரம்மனும் நிமித்த காரணமானபின்
எங்கும் நிறவி எடுத்து ஏழுவகுப்பாய் நிகிலமும்
விதை பரவினான் பள்ளன் விதை பரவினான் 9

கோப்புடன் அஸ்தி ஜாயதே என்னும் கொம்பு மரத்தை வளைத்தவன்
குறிப்புடன் வர்த்ததே என்னும் குறுமுளையில்
ஆடுகடத்தினான் பள்ளன் ஆடு கடத்தினான் 10

பரிணமதே அபக்ஷீயதே யாகிற பரிபருவமும் ஆனபின் களை பயிர்
பரிபருவமும் ஆனபின்
பாண்டவதூதன் பார்த்து பள்ளியை பரிவுடன்
வேலைக்கு ஏவினான் பள்ளன் வேலைக்கு ஏவினான் 11

அயனார் பள்ளியும் அரனார் பள்ளியும் அரிமகேசுவரர் பள்ளியும்
அவித்தை வித்தை ஸதாசிவன் பள்ளி
அனைவரும் வந்து இறங்கினார் வயலில் அனைவரும் வந்து
இறங்கினார் 12

சியாமள வர்ண கோமள மேனி தளும்பியே மெத்த வெதும்பியே
சருவி பள்ளனை கொதக்கி பேசியே
மருவி வேலைக்கு போனாளே பள்ளி மருவி வேலைக்கு போனாளே 13

வளர்ந்தகூந்தலை மடித்து சொருகி வாரி எண்ணை பொத்தியே
தலைவாரி எண்ணை பொத்தியே
வளர்ந்த காதுக்கு வளையம் தூக்கி
வஜ்ர தாடகம் சாத்தினாள் பள்ளி வஜ்ர தாடகம் சாத்தினாள் 14

மலர்கள் மஞ்சளை வாரி கழுத்திலே வாரி நிறையபூசியே
வளர்ந்த கொங்கைமேல் பாசி பவழம்
வகைவகையாக சாத்தினாள் பள்ளி வகைவகையாக சாத்தினாள் 15

ஹஸ்த கடகம் கொட்டு வளையும் அடிக்கை நெளியும் இறுக்கியே
பள்ளி
இறுக்கியே ஐந்துவிரலில் ஆழிமுத்திரை
அடைஅடைவாக சாத்தினாள் பள்ளி அடை அடைவாக சாத்தினாள் 16

ஜாதிலிங்கமும் சந்திரகாவியும் ஸரிகை துப்பட்டிசேலையும் பொன்
சரிகை துப்பட்டி சேலையும் சாயகம்பியும் தங்க உடுப்பும்
ஸகலாத்து போர்வை சேலையும் 17

இழையும் கருப்பும் இந்திரவாளியு மிழையாயிரம் பொன்பெற்ற
சேலையும் யினுக்கியே கொசாம் இடுப்பில் உயர்த்தி
இடைதுவளவே உடுத்தினாள் பள்ளி இடைதுவளவே உடுத்தினாள் 18

வையமீரேழும் மயக்கி கைதன்னில் துள்ளுமான் அந்த ஒளிபோல
வையமீரேழும் மையால் எழுதி மயக்க
பொட்டு சாற்றினாள் பள்ளி பொட்டு சாற்றினாள் 19

மூவுலகும் பதிநாலுலோகமும் மோஹிக்கும் கனிவாய் தன்னில்
முத்திரைகையால் சுற்றி அத்தனைபேரும்
வெற்றிலை ஒதுக்கினாள் பள்ளி வெற்றிலை ஒதுக்கினாள் 20

வஜ்ரகல்லுபோல் மாணிக்கப் பல்லு பொடுபொடென மின்னவே
வண்ணதர்பணம்போல் கபோலங்கள்
மின்னிவேர்வை எழும்பவே கபோலங்கள் மின்னிவேர்வை
எழும்பவே 21

சற்றேமுத்துத் தலைப்பால் மூடிபறசை
முலைநடுவிலே யணைந்தவள் மின்னே பின்னே பறசைநடத்தி
பின்னே
வேலைக்குப் போனாளே பள்ளி வேலைக்குப்போனாளே 22

தங்கபெட்டியும் செம்பொன் சுளகும் தங்கமருங்கிலிடுக்கியே பள்ளி
தாறுமாறுமாய் லீலைகள் செய்யும்
ஜாலக்காரிகள் போனாரே இந்தர ஜாலக்காரிகள் போனாரே 23

நத்தைநண்டுகள் பிடிக்கப் பள்ளிகள் ரத்தின கலசம் தூக்கியே
நவரத்தின கலசம் தூக்கியே
நாட்டுவளப்பம் பாடி ஆடி நாயன்
வேலைக்குப்போனாளே பள்ளி வேலைக்குப்போனாளே 24

குளக்கரையிலே கொம்பை வளைத்து கோலத்தூளிகள் கட்டியே பள்ளி
கொடுத்துப்பாலை கடத்திப்பிள்ளையை
கோகிலம் போலேகுரல் ஆட்டினாள் பள்ளி கோகிலம்போலே குரல்
ஆட்டினாள் 25

## தாலாட்டு

குளக்கரையில் கொம்பை நாட்டி கோலமணிக்கண்டாங்கி
தூளியிட்டு
அழும்பிள்ளைக்கு பால்கொடுத்து ஒருட்டி உறங்கப்பண்ணி
தங்கச் சிலம்பணிந்து பொன்னரிவாள் தோளில்வைத்து
நல்லதலைவநாயற்கு நாள்கதிர் கொள்ள வந்தாளே
செல்வதலைநாயற்கு ஸொந்த அடியாளே
ஆங்காரிபெற்றெடுத்த யானைமணிகுஞ்சரமோ
சிங்காரிபெற்றெடுத்த சிங்கப்பெரும் புலியோ
சுத்த ஆங்காரி ஜெகம் மாண்டு போகாதே
அபரிமிதமாய் உலகை தோன்றி வைக்க வந்தாளே

## வேறுபாட்டு

அழுதபிள்ளைகள் உறக்கமான பின் அனைவரும் வயல் இறங்கியே
அனைவரும் வயல் இறங்கியே
அன்னம்போலே நடந்து நடந்து
ஆராய்ந்து களை பறி செய்தாள்- ஆராய்ந்து களைபறி செய்தாள் 1

நேரம் போச்சென்று சளிதன்னை விட்டு சீக்கிரம் கரைஏறியே
சிறு பிள்ளைக்கு பாலைக் கொடுத்து
சேரிவளைவில்போனாளே பள்ளி சேரிவளைவில்போனாளே 2

ஆசிரமதர்ம ஜாதி நாத்துக்கள் அழிந்து போகாதே பள்ளனும்
ஆறுசாஸ்திரத்தால் நாலுவேதத்தால்
அசைவு இல்லாதே கட்டினான் வேலி அசைவு இல்லாதே கட்டினான் 3

அகிருத்தியங்கள் என்னும் ஆயல் குருவி ஆயாதே வந்து கதிர் தன்னில்
அங்கங்கே மனுசுருதி வசனம்பாடி
ஆயல் ஆயலென்று ஓட்டினான் பள்ளன் ஆயல் ஆயலென்று
ஓட்டினான் 4

பாபதோஷாதி நிஷித்தங்கள் என்னும் பட்டிபன்றிகள் மேயாதே
எங்கும் பட்டிபன்றிகள் மேயாதே
பலசுருதி புராணத்தை பாரிகை போட்டு
பதனமாகவே கல்பித்தான் பள்ளன் பதனமாகவே கல்பித்தான் 5

தன் தன் உலகத்தில் உசிதமாகிற சதுர்வேத பூதகிராமம்
சராசராத்மகமாய் ஜகமெங்கும்
சாகோபசாகையாச்சுது - சாகோபசாகையாச்சுது 6

அஷ்டமூர்த்தியை கட்டளையிட்டு மிதமில்லாமலே வேதங்கள்
தப்பாதே
அஷ்டதிக்கிலும் பாலனம் பண்ணும்
முத்திரையிட்டு அனுப்பினான் பள்ளன் - முத்திரையிட்டு
அனுப்பினான் 7

மலடிவர்க்கம்போல் மாயா குணங்கள் கணக்கிட்டங்க கூடாமலே
வளைத்துவளைத்து கயிற்றில் ஸர்ப்பம் போல்
வஸ்துவில், ஆரோபமாச்சுது ஜெகம் வஸ்துவில் ஆரோபமாச்சுது 8

தங்கள் தங்களுடைய ஆரப்த போகத்தால் தலையெடுத்தங்கே
விளைந்தபின்
தமோகுணத்துடன் கூடிருத்திரனும்
சக்தி பார்வதியுடன் வந்து ருத்திரனும் சக்தி பார்வதியுடன் வந்து 9

காரணப் பிரபஞ்சாதி பூதமும் காலகாலாந்தக ருத்ரனும்
கங்கு கங்காய் விளைவுகள் பார்த்து
கதிர்அறுக்கவே தோன்றினன் பள்ளன் கதிர் அறுக்கவே
தோன்றினன் 10

சேதிகேட்டு மகேசுவர பள்ளன் தேவி பத்ரகாளியுடன்
சீக்கிரமடித்தம்பாரம் கூட்டி
திரோதானம் பண்ணினன் பள்ளன் திரோதானம் பண்ணினன் 11

பார்த்து மந்த ஸதாசிவப் பள்ளன் பராசக்தியுடன் கூடியே
பழையபடிக்கு அனுக்கிரஹம் செய்து
படிஅளக்கவே தோன்றினன் பள்ளன் படிஅளக்கவே தோன்றினன் 12

இன்னும் ஜென்மாதி என்னும் ஈசனும் பயிர் ஏத்த நினைவை
நினைத்தவன்
ஏரைப்பூட்டி தரிசையுழுது
எங்கும் தொளியாக்கினன் பள்ளன் எங்கும் தொளியாக்கினன் 13

அவரவருடைய ஆரப்த போகத்தால் ஆவாரம் குழைபரப்பியே
ஆகாமிய கர்மத்தால் அனேக ஜென்மத்துக்கு ஏதுவாய்
ஏரைப்பிடித்தானே பள்ளன் ஏரைப்பிடித்தானே 14

கர்மசேஷாதி நாத்தைப் பிடுங்கி காலம் பிந்தாமல் பள்ளனும்
கட்டி எடுத்துப் பள்ளிகள் தலையில்
பொட்டு பொட்டெனவே ஏத்தினன் பள்ளன் பொட்டு
பொட்டெனவே ஏத்தினன் 15

விம்மி பள்ளிகள் பாரம்பொருக்காதே உன்னி தலையை தாங்கியே
பையப் பைய நடந்து நடந்து
பழக்கம் பேசியே போனார்கள் பள்ளிகள் பழக்கம் பேசியே
போனார்கள் 16

குன்றுபோலாடும் கொங்கைகள் இரண்டும் குலுங்கியே மெத்த
ததும்பியே
குதித்து குதித்து நடந்து நடந்து
கூட்டங் கூட்டமாய் போனார்கள் பள்ளிகள் கூட்டங் கூட்டமாய்
போனார்கள் 17

கமலத்து மேனி திவலைகள் போல
முகத்தில் வேர்வை எழும்பிமுகம் கன்னிகட்டை
திட்டெனவே போட்டார்கள் பள்ளிகள் கட்டைதிட்டெனவே
போட்டார்கள் 18

அடைக்காய் வெற்றிலை ஒதிக்கியே பள்ளிகள் அரிய மஞ்சளை பூசி
எண்ணையை
அனைவரும் வாரி பொத்தினாள் தலையில் அனைவரும் வாரி
பொத்தினாள் 19

பேத்தண்ணி குடிமயக்கத்தால் பள்ளிகள் பேத்தி பேசிப் புலம்பியே
பேடை மயில்போல் நடந்து நடந்து
பொடு பொடெனவே நட்டார்கள் பள்ளிகள் பொடு பொடெனவே
நட்டார்கள் 20

விகர்மங்களென்னும் சேர்கள் பட்டு இந்திர நீலம்போல் நடந்து
பள்ளிகள்
இடுப்பை நெளித்து மனத்தைக் கடுத்து
முகத்தை சிணுங்கி விலகினார் பள்ளிகள் முகத்தை சிணுங்கி
விலகினார் 21

விருத்தி ஞானங்கள் என்னும் நாயனும் வீறுடன் வந்து
கரை தன்னில் விலக வொட்டாமலே வெடு வெடுவென்று
வேலைகள் எடுப்பித்தான் பள்ளன் வேலைகள் எடுப்பித்தான் 22

வர்ணாசிரம மென்னும் ஜாதி நாத்துக்கள் வகை வகையாக எடுத்து
வந்தவாள்
வையகமுழுதும் நடுகைகள் நட்டு
பையக்கரையில் ஏறினார் பள்ளிகள் பையக்கரையில் ஏறினார் 23

கொம்புக் கிளிபோல் குனிந்து பள்ளிகள் கூறுடன் முடி எடுத்தவர்
குருநாத நாயனை போற்றி கும்பிட்டு
குலவையிட்டவர் நட்டார்கள் நாயனை போற்றி பள்ளிகள்
நட்டார்கள் 24

கை வைத்து குலவையிட்டு பள்ளிகள் கண்ணால் பள்ளனைச் சருவியே
கண்டு நேரம் போச்சென்று
கவலையுடனே போனார்கள் பள்ளிகள் கவலையுடனே போனார்கள் 25

அவரவருடைய ஆரப்த போகத்தால் அங்கங்கே விளைவான பின்
அபவாதமான கதிரை அறுத்தடித்து
பொலியை குமித்தானே பள்ளன் பொலியை குமித்தானே 26

அலற்றிகாரண பீஜத்தால் உழுது ஒன்றும் கிடையாமலே
உபரி உற்பத்தி கால கர்மத்துக்கு
யோகம்பார்த்தவன் யிருந்தானே பள்ளன் யோகம்பார்த்தவன்
யிருந்தானே 27

பஞ்சமுகமும் பஞ்சசக்தியும் பஞ்சாக்ஷரமும் கூடியே
பஞ்சபிரும்மமும் பஞ்சகிருத்தியமும் பண்ணியே
விளையாடினன் பள்ளன் விளையாடினன் 28

ஆருறு தத்துவத்துக்குள்ளேயிருந்து ஆள் படிக்கி கட்டாமலே
அறிவாயிருந்தும் அறிவை அறியாதே அஞ்ஞானப் பணையில்
உழந்தானே பள்ளன் உழந்தானே 29

அனேக நெடுநாள் ஆபாஸப் பள்ளன் அவித்தை வசமாய் கூடியே
அரிஷட் வர்க்கத்துப் புத்திராளாலே
அபார ஸம்ஸாரியானன் பள்ளன் அபார ஸம்ஸாரியானன் 30

போறும் போறும் இவன் நெடு நாள் புறை புறையாளாச்சுது
ஜன்மம்
பொறுக்கக் கூடாத மடக்கியுழவை வெறுத்து
வெளியிலே புறப்பட்டான் பள்ளன் வெளியில் புறப்பட்டான் 31

ஈஷணை என்னும் கடைகளை கார்த்து இராப் பகல்நித்திரை
இல்லாமலே
இகபரமென்னும் இரண்டு வெள்ளாமையிட்டு
கை கெட்டுப் போனன் பள்ளன் கை கெட்டு போனன் 32

இந்திரியங்களுடைய வசத்தை அடைந்து இந்திராதி போகத்தை
நாடியே
யிரேழுலகமும் கர்மஉழவை உழுது
ஒன்றும் கிட்டாமலே பள்ளன் ஒன்றும் கிட்டாமலே 33

தாபங்களென்னும் தண்ணித் தட்டாலே தாழ்வினல் மனம்
நொந்தவன்
ஸந்ததம் குரு அரமணை வாசல் குனிந்தேறி
அடிபட்டானே பள்ளன் அடிபட்டானே 34

அவித்தை வசத்திலாசையை விட்டு ஆறு சாஸ்திரம் தேடியே
அந்தகனுடைய பிராணுபகாரத்தால்
அடிபட்டு விலகிஞன் பள்ளன் அடிபட்டு விலகிஞன் 35

விவேகம் வந்தவன் விரக்தி யடைந்து விட்டு வெள்ளாமை
போகத்தை
விட்டுத் தீவந்து தாக்கிஞப்போல்
நாட்டமாகவே போஞன் பள்ளன் குரு நாட்டமாகவே போஞன் 36

ஸத்வித்தை கற்ற தோர் புண்ணியத்தால்
சாந்தோ பசாந்தாளே தேடியே ஸந்ததம் குரு சமீபம் தேடி
சிரவணம் நாடியே போஞன் பள்ளன் சிரவணம் நாடியே போஞன் 37

பள்ளன் போனதோர் செய்தியை கேட்டு பரமனென்கிற நாயனும்
பதறி வந்து அவித்தையிடத்தில்
செய்தி கேட்கவே தோன்றிஞன் பரமன் செய்தி கேட்கவே
தோன்றிஞன் 38

## சிந்து

பள்ளியடி பள்ளி பள்ளனெங்கேபோஞன்
பழம் பள்ளிமேலாசையாய் போஞன் 1

இளம் பள்ளி அவன் உன்னைப் பிரிந்து
ஏண்டி பள்ளன் அவளுடன் சேர்ந்தான் 2

க்ஷணமாத்திரம் உன்னைப் பிரியான்
மறந்து போன விதம் ஏது பள்ளி 3

வஞ்சகி வித்தை ஞான மருந்தால் வசமாகிப்
பள்ளன் போஞன் காணுண்டே 4

ஊழிகாலமும் உன்னேடேகூடி உகந்து நாடியிருந்ததோர் பள்ளன்
உன்னைவிட்டு அவளுடன் சேர்ந்தான் உத்பாதமேது சொல்லாய்
நீ பள்ளி 5

தன் சொல் கேட்டிருந்ததோர் பள்ளன்
தப்பிப்போன விதம் ஏது பள்ளி 6

ஸத்குருவுடைய வாக்கியத்தைக் கேட்டு
சற்றும் சட்டைபண்ணுமல் போனுன் காணுண்டே 7

இகபராதிபோகம் மறந்து என்னைவிட்டு
அவன் போனுன் காணுண்டே 8

ஆதிநாளையில் ஜடஸம்யோகம் பண்ணி அந்தரங்கமாய் யிருந்ததோர் பள்ளன்
ஆசாபாசங்கள் லேசலேசமற்ற வானதென்ன வகை சொல்லு நீ பள்ளி 9

தேஹாதி என்னும் வீட்டை மறந்து தெறி பட்டு ஏன் போனுன் பள்ளன்
திருக்கு திருசியம் விவேக மறிந்து திருக்காகி பள்ளன் போனுன் காணுண்டே 10

பாங்குடன் மூன்று காலம் கடந்து பண்ணை பாராமல்
ஏன் போனுன் பள்ளி 11

பிரளயம் வந்தால் ஜகம் நாச முண்டென்று
பதறி அப்புறப்பட்டான் காணுண்டே 12

வஞ்சகி காமகுரோதம் மேலாசை
ஒழிந்துபோன வகை ஏது பள்ளி 13

மேல்பள்ளி குருநாதனை வேண்டி
மறித்தாலும் ஆணை சேரான் காணுண்டே 14

உன்பிள்ளை காமகுரோதனை விட்டு
உகந்து நாடி அழைத்துவா பள்ளி 15

அவனைக் கண்டாலடித்து விரட்டி
அதிதூரம் கொண்டு தள்ளுவான் காணுண்டே 16

நீதானே போய் இணங்கி அழைத்து
ஸமாதாளம் பண்ணி அழைத்துவா பள்ளி 17

என்னைக் கண்டாலெரிந்து விழுவான்
ஏறிட்டு முகம் பாரான் காணுண்டே 18

ஸரளி பாடி ஸரஸங்கள் பேசி
சருவிமெள்ள அழைத்துவா பள்ளி 19

ஸத்குரு வுடைய வாக்கியத்தைக் கேட்டு
தலை கிழாக நின்றுலும் வாரான் காணுண்டே 20

சந்தை கூட்டாதி கோசம் குலைந்து
தப்பிப்போன விதம் ஏது பள்ளி 21

ஸம்ஸர்க்க தோஷம் தட்டுமென்றெண்ணி
தானே அஸங்கனுய்ப் போனுன் காணுண்டே 22

அவஸ்தையில் அபிமான மொழிந்து
அதிதூரம் பள்ளன் ஏன் போனுன் பள்ளி 23

ஆனந்த ஸுகபோகத்தை நாடி
அகிலஸாக்ஷியாய் போனுன் காணுண்டே 24

தந்தின தந்தின ஆடினுனே பள்ளன் ஆடினுனே
தானகண்ட மென்று குரல் பாடினுனே 25

ஜகமெல்லாமித்தை யென்றும் ஆடினுனே - பள்ளன் ஆடினுனே
ஸுஞ்ஞானத்துடன் கூடலயம் ஆனுனே 26

தேசகாலாவஸ்தை கடந்து ஆடினுனே - பள்ளன் ஆடினுனே
திரிவித பரிச்சேத சூன்யமானுனே 27

''அஹம்பிரும்மாஸ்மி'' என்ருடினுனே பள்ளன்
ஸோகம் ஹம்ஸம் என்று பாடினுனே - பள்ளன் பாடினுனே 28

தகிருதி தகிருதிதோ மென்று ஆடினுனே - பள்ளன் ஆடினுனே
பரபிரும்மத்துடன் கூடி லயமானுனே 29

மூலாகங்காரம் தொம்ஸம் பண்ணி ஆடினுனே பள்ளன் - ஆடினுனே
முக்குணம் போய் நிர்க்குணமென்று பாடினுனே 30

மிருத்யுசிரசு மிதித்தாடினுனே பள்ளன் - ஆடினுனே
மீண்டும் ஜன்மமற்றுப் போயினுனே 31

தேசகால வஸ்துக் கடந்தாடிஞனே பள்ளன் - ஆடிஞனே
திருபுரபர தேச சூன்யமாகிஞனே 32

பரமானந்த பாதகுரட்டில் ஏறிஞனே பள்ளன் - ஏறிஞனே
பகடு தன்மாயம் கெடுத்துப் பாடிஞனே 33

அன்னுமின்னும் ஏகமென்று மாடிஞனே பள்ளன் - ஆடிஞனே
ஆபாசக் கூத்தை விட்டுப் போகிஞனே 34

ஹம்ஸோக மஸ்மியென்று மாடிஞனே பள்ளன் - ஆடிஞனே
அக்ஞானக் கிலேசமழிந்து போகிஞனே 35

நானே தன்யன் நானே தன்யன் என்ருடிஞனே - பள்ளன் ஆடிஞனே
நாதமென்னும் வில்லடித்துப் பாடிஞனே 36



## வேதாந்த நொண்டிச் சிந்து

சாந்த நரஸிம்மர் ஸத்குருபாதத்தில் சரணமென்றே பணிந்தேன்,
பணிந்த பின்பென்னை பார்த்தார் தயாளு - பறந்ததே கர்மம் எல்லாம் 1

இனி பிறந்து வாராமல் மாத்தில்லாத மறுபொருளைக்
கண்டுநான் மனசுக்குள் புளகிதமானேனே - மறந்தேன் சரீரம் தன்னை 2

தீர்த்தார் ஜன்மத்தை கார்த்தார் கருணையால்
பார்த்தார் பச்சைமரத்தாணிபோலே - ஆத்தாள் உதிரத்தை
மாத்தினளே 3

ஆனேன் ஒரு பிடி நானே குருபதம் தானே பலவடிவு ஆனேனே
நானே நளின பதாம்புஜத்தில் 4

பரிபக்குவங்களாச்சுது என்று பக்த தயாபரர்
யுக்தியினுல் முக்திதர நினைத்தாரே - பராசக்தியின் கிருபையினுலே 5

உபநிஷத்வாக்கியம் பொருக்கியே செவிதன்னில்
உரைத்தார் தாரகத்தை - வான்போல் நிறைத்தார் பூரணத்தை 6

அவர் குறித்த லெக்ஷியம் பிடித்தேன் அரைக்ஷணம்
குடித்தேன் ஆனந்தக்களிப்பாலே - மதித்தேன்
மதகரியானைகள்போல் 7

இந்த பவஸாகரத்தை குருஸாதனத்தால் அனுயாஸமாகத்
தாண்டினேனே ஆவும் குளம்படி போல 8

ஸ்நானபான ஸந்தியாதி தர்ப்பணம் - ஸந்ததம் செய்தாலும்
பிரம்மம் ஸந்திக்க இல்லை ஐய்யா. 9

ஆதிஸேது காவேரிமுதலான அறுபத்தாறு கோடிதீர்த்தமெல்லாம்
ஆடிவந்தேன் ஆத்மாவைக்காணவில்லை. 10

ஆறு ஸமாதியிருந்து ஹடயோக மாராய்ந்தேன்
பிராணுயாமத்திலே நான் காணேன் 11

ஸ்தூல ஸூக்ஷ்ம காரணுதி கோட்டையை தும்பிபோல் பறந்தெங்கும்
தேடினேனே அம்பிகை அருளிஞலே 12

அவஸ்தை மூன்றும் அஞ்சு கோசங்களாகிற அரண்மனை உபவனங்கள்
அங்கே எங்கேயும் காணேன் 13

ஒருவராலும் பிரவேசிக்கக்கூடாத உபநிஷத்காட்டுக்குள்ளே
ஒருவனுய் ஊடே நுழைந்தேனய்யா 14

கர்ம வாஸனைகளாகிற கொடிமுடி சூழ்ந்து கவிஞ்சுதய்யா
கருமலைகள் போலே, கால் வைக்கவும் கூடவில்லை 15

வேத சாஸ்திரங்களாகிற மலைகள் மேகம்போலே வளர்ந்துகொண்டு
வழிமேலே போகவும் தெரியவில்லை 16

அறுபத்தாறு கலைகளாகிற யானைகள் மிகவாய் வருகுதய்யா
இமயமலைபோலே வழிசுத்தப் போகவும் தெரியவில்லை 17

ஜனனமரணமாகிற மலைப்பாம்பு வழியிலே மரம்போல் கிடக்கிறதே
வழிசுத்திப் போகவும் தெரியவில்லை 18

தேகவாஸனைகளாகிற மர்க்கடங்கள் வந்து திரும்பின மனதை
தடுக்கிறதே சித்தம் சற்றே பிரமையாச்சே 19

பலபுராணங்களாகிற பக்ஷிகள் வனத்தில் வாசிதூசியெனக் கத்துகிறதே
மனதுக்கு தோன்றுகிற வழி தெத்துகிறதே 20

சுருதி ஸ்மிருதி யாகிற பிரவாகங்கள் வருகிறதய்யா
மறுகரைக ளொன்றும் காணேனே 21

சுவர்க்க நரகமென்னும் அல்ப பிசாசு வந்து அச்சப்படுத்துகிறதே
அதற்கு ரக்ஷை பண்ணுகிற பேரையும் காணேமே 22

அன்வய வியதிரேக ஆறுலிங்கமாம் மூங்கில் பண்ணைகள்
வெகுவாய் வளர்ந்துகொண்டு - மெத்தப்பயங்கரமும் ஆச்சே. 23

தத்துவங்கள் தொண்ணூற்றாறு கொடி செடிகளும் சன்ன பிசன்னலாக
வளர்ந்துகொண்டு - தலைசுத்துகிறதே சற்றும் தெரியவில்லை 24

இப்படியிருக்கிற வேதாந்தக் காட்டை நான் எப்படி கடப்பேனென்று
இதுவே யேக்க மாயிருக்கலாச்சே 25

ஆசாரியர் ''அறிவே நீ'' என்று உளவு சொன்னர் அதுவே திடமாகப்
பிடித்துக்கொண்டு - அடிமேலடி வைத்து ஆராய்ந்தேன் 26

ஸத்ஸங்கமாகிற ஸங்கதிபலத்தால் ஸஹாயமாய்வந்து கூடித்தைய்யா
ஸர்வதா ஸந்தோஷமானேனே 27

சிரவண மனன நிதித்யாஸனமாகிற ஸங்கதி வழி கூடி
நான் தத்திபித்தி மெள்ளப் போகிறதிலே 28

ஜீவேசுவராளென்னும் ராக்ஷஸாள் ரெண்டுபேர் சினத்துடன் என்னே
வந்தே எதிர்த்துக்கொண்டாள் அவாளே ஜயிக்கிற உபாயமும்
தெரியவில்லே 29

ஸத்குருபாததூளியை சிரசிலே தரித்துக்கொண்டேன்
தள்ளினேன் ஸர்வவித்தின் உபாதியெல்லாம் 30

நித்தியம் பரனேடே சக்தியினுலே நேதி நேதியாலே
நிக்ரஹித்துநான் லக்ஷியத்துடன் கூடச்சேர்ந்தேனய்யா 31

பத பதார்த்த விசாரணே பண்ணிப் பண்ணி பையவனம் கடந்தேன்
நான் பண்ணின தபஸினுலே 32

வனத்தில் துர்க்கந்தம் கடந்து வரவே வந்தாளே மதவாதியர்கள்
வாதயுத்தம் தந்தாளே வழிவிடேனென்ருளே 33

அடுத்தாள் என்னே வந்து எதிர்த்தேன் அவாளோடே தொடுத்தேன்
அத்துவைத சரத்தாலே தொடுத்தேன் அவாள் மதம் துளேத்ததய்யா 34

ஆறுமதவாதிகளும் வாதுக்குத் தோல்விப்பட்டு யாருக்கும்
சொல்லாமலே ஓடினுளே
நான் அத்வைதத்துடன் கூட ஜயித்தேனய்யா 35

திடஸ்தமான ஸாதுஸங்கதி பலத்தால் சாயாசந்திரன்போல
நான் தன்னிலே கண்டேனய்யா 36

அறிந்தேன் அறியே னென்கிற சொல்லுக்கு அப்பாலே
அவாங்மனசுக்கு மிப்பாலே அபரோக்ஷ ஸாக்ஷாத் காரமானேன் 37

அக்ஞானமாகிற காஷ்டத்துக்குள்ளே மெய்ஞான அக்கினி
பத்திக்கொண்டு மெத்த தஹிக்க தோன்றித்தய்யா 38

ஷடூர்மி ஷட்பாவ ஷட்விகாரம் சாவடி உப்பரிகை
தஹதஹ னமாச்சுதய்யா 39

அஞ்சு பூதங்களும் பஞ்சகோசங்களும் பஞ்சமேடையென்னும்
மாளிகையாம் பஞ்சு பஞ்சாகவே பறந்தய்யா 40

ஆருறு தத்துவமும் அரிஷட்வர்க்கமும் ஆதாரம் ஆறும்,
நீருச்சே அரைக்ஷண மாத்திரத்தில் 41

ஜாதிவர்ணங்களும் ஆசிரமதர்மமும் சாஸ்திர கோத்திர
ஸூத்ராதிகளும் க்ஷணிகத்தில் தஹனமாய்ப் போச்சுதய்யா 42

தேகத்திரயங்களும் காலத்திரயங்களும் ஜீவத்திரயங்களெனும்
நாடக சாலேகளும் க்ஷணிகத்தில் தஹனமாய்ப் போச்சுதய்யா 43

ஆதித்தன் முதலான அஞ்சு பிரகாசம் தன்னில் அதிக்கிரமித்துக்
கொண்டு
மிஞ்சுதய்யா ஆத்மஞான அக்கினியும் 44

அகில உபாதி தன்னே மடிய விழலடித்து ஆனந்த அம்புதியில்
அமர்ந்தேனே அகண்டாகாரம் போலானேனே 45

ஸம்ஸாரமாகிற சாயகொப்புகளே சடபிடாயமாய் ஒடித்தேனேயா
தந்தனப்பாட்டையும் பாடிக்கொண்டு 46

ஜனன மரணமாகிற ஸிந்துவைக் கடந்து திரும்பி வந்தேனய்யா
இக்கரைக்கு ஜீவன் முக்தாளே கண்டு சேதி சொன்னேனய்யா 47

தட்டில்லாத ஆனந்தந் தனேக்கண்டு மார்புத் தட்டி
கொக்கரித்துக்கொண்டு வந்தேன் மதுவனத்தில் 48

முக்தியானதோர் அம்மனைக் கண்டு நான் முத்திரைகொடுத்து
வாங்கினேனே உத்திர திக்கு நினைந்தேனே 49

வந்தேன் உம்முடன் ஹரி கண்டேன் மோக்ஷஹரி தந்தான்
ஆத்ம சூடாமணியை கைவல்லியம் இந்தாருமென்று 50

பக்த வத்ஸல தவ சரணம்

பவபயமோசன தவ சரணம்

லக்ஷ்மீ நாயக தவ சரணம்

ரக்ஷிக்கும் வல்லபா தவ சரணம்

ஆதிகுருவே தவ சரணம்

ஆத்ம ஸ்ரீபந்தோ தவ சரணம்

சிருஷ்டி கர்த்தா தவ சரணம்

தீனதயளோ தவ சரணம்



## ஞானக் குறவஞ்சி நாடகம்

### வழிபடு கடவுள் வாழ்த்து

ராகம் : நாட்டை

அண்டஜகத் காரணருக்கு அகிலஜகத் பூரணருக்கு
தொண்டர்க் கிடர் தீர்த்தவற்கு தூணில் உதித்தவருக்கு ஜயஜயா 1

எங்கள் குருவானவருக்கு இப்பிரபஞ்ச பூஷணருக்கு
ஸங்கமற்ற அஸங்கருக்கு ஸ்வாமி தயாபரருக்கு ஜயஜயா 2

கோபியர்கள் வல்லபருக்கு கூறை அபகரித்தவருக்கு
ஆவினிரை காத்தவருக்கு ஆத்மநாயகருக்கு ஜயஜயா 3

செங்கமலை வல்லபருக்கு ஸ்ரீகருடவாகனருக்கு
பங்கஜனையீன் றவருக்கு பரமதயாபரருக்கு ஜயஜயா 4

பன்னகேந்திர சயனருக்கு பிரகலாதவரதருக்கு
முற்றும் என்னை காத்தவருக்கு பரமமோக்ஷகாரணருக்கு ஜயஜயா 5

### விநாயகர், சுப்பிரமணியர், சரஸ்வதி காப்பு

விருத்தம்

ஆரணரஹஸ்யமெல்லாம் அஹோபலர் அருளினாலே
பாரதில் தமிழ்பாவால் யான் பகர் குறவஞ்சியாக்கி
பூரணமாகக்கூற புராரி அம்பிகைகளீன்ற
வாரண முகவன் ஸ்கந்தன் வாணி பொற்பதங்கள் காப்பே

குருவணக்கம்

பண்டெந்த பூர்ணர் தாமே பரமபாவனராய் வந்துதோன்றி
கண்டுதன் கருணையாலே கலியிலுள்ளோர் பிழைக்கவேண்டி
வண்டர்கள் வாதுபேதம் அடக்கினார் அவர்தாள்போற்றிக்
கொண்டுயானிந்த ஞானக்குறவஞ்சி கூறுவேனே

## பாட்டு

சாந்த நரஸிம்ஹர் என்னும் ஸத்குருவின் பாதம்போற்றி
ஆனநல்ல பழவகையும் ஆவின்பாலும் சர்க்கரையும்
தேனவலும் வடைபயறும் தித்திக்கும் நல்ல மோதகமும்
பானகமும் நான்படைத்து பலமலரால் பூஜைசெய்தேன்
ஈனமில்லாதென்கவியை இபமுகனே காத்தருள்வீர் 1

தப்புபிழைகள் வாராமல் சரம்தொடுத் தேறிட்டாப்போலே
தோற்றிவைத்து நிறைவேற்றும் தேசிகரே சிந்தாமணியே 2

## அவையடக்கம்

தன்னுடைய புத்திரன் பிழையைத் தந்தையுந்தாயும் பொறுத்
தணைப்பார்
என்னுடையசொற் பிழைகருதா தின்னிலத்துப் புலவரெல்லாம்
சொன்ன சுகமொழி கேட்டு சுருதி களித்திடுவதுபோல்
பன்னுமிந்தக் குறவஞ்சி பாட்டையும் கேட்டகமகிழ்வார்.

### கட்டியக்காரன் வருகிற விருத்தம்

ஸச்சிதானந்தசுத்த சாச்வதமான பூர்ணர்
அச்சுதன் சாயை மாயை யதிற்பிரதிபலித்துத் தோன்றி
கச்சையை யிறுகக்கட்டி கட்டியக்காரனாகி
கொச்சைவாய் மொழிகள் கூறிக்கொலுவினில் வருகின்றானே

### சிந்து

அனேக அஞ்ஞான இருட்டைத்தன் சுத்தஅறிவொளியினாலே
அகற்றிக்கொண்டு
யாவர்க்கும் அந்தர்யாமியாகும் கட்டியக்காரன் களரியில்
தோன்றினானே 1

ஸமஷ்டி ஸ்தூலத்தை வகித்துக்கொண்டு ஸமஸ்த
ஜகத்தபிமானியாகி
தத்பதலக்ஷியம் சொல்லும் கட்டியக்காரன் களரியில் தோன்றினானே 2

முக்குணத்துடன் கூடிக்கொண்டு மும்மூர்த்தியில் அந்தர்ப்பூதமாகி
ஸ்ருஷ்டி ஸ்திதி லயம்செய்யும் கட்டியக்காரன் களரியில்
தோன்றினனே 3

தந்துவிலே முத்தை கோர்த்ததுபோல் தன்னிடத்தே எல்லாம் தாங்கி
கொண்டு
ஸூத்ர தாரியாகும் கட்டியக்காரன் களரியில் தோன்றினனே 4

### இராஜன் வருகிற விருத்தம்

கட்டியக்காரன் வந்து கனஸபைதனி லிருக்க
முட்டமும் மூர்த்தியாகி முழுதுமாய் நிறைந்த மூலன்
சட்டமா யுலகமாள ஸாக்ஷியா யிருந்துகொண்டு
பட்டத்துக் கரசனகிப் பரிவுடன் கொலுவில் வந்தார்

### தரு

### கண்ணிகள்

தராதலம் முதலீரேழும் தண்டிகையாக்கி ஓர்
ஸமாதியென்னும் மெத்தை யதன்மேலேபடுத்து
அண்ட பிண்ட மிரண்டும் இருதண்டுகளாக்கி மேலும்
ஸத்தியலோக மென்னு மதை பன்னகமாக்கி
முனிவர்கள் ஸனகாதி யோகியரெல்லாம் சேர்ந்து
முன்னும் பின்னும் கொம்புதொட்டு மெள்ள நடக்க
ஸர்வாதார தண்டிகைமேல் ஸத்சிதானந்தர் தானும்
தன்மயமாய் கொலுக்காண தானெழுந்தாரே 1

அஹோபலர்தம் வம்சமென்னும் ஆனைமேல்பேரி மெத்த
அந்தரிக்ஷம் ஸ்வர்க்கமுதலாக எங்குமதிர
அவனியில் அனந்த வேதசாஸ்திர மெல்லாம் சொன்ன
அஷ்டாதச வாத்தியங்கள் ஆக முழங்க
வையகத்தில் பதினெண்புராணங்க ளெல்லாம் சேர்ந்து
வரிசையாய் எதிராக வந்து ஸ்துதிக்க
பங்கஜரும் தேடிக்காண பங்கஜ பாதர் வந்து
பராக்கு எச்சரிக்கை யென்ன நடந்தனரே 2

வையகத்துள் தொண்ணூற்ருறு தத்துவங்களும்கூடி
வகையுடன் விருதுகள் வகித்து வர
ஆலவட்டம் சுருட்டிகள் அளவிறந்த செல்ல
அவுதாக்கள் வெண்குடை வெண் சாமரங்கள்
பச்சைக்குடை முத்துக்குடை பவழக்குடைகள் எல்லாம்
பார்த்தவிட மெங்கு மிருபங்கில் வரவே
தங்கவெழில் நாதஸ்வரம் எங்கும் முழங்க நாதன்
தன்மயமாய் கொலுக்காண நடந்தனரே
(தயவுடனே ஸத்சிதானந்தர் தண்டிகைமீதில்
தன்மயமாய் கொலுக்காண நடந்தனரே) 3

பரதசாஸ்திரப்படி பதினுறு ரம்பைகள் கூடிப்
பாடி மத்தளங்கள் கொட்டித் தாளங்கள் போட
பிரவிருத்தி நிவிருத்தியென்னும் பாவையர்கூடி முன்பு
பார்த்து நிர்த்தமிட்டு முன்கைலாகுபோடவே
நாதபிரம்மமென்ன விருநான்குதிக்கிலும் சேர்ந்து
நாரதாதிவீணே மீட்டி நாதமெழுப்ப
பிரத்தியகாத்மக ஸ்வபிரகாசஞன வேந்தனும் மெத்தப்
பரிவுடன் கொலுக்காண நடந்தனரே 4

தர்க்க முதலாக வுள்ள சாஸ்திரமெல்லாம் சேர்ந்து
ஸன்னிதி விலக்கி வந்து ஸஜ்ஜமாய் நிற்க
கச்சை கட்டிக்கொண்டு மூல சக்தியுமிரு செம்
கைகளில் இரண்டு வெண்சாமரம் வீசவே
முக்தி யென்னும் கன்னி மோக வாஸனே சுற்றி நின்று
முறையுடன் வேளே பார்த்து காத்திருக்கவே
அன்றுமின்றும் ஒன்றெனவே வெண்மலர் தூவ தேவர்
அந்தராத்ம ராஜன் கொலுக்காண அடைந்தனரே
தகர் தத்தி கர்தி ததி திம் தோமெனவே தாள
மத்தளங்கள் கொட்டி கீதங்கள்பாட வந்தடைந்தனரே 5

## மந்திரி வருகிற விருத்தம்

குறிப்புடன் அந்தராஜன் கொலுநடுவதனில் வந்து
சிறப்புடன் உலகமாள சிங்காஸனத் திருந்து
மறப்பில்லா மந்திரியைத்தன் மனதுள்ளே ஸ்மரித்த மாத்திரம்
நிரப்பிய ஸுகுண மந்திரி நிமிஷத்தில் கொலுவில் வந்தார்.

## தரு

மந்திரிவருகிறார் மதிமந்திரிவருகிறார்
மந்திரி வருகிற மகிமையை சொல்ல
வாக்கிலடங்காது பார்க்க முடியாது மந்திரி வருகிறார்

பிரணவப் பொருளறிந்தவீர பிரதானிகள் பலர் சூழவே
நிர்ணயத்தோடு மனத்தை யோரிடம் நிறுத்த வல்லமையுள்ளவர்
அவர் பெருத்த வல்லமையுள்ளவர் மந்திரி வருகிறார் 1

ஐந்து விஷயத்தினடைவுக ளெல்லாம் அறிந்தவர்வகை தெரிந்தவர்
இந்திரியங்களை பிரகடனம் செய்யும் யந்திர மந்திர தந்திரவான்
அவர் யந்திர மந்திர தந்திரவான் மந்திரி வருகிறார்

தீதுட்கரணத்தி னடைவுகளெல்லாம் தெரிந்தவர் வகையறிந்தவர்
போதச் சருக்கரைப் பூரணத்தையுள்ளே பூரவைக்க புத்தியுள்ளவர்
அவர் சேரவைக்க சக்தியுள்ளவர் மந்திரி வருகிறார் 3

காலத்திரய நிருபணம் செய்யும் சுபகாரியர் வெகு வீரியர்
கர்த்திருத்துவம் ஜீவன் தலைமேலே வைத்து தான் அகர்த்தனாகிய
யுக்திமான் - அவர் - விகர்த்தனாகிய புத்திமான் மந்திரி வருகிறார் 4

அண்டமீரெழு மடக்கித் தன்னுள்ளே யதட்டி கப்பங்கள் வாங்கியே,
எந்த லோகத்தும் மனோவிருத்திகளை ஏகத்தன் சக்கிரமாக்குவார்
அவர்போக பிரசக்கிரம் போக்குவார் மந்திரி வருகிறார் 5

அவஸ்தை மூன்றோடகங்காரம் தன்னை யபிமானிபோல் வைத்து
மூட்டியே,
அகடவிகட பிரகடனைகள் செய்ய அதிக யோசனையுள்ளவர் -
அவர்மதி விசாலமதுள்ளவர் மந்திரி வருகிறார் 6

ஒருத்தன் தர்மத்தை ஒருத்தன் மேல் வைத்துத்தான் ஒருத்தனு
மறியாமலே,
தப்த அயஸ~போல்தான் ஜீவனாகியும் அகர்த்த நாயகனாகுவார்
அவர் விகர்த்த நாயகனாகுவார் மந்திரி வருகிறார் 7

துவைதமென்றுவரும் மன்னவர் தங்களைத் துரத்தியே
பாளயமோட்டியே,
அத்வைதபிரளயமானபோதும் தன் அரசனை நிலைநிறுத்துவார்
அவர்முரசறைந்து வற்புறுத்துவார் மந்திரி வருகிறார் 8

## இராஜனும் தேவியும் மந்திரியோடு வேட்டைக்கு போகும் விருத்தம்

மந்திரியோடரசன் ஜாக்கிரவனமெல்லாம் வேட்டையாடி
ஸ்வதந்திர ஸ்வப்னவீதி சென்றங்கு நகர்சோதிக்க
அந்தரியாமி யந்தப்புரம் தன்னி லடைந்தபோது
சந்திர முகத்தாள் புத்தி தையலும் நித்திரை சார்ந்தாள்

## புத்தி சுகம் கண்டு பிரிந்து வாடும் விருத்தம்

ஸ்வப்னத்தில் புத்திமாது ஸ்வயம் பிரகாசத்தைக்கண்டு
அப்பொழுதணைந்து கூடி ஐக்கியமாயிருந்து சற்று
தப்ப அஞ்ஞானம் மூடி ஜாக்கிர முதிக்க பார்த்து
மெய்ப்பொருள்தனைக் காணாமல் மெலிந்துடல் பதறினாளே 1

ஸ்வப்னம் போய் ஜாக்கிரம் தோன்ற ஸ்வயம்பிரகாசனை முன்
காணாமல்
திக்பிரமமாகி நான்கு திசையும் பார்த்தகம் மெலிந்தே
இப்பிரபஞ்சத்தில் தாயை யிழந்தழும் குழந்தை போல
ஸப்பிரமஞ்சத்தில் சாய்ந்து தையலும் புலம்பலுற்றாள் 2

## தரு பாட்டு

நித்திரை தன்னில் சத்துருவாய் ஸ்வப்னம் முன்போல
தோற்றி வைத்திருக்கையில் என் விதியே 1

ஸாவகாசமாயிருந்து ஸல்லாபம் செய்ய வொட்டாமல்
ஜாக்கிரம் வந்து தோன்றியது என் விதியே 2

பரிபக்குவ காலம் வந்தும் பரமஸுக பிராப்தியற்று
பரிதபிக்க வைத்தாயே என் விதியே 3

முத்து முத்தாய் வார்த்தை சொல்லி முகத்தோடு முகத்தாடிய என்
சித்தம் பறித்தொளித்தாயே என் விதியே 4

வானகத்தில் பானுகோடி வந்துதயமானுலுமென்
வடிவழகன் ஒளியாமோ என் விதியே 5

தினமும் சிவபூஜை நன்ருய் செய்யாத குறைதானே என்
கனவும் குறைவானேனே நான் என் விதியே 6

அத்தியாத்ம தாபமெல்லா மாறியவன் மேலணைந்தும்
அகண்ட ரஸம் காணேனே என் விதியே 7

நித்திய உபாதிகளை நேதிசெய்யும் கல்விகளை
நினைந்து நன்றுருகுவேனே என் விதியே 8

பலகோடி அமரரெல்லாம் மனமூர்ந்து பார்த்தாலும் என்
வடிவழகன் சாயல் காணேன் என்விதியே 9

சதகோடி கதிரவன் தான் சேர்ந்துதயமானுலுமென்
மதியவன் பிரகாசம் காணேன் என் விதியே 10

## சந்திரரோபாலம்பன விருத்தம்

இப்படியாக புத்தி எந்த நேரமும் வேதாந்தம்
உட்பட மனனம் செய்தாள் உறங்கும் மஞ்சத்தை நீக்கி
மெய்ப்படி, பொடிமேலாக வெறு நிலஞ்சயன மாகி
வெப்பமாம் நிலவை பார்த்து விளம்புவாள் புலம்புவாளே

## தரு கண்ணிகள்

### வெண்ணிலா

பஞ்சணை மெத்தையலுத்திங்கே வந்தேனுன், வெண்ணிலாவே - அந்த
மெத்தையை பார்க்க மிகுதியாய்க்காய்கிருய், வெண்ணிலாவே 1

நித்திரைக்கென்ன பிழைசெய்திருந்தேனோ, வெண்ணிலாவே - அந்த
நித்திரையும் இங்கு சத்துருவாச்சுதே, வெண்ணிலாவே 2

உந்தன் கிரணங்கள் என்றன் மேலேபட, வெண்ணிலாவே - என்
ஸச்சிதானந்தர் ஸதிருசமாய்த் தோன்றுதே, வெண்ணிலாவே 3

உன்னேயுமவனேயு மோரச்சில் வார்த்தாற்போல், வெண்ணிலாவே
இப்போது
உன் தேஜ ஸவன்தேஜஸோ டொத்து விளங்குதே வெண்ணிலாவே 4

உனக்கு மவனுக்கு மோர் வயதோ சொல்வாய், வெண்ணிலாவே
உன்னில்
உன்னுருப்போல வனுருத்தோன்றுதே, வெண்ணிலாவே 5

அந்த பிரபுவை யென் னண்டையிற் காணேனே, வெண்ணிலாவே என்
அவல விதிக்கிப்போதாரென்ன செய்குவார், வெண்ணிலாவே 6

எந்த தேசத்துக்கும் நீ செல்லவல்லவன், வெண்ணிலாவே என்றன்
ஈசனேக் கண்டால் எனக்குடனே சொல்வாய், வெண்ணிலாவே 7

உரைக்க உபசாரம் உண்டோ வுனக்கு நான், வெண்ணிலாவே பார்
உடம்பு தன் கைக்கோருபசாரம் சொல்லுமோ, வெண்ணிலாவே 8

அந்தரங்கத்துன்மேற் சந்தேகமில்லேயே, வெண்ணிலாவே இப்போ
தெந்த ரஹஸ்யமுமிங் குனக்குச் சொல்வேன், வெண்ணிலாவே 9

நக்ஷத்திரங்கள் ஸகாயமுனக்குண்டே, வெண்ணிலாவே என் மேல்
பக்ஷம் வைத்தென்றன் பரனேக்கூட்டிவைப்பாய், வெண்ணிலாவே 10

மண்டலந் தன்னில் மறுவுனக்கில்லாவிட்டால், வெண்ணிலாவே
உன்னேக்
கண்டபேரெல்லாம் அகண்டரென்றே சொல்வார், வெண்ணிலாவே 11

அவர் தம்நிலேயை யறியவேண்டுமானுல், வெண்ணிலாவே மேலாம்
ஆரணவாக்கிய மடையாள ங்கூறும் பார், வெண்ணிலாவே 12

முப்பத்திரெண்டா முபநிஷத்தை கேட்டால், வெண்ணிலாவே - அந்த
மெய்ப்பரனேப் பற்றிக் கைப்பிடியாய்த் தரும், வெண்ணிலாவே 13

சாதனமென்னும் சதுஷ்டயம் வந்தாக்கால், வெண்ணிலாவே ஆத்ம
போதவென்னுதன் புலப்படுவார் கண்டாய், வெண்ணிலாவே 14

பக்குவ சித்த பரமஹம்ஸர் நெஞ்சில், வெண்ணிலாவே அவர்
பக்திக்குட்பட்டுப் பரவசமாய் நிற்பார், வெண்ணிலாவே 15

அந்தரங்க பக்தர் அந்தக் கரணத்தில், வெண்ணிலாவே அவர்
எந்த நேரத்துமிருப்பார் அறிந்து பார், வெண்ணிலாவே 16

எந்தவிதமாய்ப் பிரயாஸப்பட்டாகிலும், வெண்ணிலாவே இப்போ
தந்தப்பரனை யபரோக்ஷம் செய்விப்பாய், வெண்ணிலாவே 17

ஸத்யலோகத்தும் தடையுனக்கில்லையே, வெண்ணிலாவே அந்த
நித்தியனை யென்முன் நிலைபெறச் செய்வாய், வெண்ணிலாவே 18

ஸத்துக்களுக்கு ஸ்வதர்மம் தயை யென்பார், வெண்ணிலாவே அதை
ஒத்துத் தயாகுண முன்னிடத்தே கண்டேன், வெண்ணிலாவே 19

இந்த ஸமயம் நீ இங்கே வராவிட்டால், வெண்ணிலாவே நானும்
இந்தச் சரீரம் இழந்திருநாளாமே, வெண்ணிலாவே 20

சந்திரன் தாபம் தணிப்பானென்பார்களே, வெண்ணிலாவே
இப்போது
எந்தனுக்குச் சந்திரன் செந்தழலாகுதே, வெண்ணிலாவே 21

விருத்தி க்ஷயங்கள் விகாரமுனக்குண்டே, வெண்ணிலாவே
உன்போல்
அந்த விகாரமவனிடத்தில்லையே, வெண்ணிலாவே 22

போக்கு வரத்துப் புகலிடமில்லாவிட்டால், வெண்ணிலாவே உன்னை
பூர்ணரோடொப்பாய் புவியிலுள்ளோர் சொல்வார்,
வெண்ணிலாவே 23

சோரனைப்போலவே ராத்திரி யலைகிறாய், வெண்ணிலாவே என்றன்
ஸ்வப்ன கள்வனுபதேசம் கேட்டாயோ, வெண்ணிலாவே 24

அந்த பிரபுவை யென்னண்டையிற் காணேனே வெண்ணிலாவே என்
அவலவிதிக்குப் போதாரென்ன செய்குவார் வெண்ணிலாவே 25

மத்தனைப்போல பிரமைகொண்டலேகிறாய், வெண்ணிலாவே நான்
எத்தனை சொன்னாலும் சித்தம் இரங்காதோ, வெண்ணிலாவே 26

என் விதி ஸ்வப்னமாக விருந்தால், வெண்ணிலாவே நானு
முன்னே வெறுக்கக் கணக்குண்டோ வுற்றுப்பார், வெண்ணிலாவே 27

ஞாயறுதிக்கும் ஸமயமு மாச்சுதே, வெண்ணிலாவே நீயும்
நாடி யஸ்தங்கிரி யோடி யொளிப்பாயே, வெண்ணிலாவே 28

சேவலுங் கோவென்று கூவத்துடங்குமே, வெண்ணிலாவே என்
ஆவலைத்தீர்க்க அழைத்துவா நாதனை, வெண்ணிலாவே 29

இத்தனை சொல்லி இரங்கியும் கேளாயோ, வெண்ணிலாவே அந்த
சுத்தனையென்முன் சுறுக்காக கூட்டிவா, வெண்ணிலாவே 30

அகர்த்தனை யிப்போது அழைத்துவாராவிட்டால் , வெண்ணிலாவே ஓர்
அரைக்ஷணம் தங்காதென்னாவி தயைசெய்வாய், வெண்ணிலாவே 31

### மனஸகி கேட்க புத்திமாது சொல்லும் விருத்தம்

நாவுலர்ந்திடவே நங்கை நன்னிலவோ டிவ்வாறு
சாவேனென் றுரைக்கக்கேட்ட சகிமனம் பொறுமலோடி
ஆவலாய் கேட்கப் புத்தியவள்கண்ட கனவு கூறி
ஓவியமொப்ப நின்றோருபசாந்தி சொல்லென்றாளே

### கண்ணிகள்

(தந்தனா தன தந்தனாதன தந்தனா தனதந்தனா)

வாராய் எந்தன் ஸகியே இங்கே வந்தவகைசொல்வேன்
லயஸ்தானங்களென்னும் ஒரு மகத்தத்வத் தினிடத்தில் 1

ஸுகநித்திரையில் அமரும் பொழுதொரு ஸ்வப்னமிதென்றாள்
கண்டவகை சொல்வேன் இதைக் கருத்தாய் சற்றுக்கேளாய் 2

கனதேஜஸையுடையானை என்கண் கண்டுகளித்தேன்
ஈரேழுலகங்கட்கு அவன் ஏகசக்ரேசன் அவன் ஏகசக்ரேசன் 3

இனகோடி சமானன் அவன் இன்பம் தருமோனன்
சதுரங்கதளங்கள்சூழ ஜாக்கிரவனங்கடந்து அவன் ஜாக்கிர வனம்
கடந்து 4

விரும்பியாறுவைரி மிருகவேட்டையாடிச் சலித்து
திரும்பிவரும் வழியில் ராஜன் தளங்கள் தன்னைப்பிரிந்து 5

தனித்தேயொரு தடத்தே என்னையடுத்தே வந்து படுத்தான்
ஸன்னிதானத்து மஹிமை தன்னால் ஜகமோ ஹங்கள் தீர்ந்தேன் 6

மோக்ஷஇச்சா ஸாகரத்தில் முழுகிகை கலந்தேன்
ஸுகவாரிதியதினூடு துளைந்தேன் உள்ளயர்ந்தேன் 7

மறந்தேனரை நொடியங்கொரு மாயாமயலானேன்
மோக்ஷயிச்சை மஹா ஸமுத்திரம் முழுகிக் கரைகாணேன் 8

இவ்வாறொரு ஸ்வப்பனமாக யிருந்துடன் கண்விழித்தேன்
விழித்தே னவனொளித்தான் நான் தனித்தேன் பரிதவித்தேன் 9

ஏகபோகாதி ரஸிகன் நல்ல ஸ்வானுபோகாதி ஸரஸன்
ஸுகமாத்ரானுகூலன் ஸ்வபிரகாசன் முக்தபாசன் 10

அகண்டானந்தபோதன் ஜிதவேதன் என்னுதன்
முக்திபாதப மூலன் குணசீலன் மாயாஜாலன் 11

மோடிவித்தை செய்வோனை யொத்தெனை மோகனஞ் செய்
தொளித்தான்
காயகிலேசமியற்றி முன் செய்த கர்மபந்த மொழிந்தேன் 12

மாயமாம் ஜகத் தாசையற்று நிராசை தன்னோடு சேர்ந்தேன்
மனனஞ்செய அவனைப்பெரு மனமோஹமும் போச்சே 13

மறவாமலே யனுஸ்யூதமாய் அவன்மேல் தியான மாச்சே
எந்தநேரமும் இந்தவாறென தந்தரங்கமதாச்சே 14

எந்நேரமும் அவன்மேல் சித்தம் ஏகாக்கிரமதாச்சே
சிவமேயிந்தச் சித்தனன்மேல் திக்பிரம மெனக்காச்சே 15

அன்னபானாதி நித்திரைகூட அரோசிகமாகிப் போச்சே
ஸகியே யிதற்கெளிதா யொருசாந்தி சொல்லெனச் சாற்றினுள் *16*

தாதி நான் சொல்ல வோதும் சாஸ்திர மேதுமே தெரியாதே
சற்றே பொறு குறிகாரரைத் தருவிக்கிறேனென்ருள் *17*

வருவார்களோ குறிகாரர்கள் வாரார்களோ அறியேன்
வல்லியேகி நீ, சொல்லியிங்குவரச் செய்வாயென்று வாழ்த்தியே *18*

வியர்த்தமாகவே யிந்ததேகம் விழுந்துபோவதன் முன்னமே
வேதமோதிடும் போதனைக்கண்டு வெப்பமாறி யிருப்பேனே *19*

## வேறு

*(ராமராம ஸ்ரீராம ராம ஸ்ரீராமராம ரகூத்தமா) 1*

இந்தவாறு மனதினேடு மிடைவிடாது புலம்பியே
சொன்ன புத்தி சுபேச்சையாதி குணங்களோடு மிருக்கவே *2*

ஆனகுறிக்காரரைப்போய் அழைத்துவருவாயோ வருவானே
அவன்வாரானே நானும் வணங்கி குறிகேளேனே *3*

ஸஜ்ஜனங்கள் தான் வாராரோ நல்ல ஸத்கதைகளைகேளேனே
வியர்த்தமா மிந்ததேகம் விழுந்துபோகுமுன்னே அந்த *4*

அகர்த்தனேடு கைகலந்து அணைவேனே
ராமராமா ஸ்ரீ ராமராமா ஸீதாராமா ரமணு உணரேனே *5*

### பரமாத்மா குறத்தியாய்வரும் விருத்தம்

கானக மயில்போல் புத்திமாது கபோலம்தன் கரத்திலேந்தி
தியான முமவன்மேலாகி தனித்தவளிருக்கும்போது
ஈனமில்லா அகர்த்தன் இளம் குறவஞ்சியாகித்
தானமர்ந்திடும் வேதாந்த தடமலையிருந்து வந்தான்

### பாட்டு

குருபாதம் மறவாளாம் வஞ்சி குறத்தியும் வீதிவழிநடந்தனளே
மலைக்குறத்தியும் பாடி வழி நடந்தனளே (குரு)

குறத்தாள் கருங்குழலே கொண்டையாய்க்கட்டிக்கோல
நெற்றியிலே கஸ்தூரி திலகமுமிட்டு
விஸ்தாரமான விழிக்கஞ்சனமிட்டு வஞ்சி
வேதாந்த கலித்துறை பாடிக்கொண்டு (குரு) 1

சங்குமணித் தாலிகட்டித்தாடங்கம் சாத்தி வஞ்சி
ஸன்னபின்ன லக்குவடம் மார்பிலணிந்து
செப்பு முலேக்கே ற்ற நல்ல கச்சையும் கட்டி வஞ்சி
செங்கையில் சங்குவளே யாழியுமிட்டு (குரு) 2

கொத்தளப்பொன்னுலே நவரத்தினமிழைத்து வஞ்சி
கூடையொன்று வலது மருங்கிலிடுக்கி
செம்பொன்னுறி தும்பு தாம்பு தோளில் தாங்கி வஞ்சி
சின்னம்சிறு கோலே யிடக் கையிலூன்றி (குரு) 3

சிற்றடிச் சிலம்பு தண்டை பாடகம் சாத்தி வஞ்சி
சின்னம்சிறு விரலுக்கு பீலியுமிட்டு
ஐந்துலக்ஷம் பொன்பெறும் நல்லாடையும் கட்டி வஞ்சி
அறிவென்னும் குஞ்சை மார்பில் தூளியாய்கட்டி. (குரு) 4

காது குத்தி தக்கையிட்டு குறிபார்ப்போம் அம்மை
காரணகாரியங்களுக்கும் வகைதெரியும்
மகாமோக வியாதிக்கு மருந்தறிவோம் இந்த
மாயை வசமாக்க ஒருமந்திரமுண்டு (குரு) 5

முகலெக்ஷணங்கள் கண்டு குறியுரைப்போ மம்மை
ஜீவன்முக்தி கைநெல்லிக்கனிபோல் முன்புகாட்டுவோம்
ஜீவனேப்பரனே டைக்கியம் செய்ய அறிவோம்
எங்கள் தேசிகனுர் பரம்பரை வித்தையதனுல் (குரு) 6

ஸ்வப்னத்தில் கண்ட ஒரு சுத்தனேவிட்டு பின்பு
ஜாக்கிரத்தில் காணுமல் தபிக்கிறபேர்க்கு
அஹமஸ்மியென்னு மஹா வாக்கிய அர்த்தத்தாலிப்போது
அவனே வெளிப்படுத்த ஆண்மையுமுண்டு (குரு) 7

கட்டுவைத்து பேசுகிறதை கண்டிங்கே வந்தேன் அம்மை
காசினியில் இவளைப்போல் குறத்திகாணேன்
ஆரணங்கே நம்முடைய கோவில் தன்னிலே
அழைக்க திருவுள்ளமோ என்றாள் தாஸியும் (குரு) 8

விருத்தம்

பாடிவழியோடுவரும் குறத்திதன்னைப்
பார்த்தமனப் பாங்கிஉள்ளம் பதைப்பு நீங்கி
ஓடிவந்து புத்தி நங்கைக்குடனே சொல்லி
உவந்துமனம் கலந்தவளோடுரை செய்வாளே.

சிந்து

செப்புமுலை கச்சழகும் சிவந்தநெற்றி தன்னில்
செந்தூரபொட்டழகும் சிறுமருங்கில்
கூடைவைத்தவழகும் சொற்குரலும் கண்டாலிந்த
குவலயத்தி லிவளைப்போல் குறத்தியுண்டோ,
நல்லகுறிசொல்லயிவள் வல்லவளென்றே யுன்னை
நாடியிங்கே ஓடிவந்தேன் நாயகியே யிப்போ
ஆரணங்கே நம்முடைய அகத்திற்குள்ளே அவளை
யழைக்கத் திருவுளமோ வென்றாள் ஸகியும்

விருத்தம்

என்னுடைய அகத்திலந்த இளங் குறவஞ்சிவந்தால்
சொல்லும் நற்குறிகள் கேட்டு ஸுகமடைந்திடுவேன் நீ போய்
முன்னமே யழைத்து வாராய் முதற்குறி பலிக்குமென்றாள்
வன்ன மாமயில்போல் புத்தி மனஸகி யழைக்கின்றாளே.

சிந்து

செம்ப தச்சிலம்புகள் சிலம்ப என் அன்னை
சிற்றடிநோக வருவாளோ 1

அழைத்துஉன்னை என்ஆச்சி வரச்சொன்னாள் நீயும்
அவஸரமாய் அங்கு வருவாயே 2

தண்டிகை சுமக்க ஆளில்லாமல் என் அன்னே
தானே எழுந்தோடி வருவாளோ 3

சித்தமதற்கேற்ற குறிசொல்ல அன்னமே பசும்
தேனே எழுந்தருள் செய்குவாயே 4

ஸத்துக்கள் ஸங்கமில்லாமல் என் அன்னே
தாகமுற்று மோகம் மிக ஆனுள் 5

கொஞ்சும்கிளிக் குறமாதே என் அன்னே
கோவில் தனக்குள் வருவாயே 6

### ஞானக் குறவஞ்சி புத்திமாதிடம் வரும் விருத்தம்

வருந்தியே யழைக்க வேதமாதவர் மதிக்கும் வஞ்சி
திருந்தவே தியானம் தன்னுல் தெரிந்தவள் நிலைமையெல்லாம்
பொருந்தவே புத்திதன்மேல் பூரண தயவுண்டாகி
அருந்தவப் பயன்போல் புத்தி அரண்மனேக்கே வந்தாளே.

### தருபாட்டு

வஞ்சிவருகிறுள் வேதாந்தக் குற வஞ்சிவருகிறுள்
சூதுகளே பலபேசியே வஞ்சி சூடக்கைவளே வீசியே
வாதுகளே மெத்த ஏசியே வஞ்சி வாய் திறந்துசொல்லக் கூசியே
(வஞ்சி) 1

முத்துமுருகனே வேண்டியே வஞ்சிமுன்னடியானேக் கைகூப்பியே
சித்தத்தில் வள்ளியை வாழ்த்தியே வஞ்சிதெய்வகுற வஞ்சி பாடியே
(வஞ்சி) 2

வெள்ளிமேல் பல்லியுரைக்குதே நன்மை மேன்மேலும்
சொல்லயிருக்குதே
இல்லத்துதிவினே ஏகுதே இங்கு ராத்திரிக்கு ஒரு ஆள்வருகுதே
(வஞ்சி) 3

நலநமித்தம் மெத்தநாடுதே யிந்தநாயகிக்கு நன்மைகூடுதே
பொல்லாக் குணங்களும் போகுதே அந்த பூர்ணன்
அபரோக்ஷமாகுதே (வஞ்சி) 4

## விருத்தம்

வஞ்சிதன் வரவுகண்டு வியாக்கிரசர்மத்தி லுட்காத்தி
அஞ்சியே முத்தைவாரி யடக்கமாய் முறத்தில் வைத்து
நெஞ்சகம் குளிரப்புத்தி நினைத்த நற்குறிகள் கேட்க
கொஞ்சியே யந்த ஞானக் குறவஞ்சி முன்வந்தாளே.

## வேறு விருத்தம்

வந்தபுத்தியிருந்த வகை முதல்
சிந்தைசெய்து சிரக்கம்பம் செய்து பின்
சொந்தமான குலதெய்வம் வாழ்த்தியே
யிந்தமாது குறியை யியம்புவாள்.

## சிந்து பாட்டு

வந்திருந்த வகைநோக்க மனநினைவு நன்மை அம்மை மனநினைவு நன்மை
வாரம்நல்ல வாரமிது வாழ்வுவருமென்றாள் 1

கொஞ்சமென்று நினையாதே குறத்திசொல்லும் குறியை நல்ல
கொம்பனையே யுனக்கு ஸத்குருகிருபை வருமே 2

முத்தை முறத்தில் பரத்தி முக்கோணம் கிழித்து அதை
முகத்தின் முன்னே எடுத்து வைத்து பெருமூச்சு வளர்த்து 3

கூடைதன்னில் வாரி முத்தைக் கோலாலே குறித்து வஞ்சி கோலாலே குறித்து
குலுக்கிமெத்த காயம் தன்னை மயிர்சிலுப்புண்டாக்கி 4

கொச்சியம்மை வந்தெனக்கு நிச்சயமாய் சொல்லாய் குறி நிச்சயமாய் சொல்வாய்
குருவை நினைத்துக் கரத்தைக் கூப்பி குறியுரைப்பேன் 5

விருத்தமான பிரதிபந்தமாடன் குற்றமுண்டு அம்மை மாடன் குற்றமுண்டு அம்மை
விரைவில் ஒரு காங்குக்கச்சை வாங்கிவைக்கவேணும் 6

கன்னியொரு மூலைதன்னில் காத்திருக்கிறாளே அவளை -
கண்டாங்கிச் சேலைவைத்துக் கொண்டாடவேணும் 7

ஈஷணாத்திரயங்களென்னும் ஏவல் கொஞ்சமுண்டு அம்மை -ஏவல் கொஞ்சமுண்டு
தோஷமறப் போக்கியபின் துடங்குவேன் குறியை 8

மனநிலையை யறிய எண்ணி மகிமையுள்ள குறத்தி அந்த - மகிமையுள்ள குறத்தி
வயிற்றுக்குச் சோறிடுவாய் என்று வாய்திறந்து கேட்டாள் 9

வீணிகளைபோல்பேசி விழியாலே மிரட்டி வஞ்சி - விழியாலே மிரட்டி
விந்தையாய்க் குறியுரைப்பாள் - விமல மலைக்குறத்தி 10

## கொச்சகம் – பாட்டு

ஸத்கர்மங்களை பலநாள் ஸாத்விகமாய் செய்துவந்தும்
இப்பலனை வேண்டாமல் யீச்வரார்ப்பணம் செய்தாய்
நித்திய நல்விரதமெல்லாம் நீ எடுத்து மெய்தளர்ந்தும்
அத்வைத வகையறியாதலைந்து திரிந்துழன்றாயே 1

சமம்முதலாமாறுடனே சார்ந்திருந்து மென்னபலன்
இயமமுத லஷ்டாங்கயோக மடைந்தேதுபலன்
மனமடங்க வாயுவையும் மறித்து வைத்துப் பார்த்துமென்ன
கன தவங்கள் செய்துமென்ன கண்டனையோ ஆத்மஸுகம் 2

ஸத்ஸங்கமில்லாமல் சாதகம்போலே யிருந்து
பச்சைப்பசுங்கிளியே பார்த்தெனை யிங்கே யழைத்தாய்
இச்சைப்படி குறிகள் எல்லாமெடுத்துரைப்பேன்
உச்சிப்பொழுதாச்சே உண்ணச் சோறிடுவாயோ 3

## புத்திசொல்லும் விருத்தம்

சோறிடுவாயோ என்றாய் தோகையே சொல்லக் கேளாய்
நீறிய எந்தன் நெஞ்சில் நினைத்திடும் குறிகளெல்லாம்
ஆறியே யுரைப்பாயாயின் ஆடையோடு அமுதும் ஈவேன்
கூறிடு குறியை என்றாள் குறத்தியும் கூறுவாளே.

## சிந்து பாட்டு

தந்தனத் தனத்ததனத்தந்தன தாஞ தனத்
தந்தனத் தனத்ததனத் தந்தன தாஞ

மூன்றுமுஷ்டி முத்தெடுத்து முக்காலும் சுற்றி வஞ்சி முக்காலும் சுற்றி
முழங்காலே மடித்தவள் முட்டியாய்போட்டு 1

ஆனந்தத்தா லாவேசம்போலாடிக் குறத்தி ஐயோ
ஆனகுறிசொல்லவென்றங்கு ஆரம்பித்தாளே, 2

அஸ்திஜ்வரம் பிடித்தாபோல் அங்கங்கள் அதிர குறத்தி சற்றே
ஆடுதிருடின கள்ளன்போல் விழிக்கிறுள் 3

சித்தபிரமையோ யிது பித்தவகையோ வந்து
ஸத்தியமாய் சொல்லடியோ ஜக்கம்மாதேவி 4

எந்த வகையைகுறித்து சோருகிறுள் அவள்
அந்த வகையை எனக்குச் சொல்லடி நன்ருய் 5

அன்னம் குறித்தோ நல்ல ஆடை குறித்தோ சொல்வாய்
தன்னே யொத்த மணவாளன் தன்னேக்குறித்தோ 6

பொன்னேக்குறித்தோ இந்திரபோகம் குறித்தோ சொல்லு
முன்னே வைத்தபொருள் காணுமை குறித்தோ 7

தவம்குறித்தோ ஸத்திய லோகம் குறித்தோ வந்த
பவத்தை கடக்க வழிபார்க்க குறித்தோ 8

மானம் குறித்தோ சிவ தியானம் குறித்தோ - மூலம்
ஆன ஹரிபக்தியை யடையக் குறித்தோ 9

போக்குக் குறித்தோ புண்ணிய தீர்த்தம் குறித்தோ சொல்வாய்
மூக்குபிராணுயாம வழிநோக்குக்குறித்தோ 10

தானம் குறித்தோ ஸன்மானம் குறித்தோ யோக
மானதை யடையப் பேசா மௌனம் குறித்தோ 11

வாக்கு குறித்தோ பரவித்தை குறித்தோ என்னை
ஏக்கமுடன் கேட்டகுறி என்ன குறியோ 12

ஸந்ததமும் உந்தனை நான் சிந்தனைசெய்தேன் இப்போ
ஸத்தியமாய் சொல்லடியோ ஜக்கம்மாதேவி 13

இந்தவகை எட்டுதிக்கும் சுட்டிக்காட்டி - கண்ணை
இறுக மூடித்திறந்து சொல்லுகின்றாளே 14

அன்னமுமன்று நல்ல ஆடையுமன்று இது
தன்னையொத்த மணவாளன் தன்னையுமன்று 15

பொன்னையுமன்று இந்திர போகத்தையுமன்று கிழே
முன்னே வைத்த பொருள் காணுமையுமன்று 16

தவத்தையன்று ஸத்திய லோகத்தையுமன்று வந்த
பவத்தைக் கடக்க வழிபார்க்கவுமன்று 17

மானமுமன்று சிவதியானமுமன்று மூலம்
ஆன ஹரிபக்தியை யடையவுமன்று 18

போக்குமன்று புண்ணிய தீர்த்தமுமன்று சொன்ன
மூக்கு பிராணாயாமவழி நோக்கமுமன்று 19

தானமுமன்று ஸன்மானமுமன்று யோக
மானதையடைய பேசா மௌனமுமன்று 20

வாக்குமன்று பரவித்தையுமன்று என்னை
ஏக்கமுடன் கேட்டகுறி இவ்வகையன்று 21

தந்திரமன்று மேலான மந்திரமன்று வேறு
சடுதியாய் சொல்லடியோ ஜக்கம்மாதேவி 22

சொல்லடி குறியை என்று கண்களை யுள்ளே
சொருகித் தெரிந்ததென்று சொல்கிறாள் வஞ்சி 23

ஸ்வப்னத்தில் சுத்தனைச் சேர்ந்துடன் பிரிந்து தப்பிச்
சோர்ந்தவளை சார்ந்தனையக் கேட்டகுறியோ 24

பாரம்மே நீ ஸ்வப்பனத்தில் கண்டபரனைத் தப்பி
வார மேமுநாளாய்த் தேடும் வகை யிதுவே. 25

## புத்தி சொல்லும் விருத்தம்

ஸ்வப்ன மென்றபோதே தோகையும் சோகம் நீங்கி
ஒப்பில்லாக் குறமாதே நீ ஒளியாமல் குறிகள் சொன்னாய்
முப்பொழு தன்னமீந்து முடிவி லாடைகள் நானீவேன்
தப்பாமலிருந்து வாழும் தடமலைவளம் நீ சொல்வாய்.

## விருத்தம்

மலைவளம் கேட்ட புத்திமாதெழில் வதனம் நோக்கி
கலைவளர் பூர்ணசந்திர காந்திசேர் முகத்துவஞ்சி
தலைதனை யசைத்துத் தான் வாழும் தட மலைவளங்கள் நன்றாய்
விலையில்லா மணிபோல் புத்தி வியப்புற விளம்புவாளே.

## சிந்து பாட்டு

தான தன்னத்-தான தன்னத்-தான தன்னத் - தானா
தான தன்னத்-தானதன்னத்-தான தன்னத் - தானா

விண்ணோர்கள் சேரும் எங்கள் வேதாந்த மலையே
மண்ணளந்த மாதவனார் மதிக்கு மெங்கள் மலையே 1

பண்ணும் பல தவமுழுதும் பலிக்கு மெங்கள் மலையே
கண்ணிலேயும் ஞானக்கண்ணால் காணுமெங்கள் மலையே 2

வேதமூன்றும் கொடுமுடிகள் விளங்குமெங்கள் மலையே
நாதபிரம்ம யோகியர்கள் நாடுமெங்கள் மலையே 3

வாதுபண்ணித் தவபலன்கள் வருத்துமெங்கள் மலையே
ஓதுமுபநிஷத்துக்கள் உத்கோஷமுள்ள மலையே 4

கொண்டாடி ஜீவன்முக்தர் குடியிருக்கும் மலையே
வண்டமத வாதியரை வதைக்கு மெங்கள் மலையே 5

கர்மிதுஷ்டாள் வைரிமிருகம் அண்டாத மலையே
பண்டுசெய்த பாபமெல்லாம் பறக்கடிக்கும் மலையே 6

### வேறு

தானத்தன தானதத்தன தானதத்தன தனனு

தாழ்வில்லா தொருகோடி ஸத்ஜனர் வாழுமெங்கள்மலையே
போழ்து தவறு மாதமும்மாரி பொழியுமெங்கள் மலையே 1

சூழ்ந்து வந்துநற் ஸுகங்கள் சுருதி சொல்லு மெங்கள் மலையே
பாழ்ந்த கோப பாபம் விலக்கும் பரம்ஜோதி மலையே 2

பரனிடத்தே பக்தியுள்ளோர் பணியுமெங்கள் மலையே
பரபிரம்ம ஞானநிஷ்டரெல்லாம் பதமடையும் மலையே 3

கரைபுரளும் குருகருணை அருவியுள்ள மலையே
காரணன் வந்தவதரித்து காக்ஷிதந்த மலையே 4

ஜனனமரணம் இல்லாத மலை எங்கள் மலையே
அண்டவொண்ணு ஆத்மஸுகம் அருளுமெங்கள் மலையே 5

புண்டரீக புரவாலர் புகழுமெங்கள் மலையே
சண்டாள அவித்திய ஜனங்கள் அண்டாத மலையே 6

### புத்தி சொல்லும் விருத்தம்

மலைவளம் எல்லாம்கேட்டு மகிழ்ந்தேன் நானுன்னைப்போலே
கலைபல கற்றுமேன்மை கண்டவர் ஒருவர் காணேன்
நிலமுடன் நீவாழுகின்ற நாட்டின் நல் வளங்களிப்போ
பலவகையுள்ளவாறு பரிவுடன் உரைசெய்வாயே.

### சிந்து

தானதந்தன தந்தன தானு தான தந்தன தந்தன தானு

காலமூன்றும் கடந்திடும் நாடு
கர்மபந்தம் ஒழிந்திடும் நாடு

கோலஎல்லை யில்லாதொரு நாடு
குறிக்கும் ஞானம் கொடுத்திடும் நாடு
ஜாலமாயை தவிர்த்திடும் நாடு
தபஸ்விகள் வந்து சேர்ந்திடும் நாடு
பாலஸூர்ய பிரகாசமாம் நாடு
பாபம் தீர்த்திடும் நாடெங்கள் நாடே. 1

அண்டபிண்டம் அவருண்ட நாடு
வாக்கு மனஸுக்கப்புற நாடு
பண்டையுண்டான பாங்குள்ள நாடு
பிரளயகாலத்தும் பேராத நாடு
அண்டர்லோகத்துக் கப்புற நாடு
அனந்தயோகிகள் தேடிடும் நாடு
கண்டுமாதவர் தூணிலுதித்து
களித்திருந்திடும் நாடெங்கள் நாடே. 2

மௌனமாக யிருக்குமன்னாடு
முனிவர் ஸித்தர் விரும்பிடும் நாடு
அஞ்ஞானபாசம் அறுத்திடும் நாடு
அபரோக்ஷம் கைமேல் கொடுத்திடும் நாடு
ஸுஞ்ஞானபோதம் அடைந்தவர் வாழும்
ஸ்வயம் பிரகாசமாம் நாடெங்கள் நாடே. 3

விஞ்ஞானவித்து விளைகின்ற நாடு
வேதாந்தமாரி பொழிகின்ற நாடு
பிரஞ்ஞானமென்றும் பிரஸித்தமாம் நாடு
பின்னுமுன்னு மற்ற பேரின்ப நாடு
மெய்ஞ்ஞானவாரிதி தன்னில் துளைகின்ற
மேலவர் வாழ்கின்ற நாடெங்கள் நாடே. 4

பக்திமார்க்க வழியுள்ள நாடு
பிரம்மஞானியர் சேரும் நன்னாடு
முக்திமுத்துக் கொழிக்கின்ற நாடு
முமுக்ஷுமோக்ஷ மடைகின்ற நாடு
சித்தம் தெளிந்தோர் எடுத்து பக்ஷித்திடும் நாடு

சித்ஸாரஞானப் பழமுள்ள நாடு
ஸத்தியஞானனந்தம் தானுகவே மிஞ்சும்
ஸம்பூர்ணமாகிய நாடெங்கள் நாடே. 5

## விருத்தம்

நாட்டு வளப்பமெல்லாம் நன்ருகச் சொன்ஞய் வஞ்சி
கேட்டுநான் ஸந்தோஷித்தேன் கிளத்திநீ யாருன்தெய்வம்
தேட்டமாய் உபதேசித்த தேசிகர் விபரமெல்லாம்
வாட்டாமா யிருக்குமெந்தன் மனங்களித்திடச் செய்வாயே.

## குறவஞ்சி தன்விபரம் சொல்லும் சிந்து

தானேதானே தானேதானே தானே தானுனே
தானே தானே தானேதானே தானே தானுனே

அனுதியிலேயுண்டான அறிவுருபிநானே என்னே
அறிந்துகொண்டபேர்களுக்கு ஆத்மஸுகம் தானே 1

அனந்தகோடி ஜென்மங்களே அடைந்துழலுமுன்னே இப்போது
அகந்தை முதல்போக்கிவைத்து ஆனந்தமாக்க 2

குவலயத்தில் குறத்தியிடம் குறிகேட்பர் அதனுல் நானும்
குறத்திவடி வெடுத்துனக்கு குருரூபியாய்வந்தேன் 3

பளிங்கமொத்த ஹ்ருதயம் குடிகொள்ளும் குலதெய்வம் அதை
களங்கமறக் கண்டுகொண்டு களித்திருப்போம் அம்மே 4

விகார பரிணும ரூபமில்லாத தெய்வம் அதை
விளங்க புலப்படுத்தி எங்களுளம் களிப்போமம்மே 5

சுக்திவெள்ளிபோலுலகம் ஸத்யமில்லே யென்றும் பிரம்மம்
ஸத்தியமெனவும் தெரிந்து நித்யஸுக மடைவோம் 6

சாஸ்திரங்கள் ஒதுமெங்கள் ஜாதிகுல தெய்வம் பிரம்மம்
ஸ்தோத்திரங்கள் செய்து பரஸுகமடைவோம் நாங்கள் 7

கர்மத்திலே வெறுப்பு வந்து காண்பதெங்கள் தெய்வம் அதை
நிர்மலமாம் மனஸாலெண்ணி நிலையறிவோ மம்மே *8*

அனாதியனந்தமான பரமாத்ம நிஷ்டன் என்பேர் எனக்கு
அறிவென்னும்பேருடைய ஆண் குழந்தையுண்டு *9*

போக்குவரத்தில்லாத பிரம்மநிஷ்டன் என்பேர் எனக்கு
போதமயமாயிருக்கும் புத்திரனுண்டம்மே *10*

ஜனன மரணங்களில்லாத சித்ரூபி என்பேர் என்னை
சேர்ந்த நல்லடியவர்க்கு ஜீவன்முக்தி தருவேன் *11*

என்னையன்றி வேறொன்று மில்லாமையாலே உனக்கு
என்குருவை எடுத்துரைக்க இசையாது பெண்ணே *12*

தன்னைத்தானே விளக்கும் தரணிபோலம்மே என்
தன்னைதானே விளக்கும் தன்னறிவென் குருவே *13*

காரணனும் தூணிலுதித்தவதரித்த தெய்வம்
அந்த பூரணப்பதாம்புஜத்தை போற்றிசெய்வோ மம்மே *14*

விருத்தம்

குருதெய்வ மஹிமையெல்லாம் கூறகேட்டகமகிழ்ந்தேன்
அருமையாம் ஒளிசேர் ஸித்தன் அவனிருப்பிடமும் சொல்லி
உருகுமென் மனதில் சோகம் உதித்திடா துண்மைகாட்ட
திருவுளம் அருள்வாய் என்று தேன்மொழி கூறுவாளே.

வேறு விருத்தம்

உன்னைப்போல் அறிவெனும் ஆண்மகன்
தன்னைப்பெற்று தவிப்பொழிந்துன்னிடம்
சொன்ன சுத்தனை சேர்ந்திட வேண்டினேன்
என்னை யிப்படி ஏய்ப்பது நியாயமோ?

## கொச்சகம் பாட்டு

தையலுடன் கைகலந்து ஜாக்கிரத்திலே யொளித்த
மெய்யவனெங்கே யிருக்கின்ருனே அறியேன்
வையகத்தோ, ஸ்வப்னத்தோ மகாசுஷுப்தி தன்னிடத்தோ
கையையிங்கே காட்டுநன்ருய் குறிகண்டுனக்கு சொல்லுகிறேன்

## விருத்தம்

காட்டென் றவுடனே புத்தி கடுகியேவந்து கையை
நீட்டியென்மனம்பூரிக்க நீ குறிசொல்லவேணும்
பாட்டுகள் பாடியென்னை பகட்டியே மிரட்டிடாதே
கூட்டென்னை பரனேடென்று குறத்தி முன்னிருந்திட்டாளே.

## சிந்து பாட்டு

சிற்றிடையாள் திருக்கரத்தை தீண்டித்திருக்குறத்தி
சீக்கிரமாய் நோக்கியதை சிரித்துக்கையை நெரித்தாள் 1

கைத்தலத்தை பிடித்தவுடன் புத்திகண்டு நடுங்கி
கையுதறி மெய்பதறி கடுமொழிகள் உரைப்பாள் 2

கோலாலே யன்ரே சில குறத்தி குறிபார்ப்பார்
கூசாமல் என்கரத்தை குலுக்கிபிடித் திழுத்தாய் 3

நில்லடி யகல மலே நீலி எட்டிப் போடி
நீ யென்னை தொட்டிழுக்க நீதி யிதுவோடி. 4

ஏலாது எங்கள் குடிக்கீனர் கைத்தீட்டு
இழுக்கல்லவோ எங்கள் குலத்துக்கேச்சலவோ குறத்தி 5

நடுங்காமல் கைபிடித்தாய் நல்லதடி குறத்தி
நியாயமோ எனப்புருவம் நன்ருக நெரித்தாள் 6

புத்திகண்டு நடுங்கினதைப் புதுக்குறத்தி தெரிந்து
புன்சிரிப்பு சிரித்துரைப்பாள் போதமயக்குறத்தி 7

கர்ம ஞானங்களென்று காண்டமிரண்டுண்டு
கண்டுதெளி வேதமதிலுண்டோடி யென்றுரைப்பாள் *8*

தீண்டாமல் எப்படி நான் தெரிந்து குறியுரைப்பேன்
தீண்டியன்றோ ஜீவபரர் சேர்ந்தைக்கியமாவார் *9*

ஸத்சிதானந்த வஸ்து தானென்றுணராமல்
தனுவைத் தானென்று சொல்லல் ஜாதிக்கிழுக்கன்றோ *10*

தொட்டதனு விழுக்கென்று சொன்னபெண்ணே கேளாய்
ஸ்வப்பனத்தில் ஸித்தனுன்னை தொட்டதிழுக்கன்றோ *11*

மாமாலமாய்ப் பேசி மயக்கி யந்தக் குறத்தி
மறுத்துமவள் வலக்கரத்தை பிடித்து குறியுரைப்பாள் *12*

குறத்திதொட்ட தீட்டுடனே குளித்துவிட்டால்போமே
குடிகொண்ட உன்தீட்டு கூடுவிட்டுபோமோ *13*

தீட்டென்று மூன்றுநாள் வீட்டைவிட்டு விலகி
திரிந்துவிட்டு சித்கனத்தை மறந்து மதியிழந்து *14*

நாலாநாள் உதயத்தில் நன்றாயுடல்முழுகி
நடுவீட்டில் வந்திருப்பாய் நான் சுசி என்றுரைத்து *15*

தீட்டென்றும் பெண்ணினுடைய தேகத்துக்குள்ளிருக்க
தேகமேல் முழுகிவிட்டால் தீட்டோடிப் போமோ *16*

ஆசாரமாச்சுதென்று ஐந்தாநாள் முழுகி
அகத்திலுள்ள பொருள் தொடுவாய் அகத்தீட்டுப்போச்சோ *17*

அழகழகு புதுமையிது ஆத்மநிஷ்டர் மகிமை
அறியாததாலென்னை அகலநில்லென்று சொன்னாய் *18*

எத்தனையோ பெண்களுக்கு நித்தியம் குறியுரைப்போம்
இதனாலே எங்களுக்கு இழுக்கென்ப தில்லை *19*

குறமுறையில் மக்கள் நாம் குடிக்குறத்தியாவோம்
கூசாமல் கரம்பிடித்து குறியுரைப்போம் நாங்கள் *20*

கூடவைத்துகொண்டுண்பர் குறத்தியென்று தள்ளார்
உன்குறைமதியால் என்னைதொட்டால் குலத்துக்கிழுக்கென்றாய் 21

அதனாலேயன்றோ உன்னழகு கரம்பிடித்தேன்
ஆராய்ந்து பாராமல் அதிகமொழி சொன்னாய் 22

ஸாதனங்கள் கண்டுன்பிழையை ஸகித்தேனடி பெண்ணே
சரணமென்று வந்தவரைத் தள்ளோமெங்கள் முறைமை 23

உன்னையொத்த பெண்களுக்கு உகந்துகுறி பார்ப்போம்
என்னைமெத்த ஆதரித்து என்னை சரணமடைவார் 24

அடைந்தவர்கள் கர்மபந்தம் அறுத்துவிட்டாலொழிய
அவிச்சும் பச்சை யாகவிடோம் ஆசாரியார் முறைமை 25

அன்பர் மனத்து அழுக்கறுத்து அபரோக்ஷம் தருவோம்
அப்படிச் செய்வது பெரியோர் ஆசாரமறிவாய் 26

உன்பேதபுத்தியா லல்லவோ பிரமைபிடித்து சுத்த
போதனருகினிலிருக்க புவனமெல்லா மலைந்தாய் 27

பெண்மதியினாலன்றோ விண்மதியைக் கூவி
பிதற்றினாய் அதனையடைந்த பெரும்பொருளைக்காணாய் 28

வெய்யமன நிலையாமையாலே யன்றோ பெண்ணே
மெய்யன்வந்து சேர்ந்தவனை விட்டகன்று நின்றாய் 29

துவைதபுத்தி கண்டு உனக்கு ஸ்வயம் ஸ்வபிரகாசன்
ஸூக்ஷ்மமாகவே யிருந்து தோன்றவில்லை பாராய் 30

ஒருகுலத்தில் பெண்கொடுத்து ஒரு குலத்தில் கொள்ளோம்
உறவு வைத்தால் விடமாட்டோம் உயர்குறவர் நாங்கள் 31

சிரவண குருஸேவை ஸத்ஸங்க மற்ற தோஷம்
ஸந்தேகம் தீரவில்லை சபல சித்தமானாய் 32

ஸத்ஸங்க வாஸனையும் தபஸுமில்லாமல்
தன் ஆத்ம கைவல்யம் ஆகாததோஷம் *33*

கிட்ட விருக்கும் பரனை விட்டலையு முனக்கு
கட்டமுகி யான் தெரிந்த காரியங்களுரைப்பேன் *34*

விதி நிஷேதாதி கர்மம் வியர்த்தமன்றோ பெண்ணே அந்த
விபரீத பிராந்தியினால் வெளியாவதில்லை *35*

உள்ளதனை வுள்ளபடி ஒளியாமல் சொன்னேன்
உந்தனைப்போல் ஒருவருக்கும் உண்மை சொல்லவில்லை *36*

உள்ளதனை உள்ளபடி யுரைத்திடுவோம் நாங்கள்
ஒஹோஹோ உங்கள் கர்ம சாஸ்திரங்கள் போதும் *37*

மகிமையாய் அழைத்ததனால் வந்தேன் குறிபார்க்க
மலைக்குறவன் இதுகேட்டால் கடும்பார்ப்பு பார்ப்பான் *38*

புனக்குறவன் பூனைபுலி பிடித்து வரலாச்சே
போகவென்றால் குடிசைக்குப் பொழுதிறங்கி போச்சே *39*

எத்தனையோ பெண்கள் கையை யிழுத்து வைத்து பார்த்தேன்
இவளுடைய கை மஹிமை எவர் கரத்தும் காணேன் *40*

பல்லவமும் பழிக்குமிந்த பான்மொழி செங்கரங்கள்
பலவி தமாம்ரேகைகளை பார்த்துப் பலனுரைப்பேன் *41*

சங்கரேகை பத்மரேகை டமருக நல்ரேகை
ஸாக்ஷாத்பதம் கொடுக்கும் ஜாதிமத்ஸ்ய ரேகை *42*

அற்புதமாய் உன்கையில் அம்புஜரேகை கண்டேன்
அபரோக்ஷ ஸாம்ராஜ்ய மடைவ ளிவளன்றோ *43*

என்னுடைய பசியாற்றி எனக்கு திருப்தி செய்தால்
இன்னுமின்னும் பலகுறிகள் எடுத்துரைப்பேன் பெண்ணே *44*

ஸத்தியமிது ஸத்தியமிது ஸத்தியமிது சொன்னேன்
தப்பியன்றுபோன சுத்தனிப்போழுதே வருவான் 45

நிச்சயமாய் ஜீவன்முக்தி பெற்றிடுவாய்பெண்ணே
கொச்சியம்மை ஆணையென்று கூடைதன்னில் அடித்தாள் 46

இன்னுமின்னும் வெகுகுறிகள் எடுத்துரைப்பேன் பெண்ணே
எனக்கொருக்கால் இலையடைக்காய் இடுவாயோ சொன்னேன் 47

## விருத்தம்

இப்படிப் பலவாருக ஏந்திழை மனம் சோதிக்கச்
செப்பிய மொழியைக் கேட்டுச் சிரித்துடன் புத்திமாதும்
ஒப்பருங்குறத்திக் கங்கே உத்தரமுரைக்கப்பின்னும்
அப்படிப்பேசி வஞ்சியவட் குபதேசிப்பாளே.

## சிந்து

அடைக்காய் கேட்டாய் வஞ்சி அருமையோ உனக்கு
கடக்கவெனக்கு வழி காட்டினல் தருவேன் 1

கடைவாயிலடக்க நான் அடைக்காயை கேட்டேன்
கட்டாயமா யிப்போது கிட்டாது என்ருய் 2

வயிற்றுப் பசியடக்க வாய்ச்சோறு கேட்டேன்
வடிவழகியே தனம் வழங்குவேனென்ருய் 3

மெத்த தருவேனென்ருய் மெல்லியரே உனக்கு
சொத்தைப் பாக்குக் கூடத்தரச் சித்தம் வரவில்லை 4

லோபமென்னும் கெட்டகுணம் போகவில்லை யின்னும்
கோபமுதலாறு சத்துரு குடிகெடுக்கும் பெண்ணே 5

காமகுரோத லோபமோஹம் கழியாத பேர்க்கு
கடுநரகே சிலாக்கிய மென்று கதறும் வேத வாக்கியம் 6

காமகுரோத லோப மோஹம் கழிந்தவர்க்கு நாங்கள்
கர்ம பந்தம் போக்கி யாத்ம கைவல்யம் தருவோம். 7

பித்தரைப் போலெத்தனை நான் பிழைகள் சொன்னாலும்
அத்தனையும் நீ பொருத்தென் சுத்தனை காட்டிடுவாய் *8*

ஈரேழு புவனங்களி லெங்கேயும் காணேன்
இப்படி பணிந்துரைக்கு மொப்பரும் பெண்மணியை *9*

பசிதாக மெனக்கில்லை பரமாத்மா நானே
பரீக்ஷித்தேன் உன்மனதை பணிந்து நீ சொன்னாய் *10*

எத்தனை யபராதம் எனக்குச் செய்தாலும்
இசைந்துடன் பணிந்திட்டா லீடேற்றிவிடுவேன் *11*

பதறாமல் என்வார்த்தை பாவித்தபேர்க்கு
பரமாத்ம கைவல்யம் பலித்திடும் பெண்ணே *12*

காட்டு காட்டென்கிறாய் கைவல்யம் தன்னை
காட்டவது ரூபமுள்ள கடபடங்களல்ல *13*

வேறு

காட்ட வென்றாலது கடபட மில்லை
மாட்டேனென்றா ளந்தமலைக் குறத்தி *1*

மாட்டேனென்றா லிங்கே வருவானேன் குறத்தி
தாட்டோட்டுப் பேசி நீ தப்பவோ வந்தாய் *2*

தனமெல்லாம் அதிகமாய் தந்தாயே அந்த
தனமெல்லாம் கைப்பற்றி தப்பவே வந்தேன் *3*

எப்போது மிப்படி தப்பிதம் சொல்ல
எந்த குருவினுபதேச மீதென்றாள் *4*

வீணுக்குன்கையிங்கே வீசாதே போடி உன்
ஆணவமெல்லாம் அடக்கிக்கொள் ளென்றாள் *5*

தப்பித்தோடும் குணம் ஸகஜம் உனக்கே
அப்படிப்போல நான் அவிவேகி யில்லை *6*

அவிவேகி யில்லை யென்றால் ஆத்மாவை யுள்ளே
அபரோக்ஷமாய் விளக்கி யருள் செய்வா யென்றாள் 7

ஒளியை விளக்கவோர் ஒளியுண்டோ பெண்ணே
வெளியாக உனக்கு நான் விளம்பினே னுண்மை 8

விண்ணில் ஸூரியன் பார்க்க கண்ணே போதாதோ
விளக்கை கொண்டதைக் காட்டி விளக்கு வாருண்டோ 9

ஒருக்காலுண்மை சொன்னா லுதிக்குமோ அறிவு
உபமான முரைத்திட்டால் உடனே நானறிவேன் 10

ஒப்பிக்க வதற்கிங்கே உபமான மிலேயேயுன்
உணர்வா லனுபவித்து உணர்ந்து கொள்ளென்றாள் 11

வகை தொகை காட்டி யென்மனத்திருள்போக்கி
ஸுகத்திலிருந்த சுத்த ஸ்வரூபத்தை காட்டாய் 12

குருகிருபையில்லாமல் கூடுமோ உணர்வு
குறத்தி வடிவெடுத்த குருவே சொல்லென்றாள் 13

வகைதொகை சொல்வது வாக்குக் கெட்டாதே
வகுத்த குறியைக்கொண்டு தொகுத்துக் காணென்றாள் 14

குறிபார்க்க விங்கே யார் குறத்தியாய் வந்தெங்கள்
குடி கெடுக்கவோ வந்தாய் கோடாரிபோலே 15

குடியென்பதென்ன மாயாவர்க்கமதன் வேரைக்
கொத்திப் பிடுங்கவே நான் குறத்தியாய் வந்தேன் 16

ஆனதே நல்லதென்றன் அஞ்ஞானந்தனை போக்கி
மெய்ஞ்ஞான உபதேசம் விளங்கச் செய்யென்றாள் 17

உபதேசம் செய்ய வென்றால் வெகு தூரமிருக்குதோ
பல தேசம் போகவேண்டாம் பக்தர்கட்கென்றாள் 18

பக்தி எனக்கிருந்தும் பரிபூர்ண மாச்சுதோ
பரமாத்ம தரிசனம் பண்ணிவை யென்ருள் 19

பண்ணிவைப்பதொன்றில்லை பார்க்கப்படுவதில்லை
பரிபூர்ண கிருபை உன்மேல் பண்ணினே னறிவாய் 20

ஸம்சய விபரீதம் சற்று மில்லாததைச்
சடுதியாய்த் தெரிந்துகொள் ஸத்குரு நானே 21

குருவென்ற சொற்கேட்டு குளிர்ந்து மெய்புளகித்து
குதித்து கரங்குவித்துக் கும்பிட்டு நின்ருள் 22

குருகிருபை வந்தபின் குறையென்ன வெனக்கென்று
கோதில்லா குருபாத மீதினிற் பணிந்தாள் 23

பணிந்தவுடனே குருபக்திக் கதிசயித்து
பதரும லுபதேசம் பண்ணிஞள் உடனே 24

அயமாத்மா பிரும்ம மென்னு மாரணவாக்கியத்தால்
அறிந்து பார்த்ததுவே நீ யாவாயென் றுரைத்தாள் 25

உபதேசம் பெற்ற உடன் ஓவியம்போல் நின்று
உள்ளே தன்னறிவாலே யுணர்ந்து அகமகிழ்ந்தாள் 26

தளராத நிலை தன்னில் தங்கிஞள் மனனத்தால்
தானே யெல்லாமாகத் தரிசனம் கண்டாள் 27

விருத்தம்

நிர்விகல்பஸமாதியிலே நின்று புத்தி
நினைத்து வெளி வந்தெதிரே நிற்கும் போத
குருவடிவை வணங்கி எந்தன் குறைகள் தீர்ந்தேன்
கோதில்லாக் குலக்கொடியே குருவே சொன்ன
ஒருமொழியாலுணர்ந்து மயலொழிந்தேன் இந்த
உதவிக்கு பதிலுதவி யொன்றும் காணேன்
திருவடியே சரணமென கரங்கள் கூப்பி
தெண்டனிட்டாள் பண்டிழந்த தேஜஸை கண்டாள்

## மங்களம்

ஜயமங்களம் நித்திய சுபமங்களம்
மங்களம் ஐங்கரருக்கும் மயிலேறு முருகருக்கும்
மங்களம் பாரதிக்கும் பிரம்மாவுக்கும்
மங்களம் ஆரூட ஞானியருக்கும் யோகியர்க்கும்
மங்களம் பரமகுரு பதங்களுக்கும்

ஜயமங்களம் நித்திய சுபமங்களம்

ஓதரிய மகாவாக்கிய உபதேசம் புத்திக்கு
உவந்துசெய்ய வெண்ணி மனவுறுதியாக
போதமயமா யொளிரும் பொருளையொரு நிமிஷத்தில்
புலப்படுத்தி வைத்த குறப்பூவையற்கும்

ஜயமங்களம் நித்திய சுபமங்களம்

ஆதியந்த மில்லாமல் அனவரத மொளிருமோர்
அற்புத அகண்ட வொளியானதற்கும்
மேதினியி லிணையிலா மெல்லியல் புத்திக்கும்
மேன்மைதரு குருவுருவ மேவினோர்க்கும்

ஜயமங்களம் நித்தி ய சுபமங்களம்

எத்திக்கும் அதிரவே யிரணியனை மார்பிளக்க
எண்ணியொரு தூணிலிருந் தெழுந்துவந்து
பக்திக்குவித்தான பிரஹ்லாதற் கருளியிப்
பாரில் நரஹரியாய் வந்த பரமருக்கும்

ஜயமங்களம் நித்திய சுபமங்களம்

அகிலமும் படைத்துக் காத்தழிக்கு முத்தொழில்களே
யலகிலா விளையாட்டதான கரிய
முகிலனைய மேனியுள்ள முதல்வருக்கும் பேரின்ப
முக்திக்கு வித்தான மூலருக்கும்

ஜயமங்களம் நித்திய சுபமங்களம்



# வாலாம்பிகை பந்து

ஜகத்ஜனனி வாலாம்பிகையம்மன் திருவிளையாட்டைப் பாடவே,
அனுக்ஞையாகவே முன்நடத்தவேணும், ஆனைமுகவர் ஸரஸ்வதியே
ஜாக்ரஸ்வப்ன ஸுஷுப்தியுடன் கூடி சோக மோகத்தில் கூடியே,
அற்பஜீவனை மெய்யென்றெண்ணி கர்ம சஞ்சிதம் கூடியே,
சிவதற்பதமென்னும் பதத்திலே நாடியே, நிர்க்குணத்தில்
விளையாடியே,
ஸ்வஸ்வரூபம் உரைத்தாரெனக்குண்மை சொல்லிப்
பந்தொன்றடிப்பளே *1*

பட்டணமென்னும் காயாபுரிதன்னில் பந்தடிக்கவே அம்பிகை,
கட்டு மூன்றும் விட்டப்புறம் சொன்ன புஷ்ப மண்டப மத்தியில்,
அஸத்தை தோழிமார் அஸத்தென்று தள்ளி அடித்து வெளியில்
துரத்தவே,
சிவசமத்தியென்பவள் முக்தி பெண்ணோடே சங்கரிரெண்டு
பந்தடிப்பளே 2

லிங்கமென்னும் பதினேழு பேர்களை நிக்ரஹம் பண்ணித் தள்ளியே,
பந்தமென்பதோர் சந்தைக்கூட்டத்தை ஆசை விரக்தியாய்த் தள்ளியே,
இரண்டில்லை வஸ்து ஏகமென்றறி ரஹஸ்யம் தன்னைச் சொல்லியே,
அண்டம் நிறைந்த வல்லியுடன் அம்மன் அம்பிகை மூணு
பந்தடிப்பளே 3

சாஸ்திரமென்னும் தண்டைபாடாம் சலசலவென்று இலங்கவே,
நல்ல மஹத்தென்று வேதாந்த சாஸ்திரம் வஜ்ர கல்லொளி மின்னவே,
ஸாக்ஷி நாமென்று சலங்கை சப்தங்கள் ஸத்தியலோகம் முழங்கவே,
பார்த்து மாயையை தீர்த்துவிட்டு சேர்த்து நாலு பந்தடிப்பளே 4

வேதரூபி திருமருங்கிலேயே வித்தை வெண்பட்டு சாத்தியே
ஜாதிபேதம் நாமமற்றதோர் சந்தனம் தன்னைப்பூசியே
ஆறையும் தள்ளி ஞானமளித்த விழிக்கு அஞ்சனமெழுதியே
பேதமற்றதோர் பிரம்மவித்தையே சேர்த்து ஐந்து பந்தடிப்பளே 5

நித்திய மென்பதோர் முத்துமூக்குத்தி நேர்த்தியாய் மூக்கில் சாத்தியே
பரிசுத்தமென்பதோர் ஹஸ்த கடகம் பாஜி பந்து பூட்டியே
லோகர் அகர்த்தர் தாமென்றும் கடகம் பவழம் கணையாழி கையிலே
அமர்த்தியே,
பிரம்மலோகம் அநித்யமென்று அம்மன் பரிந்து ஆறு
பந்தடிப்பளே 6

காமகுரோத லோப மோஹ கஸ்தூரிபொட்டிட்டு ஒழுகவே
ஆதியந்தம் இரண்டு மற்றதோர் அமர்ந்த சுட்டியுமின்னவே
ஜோதி நாமமென்றும் ஜம்பகமாலை சொருக்குமேலே யசையவே
யம நியம பிராணாயாமமற எடுத்து ஏழு பந்தடிப்பளே 7

கோசமஞ்சுக்கும் விலக்ஷணமாற கொப்புந் தோடும் குலுங்கவே
சிரவண மனன நிதித்தியாஸனமாற ஸத்துக்களுடன் கூடியே
அடுத்தடுத்து பிரம்மம் வசத்தில் ஹர்ஷணம் தன்னில் விளங்கவே
துரிதம் ஜனனம் மரணம் தன்னை தீர்த்து எட்டு பந்தடிப்பளே 8

சமதமமென்னுங் காரைக்கொடிகள் தரித்து கழுத்திலிலங்கவே
உபரதியான முத்துமாலை உருண்டு ஸ்தனத்தில் மின்னவே
ஸத்ய ஸமாதான மோக்ஷம் ஒட்டியாணமாக விளங்கவே
ஸத்து சித்தானந்தத்துடன் கூடி சருவி ஒன்பது பந்தடிப்பளே 9

வர்ண ஸமோஹம் தன்னிலே வந்து விளையாடியே
பரிசோதனை பண்ணியே யம்மன் பக்தருக்காக விளங்கவே
அப்பு லவணம்போலே மனசு அகண்டந் தன்னில் கரையவே
பொய்யான இப்பிரபஞ்சம் ஸுப்ரகாசமாய் விளங்கவே
சரீர ஜகத்தை மறந்து ஸமாதியில் சங்கரி பத்து பந்தடிப்பளே 10



# ஸ்ரீ வித்தை சோபனம்

(ஸ்ரீமதி கோமதி ராஜாங்கம் அவர்களின் விளக்கங்களுடன்)

(ஆவுடையாக்காள் அவர்கள் ஒரு பிரம்ம ஞானவதி. பெண்களுக்குக் கும்மியடிக்கும் மெட்டில் உயர்ந்த தத்துவத்தைக் கும்மியாகப் பாடியிருக்கிருள். வித்தையென்ற பெண் பக்குவமடைந்ததாக நடந்ததான நிகழ்ச்சிக்கு சூழ்களம் அமைத்து அத்வைத ரஸம் குன்ருதபடி அழகாக எழுதியிருக்கிருள். சாதாரண அறிவுள்ளவர்களுக்கு இது வேதாந்தத்தின் முதல் பாடமாக அமைந்துள்ளது. முற்றும் தெரிந்தவர்களுக்கு இது ஒரு வேதாந்த இலக்கியமேயாகும். இது அச்சில் வெளிவந்ததாகத் தெரியவில்லே. அப்படி வந்திருந்தாலும் யார் விரும்பி அறிந்து படித்திருக்கப் போகிருர்கள்? அக்காள் பாடலில் ''ஒரு பாவியாகினும் பரமார்த்தம் தன்னேப் பாராளே'' என்றும், ''பக்தி வைராக்யப் பாதையில் முள்ளுக்கள் உண்டோ'' வென்றும் பாடியிருக்கிருள். எதுவும் ஒரு பத்திரிகை மூலமாக வெளிவந்தால் ஆயிரக்கணக்கான பேர்கள் பார்ப்பார்களல்லவா? அவர்களில் ஒருவருக்காவது ரஸம் உண்டாகாதா? என்றே எழுதலானேன். பிழை பொறுத்து, குற்றம் நீக்கி குணம் கொள்ளுமாறு பெரியோர்களே வேண்டுகிறேன்.

இது வித்தை என்னும் பெண்ணுக்குப் பருவம் தொடங்கி, புஷ்பவதியாகி, பிரும்ம புருஷனுடன் ஐக்யமாகும் பாடல். பிராம்மணர்களின் ஸம்ஸ்காரங்களேத் தழுவி மறைபொருளாக வேதாந்த உண்மையை ஸ்ரீ அக்காள் இதன் மூலம் போதிக்கிருள். இக்காலத்தவருக்கு (பிராம்மணர்களுக்குக் கூட) இது புதுமையாகவே தோன்றும். இவைகளேக் கூடுமான வரை அந்தந்த இடங்களில் விளக்க முயற்சித்திருக்கிறது, ஒருவாறு புரியுமென்றே நம்புகிறேன்.

## விநாயகர் காப்பு

## வெண்பா

கைம்மானுடைய நூதற்கண்ண னுமையாள் பயந்த
கைம்மாமுக னிருதாள் காப்பாமே - மைம்மருவா
நித்யானந்தப் பொருளி னீங்காத வேதாந்த
வித்யா சோபன முரைக்கவே

## கும்மி

ஸ்வப்ரகாச சிரோமணி சோபனம்
அற்புதமாகவே நான் பாட
சக்தி கணபதி சாரதா சாம்பவி
ஸத்குரு சாந்த நரஸிம்மராம்

அத்தனே பேருக்கனந்த நமஸ்காரம்
ஆனந்த சோபனம் நான் தமிழில்
செப்புகிறேன் சிறு புத்தியினாலதில்
குற்றமிருந்தால் குருஜனங்கள்

தப்பெடுத்துத் தந்து தட்டுதல் வராமல்
ஸாங்கமாய் நிறைவேற்றவேணும்
வெகு ஜென்மம் தோறும் புண்ணிய கர்மங்கள்
பண்ணியே ஈசுவரர் பிரீத்யர்த்தமாய்

சமதம உபசாந்தியுடன் கூடச்
சட்டமதாய் வித்தைதான் பிறந்தாள்
அவித்தையுடன் விளையாடாதே
அந்த ஸகவாஸம் பண்ணாதே

மகத்துக்கள் ஸேவை எனும் அமிருதத்தை
குடித்துக் கொந்தளித்தே வளர்ந்தாள்
ஐந்து வயது நிறைந்தபின் தேவிக்கு
அறிந்து சிவனும் பிரஸன்னராகி

காலம் தப்பாமலே கிரமமாய் தீக்ஷித்து
வேண்டும் புத்தி எல்லாம் உரைத்தார்
தன்னுபதேசம் பலித்ததைச் சிந்தித்து
தானே நித்யானந்த பூரணராய்

பஞ்சாக்ஷரத்தினால் பாணிக்கிரஹணத்தை
பண்ணிக்கொண்டு மெள்ளவே நடந்தார்.

அந்தணர் குலத்தில் பெண்களுக்கு பால்ய விவாஹம் செய்வது யாவரும் அறிந்ததே. பெண்களுக்கு விவாஹமே உபநயனமன்றோ! அதனால் ஸ்ரீ வித்தைக்கு ஐந்தாவது வயதில் பரபிரம்மமான பரமசிவனுடன் விவாஹம்

நடந்து பஞ்சாக்ஷர மந்திரமாகிய மாங்கல்ய தாரணமும் நடந்தது என்று ஸ்ரீ அக்காள் கூறுகிருள்.

சிவனுடைய ரகஸியத்தை அம்மன்
சிந்தையில் நன்ருய் நினைந்துகொண்டு
பரமஹம்ஸ பக்தி பண்ணி அனுதினம்
பண்ணி சிரவண மனனங்களை

ஸ்படிகம் போல் சுத்தமான தன்னுள்ளத்தில்
சந்ததம் மோக்ஷ அபேக்ஷையுடன்
இந்து, ஆதித்தன், அக்கினி மூன்றையும்
ஈடழிக்கும் அதி காந்தியுடன்

அந்தப்புரத்திலேதான் வளர்ந்தாள் வித்தை
சந்திரன் கண்ட பயோததி போல்
நித்யாநித்ய விவேகத்துடன் வித்தை
சித்தம் தெளிந்து அதிதீக்ஷ்ணமாய்

சத்துக்களோடே சருவி விளையாடி
தர்க்கமிட்டு சங்கைபண்ணிக்கொண்டு
உபரதியென்னும் ஒத்ததோழியோடு
உருக்கிய தங்கம் போலே வளர்ந்தாள்

வாசனை எனும் அழுக்கறவே குளித்து
அமாவாஸை கழிந்த வளர்பிறைபோல்
பக்திக்கு விக்னமாம் ஈஷணை மூன்றும்
அகற்றி விட்டு ஈனமற வளர்ந்தாள்

ஸத்குருபாதத்தில் பக்தி மிகுந்ததாய்
சரீரம் ஒடுங்கி வணங்கவே
எப்போதும் ஸத்ஸங்கவாசனை தன்னுலே
பக்குவமாகிப் பருவமானுள்

முக்தியாகிய மன்மதன் பூங்கணை
கிட்டித்தொடுக்கு மந்நாளையிலே
சித்தத்துக்குள்ளே சிவனை நினைந்தம்மன்
மெத்த விசாரப்பட்டேஇருந்து

நிர்குண பிரம்மத்துடன் லயமாகியே நான்
நித்யஸுகத்தை அடைவேனோ?
அகண்ட பிரம்மத்தோடைக்யமாகியே
ஆனந்தமாவேனோ ஆகேனோவென்று

தவித்துக்கொண்டு இருக்கும்போது
ஸச்சிதானந்தர் அங்கே ஆவிர்பவித்து
தாரக பிரம்ம உபதேசத்தைக்காதில்
தப்பாமல் மூன்றுதரம் உரைத்தார்

பேத புத்திபண்ணும் ஜீவேசுவராளால்
பின்னே நமக்குப்பிரிவதில்லை
ஏகம் தான் எப்போதும் என்று திருநீற்றை
இட்டு அவள் நெற்றியிலே நடந்தார்.

ஸ்ரீவித்தை, மரத்தைச் சுற்றும் கொடிபோல், தன் கணவனான பரம புருஷனை என்று அடையப்போகிறோம் என்று ஏங்கும் நாளில் ஆத்மஞானம் வளர்பிறை என வளர்ந்து வந்தது. குரு உபதேச மந்திரத்தை ஸதா ஓதுவதால் நித்யா நித்யவிவேகம் ஏற்படுவதுபோல் வித்தைக்கும் அநேக ஸந்தேகங்கள் தோன்றவே நாம் செல்லும் மார்க்கம் சரியானதுதானாவென்று தீவிரபயம் உண்டாயிற்று. அப்பொழுது பிரம்ம புருஷனான கணவன் மனக்கண்ணின் முன் தோன்றி ''நீ போகும் மார்க்கம் சரியே; பயமடையாதே, என்னையடையும் காலம் ஸமீபித்துவிட்டது'' எனச்சொல்லி ''ஏகமே பிரம்மம்'' என்ற தீக்ஷையையளித்து மறைந்தார்.

நிஷ்களமான ஸ்வரூபத்தைக்கண்டு
நிஜானந்தமான பரவசமாய்
பிரக்ஞானமாகிற சக்ஷு சுழன்று
பதினாறு லோகமும் தாண்டி வர

அஹம்பிரம்ம ஞான விரஹதாபத்தால்
அதரம் உலர்ந்து துவரவே
தத்வமஸி எனும் தாமரைக்கொங்கைகள்
மெத்தப் பெருத்துச் சிறுகவே

அயமாத்மாவாகிற அநுபவமிஞ்சி
இடைதுவண்டு துகில் நெகிழவே
அகண்ட பூமாவாக இருந்த என்னை
அறைக்குள்ளிலே அடைத்துவிட்டு

எங்கும் பரிபூரணமாக இருந்த என்னை
எண் சாணுகவே ஆக்கிவிட்டு
பின்னமே இல்லாத பிரம்மத்தினின்று என்னை
பிரித்துக் கண்டமாக பண்ணி விட்டு

இந்த துராக்ருதம் பண்ணும் பரமேசுவராள்
எங்கே போனுல் தான் நாம் விடுவோம்
சுருதி பெண்கள் பரமருக்கும் புத்தி
சொல்ல வேண்டுமெனவே இருந்தாள்

தத்பதவாசல் விளங்கவென்றே ஸச்சித்
ஆனந்த பிள்ளை பிறக்கவென்றே
பொருத்தமான தினத்தினிலே அந்த
பெண் சிரோமணி பூ மலர்ந்தாள்

இங்கு பூ நீராடல் என்பதைப் பற்றிச்சற்று விளக்கமாகக் கூருவிட்டால் இக்காலத்தவர்களுக்கு இது முற்றும் புதுமையாகவே தோன்றலாம். சற்றேறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்வரையும், பெண்களின் புஷ்பவதியான விழா விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வந்தது. பிராம்மணர்கள் இதை நான்கு நாட்கள் கொண்டாடுவார்கள். மற்றவர்கள் இப்பொழுதும் பதினறு நாட்கள் இதைக் கொண்டாடுகிருர்கள். வீட்டு மகள் புஷ்பவதியானதும் வேருக ஒரு அறையில் ஒதுக்கிவைப்பார்கள். அவளுக்கு ஒத்த தோழிப்பெண்களை, ஆனல் பருவமெய்யாதவர்களை அவளுக்குத் துணையாக இருக்கச் செய்வார்கள். கன்னி மங்கையாகும் ஆரம்பநாள் இது. இனி முற்றும் வேறு மார்க்கத்தில் கணவன் துணையுடன் செல்லுபவள் அவள். பிள்ளை பிராயத்து விளையாட்டுத் தோழிகளிடம் விடைபெறும் நாள் இது. ஆதலால் அந்த தோழிகளுடன் நான்கு நாட்கள் கூடிக்களித்து அவர்களுக்குப் பிரிவுபசாரவிருந்து நடத்துவார்கள். இந்நான்கு நாட்களும் அத்தோழிப் பெண்களுக்குக் கொண்டாட்டம்தான். அவர்கள் இட்டது சட்டம். எல்லையில்லா ஸ்வதந்திரத்துடன் அவர்கள் விளையாடுவார்கள். முதல் இரண்டாவது நாள்களில் நெல்மணிகளைப் பரப்பி அதன் மேல் பருவமடைந்த மங்கையை உட்கார்த்திவைத்து அவள் தோழிகள் சோபனம் பாடுவார்கள். அப்பொழுது அவர்கள் தன் தோழியின் குணதிசயங்களையும், புகுந்த வீட்டு பிறந்த வீட்டுப் பெருமைகளையும் பாடுவார்கள். மூன்ரும் நாள் புட்டு வைபவம். உற்ரூர் உறவினர்களை அன்று விருந்துக்கு அழைப்பார்கள். அன்று இத்தோழிப் பெண்களுக்குக் கொண்டாட்டம்தான். ஒவ்வொரு விருந்தினரையும் இழுத்து உட்கார்த்திவைத்துப் பாடுவார்கள். அவர்கள் இப்பெண்களுக்குப் பரிசு கொடுக்க வேண்டும். கொடுக்காவிட்டால்

நிந்தாஸ்துதியாக ஏசுவார்கள். அதற்காக இவர்களைக் கோபித்துக் கொள்ளக்கூடாது என்று சட்டம். நான்காவது நாள் பருவமங்கை தன் ஸாமான்களை இத்தோழிகளுக்குப் பரிசாகக் கொடுத்து விடுவாள். எல்லோரும் மேள வாத்யத்துடன் நதிக்குச் சென்று மங்களஸ்னானம் செய்வார்கள். அங்கு எல்லோரும் கோடி வஸ்திரம் அணிந்து அலங்கரித்துக் கொண்டு ஊர்வலமாக வீடு திரும்புவார்கள். பருவ மங்கையின் பெற்றோர்கள் தோழிப் பெண்களை வரவேற்று விருந்தளித்துப் பரிசுகொடுத்து அவர்களுக்கு விடைகொடுத்து அனுப்புவார்கள். அப்பெண்கள் தங்கள் தோழியைப் பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழவேண்டுமென்று ஆசீர்வதித்துவிட்டு பிரியாவிடைபெற்றுச் செல்வார்கள். ஸ்ரீ ஆவுடையக்காள் தன்னுடைய வித்தை சோபனத்தில் இவ்வைபவத்தை ஞானபரமான முறையில் வர்ணித்திருக்கிறாள். அது பின்வருமாறு:

ஸுந்தரி வித்தை மலர்ந்ததோர் சோபனம்
தேச தேச மெங்குமே பரவ
அந்த சேதி தன்னைக் கேட்டு சுருதிப்பெண்கள்
எங்கே எங்கே என்று அங்கு ஓடி வந்தாள்.

(இவ்வுபநிஷதங்கள் வித்தைக்குத் தோழிப் பெண்கள் என்று அக்காள் கூறுகிறாள்.)

பாடலாம் பரஞானம் தன்னைப்
பல ஏசலாம் பரஜீவர் தம்மை சுட்டுப்
போடலாம் மத வாதியர் தமை என்று
கூடிக்கொண்டு கொம்மாளமிட்டார்

மூலாதாரமாம் மண்டபத்தில் பெண்கள்
முத்தை இடித்தங்கே கோலமிட்டு
தேசதேசமெங்கும் தோற்றிவைக்கும் ஒரு
சித்ரூப தீபத்தை ஏற்றி வைத்தாள்

யமநியமாஸன பிராணாயாமாதி
இலக்கற்ற முத்தை அடிப்பரப்பி
தாரணை தியான ஸமாதி எனுமொரு
தங்கப் பட்டுப் பாயை மேல்விரித்து

பூர்ணகல்யாணிக்குப் பாதாதி கேசாந்தம்
பொருந்த ஆபரணம் சாத்தி
நல்ல ஸுகந்தாதி மல்லிகை முல்லைகள்
நாகரீகமாகச் சூட்டிக் கொண்டு

நித்யகல்யாணியைப் பட்டுப்பாயின்
மேலே நேரே கிழக்காக வைத்துக்கொண்டு
கச்சை கட்டிக்கொண்டு சுற்றும் குமாரிகள்
கருதி சோபனம் பாடலுற்ருள்

ருக்வேதமொரு தலைவியாம் யஜுர்வேதமொரு தலைவியாம்
ஸாமவேதமொரு தலைவியாம் அதர்வணமொரு தலைவியாம்
ஐதரேயமென்று ஒரு தலைவியாம் தைத்திரீயமென்றொருதலைவியாம்
சாந்தோக்யமொரு தலைவியாம் மாண்டூக்யமொரு தலைவியாம்
ஈசாவாஸ்யமொரு தலைவியாம் கேன மென்றொரு தலைவியாம்
பிருகதாரண்யமொரு தலைவியாம் பிரச்ன மென்றொரு தலைவியாம்
உபநிஷத்தொரு தலைவியாம் பின்னும் சுருதிப்பெண்கள் அனந்தமாம்

வகைவகையாக நின்றுகொண்டு பெண்கள்
மாற்றி சந்தைகள் வைத்துக்கொண்டு
வசந்தகோகிலம்போல உடலெங்கும்
குலுங்க சோபனம் பாடலுற்ருர்

நித்யகல்யாணிக்குச் சோபனம் சோபனம்
நிஷ்களரூபிக்கு சோபனம் சோபனம்
ஸத்யஸ்வரூபிக்குச் சோபனம் சோபனம்
ஸச்சிதானந்திக்கு சோபனம் சோபனம்

அகண்டரூபிக்கு சோபனம் சோபனம்
ஆனந்தவல்லிக்கு சோபனம் சோபனம்
விசுவம் பதினுலும் பெற்றுவிட்டுத்தான்
விலக்ஷணமாக இருந்துகொண்டு

சிருஷ்டி ஸ்திதிலயகாரணமாகிய
சித்ரூபரூபிக்கு சோபனம் சோபனம்
இப்படி சோபனம் பாடிக்கொண்டு பெண்கள்
எழுந்தெழுந்து குதித்துக்கொண்டு

நீலவளைக் கையை கொட்டிக்கொண்டு பெண்கள்
நேர்த்தி நேர்த்தி என்று பாடிக்கொண்டு
ஐம்பொன் வளைக்கையைக் கொட்டிக்கொண்டு பெண்கள்
அவித்தை ஒழியென்று பாடிக்கொண்டு

மஞ்சள் வளைக்கையைக் கொட்டிக்கொண்டு பெண்கள்
மாயை ஒழி என்று பாடிக்கொண்டு

பிஞ்சு வளைக்கையைக் கொட்டிக்கொண்டு பெண்கள்
பிறப்பே ஒழி என்று பாடிக்கொண்டு

சில்லு வளைக்கையைக் கொட்டிக்கொண்டு பெண்கள்
ஜன்மம் ஒழி என்று பாடிக்கொண்டு
ஈரேழுலகமும் தட்டுநெறியவே
வீசி வீசி குதித்துக்கொண்டு

பந்தமாகிய பாடகம் பூந்தண்டை
மெட்டி தெறித்தப்பால் ஓடவே
ஆவரணமென்னும் அரையின் பூந்துகில்
அவிழ்ந்து குலைந்து அங்கு அலையவே

விக்ஷேபமாகிய கச்சை கிழிந்துபோய்
ஸ்வப்ரகாச ஸ்தனம் துலங்கவே
ஸம்சயமாகிய தங்கதாடகங்கள்
கம்பியுடன் காதில் கழலவே

கர்த்ருத்வமாகிற கொத்துஸரப்பளி
கொக்கி தெறித்தப்பால் ஓடவே
அகம்பாவமென்கிற அழகுறு கங்கணம்
அடிச்சடிபட்டு நெறியவே

விபரீதமாகிய விஸ்தார திலகம்
வேர்த்து வேர்த்து வழியவே
கர்மமென்கிற மல்லிகை நன்மலர்
கசங்கி சிதறி உதிரவே

விதிநிஷேதங்கள் இல்லை இல்லை என்று
பவழ துவர்வாய் உலரவே
விதவிதமாகிய சோபனங்கள் பாடி
வேர்த்து சலித்து சற்று ஓய்ந்தவர்கள்

அடிப்பரத்தின முத்தை வாரி
அங்கே அடக்கமாகவே வைத்துவிட்டு
பொறுக்க ஒண்ணுப்பசியுடனே பெண்கள்
போஜன சாலைக்கே வந்துவிட்டார்

நித்ய திருப்த பரிபூரணானந்தமாம்
நிர்மல அன்னம் புஜித்தவர்கள்

ஸத்யமெனும் நல்ல கற்பூர தாம்பூலம்
ஸந்தோஷமாய் மென்றெதுக்கிக்கொண்டு

முத்தைக்கொடுத்தவர் வெற்றிலே வாங்கியே
அத்தனைபேரும் பிரித்துக்கொண்டு
சித்து விலாஸத்தெரு வழியே பெண்கள்
விஸ்தாரமாக வரும்போது

வந்தாரே மதவாதியர்கள் அதைக்
கண்டாளே இந்தப் பெண்களெல்லாம் நாம்
தேடித்திரிந்த பயல்கள் இதோ வரார்
பாடி பணத்தைப் பறிப்போமென்றே

வந்த மதவாதியரைச் சுற்றி
வட்டமாக நின்றுகொண்டார்
தத்வத்தை ஒர்ந்து குறியாமல் நித்தம்
தாறுமாறுகப் புலம்பிக்கொண்டு

கெட்டுப்போன மதவாதியரைப்பெண்கள்
முட்டமுறியவே ஏசலுற்ருர்
ஓடியே வந்தந்தப் பெண்கள் எல்லோருமாய்
போகவொட்டாமல் தடுத்துக்கொண்டு

வாடா சாருவாகப்பயலே, உன்தன்
சாகஸமெல்லாம் அறிவோமடா
தேகமேயாத்மாவென்று சொல்லி ஜக
ஜாலம் செய்து திரிந்தவனே

சரீரவேதனையாகும் போது உன்
மதசாரம் எடுபட்டுப்போம் பயலே,
பிராணனேயாத்மாவென்று சொல்லி
பகட்டிய பயலே, கேளடா

உற்பத்தி நாசங்களுண்டான வாயு
உரைக்கவருமோடா சொல்வாய், பயலே
புத்தியே யாத்மாவென்று சொல்லி நிஜ
போதம் கெட்டுத் திரிந்தவனே

க்ஷணத்தில் பிறந்து நசிக்கும் புத்திக்கு
ஸத்யமுண்டோடா, பயலே
இந்திரியமாத்மாவென்று சொல்லி
புத்திஹீனனுகத் திரிந்தவனே

காரணபூதத்துக்கே லயமான உன்
காரியம் பஞ்சு பஞ்சாகாதோ?
கேளடா, பௌத்தப்பயலே, உன்
கெடுமதி தன்னுல் கெட்டவனே

தாயில்லே நாக்கில்லேயென்னுமவர் போல
ஸத்தியமாக இருந்துகொண்டு
சூன்யமே யாத்மாவென்ற உன் நாக்கினில்
சுட்டாலும் ஒருதோஷமில்லே

பொதி சுமந்து கழுதைபோல் நித்யம்
படித்த மீமாம்ஸா, கேளடா
பரிபூர்ணமான ஜோதி தன்னே
பரமாணுவென்று சொல்லிக்கொண்டு

உருட்டிக்கொண்டு திரிந்தாயே, நாங்கள்
ஒருவரும் இல்லா இடம் தன்னிலே
இப்பொ நீ எங்களுக்கு உத்தரம் சொன்னுல்
அப்போ திராணிக்காரன், பயலே என்று

அங்கங்கே ஸம்மதி சுருதிகளேக்காட்டி
கேலி செய்து அனுப்பிவிட்டார்
எருக்கிடங்கிலே கிடக்கும் தவளே
ஏமமும் ஜாமமும் கத்துதல்போல்

தன்னேயறியாமல் சாஸ்திரம் கற்ற
தார்க்கிகப்பயலே, கேளடா
சாங்கிய யோகி நீயும், கேளடா நீ மிக
ஸாமர்த்யவானென்று கேட்டிருக்கோம்

பரிமளமான புனுகு சந்தனம்
பன்னியில் மேல் வாரி பூசினுர்போல்
மணம் தெரியாமல் அமேத்யம் தேடியே
வளேயும் ஊர்சுற்றி ஓடுதல்போல்

விபுத்வம் ஸச்சிதானந்தத்வம் தன்னோட
ஸங்கத்வம் தன்னை அங்கீகரித்து
இத்தனை தூரம் விசாரித்தறிந்தும் நீ
இந்த மதத்தாலே கெட்டவனே

வாதிகளே, நீங்கள் கேளுங்கள் உங்கள்
வாதங்கள் எங்கள் முன் செல்லாதே என்று
மதத்தைக் கண்டித்துப் பெண்கள் எல்லாருமாய்
பிடித்துக் காட்டிலே விட்டு விட்டு

குதித்துக்கொண்டு வரும்போது அங்கே
ஒளிந்துக்கொண்டான் சிதாபாசன்
எட்டிப்பார்த்துத் தலைவாங்கும்போது
அவர் கிட்டத்தில் வந்தவர் கண்டு கொண்டார்

பண்ணாத காரியம் பண்ணிவிட்டு நீ
பதுங்கினால் உன்னை விடமாட்டோம் உன்
குட்டு மார்க்கமெல்லாம் வெட்ட வெளியாக்க
கச்சை கட்டிக்கொண்டு வந்தோமடா

மாமதப்பட்ட வாதிகளெல்லாரும்
போனபோக்கை அறியாயோ
இந்தப்பயலோடே மன்னாட்டம் என்னடி
என்று இழுங்களடி சரசரென

பற்றி இழுத்தவர் வாசலில் வைத்தங்கே
பாடத்துவங்கினார் பெண்களெல்லாம்
அதிஷ்டான ஸத்தை அன்னியில் அங்கே
அந்நியமாம் ஸத்தை உண்டோடா

அயஸ்பிண்டம்போல் அத்யாசத்தாலே நீ
அவித்யையுடனே கூடிக்கொண்டிருந்து
பெற்ற பிதாவைப் பிரித்துவிட்டு நீ
பெண்டாட்டி வார்த்தையைக் கேட்டுக்கொண்டு

பித்துக்கொண்டாற்போல் திரிந்தவனே, உன்
பேரும் சிதாபாஸனானவனே
கொண்டசிறுக்கி தன் கையில் பிடிபட்டு
இவ்வெண்டிசை முற்றும் இழுக்கப்பட்டு

தித்திமிதாவென்றும் தாத்திமிதாவென்றும்
ஆட்டிவைக்கக் குரங்கானவனே
வேசியெனும் மாயாஜாலக்காரியவள்
வீட்டிலே போனால் வெளிப்படுத்தாள்

மயக்கமான மருந்திடுவாள் உந்தன்
ஞானரத்னத்தைப் பறித்திடுவாள்
ஆவரணத்தாலே உந்தன் ஸ்வரூபத்தை
அறியவொட்டாமல் மறைத்திடுவாள்

பெரும் விக்ஷேபத்தாலே ஈரேழுலகமும்
பெற்றிட்டு எனக்குத் தந்திடு என்பாள்
சித்ஜடமான பொருளாக்கி உன்னை
சேரவொட்டாள் சொந்த பெண்ஜாதியுடன்

மாயப்பெண் கை பட்டு அலைந்து உன்
ஸ்வரூபம் மறந்து ஆங்கார மமதைகளால்
வல்லாண்மையின்றி குடும்பம் சுமக்க
வண்ணான் கழுதை போலானவனே

மனமென்னும் ஓர் தாய் கிழவியவள்
நெஞ்சில் சற்றும் இரக்கமில்லாள்
இச்சைப்படி நடந்திடுவாள்
இரும் இருமென்று தடுத்திடுவாள்

இந்திரிய மாதருடன் கூட்டி உன்னை
ஏற்ற விஷயம் புஜிக்கச்
செய்வாள் சொன்னபடி நடக்காவிட்டால்
சிறி தலைவாயிலே அடைப்பாள்

ஈழத்து மாபாவி மோகத்தகப்பட்டு
இத்தனை ஜன்மம் எடுத்தவனே
ஆனந்தமான அமிருதம் புஜித்து அந்த
பூரணம் தன்னைப் புகழாமல்

காமப் பாலாகிய கள்ளைக்குடித்து
கனத்த மயக்கம் பிடித்தவனே
அகண்டமெல்லாம் அடக்கி வாய் தன்னில்
அந்தச் சுவையை அறியாமல்

அற்பஸுகமாம் விஷயம் புஜித்து
ஆனந்தஸுக மிழந்தவனே
மோக்ஷசாம்ராஜ்யமதையடைந்து நீ
மூவர்க்கும் மேலாக ஆகாமல்

தோட்டியாகியே தேவர்களுக்கெல்லாம்
தொண்டு பண்ணிக் கொண்டிருந்தவனே
முக்தியைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு நீ
நித்யஸுகத்தை யடையாமல்

இந்த குடிகேடிகையில் அகப்பட்டு
கிஞ்சிக்ஞன் ஆகவே போனவனே
இந்தச் சிறுக்கி அழித்திடுவாள் இவள்
கிஞ்சித்தும் உன்னெதிரில் நிலேயாள்

வந்தவழியே போ என்று அந்தப் பெண்கள்
வகையாய் சொல்லி வணக்கத்துடன்
ஜீவனுக்குப் புத்திசொல்லி சுருதிப்பெண்கள்
ஸுக்ஞானத்தோடு அவர் சேர்த்துவைத்தார்

இத்தனேபேர்களும் பட்ட பாட்டைக்கண்டு
ஈசுவரரெங்கோ ஒளிந்துகொண்டார்
சிருஷ்டிக்கு முன் நாம் கண்டால் அவரைப்
பிச்சுப்பறக்கவிடலா மென்றே

எங்கேயும் தேடிவரும்போது பெண்கள்
பங்கமில்லாத பரன் ஒருபால்
தேவர்கள் சூழவே லோககார்யமாக
ஸிம்மாஸனத்தில் இருந்துகொண்டு

நான்கு திசையும் பார்க்கும் போது அந்த
நாரிகள் ஓடி வருதல் கண்டார்
வாதிகள் தன்னே வென்றுவிட்டு
சிதாபாஸன் தன்னேயும் ஓட்டிவிட்டு

ஜீவனேச் சித்தாக்கிப்போட்ட சிறுக்கிகள்
நம்மைபோக விட்டாது இதோ வந்துவிட்டார்
ஓடிப்போவோமென்று தட்டுக் கெட்டு பரன்
உத்தரீயத்தை எடுக்குமுன்னே

போராண்டி அவன் போராண்டி
போகச்சொல்லடி பிரும்மத்தோடே
நிற்கிருண்டியவன் நிற்கிருண்டி
நிற்கச்சொல்லடி தன் நிலையில்

தப்பிப்போகாமலே சாவதானமாகத்
தத்வமஸி என்று பாடுங்கடி
ஏகவெளிதன்னில் கையைக்கூட்டி
பெண்கள் ஈசனைப் பார்த்து ஏசலுற்ருர்

நித்யசுத்த புத்த முக்த ஸத்யானந்த
நிஷ்கலமாக இருந்து உமக்கும்
ஈக்ஷணை தன்னுல் மகிமையுண்டாய் பின்னேர்
இச்சா ஞானத்துடன் கூடிக்கொண்டு

ஈசுவரன் என்றெரு பேரைச் சுமைந்து
நீர் மாயை வசப்பட்டிருந்தவரே
கிருத்யாகிருத்யம் அறியாமல் தானே
பெற்ற பெண்ணைப் பெண்டுகொண்டவரே

அகல்யை ஸங்கத்தால் தேவேந்திரன்
அங்கமெல்லாம் பங்கமானதுபோல்
வித விதமான பூஜைகள் கொண்டு நீர்
வித வித ரூபமெடுத்தவரே உமது

மாயையைக் கண்டவர் இல்லை கேட்டவரில்லை
மகத்துக்களாலும் அறிவது அரிதாம்
ஸத்துமன்று ஸதஸத்துமன்று
ஸத்தாஸத்துதானுமன்று

பின்னமன்று அது அபின்னமன்று
பின்னுபின்னம் தானுமன்று
முன்னுமன்று பின்னுமன்று
மூவர்களாலும் அறியவொண்ணுது

ஆயிரம் கோடியிலே ஒருவன்
மாயைரூபம் அறிந்தவனும்
தீர்ந்த ஸமாதியில் ஜீவன் முக்தனுகி
திரிவான் மற்ருேர் அறியமாட்டார்

சசவிஷாணம்போல் ககனபுஷ்பம்போல்
கந்தர்வர்தம் மாநகரம்போல்
காலத்ரயத்திலும் இல்லையடா மாயை
கண்டாலோ ரஜ்ஜு ஸர்ப்பம் போலாம்

உபாதானத்திலும் நிமித்தம் தன்னிலும்
வேறு பதார்த்தம் அபேக்ஷியாமல்
உபயகாரணமாக இருந்து நீர்
ஊர்ணநாபிபோல் ஆனவரே என்று

லக்ஷ்யாலக்ஷ்ய பேதத்தினால் பெண்கள்
இரண்டு உபாதியும் போக்கிவிட்டு
ஏகமேவ அத்விதியம் பிரும்மமென்று
ஈசுவரனை பிரும்மாக்கிவிட்டார்

ஜயமெனும் புடவை கட்டிக்கொண்டு பெண்கள்
கீர்த்தி எனும் கொடியை நட்டார்
ஜனன விகாரங்கள் எனும் திண்ணைகளை
சின்னபின்னமாய் இடித்தவர்கள்

மிருத்யுவை சுட்டு நன்றாய் குழைத்தவர்
கீற்று நாமமாய் இட்டுக்கொண்டார்
ஜாக்ரத்ஸ்வப்ன சுஷுப்திகளாகிற
ராத்திரி மூன்றும் கழிந்தபின்பு

துரியமெனும் ஜலக்கரையில் பெண்கள்
பாணிபாதசுத்தி பண்ணிவந்தார்
அதீதமெனும் ஓர்துகிலை எடுத்து
அகத்துள் வைத்திருந்த பின்னர்

நான்காம்நாள் உதயம்தனிலே
நான்கு சுவருக்கும் நடுவினிலே
கோமயத்தாலே மெழுகி சுருதிப்பெண்கள்
கோலமிட்டுப் பெண்ணை மேலிருத்தி

ஸத்குரு பாதத்தை வாழ்த்தியே வித்தைக்கு
சந்தனாதி தைலம் தேய்த்தார்
யோகிகள் எல்லோரும் ஆடும் படியுள்ள
மானஸரோவரத்தை வந்தடைந்தார்

மணக்கும் சியக்கா யரப்புத் தேய்த்து
மங்கள மஞ்சள்தனைப் பூசி
அங்கம் குளிரவே ஆனந்தப் பொய்கையிலே
மங்கள ஸ்நானமும்செய்து வைத்தார்

சமாதானம் என்னும் சந்திரகாந்தப் பட்டை
விதவிதமாக யுடுத்திக்கொண்டு
தைரியமென்னும் தங்கரவிக்கையை
கொங்கைகள் மூடத் தரித்துக்கொண்டு

முடிவில்லாததோர் தலைவாரிப்பெண்கள்
மோகன கொண்டை போட்டுக்கொண்டு
ஸமஸ்த லோகத்துக்கதீதமானதோர்
தங்கமணி அட்டி கட்டிக்கொண்டு

ஸமஸ்த லோகமும் தாமாகவே பார்க்கும்
விழிக்கு அஞ்சனம் தீட்டிக்கொண்டு
சத்துரு மித்ரு இரண்டும் ஸமமாக
மதித்துப் பொட்டாக இட்டுக்கொண்டு

சின்மயனும் என்னும் முத்திரை மோதிரம்
விரலில் தரித்துக்கொண்டு
ஆனந்தஸாகரமாகிய பொய்கையில்
அமர்ந்து சித்ரான்னம் புஜித்தவர்

விநோதம் சொல்லி விளையாடி பெண்கள்
தோழிமார் எச்சில் கலந்துகொண்டார்
என்னாளும் பசியா அன்னம் புஜித்தவர்
பின்னமில்லாத முழுமதிபோல்

வேதாந்தமாகிய வெற்றிலைபாக்கை
விளங்கத்தம் வாயில் அடக்கிக்கொண்டு
மோகாந்தகாரமில்லா வெளிச்சத்தில்
நேர் நேராக நின்றுகொண்டு

தோன்றிய தோற்றமெல்லாம் தம் தோற்றமென்று
ஊன்றியே கைகளைக்கொட்டிக்கொண்டு
சொல்லும் சொல்லெல்லாம் நம்முடை சொல்லென்று
சோபனத்தைப் பெண்கள் பாடி முடித்தபின்னர்

பகவத்பாதர் தம் மதத்தை ஸ்தாபித்து
ஏறின ஞான தண்டிகையில் ஜயம் பெற்று
ஏறிஞள் வித்தை பரனை நினைந்து
உபசாந்தி என்ருேர் குழந்தையுடன்

ஹடயோகத்துடன் ராஜயோகத்தையும்
ஆதாரமாறும் அறிந்துகொண்டு
சிவயோகம் பெற்ற சித்தாந்தயோகியர்
சாயாமல் கொம்பினைத்தொட்டுவர

சங்கையற்ற பெண்கள் தண்டிகை பக்கத்தில்
தப்பாமல் சாமரம் போட்டுவர
சாந்த நரஸிம்மர் பக்தர் எல்லோரும்
டமாரம் பேரி அடித்துவர

தத்பதம் த்வம் பதம் எனும் இரு சீடர்
எச்சரிக்கை பராக் சொல்லிவர
வேதாந்தம் நாஞ விருதுபிடித்து இரு
நாலுதிசையும் முழங்கிவர

சதுர்வேத பூத கிராமங்கள் சுற்றியே
ஸ்வரூபவாசலில் வந்துவிட்டார்
பொட்டெனவே வந்து மங்கிலிய பெண்கள்
தட்டிலே ஹாரத்தியுமெடுத்தார்

தண்டிகைவிட்டுக் கிழிறங்கி வித்தை
அந்தப்புரத்திலேதான் நடந்தாள்
அகல நீளம் அளவிடக்கூடாத
ஆகாசமொத்ததோர் பந்தலிலே

சூதர் முசுகுந்தர் துர்வாசமா முனி
ஜடபரதர் வியாசருடன்
வாமதேவர் காச்யபர் ஜாபாலி
மார்க்கண்டேயருடன் யாக்ஞவல்க்யர்

சனத்குமாரர் ஸனகர் ஸனந்தனர்
ஸதானந்தரோடு கௌதமரும்
தங்கள் தங்கள் நல்ல சிஷ்யர்கள் சூழவே
ஸகல ஸித்தாந்தயோகியரும்

மாசற்றஜோதியின் வாமத்தில் வித்தையை
ஸேவிக்கவேண்டும் என்று இச்சையுடன்
எங்கும்நிறைந்ததோர் இடைவெளி இல்லாது
இருக்கும் பிரும்ம ஸபைதனிலே

அம்பரத்தையொத்த பீதாம்பரத்தை
ஜகம் எங்கும் நிறைந்தவர் தரித்துக்கொண்டார்
பிரும்மவித்தை எனும் சிந்தாமணி
ரத்னஹாரம் அழகாகக் கழுத்தில் தரித்துக்கொண்டு

மந்திரவித்தை எனும் முத்து சரத்தை
முழுதும் நீளமாகத் தரித்துக்கொண்டு
ஸம்ஸாரஸர்ப்பத்தைக்கண்டு நடுங்கும்
தீன பக்தர்களுக்கு தயவாய்

அங்கம் பரிசிக்கும் தன்கையிலே திரு
முன்கை முலாரி தரித்துக்கொண்டு
ஆதியந்தம் நடுவுமற்றார் பெற்ற
அன்னையற்றார் முன்னம் தந்தையற்றார்

மேனியற்றார் சுத்த வெட்டவெளி மணை
மீதில் வந்து அமர்ந்துகொண்டார்
வித்தையும் வந்து பரம புருஷனின்
வாமபாகத்து அமர்ந்துகொண்டாள்

அறிவெனும் அபரஞ்சி தங்கக் குடந்தனில்
அமுதநீர் கொணர்ந்தே முனிவர்
உபநிஷத் மந்திரம் சொல்லி
உதக சாந்தியும் ஜபித்தார்

புண்யதீர்த்த அபிஷேகம் செய்தார் அந்த
பூரணமான பரம்ஜோதி
ஈரம் விழுத்து அம்மன் பட்டு உடுத்திக்கொண்டு
இருபாதமும் சுத்திசெய்துகொண்டு

சுத்தஜலத்தையும் வாங்கிக்கொண்டு வித்தை
ஒத்ததோழிப் பெண்கூடவர
வந்திருந்த ஆனந்த மங்கள நாயகி
சுத்த பரனுடன்கூடி

ஆசீர்வாதங்களும் பண்ணிவைத்தார் பின்பு
அங்கமணிகளும் ஓதியிட்டார்
ஸம்பாவனை செய்து ஸர்வஜனங்களும்
சந்தடி நீங்கிய பின்னவர்கள்

அத்தனைபேருக்கும் ஷட்ரஸோபேதமாய்
அன்னமளித்து அனுப்பியவர்
வித்தையைக்கூடும் ஸமயமெப்போவென்று
வேளைதப்பாதவர் பார்த்திருந்தார்

எண்ணிக்கையற்றதோர் மங்கிலிப்பெண்கள்
ஏற்றியிறக்கியே வாழ்த்தியபின்
தோழிமார் எல்லோரும் கூடியே வந்து அந்த
தேவிக்கு போஜனம் பண்ணிவைத்தார்

என்ன செய்வாய் பெண்ணே உன்னைப் பரன்கூடி
இந்த இரவு விடுவதில்லை
நன்றாக போஜனம் செய்துகொள் நீ என்று
நையாண்டி காட்டி நகைக்கலானார்

சயனகிருகத்தை ஸமாதியெனும் புனுகினாலே
தேய்த்து புதுக்கி வைத்தார்
அதலவிதல ரஸாதல மாகிய மாலைகளை
எங்கும் தொங்கவிட்டார்

அகம் பிரம்மம் எனும் தங்கமணிக்கட்டில்
ஸமரஸமாகப் போட்டுவைத்தார்
முக்திஸுகமெனும் மெத்தையிட்டு
யோகநித்திரைக்கு ஏற்றதோர் பொட்டுமிட்டார்

ஸ்வயம் பிரகாசமாய் தீபமதைப் பெண்கள்
உள்ளும்புறமுமாய் ஏற்றிவிட்டார்.
ஸத்வ ரஜஸ்தம குணங்களாகிய தாம்பூலம்
வெள்ளி மடலில் வைத்தார்

ஸஜ்ஜனமாகிய சேஷப்பெண்கள்
பக்கத்திலே வந்து நின்றுகொண்டு
உபநிஷத்தான ஸரஸம்பாடியே
ஒருத்தி வெண்சாமரம் வீச

லோகாதீதர்மேலே தாலாட்டுப்பாடியே
ஒருத்தி வீணைதனைமீட்ட
உள்ளிருந்த அனுபவத்தைச் சொல்லியே
ஒருத்தி சங்கிலிதொட்டு ஆட்ட

ஸ்வாமிக்கு ஏற்க சயனம் வகுத்துப்பின்
பாங்கியர்கள் எல்லாம் நீங்கியபின்
மாயையை வென்றவர் லோகாபிராமிபோல்
மஞ்சத்திலேறி சயனிக்கவே

தாமதம் செய்யாமல் வித்தைப் பெண்ணை
அவர் வெட்டவெளி உள்ளில் தள்ளிவிட்டார்
கவிழ்ந்த தலையால் கடைக்கண்ணால்
வித்தை ஜோதி வடிவைக்கண்டாள்

இங்கித மறிந்து ஸர்வக்ஞர் வந்து
இருகைகளால் அணைத்துக்கொண்டார்
வயதில் பாலை என்றாலும் வித்தையின்
அபாரபுத்தியை மெச்சிக்கொண்டார்

யானாகிய என்னை விழுங்கி இருவரும்
தானாய் தத்பதமாய் ஆனார்
பரத்தை விட்டு அரை க்ஷணப் பொழுதிலும்
மகத்துக்கள் பிரியாதது போல்

ஜலத்தை விட்டு அரை க்ஷணப் பொழுதிலும்
சைத்தியம் பிரியாதது போல்
அம்புவில் உப்புலயம் போலே
கற்பூரதீபம் கலந்தாற்போல்

நித்ய நிருபாதியான பிரும்மத்துடன்
வித்தையும் ஒன்றாய் விளங்கினாளே
சோபனம் சோபனம் வித்தைக்கும்
பரமாத்ம குரு வெங்கடேசருக்கும்
சோபனம் சோபனம் படிப்போருக்கும்
கேட்போருக்கும் சோபனம் சோபனம்

முற்றும்

# பேரிநாதம்

பேரிநாதம் கேளுங்கோ ப்ரும்மாதி முதலான இந்த
பாரில்பவக்கடலே அடைந்த பாவஜனங்காள்
காரணகாரிய கல்பித மாயையை வீரியமதங்களை
வேறுகூருய் தோன்றிய - வெட்ட வெளியாய்
விளங்கும் விமலபோதம் தன்னை விவர்த்தமாய்
விச்வன் தைஜஸன் பிராக்ஞன் விராட் இரண்யகர்ப்பன்
அந்தர்யாமியும்கூட நச்வரமாக்கியே நாத ப்ரும்மத்தோடு
அசுவனி முதலாக அதிதேவதை முதலாய்
திருச்யமெல்லாம் திருக்காய் தெளிந்து திவ்யமங்கள
பேரி அடித்தேன் *1*

மண்ணோடு விண்வாயு அனல் அப்பு ஐந்தினுல் வந்த
புண்ணிய பாபமென்ற பூர்வம் மிச்ர கர்மமாக
எண்ணி ஈரேழுபுவன மண்ணைஎடுத்துப்
பண்ணின கோட்டையை பாங்குடன் இடிக்கவே
பற்றிக்கொண்டேனே - பலதிக்கிலும்
சுற்றிக்கொண்டேனே - பலஜென்மத்தால்
பக்தி வைராக்கிய பலபுண்ணிய பக்குவத்தால்
சித்தம்தெளிந்து சுத்தமாய் விவேகத்தால்
புத்திஎன்னும் பீரங்கி புறம் எட்டு திக்கில்வைத்து
நித்யபிரும்மம் என்னும் நீதி நிறைந்த குண்டை
நிரந்தரமாக்கி நிறைந்த அபேத மருந்ததை தாக்கி
நிஜபோத பொறிவைத்து நெறியுற்று மகிழ்வது
பொங்கியே குறிவைத்த குண்டும் மேல்கிளம்பி
கோட்டை இடிக்க அழிவற்ற பேரின்பபெருவெளி யோடாக்கி
இந்த பேர்பெற்ற கோட்டையை
அழித்திட்ட அதிசயம் ஆய்ந்தறியுங்கள்
அகக்கண்ணுல் சேர்ந்து விடுங்கள் சென்றதின்மேல்
சீறும் மன அகங்கார சித்தம் இந்திரியங்களே
வீரியமதத்துடன் வீற்றிருக்கும் பாராக்காரரைவென்று
பதிசுற்றும் கோட்டையில் ஆறுமதங்களை அடக்கி அதற்கு அப்பால்
அடுத்துக்கொண்டேனே - ஆசை என்னும் அகழைக்கண்டேனே
அதில்ஆவரண முதலைக்கிரை கொடுக்கும்

மூட நாமரூபத்தை தடிகொண்டு தாண்டியே
தலைவாசலுக்குமேல் பதிவிலிருக்கிற பஞ்சவிஷயங்களை
கதிகலங்கவே அடித்து கிட்டவொட்டாமலே -
ஜெயபேரியடித்தேனே 2

தலைவாசல் ஒன்பதையும் காக்கின்ற தலையாரி
நிலையாகக் கவலைபூண்ட நீதியற்றராக ஆதி
குலமான பதிமூன்றையும் குடிலவேற் பிடுங்கி
பலமாய் பிடித்திருந்த புஜத்தின் ஆயுதங்களை பிடுங்கி
அடக்கிப்போட்டேன் விபு புத்தியால் மடக்கி புறம்பாலே
தளகர்த்தனுகியே பேதபுத்தி மந்திரி
அளவற்ற ஆசை என்னும் அதிகாரச்செங்கோலை
சுளுகுடனேபிடித்து சூத்திரபொம்மைபோல் ஆட்டி
களவு கன்னக்காரரை கைப்பிடிப்பாய் பிடித்து - கட்டிவிட்டேனே
கருத்தோடப்பால் எட்டிவிட்டேனே - கலங்காமல்
இருந்து அரசாளும் ஹ்ருதயமென்னும் ராஜனை அஹந்தனிலே ஆக்கி
கழன்றிடாமல் நோக்கி துரைத்தனம் தன்னை நீக்கி துள்ளாமலே ஆக்கி
உணர்ந்தறி உணர்வினுல் ஒன்றுகி ஒய்ந்திட ஒய்ந்த இடம் ஒதுக்கி
அவனுபாதி உற்றுபார்த்தடக்கி உபசாந்தி
நிலையாக்கடலென்றும் நிர்வாணமே விழ குணமாம் குருபாதம் கூடி
ஒன்றுகிட சிலையில் பிரதிமைபோலே சிந்தையற்றிருந்திட
மலையாதே மஹிபதி வாழ்த்திய மந்திரம் வகுத்துரைத்தாரே
மஹாவாக்யம்-மனஸில்வைத்தேனே-மயங்காமல்
வரும் விருத்திகளெல்லாம் மலடிமைந்தன் என்று ஒதி
பருவப்படுத்தி மெள்ள பதிவிருந்திட நோக்கி
தெரியும்படியதாக்கி திருசியமெல்லாம் போக்கி
அருமைமுக்திப்பெண்ணை அவனுக்களித்து
ஜயபேரியடித்தேனே 3

முக்திபெண்ணை யடைந்து மோகலஹரிசென்று
சித்துகண்ணை திறந்து ஜீவேசுவராள் பேதம்வென்று
ஸத்யஸ்வரூப ஸல்லாபம் தன்னை அடைந்து
வெற்றி சங்கம் முழங்கி வீற்றிருந்த பெரும்
வேடிக்கை என்னுல் விதிக்கப்போமோ
விதித்தாலும் விதியால் அறியப்போமோ

ஸம்பாவனை என்னும் ஸந்தோஷமலர்சூடி
உபசாந்தி பூஷணம் பூட்டி பூர்ணமாய் கூட்டி
விமலாஸனம் மீட்டி வீற்றிருக்க அதில்
சமதமாதி குணங்களை தென்றல் கவறிநாட்டி
திசைஎட்டும் தானாய் தெரியக்காட்டி
திருசியம் அற்று அறிவால் துரத்தி கருணைகடாக்ஷன் ஒட்டி
இனபிரகாசன் காம்பீர்ய வாசன்
கைவல்யபத தீக்ஷன் பரமபிரயோஜகன் பாவாபாவாதீதன்
ஸரஸகுணாத்மகன் ஸமரஸானந்தன் ஸர்வஸ்வபோதன்
ஸதானந்தன் ஸத்குருநாதன் வெங்கடேசன்,
குற்றமற்ற நிலைபெற்று குணமற்று குறியற்று கற்றகவியோடு
காலவாஸனையற்று நித்ய அபரோக்ஷ நிஜானந்தமே பெற்று
சித்த விகல்பமற்று சின்மயம் தானாய்
ஜலமும் சீதமும்போல் சேர்ந்து ஒன்றாய்
சிந்தையும் அற்று சிதானந்த ஜோதியாய் ஸ்வஸ்வரூபியாய்
ஆதியாய் விமல பிரகாசானுபூதியாய் நித்ய நிரஞ்சன
வேதியாய் அவர் ஓதிய குணங்களுக்கும் அப்பால் ஒப்பில்லாத
பேரியடித்தேனே 4



## அனுபோக ரத்னமாலே

### (அனிருத்த மாலே)

அஹோபிலர் பாதம் அமர்ந்த பதத்தாலே
பரமகுரு பாதம் பணிந்த பலத்தாலே
உமையாள் தன்பாதம் உபாஸித்த புண்ணியத்தால்
அம்பிகையாள் பாதம் அர்ச்சித்ததன் பலத்தால்
ஜென்மாந்திரத்திலே சிவபூஜை பண்ணினதால்
பூர்வத்தில் ஸ்ரீஹரியைப் பூஜித்த மாத்திரத்தால்
ஆதியிலே விஷ்ணுவை ஆராதித்ததன் பலத்தால்
பரதேவதை உமக்கு பிரத்தியக்ஷமாகையினல்
பார்வதியாள் வந்துமக்கு ப்ரீதி கொண்டிருப்பதினுல்
சாரதையாள் வந்துமக்கு ஸாந்நித்யமாகையினுல்

புனர் ஜன்மமன்னியிலே பரிபூர்ணமானீரோ
காலன் யமபடர்கள் கற்பனைகாண் என்றறிந்து
ம்ருத்யு பய மன்னியிலே முக்திபதம் சேர்ந்தீரோ
பண்ணி வெகுகர்மம் பலத்திலே இச்சையற்று
பண்ணி வெகுதர்மம் பலன்கள் ஒன்றும் வேண்டாதே
எண்ணறிய கர்மமெல்லாம் ஈச்வரர்க்கே அர்ப்பிதமாய்
ப்ரும்மாதி தேவரெல்லாம் பிறந்திருப்பாள் என்றுசொல்லி
சந்திரருக்கும் சூரியருக்கும் ஜனனமுண்டென்று சொல்லி
அழியாத முக்தியென்னும் பதத்தையடைந்தீரோ
ஜீவன் முக்தனுகி ஜகத்தோடிருந்தாலும்
விதேக முக்திநாடி மெய்ப்பொருளே சேர்ந்தீரோ

சட்டையை கழற்றி விட்ட சர்ப்பம் வெளிபட்டாற்போல்
பொய்க் கூட்டை கீழ்போட்டு பிரம்மலீனரானீரோ
விட்டெறிந்த பம்பரம்தான் அதில் வேகமுள்ள மட்டும்
ஆடி அலேந்து அமர்ந்திடுமாப் போலே
ஆரப்தம் ஒய்ந்து அகண்டமாய் ஆனீரோ
ப்ராரப்தம் முடிந்து பரிபூர்ணமானீரோ
இழுத்துவிட்ட பாணம் எழும் வேகமுள்ளமட்டும்
வெகுதூரம்போய் விழுந்து விடுமாப்போலே
கடம் உடைந்தால் ஆகாசம் கலந்து வெளிபட்டாற்போலே
புரமுடைந்த ஜீவாத்மா வெட்டவெளியில் பூர்ணமானீரோ

அம்புதியைத்தான் மேகம் அதிவேகமாய் உண்டு வந்து
அவனியிலே வந்து அதிவர்ஷமாய் சொரிந்து
திரும்பவும் அந்த ஸாகரத்தில் சேர்ந்து விடுமாப்போலே
ஜீவன் பரனோடு சேர்ந்து லயமானீரோ
விண்ணிருந்து விண் எழும்பி விண்ணோடு ஒடுங்குமாறது போலே
உம்முடைய விருத்தி ஒடுங்கி நிலைப்பெற்றீரோ
ஜீவன் உபாதியற்று, சித்தமற்றுபோய் லயித்து
போய் லயித்தபின் பிரிந்து வரமாட்டாதே
நானாவித புஷ்பவகையான மது கொண்டுவந்து
ஈ எடுத்து வட்டில் வைத்து ஏகரஸமானபின்பு
புஷ்பவகை ரஸத்தை பிரித்தறிய மாட்டாதே
புன: திரும்பாது பூர்ணமயமானீரோ

உமக்கேது குறைகளுண்டோ இவ்விடத்தே தாழ்வுமுண்டோ
பார்த்தால் குறைகளுண்டோ பரிபூர்ணத்தே தாழ்வுமுண்டோ
அனுபோகக்குறைகளுண்டோ அர்த்தங்கள் போறாதோ
ச்ரவணக் குறைகளுண்டோ ஸங்கதிகள் போறாதோ
மனனக் குறைகளுண்டோ மனது வசமாகாதோ
த்ரிபுடி மூன்றுகளும் சொன்னபடி கேக்கலையோ
ஆறுவைரிகளும் ஆக்ஞைகளில் நிக்கலையோ
ஸமாதியிலே வாயுக்கள் தன் வசமாகலையோ
குணங்கள் லயிக்கலையோ குருக்ருபை போறாதோ
ஏது குறைகள் என்று எடுத்தீர் நிர்யாணம்
ஏது குறைகள் என்று எடுத்தீர் அவஸானம்

உண்ணலாம் ப்ரும்ம ரஸம் உடுக்கலாம் யோகாங்கி
தின்னலாம் நல்ல ச்ரவணாதி தாம்பூலம்
பூணலாம் நல்ல பொறுமையெனும் பூஷணத்தை
ஆளலாம் அமரருக்கும் மேல்பதத்தை
காணலாம் நல்ல கருத்துள்ள பிரம்மநிலை
பார்க்கலாம் நல்ல பரிபூர்ண காட்சி தன்னை
மோக்ஷ பதகட்டிலெனும் மெத்தை யென்னும் மேலான
ஸாதனம் நாலாம் நல்ல ஸகியோடிருக்கலாமே
இருபத்து நான்குவகை இந்திரிய தாசிகளை ஏவி
விட்டுவேறாயிருந்து தன்னரசை ஆளலாமே

அஸம்பாவனையை யடக்கி ஆளலாமே
விபரீத பாவனையை விண்ணி அரசாளலாமே
த்வைத மென்னும் சத்ருவை துரத்தி அரசாளலாமே
அகண்ட ரஸம் புஜித்து பத்தாண்டிருக்கலாமே
யோகரஸம் புஜித்து நூற்றாண்டிருக்கலாமே
பரிபூர்ண பால் குடித்து பல்லாண்டிருக்கலாமே
அபரோக்ஷகாக்ஷியுள்ளாள் அறிவு மயமாவாளோ
ஸ்வானுபூதியுள்ளவரும் சூக்ஷ்மமயமாவாளோ
கைலாஸமென்பதெல்லாம் கைவல்ய முக்தியன்றோ
சிவலோகமென்பதெல்லாம் சித்கன ஸொரூபமன்றோ
வைகுண்டமென்பதெல்லாம் மாளாத மோக்ஷமன்றோ

இகலோகத்தாசை எளிதாய் மறந்தாலும்
பரலோகத்தாசையிலே பற்றுதலையற்றாலும்
தேஹாதி ஆசை தகித்துவிட்டு போனாலும்
ஜீவன் முக்தியையும் த்யஜிக்க மனஸாச்சோ
விதேகமுக்தி விரும்புதற்கு நாளானால்
அவஸான காலம் அரை நொடியில் வந்தாக்கால்
நிர்யாண காலம் நிமிஷத்தே வந்தாக்கால்
தூரத்தே சிஷ்யனென்று தயவிருக்கலாகாதோ
காதத்தே சிஷ்யனென்று கருணை நினையீரோ
மாயை வழிபோனால் வருவாரும் போவாரும்
தத்துவத்தில் லயித்தால் வருவாரும் போவாரும்
மாயைக் கடந்தாரை வந்தறியக் கூடாதே
மகமாயைத் தன்னாலே வந்தறியக் கூடாதே

வாராத ப்ரும்ம நிஷ்டாள் வாசலிலே வந்தாக்கால்
காதவழியிலிருந்து காணுதற்கு வந்தாக்கால்
தூர வழியிலிருந்து சேவையுற வந்தாக்கால்
உபநிஷத் பாஷ்யங்கள் உபதேச சாஸ்திரங்கள்
கீதையுடன் பஞ்சதசி கீர்த்தியுள்ள பிரம்ம சூத்திராதி
ஏது படித்தாலும் இங்கே வரமாட்டீரோ
இன்னும் ஒரு ஜென்மம் எடுத்து வரமாட்டீரோ
பின்னும் ஒரு ஜென்மம் பிறந்து வரமாட்டீரோ

பண்டுபோல் நம்முடைய பரமபத வாசலிலே
முந்திபோல் நம்முடைய மோக்ஷபத திண்ணையிலே
வேதாந்தம் வாசிக்கும் விசாலமுள்ள கூடத்தே

தத்துவங்களை போதிக்கும் சாவடி வாசலிலே
அர்த்தம் உரைத்து அருகிலிருக்க வாரீரோ
அனுபோகம் சொல்லி அனுக்ரஹிக்க வாரீரோ
உண்மை உரைத்து உடனிருக்க வாரீரோ
உபமானம் உரைத்து உடனிருக்க வாரீரோ

நன்றாய் விளக்கேத்தி நட்ட நடு கோலமிட்டு
குத்து விளக்கேத்தி கூடமெல்லாம் கோலமிட்டு
மங்கள வாரத்தே வாடாவிளக்கு வைத்து
சுக்ர வாரத்தே தூண்டா விளக்கு வைத்து
வெள்ளி விளக்கெரிய வேதாந்தி வந்திருக்க
தங்க விளக்கெரிய சாஸ்திரிமார் வந்திருக்க
பொன்னு விளக்கெரிய ப்ரம்மநிஷ்டாள் வந்திருக்க
கற்றாரும் ஞானியரும் சூழம் நிறைந்திருக்க

பூர்வபக்ஷமானவர்கள் வெகுவாய் நிறைந்து கொண்டு
அத்வைத சாஸ்திரத்தை ஆக்ஷிக்க வேணுமென்றே
தங்கள் தங்கள் மதம் ஸ்தாபிக்க வேணுமென்றே
மீமாம்சகாராள் வெகுவாக சங்கை பண்ண
தார்க்கிகாள் வந்து சதவர்ஷம் போல் சொரிய
பாட்டபிரபாகரர் பலகாலம் சங்கை பண்ண
குதர்க்க சங்கைகாரர்கள் குறுக்கே மறித்துவர
முட்டினசங்கை வெகுவாக பண்ணலுமே

பரதேவதையிடத்தில் பக்தியது செய்தாலே
பரமகுரு பாத பக்தியது செய்தாலே
பரிகாசமாய் அவரைப்பார்க்கும் மந்தகாசமுடன்
ஓர் ஓர் சங்கைக்கு ஒரு நூறு யுக்தியுண்டு
அடுத்த ஒரு சங்கைக்கு அனந்தவித யுக்தியுண்டு
ஆறுமதம் கண்டித்து ஆசாரியர் பதம் உத்தரித்து
வேறுமதம் கண்டித்து வேதாந்தம் உத்தரித்து
த்வைதமதம் கண்டித்து அத்வைதம் நிலை நிறுத்தி
திக்குகள் தோறும் ஜெயஸ்தம்பங்கள் நாட்டிவைத்து

பாரதியோவென்று சொல்லி பல பேரும் கொண்டாட
ஸாரதியோவென்று சொல்லி ஸகலரும் ஸ்தோத்தரிக்க
அவதாரசக்தியென அகிலமெலாம் கொண்டாட
கிருதகிருத்யர் என்று சொல்லி கீர்த்திக்கும் மகாத்மாக்கள்

இந்த ஒரு பெருமையினி காண மாட்டோமே
இந்த பெருமையினி ஒரு நாளும் கிட்டாதே

அம்புலியில் தெய்வமென்று ஸாதிப்பார் சீமையிலே
தாருவிலே தெய்வமென்று ஸாதிப்பார் வையகத்தே
தாமிரத்தே தெய்வமென்று ஸாதிப்பார் தரணியிலே
மிருத்புவே தெய்வமென்று விழுவார் உலகினிலே
அப்புவே தெய்வமென்று ஆடுவார் தீர்த்தாதி
அக்கினியே தெய்வமென்று ஆகுதிகள் பண்ணிடுவார்
அம்புதி அந்தபிரம்மம் அகண்ட பரிபூர்ணமாய்
அதிஷ்டானம்தன்னே அவதரித்து வந்தமையால்
போராடி வந்த மறைபொருள் என்று எண்ணாது
வேஷம் மாராடி வந்த மெய்ப்பொருள் என்று எண்ணாது
பாவிக்க அறியாது பக்தி பண்ண மாட்டாது
ஸேவிக்க அறியாது சிச்ருஷை பண்ண மாட்டாது
குலதெய்வமென்றெண்ணி ஏற்றி அறியாது
இஷ்ட தெய்வமென்றெண்ணி ஏற்றி அறியாது
தத்துவமாம் மெய்ப்பொருளை தப்பவிட்டு நின்றோமோ

ஸாம்ப பரமேச்வரருக்கு தமோகுண உபாதியுண்டு
சக்ரபாணியர்க்கும் ஸத்வகுண தோஷமுண்டு
நான்முக பிரம்மாவுக்கும் ரஜோகுண உபாதியுண்டு
சூர்ய நாராயணனேயன்றோ ராகு மறைத்திருக்கான்
அக்கினியை சாம்பல் அறவே மறைத்திருக்கும்
மின்னலை மேகம் விளங்கொட்டாமலேயிருக்கும்
நக்ஷத்திரங்களுக்கும் நவக்கிரஹாதி தோஷமுண்டு
விராட் புருஷேச்வரருக்கும் மாயை உபாதியுண்டு
அந்தர்யாமிக்கு அக்ஞான தோஷமுண்டு

மாயை உபாதி மறுவேதுமில்லாத
'மகத்' தினுடைய தோஷம் மறுவேதுமில்லாத
அவித்தை உபாதி அழுக்கொன்றுமில்லாத
அக்ஞான தோஷம் அழுக்கொன்றுமில்லாத
ஸ்வயம் சுகப்ரும்மம் அன்றோ ஸ்வயம் ஜோதிவஸ்து அன்றோ
நிஷ்கள ப்ரும்மம் அன்றோ நிஷ்களங்க வஸ்து அன்றோ
குணதோஷமில்லாத கூடஸ்த பிரம்மம் அன்றோ
அக்கினியின் மின்னொளியும் ஆதித்தன் தன்னொளியும்

ஜோதி சுடரொளியும் சோமனுடைய காந்திகளும்
அஞ்சும் பிரகாசத்தை அதிக்ரமித்த காந்தியன்றே
மின்னல் ப்ரகாசத்தை விளக்க வைத்த சோபையன்றே
வையகம் பதினாலுக்கும் மகத்தான தெய்வமன்றே

மகத்தான தெய்வம் மறைந்து ஒளிந்து போனாக்கே
வையம் பதினாலும் மருகாதே வல்லாதாய்
பேறு பெருத்த ப்ரும்ம நிஷ்டாள் பேறு பெருத்த ஞானியர்கள்
அறிந்த மகாத்மாக்கள் ஐயர் எங்கே என்றாக்கால்
சித்தாந்த யோகியர்கள் சென்றுவந்து கேட்டாக்கால்
ஸமாதியிருக்கார் சமயமில்லை என்போமோ
தத்துவங்கள் பார்க்கின்றார் சமயமில்லை என்போமோ
நிச்சயங்கள் பார்க்கின்றார் நில்லுங்கள் என்போமோ
நிதித்யாஸனமிருக்கார் நில்லுங்கள் என்போமோ
சிஷ்யாளுக்கு சிக்ஷை வருத்தரார் காண் என்போமோ
சேதிசொல்ல சமயம் இப்போ இல்லை என்போமோ
பக்தர்கள் பவந்தீர்க்க போனார்கள் காண் என்போமோ
பரிபூர்ணர் நாளை வருவார் காண் என்போமோ
காணவந்த பேர்களுக்கு கண்ணழிவு என்ன சொல்வோம்
தேடிவந்த பேர்களுக்கு சேதிவகை என்ன சொல்வோம்

பாதமலர் விளக்கி பட்டாடையால் துவட்டி
ஈரம் உலர எழு கவரியால் விசிறி
பொன்மலரும் அக்ஷதையும் பூவும் எடுத்து வந்து
புண்டரீகன் ஸ்ரீபாதம் பூஜிக்கத் தேடுகிறாள்
அங்கமலர் ஸ்ரீபாதம் அர்ச்சிக்கத் தேடுகிறாள்
ச்ரெளதிகள் தேடுகிறாள் சாஸ்திரிமார் தேடுகிறாள்
ரிஷிகள் தேடுகிறாள் ஏடெடுத்தார் தேடுகிறாள்
ஸாங்கியர்கள் யோகாங்கி தார்க்கிக்கும் மீமாம்சாள்
வேதாந்தி யெல்லாரும் வெகுவாகத் தேடுகிறாள்
பக்த ஜெனங்கள் பணிசெய்ய தேடுகிறாள்
சிஷ்ய ஜெனங்கள் திகைத்தெங்கும் தேடுகிறாள்
வாக்கியத்திற்கு அர்த்தம் வகை கேட்க தேடுகிறாள்
பாஷ்யத்திற்கு அர்த்தம் பிரசங்கிக்க தேடுகிறாள்
அத்வைதத்திற்கு அர்த்தம் அக்ஷிக்கத் தேடுகிறாள்
தேடாதார் தேடாது சூனியமயமாவாளோ
வாடாதார் வாடாது மனம் சலித்துப் போவாளோ

அண்டத்தே கண்டார் அவனி பதினான்கும்
பிண்டத்தே கண்டாருக்கு பின்னே இடமும் உண்டோ
பூர்ணமயமானாருக்கு போக இடமும் உண்டோ
கூடாரம் கூடாரம் கூடஸ்த கூடாரம்
மகத்துக்கள் ஆனவர்கள் வந்திறங்கும் கூடாரம்
பக்தஜெனங்கள் பணிசெய்யும் கூடாரம்
சிஷ்ய ஜெனங்கள் திகைச்சிறங்கும் கூடாரம்
கூடஸ்த ப்ரும்மம் குணம் லயித்து போனக்கால்
நாடகத்து தீபமற்ற நாட்டியம் போலாகாதோ

ஒச்சமுடைய உமையாள் க்ருபையுடையார்
கீர்த்தியுடைய கௌரி க்ருபையுடையார்
த்ருட ஞானம் தன்னாலே தேசப்ரசித்தியுள்ளார்
ஆருட ஞானத்தால் அவனியெங்கும் கீர்த்தியுள்ளார்
மண்ணுலகம் விண்ணுலகம் மீமாம்சாள் உள்ளமட்டும்
உம்முடைய கீர்த்தி உலகத்தே நின்றாலும்
தன்னுடைய கீர்த்தி தரணியிலே நின்றாலும்
ஸங்கதியைக் காணாட்டால் சேரத் தானாகாதே
சேரும் கதி இல்லாவிட்டால் சேரத் தானாகாதே

மாயை முடிந்திடத்தே மத அகங்காரம் பட்டிடத்தே
ஈனம் முடிந்திடத்தே ஈஷணைகள் பட்டிடத்தே
கர்மமோடு யோகம் கரை கடந்த கானலிலே
வாயுக்கள் பத்தும் முடிந்த வனந்தனிலே
இந்திரியங்கள் பத்தும் இழந்த அமர்க்களத்தே
கோசமென்னும் நல்ல குடிகளார் பட்டிடத்தே
குணங்கள் குஞ்சரங்கள் குண்டுபட்டு சாய்ந்திடத்தே
ஆசையென்னும் பெரும் பாவி அச்சு முறிந்திடத்தே
தேகமென்னும் தேரும் சிதள் சிதளாய் போன இடத்தே
ஜீவனென்னும் தேரோட்டி சித்தோடு சாய்ந்த இடத்தே
ஆறுமதவாதிகளும் யானைகளும் பட்டிடத்தே
ஆறுவைரிகளும் அமரவிட்ட கானலிலே
ப்ரக்ருதி யென்னும் பல்லாக்குகாரர்கள் பட்டபாளையத்தே
தத்துவங்களெல்லாம் தலைவேறு பட்டிடத்தே
ஒன்னையும் நினையாதே ஒருவரையும் எண்ணாதே
ஜென்மம் அற்றுபோனதையும் சற்றும் நினையாதே
மரணமற்று போனதையும் மனதில் நினையாதே

நீ பிரம்மமென்றதனுல் நிலேத்தேன் பூமியிலே
தான் பிரம்மமென்றதனுல் தரித்தேன் தரணியிலே
அகம் பிரம்மமென்றதனுல் ஆத்தினேன் வையகத்தே
ஒளி மறைந்து போனுல் உலாவ வழக்குமுண்டோ
மதிமறைந்துபோனுல் மறித்தெடுக்க நீதியுண்டோ
அம்புதியைதான் பிரிந்து அத்தைவிடும் பங்கஜம் போல
சந்திரனேவிட்டுத் தயங்குகிற நீலோத்பலம் போல
ஜலத்தை விட்டு மத்ஸ்யங்கள் ஜீவிக்க மாட்டாதுபோல்
பரத்தை விட்டு பிரம்ம நிஷ்டாள் பதி கொள்ள மாட்டார்கள்போல்

ஸங்கதியைவிட்டு தனித்திருக்க வல்லமையோ
பக்தி அறிந்திருக்க பயபக்தி பார்த்திருக்க
ரத்னபரீக்ஷை நிர்ணயிக்கும்பேர்களேப்போல்
சித்த பரீக்ஷை தெரிந்து மிருக்கையிலே
அந்தக்கரண விருத்தி அறிந்து மிருக்கையிலே
அறியாதார் போலே அறிவுமயமாவாளோ
பாராதார் போலே பரிபூர்ணமாவாளோ

அங்கமலர் பாதம் அடைந்திட்ட நாள் துவக்கம்
செங்கமலர் ஸ்ரீபாதம் சேர்ந்திட்ட நாள் முதலாய்
புண்டரீகர் ஸ்ரீ பாதம் புகுந்து கொண்ட நாள் முதலாய்
ஒரு நாள் பிரிந்தறியேன் ஒரு ஸ்தலமும் போயறியேன்
நிமிஷம் பிரிந்துவிட்டால் நித்திரையும் வாராதே
கதாச்ரவணம் இல்லாவிட்டால் கண்ணிமையும் துஞ்சாதே
பெரியோர்கள் யாவர்களும் செய்யும்படிதானே
பிரம்மநிஷ்டாள் ஆனவர்கள் செய்வாளோ இக்காரியம்
கைலாஸம் தந்தால் சிலகாலத்தே மாளுமென்று
சொர்க்கமது தந்தால் துச்சமாய் போகுமென்று
சாச்வதமான பதம் தந்து வைத்தாப்போல்
ஸனகாதி யோகிபதம் தந்து வைத்துப் போனுப்போல்
தத்துவத்திற்கு அர்த்தமெல்லாம் சாராம்சமாய் புறக்கி
ரோதனமாய் சொன்னேம் உலகிலுள்ளோர் தானறிய
அர்த்தமறிந்தவர்கள் அனுபவித்துக் கொண்டவர்கள்
ஸாரமறிந்தவர்கள் ஸகித்துக் கொள்ள வேண்டியது.



## ஞான ரஸ கீர்த்தனைகள்

*(1)*

**(ராகம் - ஸாவேரி)**

பல்லவி

ஆசையானேன் வெங்கடேச ஸ்வாமி மேலாசை ஆனேனே

அனுபல்லவி

ஆசையானேன் அவருடைய லீலையை தேசமெங்கும்
தேடியும் காணேன் கோசபஞ்சக மேல்விளையாடும்
வரத வெங்கடேசநாதன் மேலாசையானேன். (ஆசை)

சரணம்

அகமுருகுதடி பெண்ணே, மோகம் பெருகுதடி, ஒருவகை
யாக வருகுதடி தேகஸாக்ஷியானவன் ஸரஸம்
அனேகமாமதை என்ன சொல்வேனடி போகபோக்ய ஸாதன
சித்கனபோதமாகிய ரதிவிலாஸன்மேல் (ஆசை)

அடுத்த நாயகன் வந்து என்னை பிடித்தநாள் முதலாய் மானம்
கெடுத்த கலவியிலே மனம் பிடித்தமாகுதடி
படுத்தவுடனிது கடுத்துக்கொண்டு உடுத்த துகில் தன்னை
விடுத்து அடுத்தவேளாயி லானந்தாமிருதம் குடித்து (ஆசை)

என்னுள்ளம் குமுறுதடி பெண்ணே கடத்துக்குள்
வான் போலே ஜடத்துக்குள்ளே சிதாகாசத்தை கண்டேன்
தன்னையும் தானவன் கண்டுபடர்ந்த லீலைகள் செய்யும்
அவன்மேல் மோகமதாகினேன் அடியே, பெண்ணே (ஆசை)

(2)

(ராகம்-நாதநாமகிரியை)

பல்லவி

மனது பூர்ணமாச்சுதே ஸ்வாமி நாதா
மனது பூர்ணமாச்சுதே (மன)

அனுபல்லவி

ஸத்குருநாதா தானெனதுபாக்கிய மென்றெண்ணி தானே
யோஜனை பண்ணி ஸ்வாமி (மன)

சரணம்

என்ன காரியமிருந்தாலும் எவர் பலர் பலதுசொன்னாலும்
அந்தமாயாத் தியைவிட்டு ஆத்ம நிலையை தொட்டு
உடல்கரணமிருந்தாலும் உபாதிகள் பலவானாலும்
கண்விழி தன்னை மூடி கேவல ஆத்மாவில்கூடி (மன)

காரணகாரியங்கள் தெரிந்தும் காமக்ரோதங்கள் பிரிந்தும்
மீறி மகிழ்ந்து ஆனந்தத்தால் மேவும் அகம்பதத்தில்
நாறுமுடலை நம்பாமல் நல்வினைசெய்து வெம்பாமல்
ஆறுவிகாரங்களற்று ஆனந்தத்தில் கூடி வெங்கடேச
சித்ஸ்வரூபமாகியே (மன)

(3)

(ராகம் - பூபாளம்)

பல்லவி

மழையைப் போலவே மகத்துக்கள்
மகாவாக்கியமாகவே பொழிகிறார் (மழையை)

அனுபல்லவி

மரிச்சு உபகாரம் பண்ண பூமியில் வளைத்து வந்தாலும்
கிடைக்கவில்லை என்னைத் தவிர வேறில்லை (மழையை)

சரணம்

பத்திரமானாலும் பறித்து அர்ச்சிக்க பாவனை பண்ண மனதில்லை
எண்ணமற்றதோர் சுத்தவெளி தன்னிலிருந்து
நமஸ்காரம் பண்ணினேன் (மழையை)

ப்ரக்ஞா சைதன்ய மந்தக் கரணத்தில் ப்ரதிபலித்த
சிதாபாஸனும் சித்ஜட கிரந்திபோல் கூடியே
கருதியே ஜீவன் சேர்ந்தன்யோன்யம் ஸ்திரமாச்சே (மழையை)

தப்தாயப் பிண்டம்போல் கூடியே கருதியே
ஜீவனுறுதியாய் அகமென்னும் ஸ்தூலதேகத்தை
அபிமானிப்பதும் பொய்தானே (மழையை)

கஷ்டமானதோர் த்வைத விருத்தியை கடந்து
அப்புறப்பட்டபின் இஷ்டமானதோர் ஸாக்ஷி
விருத்தியுமிழந்து அந்தரமானபின் (மழையை)

சிரேஷ்டமானதோ ரகண்டவிருத்தியால்
தகித்து த்ருபுடியு மற்றபின் இஷ்டமானதோர்
சுத்தவெளி தன்னிலிருந்து ஸர்வமும் நாசமாய் போனபின்
(மழையை)

ஜோதியாய் ஸ்வயமாய் விளங்கிய சுத்த
சைதன்யம் ஆனபின் ஏகமானதோர் ஆத்மஞானத்தால்
எண்ணம் மனது அற்று போனபின் (மழையை)

ஸ்ரீமத்வெங்கடேசர் கிருபையினாலே ஜகத்து
மித்தையென்றறிந்தபின் நேதிநேதி வாக்கியத்தால்
நிகிலப்ரபஞ்சமும் நிகிருஷ்டமாய் போனபின் (மழையை)

*(4)*

*(ராகம் - ஆனந்தபைரவி)*

பல்லவி

பரிபூர்ணானந்த சுகம் தந்த குருநாதா!
பவக்கடலைத் தீர்த்து வைத்தீர், வெங்கடேசா! (பரி)

அனுபல்லவி

ஹரிஹர ப்ரம்மாதியுடன் அண்டமெல்லாம் ஏகமென்று
த்ருடம் சொல்லி என்னை யழைத்து எனது வலச்செவியில்
''அஸி'' வாக்கியத்தை யுபதேசித்தீர் (பரி)

சரணம்

ஆகாச மலரதுபோல் அகிலம் தன்னையுரைத்தீர்
ஸாகாஸத்துணிவதனல் ஜன்மம் தன்னை துலைத்தீர்
மோகாந்தகாரம் நீக்கி முக்தி தன்னை கொடுத்தீர்
ஏகாந்த வெளி தன்னிலே எப்போது மிருத்திவைத்தீர்
இன்னமுண்டோ, ஸ்வாமி, இன்னமுண்டோ என்றபயம்
சொன்னதை கேட்டபின் (பரி)

கல்பனையால் காண்பதெல்லாம் கருத்துக்குள்ளே தானே
கானல் ஜலம்போல் கண்டு களித்திருக்கலானேன்
அல்பமிந்த மனுஷியரென்று அறிந்துகொள்ளலானேன்
யாருக்குள்ளே அடங்குமிந்த அவனிக்குள் தானே
ஸ்வப்னமாய் கண்டதெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தாலும்
சோகமுண்டோ, மோகமுண்டோ, தாபமுண்டோ,
தன்மயமானபின் (பரி)

(5)

(ராகம் - ஆனந்தபைரவி)

பல்லவி

சோற்று துருத்தியை சுமந்து சோகமேன்படுகிருய்
சும்மா சும்மா சோகமேன் படுகிருய் (சோற்று)

அனுபல்லவி

ஆத்மவடிவு நீயல்லவோ அண்டமெல்லா மறிவாக
நிற்கும்அகண்ட பரிபூர்ணனை நானறிவேனிந்த (சோற்று)

சரணம்

நாற்றமலத்தினுல் சேர்த்த பாண்ட மிது ஆத்மாவாகுமோ
புழுநெளியு முளுத்த சடலத்தை தேர்த்தினுலாகுமோ
காற்றுத்துருத்தியை மாத்த கூற்றுவன் காத்திருக்கானிதோ
வேற்றுமையாகவே பார்த்துக்கொண்டால் நல்ல
க்ஷேத்திரமாகுவாய் (சோற்று)

சோகமும் பசிதாகமும் சுகபோகமு முனக்குண்டோ
அதிமோகத்தா லெனக்காகு மென்று ஊகித்தாலுமுண்டோ
நாஹம்தேஹம் சிவோஹமென்றறிந்தபின் நல்லறிவைக்
கண்டுடனே
அது சொல்லிக் கொள்ளாமலே போய்விடுமிந்த (சோற்)

பிறந்ததும் பிறந்திளைத்திருந்ததும் அறிந்து என்ன ஆகுமோ
உள்ளங்கை தன்னில் புண்ணிருந்து காண கண்ணுடி வேணுமோ
மறந்த சுஷுப்தி மறந்தகாயத்தால் மாயத்தியால் வந்த
காயத்தி லென்ன பேதத்தை யகற்றுமுபாயத்தினு லிந்த (சோற்)

உடுத்த துகில்தன்னை விடுத்துவேறு நீ எடுத்து தரித்தாப்போல்
தொடுத்த கர்மத்தை யடுத்துவந்தால் ஜடத்துக்குள் அன்யமோ
கடத்துக்குள் வெளிபோலறிவேனே தர்ம முனக்கில்லை
மர்மமறிய துஷ்கர்மமெல்லாம் வெகு துர்மதியாகுது (சோற்)

வெங்கடேசர் எங்கள் குரு குணஸங்கரகிதரைப்போல்
அங்கமெல்லா மெங்கும் மேனிபோல் பூர்ணமாய்
மங்களமாய் உன்னை யறிந்திட மான மிதென்னடா
தானதுவாக தனதாக அனுதியே (சோற்)

*(6)*

*(ராகம் - ஆரபி)*

பல்லவி

பிரணவம் பிரணவம் என்று வீண்புலப்பம் கொள்ளாதேடா
பிரணவ நிலையறிந்து பாரடா

அனுபல்லவி

பிரணவ நிலையின்னதென்று அறிந்த பெரியோர் பாதம்
கண்டுபணிந்து பிராணாயாமம் செய்யடா, ஜீவா (பி)

சரணம்

பிரணவ நிலையறிந்து பிராணாயாமம் செய்வாயானால் பிறக்கவும்
இறக்கவும் வேண்டிவருமோடா
பிரம்ம தியான ஸமாதியில் பிரணவம் வேண்டுமானால்
பிரணவநிலை யின்னதென்று பார்த்து பிடியடா, ஜீவா (பி) 1

மந்திர யோகமான பிரணவம் தந்திரமாய் செய்யாதேடா
மனஸுகொண்டு பாராத மந்திரம் உனக்கெதுக்கடா
மனதை பறக்கவிட்டு நீ மூக்கை பிடித்தாயானால் மந்திரசித்தி
யாகுமோடா - மகத்தென்றும் சொல்வாரோடா, ஜீவா (பி) 2

அகங்காரமிருக்கையில் ஓங்காரம் அண்டுமோடா
அகங்காரத்தைவிட்டு பிரணவ ஓங்காரத்தை கொள்ளடா
அனுகதத்தில் மனதை யணுகாமல் நிறுத்தினால்
பிரணவ ஓங்காரத்வனி ஓசையறியலாமேடா (பி) 3

மனதை ஜயிக்க ஜீவா உன்னாலே யாகுமோடா
வாசிவசத்தாலே மனதை வசமாக்கடா
மனதை பிரணவம் கொண்டு நீ பார்த்து பிடித்தாயானால்
பிரணவ முழக்கம் பிரத்தியேகமாய் தெரியுமேடா (பி) 4

பூரகம் முப்பத்திரெண்டு கும்பக மிரட்டியாக கொண்டு
ஈரண்டு ரேசகத்தை விட்டு நீ பாரடா - ஏழெட்டு
நாளைக்கெல்லாம் இவ்விதம் செய்வாயானால்
வாசிவசமாகும் நீ யோசனை செய்யாதேடா (பி) 5

வாசி யிருபத்தோராயிரத்தி அறுநூறையும் வீணாக
போக்கிவைத்து வியஸனம் கொள்ளாதேடா
வீணான காயமிது விழுமிடம் தெரியாதேடா
வாசியை வசமாக்கி ஸதாசிவத்தை பாரடா, ஜீவா (பி) 6

தூக்கம் தூக்கமென்று ஆயுளை தொலையாதேடா
தூங்காமல் தூங்குவதும் ஸுகமல்லவோடா, மூடா
தூலம் துடிக்கும் முன்னே சூக்ஷ்மத்தை கண்டுக்கோடா
தாரகமான பிரணவ நிலையை நீ பாரடா, ஜீவா. (பி) 7

(7)

(ராகம் - தோடி)

பல்லவி

ஸ்வரூபமே நீ தானடா, ஜீவா
சுத்த (ஸ்வயம்ஜோதி) ஸ்வரூபமே நீ தானடா

அனுபல்லவி

ஸ்வரூபம் நீதானென்றாலும் தோன்றுவதில்லை ஏதடா
வருமே மெய்ஞானம் உனக்கு வாராதென்கிறாய், மூடா (ஸ்வரூபமே)

சரணம்

போதாகாரமாயிருந்தும் புத்திகெட்டு போச்சோடா
உன்பேத புத்தியினாலே வெகுஜன்ம மெடுத்தாயடா
வேத சாஸ்திரம் பிரம்மம் நீதானென்று சொல்லுதேயடா
விகல்பங்கள் எண்ணாதேடா - விச்வமெல்லாம் நீதானடா
பார்த்துணர்ந்து நாமரூபம் பாழாக்கியே போடடா
பரமாத்ம ஸ்ரூபத்தை பார்த்து முக்திசேரடா (ஸ்வரூபமே) 1

லகுவாய் உன்னையறிந்து லக்ஷியம் வைத்து பாரடா
வெகுகர்மம் பண்ணினாலும் வியர்த்தம் பலனேயடா
சின்மயமாய் தானிருந்தும் தெரியவில்லை ஏதடா
சிதேக ரஸமாத்திரமாய் ஜீவன் முக்தி சேரடா
தன்மயமாய் தானிருந்தும் தனித்திருந்து பாரடா
ஸம்சயப்படாதே குரு ஸ்வாமி சொன்னால் கேளடா (ஸ்வரூபமே) 2

(8)

(ராகம் - கல்யாணி)

பல்லவி

தீரகுரு வெங்கடேச தேசிகனார் தாமே வரார், யாரடா,
பாரடா, ஜீவா, பார்த்து பணியடா

அனுபல்லவி

சண்ட மாருதங்கள் போலே பிரசண்ட மதவாதிகளை
வென்று ஜயம் பெற்று ஒரு தண்டிகை மேலேறிவரார், யாரடா,
பாரடா (தீர)

சரணம்

தத்துவம் நாலாறு பெண்களுடன் துத்தி புல்லாங்குழல் தாள மத்தள
ஸங்கீதத்துடன் நர்த்தனங்கள் பண்ணிவரார், பாரடா (தீர) 1

புத்தி கெட்ட மானிடர்க்கு முக்தி நிலைகாட்ட சுருதி யுக்தி
அனுபவ மென்ெறாரு கத்தி கையில் கொண்டு வருவார்,
யாரடா, பாரடா, (தீர) 2

தேகசோகம் போக, வெகுதாபதாகம் உள்ள பரிபாகம் வந்த பேர்களுக்கு,
ஜீவன் முக்தி சொல்லி வருவார், யாரடா, பாரடா, (தீர) 3

சூத்திர கீதாபாஷ்யத்தோடு சேர்ந்த உபநிஷத்துக்கள் சாஸ்திர கோடி
வேதம் நாலும் ஸ்திரமாகவே சொல்லி வருவார், யாரடா, பாரடா,
(தீர) 4

நேதிநேதி வாக்கியம் கொண்டு உபாதியை நிஷேதித்தபின்
ஆதிவஸ்துவா மென்று உண்மை ஓதி ஓதி கொண்டு வருவார், யாரடா,
பாரடா, (தீர) 5

சுக்தி வெள்ளிபோல மாயா சக்தி விசித்திரங்களென்றும் பக்தி வந்த
பேர்களுக்கு ஜீவன் முக்தி நிலைக்காட்டி வருவார், யாரடா, பாரடா,
(தீர) 6

பக்திவைராக்கியாதி சம்பத்துக்கள் பொருந்தியே, கிருதகிருத்யராய்
நிராசையுற்று நித்ய திருப்திவடிவமாய் வருவார், யாரடா 7

ஸந்ததமும் பிரம்மானந்த லஹரிகொண்டேறி பந்த மோக்ஷம்
அற்றதொரு மந்தஹாஸம் பூண்டு வருவார், யாரடா, பாரடா, (தீர) 8

கோடி பிரம்ம நிஷ்டாள் கூட்டம் கூடியவர்முன்னே கானம் பாடி
பிரம்மானந்தாவேசத்த லாடி யாடிக் கொண்டு வருவார், யாரடா,
பாரடா, (தீர) 9

(9)

(ராகம் - ஆனந்தபைரவி)

பல்லவி

ஸச்சிதானந்த ஸ்வரூபம் தானடா, நீதானடா
ஸம்சயாதி பிரமை போனால் ததாகாரம் நீயடா (ஸ)

அனுபல்லவி

உள்ளும்புறமும் நீயடா ஜகத்தொன்று மில்லை பாரடா
நிகில பேத ஸ்தூலசூக்ஷ்மதேகம் ரஜ்ஜு ஸர்ப்பம் போலடா

சரணம்

கல்பித பிரபஞ்சமிது கானல் ஜலம் போலடா
காணுமதிஷ்டான மாத்திரம்தானே உற்று பாரடா
ஸவப்னமாம் மாயைகடந்த ஸ்வஸ்வரூபம் நீயடா
ஜீவபிராந்தி பிரமை போனால் சிதாகாசம் நீயடா (ஸ) 1

பொய்யும் மெய்யாக தோன்றும் புத்தி கல்பிதமே தானடா
பூரணமாய் நிறைந்த தத்போதமே நீயடா
நிர்குணத்தில் குணமுண்டோ உற்றுணர்ந்து பாரடா
நிராம்சத்தில் அம்சமுண்டோ நீதானே உற்று பாரடா (ஸ) 2

மலடிமைந்தன்போல் அவித்யை வந்திருந்து போனதும்
அஹோ விசித்திரம் நிர்மலத்தி லனேக உபாதியானதும்
நிரதிசயானந்த சுகம் பாவனை பண்ண பயின்றதும்
அதையனுபவித்து பார்க்கும்போது அகம்பதமென்றறிந்ததும் (ஸ) 3

அசுஷ்ய அகண்ட ஸுகானந்த ஸ்வரூபனே ஆசை
காமக்ரோதலோப மற்றதே உன்தேகமே
திரிபுடி மூன்று மற்றுபோனால் தேசிகர் தன்பாதமே
ஸ்ரீமத்குரு வெங்கடேசர் சின்மய ஸ்வரூபமே (ஸ) 4

*(10)*

(ராகம் - மத்தியமாவதி)

பல்லவி

மூடர்க்குபதேசம் செய்தா லவருக்கு ஜீவன்முக்தி
யுண்டாமோ, ஸ்வாமி (மூ)

அனுபல்லவி

வாடாமல் பாக்கியம் வாரிக்கொடுத்தா லென்ன
வானுக்குள் வைத்த வெங்கடேசுவர நாதனே (மூ)

சரணம்

அழுத குழந்தைகளமிர்தம் குடிக்குமென்றகிலமும் சொல்லும்,
ஸ்வாமி
கழுதைக் குபதேசம் காதிலுரைத்தா லென்ன
அவலக்குர லொழியுமோ, ஐயா, நீர் சொல்லும் (மூ) 1

அக்கினியில் நெய்யை ஆகுதிசெய்வதற் காறின சாம்பலாகுமோ
ஸ்வாமி
பக்குவம்வந்த காயை பழப்பிக்கலாம்
பிஞ்சை பழப்பித்தாலும் ரஸிக்குமோ ஸ்வாமி, நீர் சொல்லும் (மூ) 2

பிணத்தின் மேலிட்ட பூஷணம் துலங்குமோ பொல்லாத
கர்மிகளுக்கு, ஸ்வாமி
பணத்துக்கோ ரம்புகொண்டு பாழிலே எய்வார்களோ
பரமசுகம் தன்னை குருஸ்வாமி, நீர்சொல்லும் (மூ) 3

மட்டிக் குலாமருக் கொரு தெய்வமும் குருவுமுண்டோ,
மானபிமான முண்டோ, ஸ்வாமி
குட்டிக்கொரு ஸந்தி நாய்குட்டிக் கொரு ஸந்தி
பன்னிக்குட்டிக் கொரு ஸந்தி கூறுவாளோ எங்கள்
குருநாதனே, சொல்லும், ஸ்வாமி (மூ) 4

பாபிகள் மனதிலே பரமரகஸ்யம் பாவனையாகுமோ, ஸ்வாமி
கோவிலும் குளங்களும் கொண்டாடும் குலாமருக்கு
ஆவிக்குள் அபரிமிதானந்த மாகுமோ, ஸ்வாமி (மூ) 5

ஏழைத்தனத்தாலிந்த ஏகாந்தரகஸ்யத்தை எளிதாக சொல்லலாமோ,
ஸ்வாமி
வாழைமரத்தில் தீயைவைத் தூதலாகுமோ,
ஆனாலு மாத்ம வித்யையே பிரசித்தம் (மூ) 6

*(11)*

*(ராகம்- மோகனம்)*

பல்லவி

ஒரு பாபியாகிலும் பரமார்த்தங்களைப் பாரானோ,
முக்தி சேரானோ

அனுபல்லவி

தேவநரதிர்யகாதிகளுக்குளிந்த தேகத்தில் வேறாகி
ஜனித்தவர்களுக்குள்ளே (ஒரு)

சரணம்

பக்தி வைராக்கிய பாதையிலே என்ன பாராக்காரருண்டோ
முக்திமார்க்கத்தில் நடக்கிறபேர்களுக்கு முள்ளுகள்
போட்டதுண்டோ
சித்து ஜடங்களை சிந்திக்கும் பேர்களுக்கு சிரசிலே கொம்புமுண்டோ
தத்வஞானத்தால் தன்னையறிந்தபின் தானவனாக தடையுமுண்டோ
பக்தி என்னும் பரிபாகத்தினால், ஜீவன்முக்திவேணும் என்ற
தாகத்தினால்,
யுக்திகளா மொரு வேகத்தினால் நித்தியாநித்திய விவேகத்தினால்
(ஒரு) 1

அல்பமாகு முடலழிந்துபோகு முன்னே யறிந்தா லாகாதோ
ஸ்வப்னஜாக்கிரம் சுஷுப்தி மூன்றையும் சோதித்தாலாகாதோ
கல்பனையாமிந்த காரியகாரணத்தை கண்டித்தா லாகாதோ

அத்புதமாம் தன்னையாரென்று பார்த்தா லழியாப்பதமங்கே யாகாதோ
கல்பனை செய்கிற மோகத்திலே வந்து உத்பன்னமாகும் தேகத்திலே
பிற்பன்னமாம்விவேகத்திலே யிது கல்பனையாமிந்த லோகத்திலே
(ஒரு) 2

வேதம்புகழும் வெங்கடேசுவர நாதரை வேண்டாத குறைதானோ
பாதகராயிந்த பாரில் பிறப்பதும் பிரதிபந்தவகைதானோ
மாதவராமிந்த மகத்துக்கள் சாபமோ மாயையின் குணம்தானோ,
ஏதுவகையோ யிது நானறியேனிந்த ஏழைகள் பாக்கிய மிதுதானோ
பேதமில்லா பரிபூரணமாய் பிந்து நாதங்களுக்கொரு காரணமாய்
சேதனமாய்
ஜகத்காரணமாய், அதை சோதனை செய்திடும் சூரனுமாய் (ஒரு) 3

*(12)*

*(ராகம் - ஸௌராஷ்டரம்)*

பல்லவி

அஞ்ஞானகாரியம் அஹோஜகத்து அஞ்ஞானகாரியம்

அனுபல்லவி

விஞ்ஞானமில்லை விஷயங்கள் தொல்லை
பிரக்ஞையஹமென்று பார்ப்பாருமில்லை (அ)

சரணம்

யுக்தாயுக்தம் தெரியாமல் மோஹித்து கிடக்கும்
லக்ஷம்நூறு விசாலமாகிற குழியில் மடுக்கும்
இச்சித்ததெல்லாம் கிடைக்காவிட்டால் துக்கத்தைகொடுக்கும்
காலெடுக்கும் கலகம் தொடுக்கும் ஆகுமே விதிவசமாக படுக்கும்
(அ) 1

தேகத்துக் காபத்துவந்தால் மிரண்டிது முழிக்கும்
தோன்றவே வாய் வலி எடுக்க கூட்டிகோஷிக்கும்
அல்பபோகம் கிடைத்தா லாகாசத்தைகொண்டு கொமைக்கும்
சற்றே சிரிக்கும் ஸத்தை பழிக்கும் ஸர்வதா ஸம்ஸார
சேற்றிலமுக்கும் (அ) 2

ஆனாலுமிந்த அவித்தையின் விசித்திரத்தை பாரும்
தானாக அனேக சரீரத்தில் வந்தும் வேகும்
அந்நியாய கர்மங்களனேக விதத்தில்சேரும்
அன்புடன் வாரும் நம்பினேன் பாரு மாத்மஞானமாகிற
வித்தையை தாரும் *(அ) 3*

சற்றே குருகிருபையுண்டானால் பஞ்சுபோல் பறக்குமிந்த
திருசிய பிரபஞ்ச தேகாதியை பொய்யாய் மறைக்கும்
ஸத்துக்களோடு ஸகவாஸத்தால் நிலைக்கும்
சித்தாக யிருக்கும் சேஷித்து நிற்கும்
ஸ்ரீ வெங்கடேசுவர குரு கிருபையினாலே *(அ) 4*

*(13)*

*(ராகம் - காம்போதி)*

*பல்லவி*

பேசவேணுமானால் பேரின்பம் தன்னை பேசு
பிறவிக்கடலை கூறி பேசாதே

*அனுபல்லவி*

காசுபணம்தேடி கருத்துடனுறவாடி
கடைவீதி நாய்போல் கதறியழுதோடி *(பேச)*

*சரணம்*

இஷ்டமில்லாத பேச்சு எவர்க்கு மின்பமாகுமோ
எரிதணலுக் கிரும்பெடுத்துண்ண யிரையாமோ
துஷ்டபுத்திக்கு ஞானமகிமை யறியபோமோ
நாய்க்கு முழுத்தேங்காய் நன்றாய் ருசிக்குமோ *(பேச) 1*

குயிலுக்கிணையாய் காகம் குரலது கூவுமோ
குருமொழி வழியில்லாதாருக்கு அக்கரை நாடுமோ
அகிலஉபாதியாருக்கு அரும்புத்தி படுமோ
அரும்பசியில்லாருக்கு அன்னம் ருசியாமோ *(பேச) 2*

வெல்லும்விதியை எண்ணி வீணுக்கு நினையாதே
வீணருடனே கூடி வீணுக்கு உழையாதே
அள்ளிச்சொரிந்தாலும் பொருள் அடக்கம் விட்டுரையாதே
அறிவும் குருவும் யிருக்க வீண்பொய்யை யுரையாதே (பேச) 3

வாடும் பயிர்முகத்தில் மாரிபோ லெங்கும் காட்சி
வாடாதே மனம்தன்னி லிந்திரியங்கள் சூழ்ச்சி
ஆடும் ஜாக்கிரஸ்வப்பன சுஷுப்திகள் மூன்றுக்கும் ஸாக்ஷி
அரும்வெங்கடேசுவரர் கிருபையா லன்பாக சொன்னேன் சூழ்ச்சி
(பேச) 4

*(14)*

*(ராகம் - நாதநாமகிரியை)*

பல்லவி

மனமே மயக்கம் தெளியாயோ
ஆபாஸமான மனமே

அனுபல்லவி

தனதாய் சொல்லுகிறேமிந்த
தரணியோர்களும் தெரியத்தானே (ம)

சரணம்

முன்னுளில் செய்தவினை யீதல்லவோ
முழுதுமிந்த புண்ணுன தேகமான தல்லவோ
உள்புகுந்து பார்த்தால் மண்ணுதி ஐந்துதானீ தல்லவோ
மரணகாலம் வந்தால் சன்னியாசி பயணம் தானீ தல்லவோ
என்னுணே உண்மை சொன்னேன் இலவுகாத்த
கிளிபோலல்லவோ (ம) 1

ஸ்பர்ச தன்மாத்திரையில் பிறந்தும் பிரபஞ்ச வாழ்க்கை
வரிசை பழக்கங்கள் தெரிந்தும், வான்போலுன்னை
தரிசிக்க மாட்டாமல் பிறந்து தினமிறந்தும்
அரிசிபிச்சை எடுத்தும் அருகம் கட்டையில் சிதறின தறிந்தும் (ம) 2

கண்ட இடங்க ளெல்லாம் சுற்றி காயம்கொண்டொரு சுகமுண்டோ
உனக்கு ஏனிந்த புத்தி, ஓயாத்துயரம் சண்டாள சடலத்தைபற்றி
சாவும் பிறப்பு முண்டாயிருக்கிற அந்த நேர்த்தி
கண்டால் விதேகமுக்தி காரண குரு வெங்கடேசுவரரே ஸித்தி (ம) 3

(15)

(ராகம் - தன்யாஸி)

பல்லவி

அஞ்ஞானிகளுக் கறியகூடாது ஆத்மஞானி ஹ்ருதயம்
கண்டுபிடிக்க வேணுமானல்

அனுபல்லவி

ஹம்ஸபக்ஷியின் கதியை காகமெந்த பாடுபட்டாலும் தெரியுமோ
அதற்கு
துவம்ஸம்பண்ணும் லிங்கதேகம் சுகதுக்க பிரதீதிகளற்ற
விஞ்ஞானிகள் கதியை (அ)

சரணம்

ஜாதிகுதிரையின் குணத்தை வெகுவியாதி பிடித்த
கிழக்கழுதை யறியுமோ
மூடிக்கிடக்கும் குடத்துள்ளே வெண்கலத்து
பிரதீதி தெரியுமோ அதற்கு (அ) 1

கோட்டான் ஸமூகமெல்லாங் கூடி மார்த்தாண்ட
ஸ்வரூபத்தின் மகிமையை யறியுமோ
கூத்தாடி கையில் குரங்குபோல் தேட்டாளி
அவித்தைக்கு வசப்பட்டு கிடக்கும் (அ) 2

உள்ளே ஓட்டையான மூங்கிலுயர்ந்த சந்தனக்கட்டை
மணத்தை யறியுமோ
கள்ளமனமுடைய மூடருக்கு காமாதிரஹிதரான
மகத்துகள் கெதியை (அ) 3

அகர்த்தாவாக தன்னைபார்த்து அகில பிரபஞ்ச வியாபாரமற்று
ஜகத்தில் கண்டதெல்லாம் தீர்த்து ஸ்ரீ வெங்கடேசுவரர்
கிருபையினால் (அ) 4

(16)

(ராகம் - ஸாவேரி)

பல்லவி

சிதாத்ம ஸ்வரூபத்தை தெரியாமல் ஜீவர்கள்
திரிகிறாரிந்த ஜகத்தில் (சி)

அனுபல்லவி

சுக்லசோணித சர்மாகிருதியாகிய யிந்த தேகத்தில்
வேறாகிய தேஜோமயமாய் நின்ற (சி)

சரணம்

பலபல கர்மங்கள் செய்தவராகியே - தீர்த்தமாடியே
பஞ்சிலே பற்றின தீபோல் பாபம் வெந்துபோகியே
பரிசுத்தராகியே நடந்தார் - ஜடமென்றறிந்தார் தன்னையறிந்தார்
ஜகம்மறந்தார், அதுவாகியே அதிவிவேகியே,
பிரம்மமதாகியே, அறிவாலுருவாய் குருவால் தெரிவாய்
அறிவுகொண்டு பரவெளியாகி நின்று (சி) 1

வெளியுருவங்களிலே செல்லும் நேத்திரங்கள் போலே
வேதவேதாந்த சாஸ்திரங்க ளாராய்ந்து தன்னையறியார்
அறியார் சற்றும் குறியார் சின்னஞ்சிறியாரவர்
பெரியாரல்லையே அது தொல்லையே சுகம் இல்லையே
முக்திவல்லையே இப்போ திடமாய் ஜடமாய்
மடமையாலுடலில் நின்று சுடரொளியாகி தோன்றின (சி) 2

குருவெங்டேச தேசிகரருளாலே யுண்மையறிந்து
கோசவிலக்ஷண பிரம்மமே தானாகிகொண்டாடி கொண்டு
உழைப்பா ருள்ளம் தழைப்பார் கண்ணைவிழிப்பார்
ஜன்மமொழிப்பா ரதனாலுருகுதே வெள்ளம் பெருகுதே
கள்ளம்போகுதே சுகம் தருகுதே யிப்போ மனமாய் தனமாய்
தினமாய் கனமாய் ஜனனமரணமற்று பரவெளியாகி நின்ற (சி) 3

(17)

(ராகம் - ஸாவேரி)

பல்லவி

பொறுமை தாருமம்மா பூர்ண கல்யாணியே (பொ)

அனுபல்லவி

பொங்கிபொங்கி மனம்வருகுதே யிப்போ
யுறுதிசொன்னால் கூடகேட்கவில்லை
அன்பாய் கூடியிருந்த ஆரூடமஹாத்மாவை வம்புசொல்ல
துணிந்தாள், மாதாவே, கேளம்மா (பொ)

சரணம்

கேட்கிற காலம் வந்தால் நிற்குமோ
மனம்கிலேசப்பட்டு நொந்தால் கேட்பாரோ
வார்த்தை கேட்கவென்றே வகுத்தானே யீசுவரன்
ஸாக்ஷியாக யிருந்து ஸூக்ஷ்மபுத்திசொல்லம்மா (பொ) 1

இழக்கயிப்போ மனதில் தோன்றுதே பிராணன் வெறுக்க மனது
யிப்போ தோன்றுதே
எடுத்தாப்போ லபவாதம் கோடையிடிபோல் சொல்கிறார்
பொறுக்கத்தான் கூடுமோ பூர்ணகல்யாணியே (பொ) 2

ஏங்கிஏங்கிமனம் தளருதே ஏதுயோசனையும்
உனக்குண்டே கலக்கமில்லாமலே கலியுக தர்மத்தால்
அம்மாள் மீனாக்ஷி அம்மன் கிருபையினால் (பொ) 3

(18)

(ராகம் - மோகனம்)

பல்லவி

பிராரப்த கர்மம் படுத்துகிற பாட்டை, பரதேவதே,
பாரம்மா, என்னம்பிகையே, தீரம்மா (பி)

அனுபல்லவி

ஆரப்தபோகமு மாஸக்தியுமேனம்மா, அம்பிகையே
பாரம்மா, ஜகதம்பிகையே, தீரம்மா (பி)

சரணம்

ஆகாமி ஸஞ்சித பிராரப்த கர்மமழுக்கற்றிருக்கையிலும்
அகண்ட ரஸத்தை திகண்டே மகிழ்ந்திருந்து புசிக்கையிலும்
கோடிவேதாந்த சாஸ்திரம் விசாரித்து பார்த்து நான்
விஞ்ஞானமாகையிலும்
அக்ஞானம் போக்கியே பிரக்ஞானம் தந்து ஸுக்ஞான
மாகையிலும் (பி) 1

இந்திர ஜாலம்போல் பிரபஞ்சம் மித்யை என்றெண்ணி
யிருக்கையிலும்
அந்தரிக்ஷம் ஸ்வர்க்க மாகாசம் பிரம்மலோக மழிவென்று
பார்க்கையிலும்
இந்திராதி தேவர்களெல்லாம் பிரமை என்றெண்ணி யிருக்கையிலும்
சித்துமயமாய் ஜகமெங்கும் தாமாய் சுகத்திலிருக்கையிலும் (பி) 2

ஸத்துக்களுடன் ஸந்தமும்கூடி ஸகவாஸம்பண்ணுகையிலும்
பிரேமபக்தியைப் பண்ணி, பரதேவதே, யுந்தன் பாதம்
பணிகையிலும்
சுருதியுக்தியினுலே மனனங்கள் பண்ணியுள்ளே விசாரிக்கையிலும்
முக்தி எனக்கு கை நெல்லிக்கனிபோல் முன்னே யிருக்கையிலும்
(பி) 3

(19)

(ராகம் - காம்போதி)

பல்லவி

பிராரப்த கர்மம் பட்டாலொழிய விடாதென்று
பரிபூர்ண விஞ்ஞானிகள் சொல்லியிருக்கார் (பி)

அனுபல்லவி

இச்சை யனிச்சை பரயிச்சையால் வருகிற துச்ச சுபா
சுபகர்ம பிரவாக பெருக்கை (பி)

சரணம்

ஓச்சை யிருக்கும் சரீராவ ஸானபரியந்தமும்
ஸ்வஸ்வருப விவேக கல்யாண நித்தியானந்த (பி) 1

காணும் பிரபஞ்சமெல்லாம் கல்பிதமென்றறிந்தாலும்
மூன்று காலத்திலும் ஸத்ருபமானது தானுனலும்
வீணுதிவாதத்தில் பற்றுதலற்றிருந்தாலும் எங்கும்
வியோமாவை போல் வியாபகமாய் நிறைந்தாலும் (பி) 2

ஸ்ரீவெங்கடேசுவரரை சிந்தையில் தியானம் செய்தாலும்
ஜன்மகர்மமாகிற வலைகளெல்லாம் தகனமானுலும்
பிரீதியுடன்கூட ஸ்வாமியனுக்கிரஹித்தாலும் பிரம்ம ஸத்தை
தவிரவேறு பிரதீதியில்லை என்றறிந்தாலும் (பி) 3

## (20)

(ராகம் - சங்கராபரணம்)

பல்லவி

பரமே அகமென்றிருந்தாலும் பிராரப்தம்
பட்டா லொழியவிடுமோ

அனுபல்லவி

ஜீவன்முக்தி யடைந்திருந்தாலும் தேகம் போகும்தனையும்
கர்மம் புசித்தன்றோ கழியும் (ப)

சரணம்

உதித்து பிரதிதினமு மொழியவில்லை இரவிக்கு
ஜனித்து மகாவிஷ்ணு திரிகிறுர் கலங்கி
பசிக்கு பிச்சை எடுத்து பரயீசர் மயங்கினுர்
பிரஸித்தம் கர்மானுபவம் பிரகாசமாய் துடங்கி (ப) 1

ஸாதுஜனங்களோடு ஸகவாஸம் தினமும்
ஸர்வகாலமும் சித்தில் ஸர்வதா அறிவும்
பிரபஞ்சம் மித்தியை என்று பிரதிதின மொழியும்
பரமகுருபாதம் பக்தியுடன் நினைவும் (ப) 2

காமகுரோதங்க ளற்று கலக்கமற்றிருந்தாலும்
ஸ்ரீமத்குரு வெங்டேசர் தயவுயிருந்தாலும்
கண்டது அனித்தியமென்று களித்திருந்தாலும் அகண்ட
ஸாம்ராஜ்யம் தன்னி லமிழ்ந்திருந்தாலும் (ப) 3

## (21)

(ராகம் - யதுகுலகாம் போதி)

பல்லவி

பிராரப்தம் பட்டா லென்ன பரிபூர்ணமானேன் நன்ருய்
பரமகுருவோ டொன்ருய் (பி)

அனுபல்லவி

ஆரப்தபோகம் வென்று அகண்டமானேன் நன்ருய் (பி)

சரணம்

சக்தியில்லாதே போனலென்ன ஸர்வகாலமும் வியாதி
தின்னலென்ன
தேகம் மனது புத்தி சித்தம் வேருகாயுக்தி ஸ்ரீமத் குருவைபற்றி
காமகுரோதங்கள் வற்றி
இருளும் மோகமு மிறந்து சின்னமாய் ஹிருதய கிரந்தியறுத்து
அபின்னமாய்
இருந்து பிரம்மமாய் குளிர்ந்த பின்பு நான் எங்குமிடைவிடாமலே
நிறைந்த பிரம்மமாய் (பி) 1

ஜீவேசுவராள் பிரமை போன பின்பு
ஜகத்து மாயாமய மென்றறிந்த பின்பு
தூஷணபூஷண துக்கசுக பந்தங்கள்
மாசில்லாதாகாசத்தில் பூசப்படுமோ சற்றே (பி) 2

அஸங்க நிர்மலர் அகண்ட பரிபூரணர்
அகிலஜகத்துக்கு மாதிகாரணர்
பிருகிருதியுடன் கூட பரிணமித்த நாரணர்
எங்கும் நிறைந்த வஸ்துவை என்னகமென் றறிந்தபின் (பி) 3

ஸ்ரீ வெங்கடேசுவர குருகிருபையினு லெங்கும்
விபுவாய் நிறைந்து போனேன் நன்ருய்
வேறே பிரயாஸமில்லை இதை வேண்டி யுபாசிக்கவில்லை
அவர்தாமே குருகிருபையால் பரிபூர்ண மாக்கினுர் என்னை (பி) 4

மாயை வந்தென்னை விரட்டவந்தாக்கால்
நாயே போவென்று வாயை மூடினேன்
நீ யிங்கேவரவேண்டா மென்று
போவென்று சொல்லி பிரம்ம மாகினேன் (பி) 5

## (22)

(ராகம் - முகாரி)

பல்லவி

ஸபாஷ் மேலிட ஸ்வாமி நீர் தந்த ஸௌக்கியத்தை
என்ன சொல்வேன். (ஸ)

அனுபல்லவி

ஆபாஸமாம் தேகாதியகிலமு மறிவினிடத்தில் தோன்றி மறைந்து
தருவினிடத்தில் புருஷன்போல் (ஸ)

சரணம்

ஆரோபமாம் முள்ளடர்ந்த காட்டி லபவா தவழிகண்டு
நீரோடே நீர்சேர்ந்த நிவாத தீபம்போல்
நிச்சலமாகி நின்ற நிலைக்கொரு
அச்சமில்லையே ஒருக்காலு மினிமேல் (ஸ) 1

பொன்னுக்குள்ளே பூஷணங்கள் வெகுவிதமானுப்போல்
எனக்குள்ளே இந்த யீரேழுலகமும் தோன்றுதே
உற்றுணர்ந்து பார்த்தால் சின்மயமே
முற்றுணர்ந்து பார்த்தால் தன்மயமே (ஸ) 2

மணிகளனேகமதா யிருந்தாலும் மணிகோர்த்த சரடொன்றுபோல்
பிணியான காயத்தில் போதமதாகியே
பூண்டுகொண்டேன் புவனமெல்லாம்
நின்றுண்டுகொண்டே னறிவுமயமாய் (ஸ) 3

நிராதார நிரஞ்சன நிர்மலமா யறிவாய்
சராசரங்களிலே யிருந்ததொரு
சலன விகாரங்களேது மில்லாமலே
மலின மில்லாதொருவெளியது போல் (ஸ) 4

அபரிமிதானந்த வாரிதியே என்னையா வெங்கடேசுவரரே,
விபரீதபிராந்தியை போக்கி என்னுள்ளம்
விபுவாய் நிறைந்து விகல்ப மில்லாமலே
பிரபுவாய் நிறைந்த பராபரமூர்த்தே (ஸ) 5

## *(23)*

*(ராகம் - மத்தியமாவதி)*

பல்லவி

கர்மவலை கடந்தேன் கருத்துடன் பிரம்மறிலை யறிந்தேன் *(கர்)*

அனுபல்லவி

மர்ம மறிந்து மகாதவம் செய்தபின்பு
தர்ம பாபங்களும் தானே ஸமமாகி *(கர்)*

சரணம்

அண்டம் பதினாலுலகுக்கு மாதாரமாயிருந்தேன்
பிண்டமிருந்தாலு மெனக்கதில் பேத மறிந்துகொண்டேன்
வண்டத்தனம் செய்யும் மாய உலகையும் கண்டிக்க நானொரு
கண்டிரகோடாலியை யுண்டுபண்ணியே
வேதசாஸ்திர மொக்கவே பொய்யாகி தன்னிலே
கண்டு பூர்ணமாகியே உந்தன் கல்பிதமொரு காலமாகியே *(கர்) 1*

ஏருமரங்களிலு முபாயம் கண்டேறி யிருந்துகொண்டேன்
பேராயிரங்களிலும் பிரம்மநிலைபெற்று நிறைந்துகொண்டேன்
மாருதே சிந்தை மகிழ்ச்சியுடன்கூடி யாராத
காதல்கொண்டானந்த மாகியே வேறுசெய்திடுமிலக்காகியே
விண்மலர்க் கனியாகியே யிந்த தேறுதல் வரபின்னே
என்னபாக்கியம் தேவமானிட திர்யகாதிகளுக்குள்ளே (கர்) 2

புத்தியதிசயமோ முன்னுளில் செய்த புண்ணிய பரிபாகமோ
பக்திவைராக்கியமோ தத்பதார்த்த விசாரணையோ
முக்திதரும் வெங்கடேசுவர நாதன் சக்தியதிசயமோ
ஸாயுஜ்யமோ அறியேன் அஸ்திபாதிபிரியமென்றறியவே
அனுபவங்களும் வந்து நிற்கவே ஸித்தியாச்சுது
இவ்வுலகினில் ஜீவனீசனு மொன்றதாகியே (கர்) 3

## (24)

(ராகம் - புன்னுகவராளி)

பல்லவி

எத்தனைநாள் தேடிவந்தேனே அடியே ஸகியெந்தன்
குரு ஸேவை கிடைக்க (எ)

அனுபல்லவி

ஸத்தியம் பிரம்மவஸ்து வென்றும் ஸகலலோகம் மித்தியை என்றும்
யுக்திசொல்லி யருள் தந்து முக்திவழிதந்தவரை
மனது புத்தி சித்தமென்றும் வாஞ்சையுள்ள ஸகி கேளாய்
மூலபிரகிருதி என்னும் மாயைதள்ளி பாதசேவை தந்தவரை (எ)

சரணம்

நித்திய கர்மம் செய்துவந்தோமோ-அடியோ ஸகி
நீதிவழி பார்த்து வந்தோமோ
ஸத்தியவிரதம் தபோதானம் ஸாதனங்கள் செய்தோமோ
நித்தியவஸ்து பிரம்மமென்றும் நிலைதந்த குருபாதம் (எ) 1

கோடிநதி ஆடிவந்தோமோ-அடியோ ஸகி
கோவிலெல்லாம் சுற்றி வந்தோமோ-தேடி ஸப்த
கோடிமந்திரம் ஜெபித்தோமோ விதிப்படி
மோடி மாயைதள்ளி ஜீவன்முக்தி நிலைதந்தவரை (எ) 2

நாமபாராயணம் செய்து வந்தோமோ-அடியோ ஸகி
நல்ல நல்ல கதைகள் கேட்டோமோ
காம்யமில்லா கர்மபலன் காரணர்க்கு ஈந்தோமோ
கர்மமென்னும் காடுவெட்டி கைவல்யம் தந்தவரை (எ) 3

சிவபூஜை விஷ்ணுபூஜைகள்-அடியோ ஸகி
செய்துவந்த பலன் தானேடி
பவவியாதி தன்னை போக்கி பக்குவருக்கு பண்டிதராய்
அவதாரம் பண்ணிவந்த ஆத்மசக்தி பலத்தினால் (எ) 4

ஆதரவாய் அன்னவஸ்திரங்கள்-அடியோ ஸகி
ஆத்மநிஷ்டாள் கையிலீந்தோமோ
வேதவேதாந்தங்க ளெல்லாம் வெளியாக்கி சிரவணத்தால்
நேதிநேதி வாக்கியம் தள்ளி நிலைதந்த குருபாதம் (எ) 5

வேதசாஸ்திரம் படிப்பாருண்டு-உலகத்தில்
வேணசக்தி பெறுவாருண்டு
வாதமோடு மதமடக்கி வஸ்துமயமாக்கி வைத்து
பூதவிகார மொழித்து பூர்ணநிலை தந்தவரை (எ) 6

பார்த்த பார்த்த இடங்களெல்லாம்-அடியோ ஸகி
பரபிரும்ம ஸ்வரூப வடிவாய் சேர்ந்தபின்பு
நாமரூபம் சின்மயமாய் தன்மயமாய் தோற்றிவைக்கும்
வெங்கடேசுவரர் ஸ்வயம் ஜோதி ஸ்வரூபத்தை (எ) 7

## *(25)*

*(ராகம் - கல்யாணி)*

பல்லவி

உண்டுபண்ணி ஏனமட்டுராய் மெய்போலவே
அண்டி என்னை அமட்டுராய் (உ)

அனுபல்லவி

உண்டுபண்ணுதே போமானே பண்டுபோலே நினைத்தாலும்
அண்டமுண்ட என்னை உன்னு லமட்டக் கூடுமோ தேனே (உ)

சரணம்

வந்தயிடத்திலே நடவடி, வாய் திறவாமல்
வந்தயிடத்திலே நடவடி, அந்தமாதியற்றதொரு
அழிவற்ற என்னை நண்ண கந்தலே போ
வேங்கடேச கைபிடித்தா ரென்னையிப்போ (உ) 1

கூட்டமுடனே நடவடி, கோசாதி குண
கூட்டமுடனே நடவடி, ஆட்டபாட்ட மானதொரு
ஆசையை நழுவவிட்டு ஒட்டம்
உனக்கிங்கே ஒதுங்ககூடாது, போடி (உ) 2

போக்கினுரே என் அகந்தையை பிரம்மானந்தம்
தேக்கினுரே சுகவடிவை யார்க்கும் மெத்த
அனுபவமளித்தபின் தரிசனம் தோற்றுமிந்த
பிரபஞ்சத்தை தள்ளிவிட்டேன் தக்தபடம் போலே (உ) 3

## (26)

(ராகம் - சங்கராபரணம்)

பல்லவி

மனதே கெட்டுபோகாதே யினிமேலென்னு லாகாதே (ம)

அனுபல்லவி

நோகாதே கரையேறிபோக வழியிருக்க
ஆகாத விஷதுல்லிய விஷயபானம் பண்ண போகாதே (ம)

சரணம்

பொல்லாத ஸம்ஸாரதுக்கம் பூந்து உழலுதற்கு வெட்கம்
இல்லாத விருதாவிலே ஏன் கடந்தலேகிருய்
பொல்லாத மனதே நில்லாயோ, நிலேவிட்டுபோகாதே (ம) 1

பக்குவமான பழமிருக்க பச்சைக்காயை புசிப்பார்களோ
ஆத்மதத்வானுபோகரஸ முப்பி உயர்ந்திருக்க
அல்பமானயிந்த அகில விஷயம் தன்னில் போகாதே (ம) 2

க்ஷீரபானம் பண்ணுவார்கள் வெகுஜனம் காண
பண்ணுவார்களோ, ஆகையினுலிந்த ஆத்மானந்த
ரஸத்தை யடக்கமாய் புசி, ஆவலாதிபட்டு போகாதே (ம) 3

அக்ஞான மானதோர் வனத்தில் அகங்காரமாகிற புலிவயிற்றில்
ஸுக்ஞான நிலைவிட்டு போனுக்கால் வேடர்கள்
பிரக்ஞான புதையலை பறித்தடிப்பார்கள் அங்கே போகாதே (ம) 4

ஸ்ரீவெங்கடேசுவர குருவை அனுதினமும் தியானித்தாக்கால்
புவியை ஜயிக்கலாமே துவேஷ மெடுத்த வைரிகளை வதிக்கலாமே
மோக்ஷ ஸாம்ராஜ்ய பட்டத்தை விட்டுபோகாதே (ம) 5

## (27)

(ராகம் - மோகனம்)

பல்லவி

புத்திகெட்டு யேனலைகிருய் ஜீவா, பிராந்தா

அனுபல்லவி

புத்திகெட்டலையாதே, பூண்டுகொள் ஸத்குருபாதம்
ஸத்தியமாய் சொல்லுகிறேன் தாரக உபதேசமிது (பு)

சரணம்

அகம் பிரம்மமாயிருந்தும் அன்னியோன்னியாத்தியாஸத்தால்
தேகமானுய்
மகாதன்னியனுயிருந்தும் மமதையினுல் வாஞ்சைவைத்து
கிஞ்சிக்ஞனுய்
ஸுகவடிவாயிருந்தும் துணிந்து துஸ்ஸங்கம் விட்டு
ஸகவாஸத்தோடே நல்ல ஸத்குருவை தேடிக்கோடா (பு) 1

ஆசைதானுன் ஸ்வரூபமோ அஞ்ஞானம் தானுன் ஸ்வரூபமோ
கோசமைந்துமுன் ஸ்வரூபமோ குணத்திரயத்தால் கூட்டுறவுமுன்
ஸ்வரூபமோ
பாசவலைதன்னை போக்கும் பரமகுருவை யடைந்து
நாசமற்ற வஸ்துவை நாமென் றறிந்துக்கோடா (பு) 2

அவித்யை தானுன் ஸ்வரூபமோ அஞ்ஞானம் தானுன் ஸ்வரூபமோ
வித்யை தானுன் ஸ்வரூபமோ விவகரிக்கும் லிங்கதேகமும் உன்
ஸ்வரூபமோ
அத்தனையும் மித்தியை யென்றெங்கள் குருவையடைந்து
ஸத்தியமாய் சைதன்னியத்தை தானென் றறிந்துக்கோடா (பு) 3

இந்ததேகம் நீ என்றிருந்து இலவுகாத்த மஞ்சள் கிளிபோ லலைந்தாயே
இந்தப்பசிக்காக அலைந்தலையும் செக்கு சண்டிக்
கடாப்போலுழைத்தாயே
மந்தபுத்திகளை போக்கும் வள்ளல் குருவையடைந்து
அந்தராத்மாவாக நீயு மனுபவியா யிருடா (பு) 4

ஆட்டாட்டத்தா லாடுமோ பொம்மை அதிஷ்டான மன்னியில்
அன்னியதா ஜகத்துமுண்டோடா யிந்த தாட்டோட்டெல்லா
மேண்டா உனக்கு
ஸாக்ஷியதிஷ்டானமா யிருக்க மாட்டுபுத்திகளை போக்கி வள்ளல்
குருவை யடைந்து
தோட்டியை போலலையாதே ஸ்வஸ்வரூபமாக யிருடா (பு) 5

ஆறுமதவாதி சொல்கேட்டு யானைகண்ட அந்தகர்களைப்
போலலைந்தாயே
பூர்வகர்ம பலத்தின்படிக்கே புனப்புன பிறந்து பிறந்து நசித்தாயே
காறுவாறுகளைபோக்கி ஆனகுருவை யடைந்து
தாறுமாறுகளை விட்டு ஸத்துதானென்றிருடா (பு) 6

காலசக்கிரத்திலே சிக்கி கண்சுழன்று கர்மகூபத்தில் விழுந்தாயே
ஆலஹால விஷத்தோ டொக்கு மவஸ்தை மூன்றிலு மடிக்கடி
வளைத்துவந்தாயே
ஜாலுமாலுகளை போக்கும் ஸத்குருவின் பாதம்போற்றி
மாலயனும் தேடிக்காணு வஸ்துதானென்று யிருடா (பு) 7

ஸ்வர்க்க லோகமுண்டென் றெண்ணி ஜ்யோதிஷ்டோமம்
பண்ணி மாய்ந்தாயே
தர்க்க சாஸ்திரமெல்லாம் படித்தும் தன்னையறியாமல் போனாயே
வெட்ககேடுகளை போக்கும் வள்ளல் குருவையடைந்து
சிக்குசிடுக்கெல்லாம் விட்டு சிதேகரஸனா யிருடா (பு) *8*

அம்புதியில் தரங்கம்போ லுந்தனைவிட யாரையும் காணேன்
செம்புகல்லே தெய்வமென்கிறாய் துர்ப்புத்தியை விட்டுவிடடா
வம்புகளைபோக்கி வைக்கும் வள்ளல் குருவையடைந்து
இன்பதுன்பங்களற்று ஏகரஸமா யிருடா (பு) *9*

இந்திரியங்களேவலில் பட்டு இரவுபகலில் வம்பில் விஷயம்
புசித்தாயே
மந்திர சாஸ்திரங்களிலுள்பட்டும் மோக்ஷமார்க்க மறியாமல்
போனாயே
தந்திர ஜாலங்களை போக்கும் ஸத்குருவை யடைந்து
அந்தராத்மாவா யனுபவியா யிருடா (பு) *10*

ரஜ்ஜு ஸர்ப்பமுண்டென் றெண்ணியே கீழேவிழுந்து இரண்டு
காலும் பல்லுமுடைந்து
அச்சத்தால் மனப்பேய் பிடித்தாடிடாய் பவகூத்தாடிடாய்
எச்சில்பேயை ஓட்டிவைக்கு மெங்கள் குருவை யடைந்து
பித்தம் புலப்பமெல்லாம் விட்டு பிரம்மானந்தமா யிருடா (பு) *11*

சுஷுப்தனை போலே யிருடா நீ திருபுடிமூன்றையும்
ஸ்வரூபத்தி லொடுக்கி போடடா
அசுத்ததேகமான மனதை யாராய்ந்து பார்த்து அப்பால் பிரித்து தள்ளடா
விசுத்தி சீட்டெழுதிபோட்டு வள்ளல் குருவையடைந்து
பிரசித்திகளொன்றொடொத்து பரமார்த்தமா யிருடா (பு) *12*

கொஞ்சக்காரி தன்னுடன் கூடிகோபம் மிஞ்சிகோட்டான்
போல் ஏன் உறுமுறாய்
மிஞ்சியே விதிநிஷேதத்தால் பித்திலாந்தைபோல் ஏன் முழிக்கிறாய்
பஞ்சகோசங்களை போக்கும் பரமகுருவையடைந்து
மிஞ்சியே அனைவருக்கும் விச்வாதீதனா யிருடா (பு) *13*

உறியில் தயிர் நிரம்பியிருக்க ஊரில் வெண்ணே தேடுவார்போல்
அறிவுக்கறிவாயிருந்தும் அலேந்தாய் பதினுலுலகமும்
வெறிகளேபோக்கி வைக்கும் வள்ளல் குருவையடைந்து
தருவில் கள்ளனேவிட்டு தானே தானுக யிருடா (பு) 14

ஒக்கலில் பிள்ளேயிருக்க ஊரிலெங்கும் தேடுவார்போல்
பக்கமெல்லாம் ஏனலேகிருய் பிரத்தியகாத்மா வாகயிருந்தும்
வெட்கதேடுகளே போக்கும் வள்ளல் குருவையடைந்து
சிக்குசிடுக்கெல்லாம் விட்டு சிதேகரஸனு யிருடா (பு) 15

பொருள் கெட்டயிடத்தை நீ தேடடா கண்கெட்டவர்களேப்போல்
பாராதேடா
முட்டி குட்டி மூச்சை வளர்த்து மூலாக்ஞானம் நசித்த துண்டோடா
பொட்டனவே குருபாதம்போற்றி யடிபணிந்து
திட்டென போகுமுன்னே ஜீவன் முக்தனு யிருடா (பு) 16

சட்டிபோல் நொருங்கும் தேகத்தை சதமென் றெண்ணிஞயோடா
திட்டுநீர்குமிழிபோலடா தேகம்நிச்சயமென் றெண்ணுதேடா
பொட்டனவே குருபாதம்போற்றி யடிபணிந்து
பட்டியை போலலேயாதே பரமார்த்தமா யிருடா (பு) 17

சாந்த நரஸிம்மர் பாதத்திலடிமைப்பட்டும் இன்னமும்
சம்சயமுண்டோ
ஸன்னிதி மகிமைகொண்டன்றே ஸ்தாவர ஜங்கமவிமுக்தாள்
ஆனேமடா
மங்களமாம் குருபாதம் வாழ்த்தியடிபணிந்து
அங்கமிகவே குளிர்ந்து ஆத்மாராமனு யிருடா (பு) 18

சாந்த நரசிம்மர் தம்மையும் சாரதாம்பாளேயும் பணிந்தால்
ஏந்தி எடுத்தணேத்து ஏகரஸம் தந்து தாங்கி எடுத்தணேத்து
ஸமஷ்டி வியஷ்டி பிரமைபோக்கி சற்றும்
ஸந்தேகமில்லாமல் தன்னியனுக யிருடா (பு) 19

## (28)

(ராகம் - இங்கேயிருங்காணுமென்ற மெட்டு)

பல்லவி

தான் அவன் நானே மனம்தெளிந்து தான் அவன் நானே (தா)

அனுபல்லவி

வானம் புவனமெல்லாம் வடிவாகி பொங்கிநின்று
தேன்பொழியும் சோலையிலே தினம்தோறும் ஸ்நானம்செய்து (தா)

சரணம்

இந்திரியாதி ஸ்தூலம் முதலெல்லாத்தையும் வெறுத்து
சித்தம் விகல்பமற்று செல்வசிங்காசனத்தில் (தா) 1

காரணகாரியங்களைத் தாண்டி அகண்டபரி
பூர்ணம்தன்னில் வந்த போத பிரகாசராகி (தா) 2

ஸ்வப்ன சுஷுப்திக்கு மப்புறப்பட்டவனுகி
அத்புத நரஸிம்மராண்டவர் கிருபையினுலே (தா) 3

## (29)

(ராகம் - தோடி)

பல்லவி

வரவர பெருகுதே மனோலயம் வந்து வந்து சுகம் தருகுதே (வர)

அனுபல்லவி

இரவும்பகலு மற்ற ஏகாந்த வெளியிலே
யிருப்பது மின்பமெடுப்பதும் துன்பம்கெடுப்பது மெங்கும்
நடப்பது-மில்லாமலாச்சே
எத்திசையும் யுக்திசெய்து பக்திசெய்து முக்திபெற்று
ஏகரஸானந்தாமிருத ஸாகரமாய்
ஸமரஸயோக ரஸானந்தாமிருதம் - போதமாய் தழைத்த சுகம் (வர)

சரணம்

நகைத்திடும் நனவுபோச்சுதே நாமரூபங்கள் நனவினுள்
கனவாச்சுதே
பகைத்திடும் மனம் போச்சுதே பஞ்சகோச பிரதீதி பாழாச்சுதே

திகழ்த்திடும் தேவானந்தம் திவலீ போலாச்சுதே
தெளிந்ததும் தெளிவடைந்ததும் துகில்பறந்ததும் ஜகம்மறந்ததும்-
தெரியாமலாச்சே
திரமாகி யுரமாகி வரமாகி பரமாகி தீதில்லாத குணானந்தம் காதலாய்
கலந்தெழுந்து
நேதிநேதியால் நின்றஜோதியாய் தழைத்த சுகம் (வர) 1

தோன்றிடு மறிவதாகியே 'த்வம்' பதலக்ஷிய ஸ்வரூபமே தானாகியே
பூண்டிடும் பொருளதாகியே புறமுமுள்ளும்
பொன்மணிபோலாகியே
ஆராய்ந்திடு மஸிபத மதுக்கப்பா லொப்பில்லாத தாகியே
அகம்தேறியே அதுமாறியே - அளவில்லாத
அப்பதத்திலுற்பவித்து சித்பதத்தி லத்புதமாய்
அடியுமுடிவு மற்றும் வடிவும் நடுவுமற்று
படிகத்தில் திகழ்வதுபோல் தடையற்றானந்த சுகம் (வர) 2

இருளான மாயைக்கு மப்பாலீசனுக்கு மிப்பால் யிழந்திடும்
விருத்திக்கு மப்பால்
பொருளான போதத்துக்கப்பால் பரிபூர்ணத்துக் கிப்பால்
புகழ்ந்திடும் புத்திக்குமப்பால்
குருவான வெங்கடேசர் கூறிடும் மொழிவழியால்
குறைந்திட குலமடங்கிட குணம்பறந்திட கொடியறுந்திட
கோடி அருணோதயம்போலாய்
குற்றமற்றார் சித்தமற்றார் நித்தியம்பெற்ற ஸத்தியஞானம் - அறிவும்
குருவும்போலே
அருணனொளியும் போலே பரவிய யிரண்டற்றொன்றாய்
நிருபமானந்த சுகம் (வர) 3

## (30)

(ராகம் - மத்தியமாவதி)

பல்லவி

பிரம்மானந்தத்தை கண்டு பேசாதிரு மனமே (பி)

அனுபல்லவி

தர்மமோ யிதுசொல்ல தரணியோர்களுக்கு யிந்த (பி)

சரணம்

வேதாதீதமாகியே விதிநிஷேத மில்லாமல்
போதானந்த ரூபமாய் பூர்ணவடிவாய் நின்ற (பி) 1

ஸர்வபரிபூரணராய் ஸச்சிதானந்தராகி
கவுணமு மொடுங்கியே கேவலாத்மாவில் கூடி (பி) 2

நித்தியானந்தராகி நிர்விஷயானந்தராகி
ஸத்தியஞானனந்த சாச்வதராய்நின்ற (பி) 3

ஸங்கவர்ஜிதராகி ஸரஸவடிவராகி
வேங்கடேசதேசிகர் விமலபோதராய்நின்ற (பி) 4

## (31)

(ராகம் - ஆனந்தபைரவி)

பல்லவி

நாசசரீரத்தை நானென்று யிருக்கவும்
ஞாயமோ சொல்லும், ஐயா (நா)

அனுபல்லவி

பாசத்தைநீக்கி பசுவை பதியில்விட்டு
பஞ்சகோசபுரங்களெல்லாம் கொளுத்தி எறித்தஸ்வாமி (நா)

சரணம்

மண்ணும் தண்ணீரும் தீயும் காற்றும் வெளியும்கூடி
முளைந்த சடலமென்றும் மனதிலே கண்டிருந்தும்
நிச்சயமில்லையிது நீரில்குமிழிபோலே
பிச்சை எடுத்தாருள்ளம் பின்னேயும் பேதித்து (நா) 1

மஜ்ஜை எலும்பு தோலும் மாம்ஸமாயிருந்தும்
மலமான தேக மென்று மனதிலே கண்டிருந்தும்
பின்னுமதை நானென்ற பேதைகள் புத்திக்கு அது
என்ன சொன்னாலும் மனதிலிறங்குமோ, ஸ்வாமி (நா) 2

வீட்டிலிருந்தாலுமொருவன் வீடு அவனுகுமோ
வெளியே போனுலுமது வீண்சொல் பிணமாகும்
கூட்டிலிருந்தாலும் கூடு அவனுகுமோ ஸ்வாமி பர
வீட்டில்விளங்கும் வெங்கடேசுவரநாதனே (நா) 3

## (32)

(ராகம் - ஸாவேரி)

பல்லவி

உடலாலே யிதுநாள்வரைக்கு முனக்கென்ன
உபகாரமுண்டோ, சொல்லாய், மனமே! (உ)

அனுபல்லவி

கடலலேகள் போல்வந்த காயங்கள் கணக்குண்டோ
கல்பம்தோறு மென்ன காரியம் கண்டாய் இதில் (உ)

சரணம்

அஸ்தி கடிக்கும் சுவானம் வாயில் பிறந்த ரத்தம்
அஸ்தியில்நின்று பிரமையானுப்போல்
ஸத்தியஞானுனந்த ஸௌக்கியத்தை வேருக்கி
சடலத்தின் மேல்வைத்து பார்க்கிருய்
புத்திசாலி என்று புகழ்ந்துகொண்டேன் உன்னே
புழுமலவியாதிகள் வைக்ககூடாச்சுது
புத்தியில்லேயுனக்கு உடல் ஆசைவித்து போட்டு காச்சுது
நழுவும் விஞ்ஞானம் நல்மருந்தேச்சுது
நாறும் உடல்க ளுதவிகள் பொய்த்து போச்சுது (உ) 1

மண்குதிரையை நம்பி மடுவிலிறங்கு வார்போல்
மதிகெட்டுபோனுய் உன் அதிருஷ்டம் தானே
விண்முதலாய் அஞ்சுபூத விகாரமென்று
வேறுபதேசம் வேணுமோ கண்குடத்திலடைத்த
காற்றுக்கவதியுண்டோ? காலனும் உண்டோ என்று களிக்காதே
காலம்வரும்போது உடல் காரணத்தில் விழுந்ததும்
கர்மம்விட்டுபோனபின் காயம்விட்டு கழிந்ததும்
நாலுபேர்கள் பார்த்து அதை நியாயமென்று மொழிந்ததும்
நச்வரமான உடலுனக்கென்ன தந்துகெணித்தது (உ) 2

வெள்ளரிப்பழம் வெகுகால மிருக்குமென்று
வெடிக்காமல் பூண்கட்டி வைப்பார்போலே
கள்ளத்தனமாய் வந்த காயத்தை போஷித்து
காலனுமுண்டோ என்று களிக்கிருய்
தள்ளக் கூடாததாய் தானவனுகையினுல்
தன்னையறிந்தும் அறியாத ஜன்மமெடுத்துழன்றதும்
வெங்கடேசுவரர் சொன்ன உண்மையறிந்ததும்
கன்றைவிட்டு கால்பிடித்துக் கல்பசுவை கறந்ததும்
கருத்தென்ன உனக்கிப்போ மனம்வந்து துறந்தது (உ) 3

## (33)

(ராகம் - சங்கராபரணம்)

### பல்லவி

தன்னையறிந்தேனே தன் ஆனந்தம் ஆனேனே
தன்னை அறிந்து என் தலைவனையும் கண்டேனே (த)

### அனுபல்லவி

அன்னமயம் தன்னிலே அறிவு ஆகாச மானேனே
சென்றவயதுக்குள்ளே நான் சேஷித்தவனுய் நின்றேனே
ஸ்வர்ண விகாரங்கள் சேராத தங்கம்போல்
பின்னமில்லாமல் பிரிவற்ற பிரம்மமாக (த)

### சரணம்

பாபியுடல் தன்னிலே சற்றும் பற்ருதிருந்தேனே
தாவிவெளியிலே நான் வீற்றிருந்தேனே
ஆவிக்குள்ளே அறிவாயிருந்து நான்
மேவிபதங்களில் மேலாயிருந்தேனே (த) 1

கள்ளவிஷயங்களை கட்டோடே வேரறுத்தேன்
கள்ளியைக்கண்டு கொண்டேன் மாயக்
கள்ளியையும் கண்டுகொண்டேன்
அவளுடைய கபடமறிந்து கொண்டேன்
தள்ளிக் கதவையடைத்த வேங்கடேசுவரர்
பள்ளிக்கூடத்தில் பாங்காய் படித்து நான் (த) 2

## *(34)*

*(ராகம் - சங்கராபரணம்)*

பல்லவி

*ஏகாந்தமாக இருந்து நிலைபெறு, மனமே*
*மாயைக்கிடம்கொடாமலே* *(ஏ)*

அனுபல்லவி

*கர்த்தவ்யம் தவிர வேறொன்றையும் காணேன்*
*கமல நயனர் கிருபையினாலே* *(ஏ)*

சரணம்

*இல்லாததை யுள்ளதாக்கி யுள்ளதை யில்லாததாக்கி*
*யிருளுக்கிருப்பிடமே அனிர்வாச்சியமே மாயை*
*ஊன்றி விசாரித்தால் ஸ்வரூபம் ஒன்றேயொழிய*
*வேறொன்றுமில்லை நிச்சயம் சொன்னேன்* *(ஏ) 1*

*ஞானிகளுடைய கிருத்தியம் நானறிவது முண்டோ*
*யோகவிசாரத்தால்மேன் மேலும் விவேகமென்பர்*
*உலகவாசனை தேக சாஸ்திரவாசனை மூன்றையும் தியாகம்*
*பண்ணியே நித்திய ஸாக்ஷாத்கார மடைந்தேன்* *(ஏ) 2*

*பாசமதனைவிட்டு கோசமைந்தையும் சுட்டு*
*கூட்டுகட்டியதுபோல் வீட்டைவேறாக பார்த்து*
*தீட்டி புத்தியை நன்றாக கூட்டி வஸ்துவிடத்தில் சேர்த்து*
*நாட்டிபச்சை மரத்திலாட்டமற்ற ஆணிபோல்* *(ஏ) 3*

*அறிவாய் வெங்கடேசர் அவரே சிரவண தாதா*
*அகண்டஏகரஸ குருவை அஹமென்று அறிந்தபின்*
*மானவமானமில்லை வந்ததுபோனதுமில்லை*
*மனதுக்கு சஞ்சலமில்லை எல்லாம் சைதன்யந்தானே* *(ஏ) 4*

## *(35)*

*(ராகம் - ஆனந்தபைரவி)*

பல்லவி

கூட்டைகொண்டுவந்த கோனுரை அறியாது குதிப்பென்னடா, குருடா
கட்டி நீ தொட்டு கூட்டை முத்தமிட்டுக்கொள்ளாதேடா
கூட்டைக்குலேக்கவந்த கோபாலகோனுரடா *(கூ)*

அனுபல்லவி

ஆட்டுக்குட்டி தொண்ணூற்ருறும் பிடித்தடைத்து
ஆகாமியத்தால் வந்த அகங்காரனடா
அன்பாதரவு வைத்து அழைக்காதே, மூடா
அத்வைத பாவம்கொண்டு நீயாரென்று பாரடா *(கூ)*

சரணம்

ஸஞ்சிதம்கொண்டிவன் ஸஞ்சரிக்கவந்தவனடா
சாகிறவரைக்கும் தேடின ஸொத்தவனேச் சேராதடா
ஸொந்தம் நமக்கென்று நீயும் ஸந்தோஷம் கொள்ளாதேடா
வீட்டை உனக்கு ஸொந்தமாக்கு கூத்துவனேடிப் போவானடா *(கூ) 1*

பிராரப்தங்களினுல் வந்த ஜீவபிரமையில்லேயோடா
பாவங்கள் அறிந்திருந்தும் பிராந்தியுனக்கு வருவானேடா
பிராந்தியை நீ விட்டாயானுல் இனி பிறப்பு உனக்கில்லேயடா
தாரகபிரும்மதியானம் யாரென்றுபாரடா *(கூ) 2*

## *(36)*

*(ராகம் - முகாரி)*

பல்லவி

ஸத்துக்கள் ஸங்கத்தில் ஸௌக்கிய மானேனென்று
ஸகலபெரியோர்களுக்கு நமஸ்தே *(ஸ)*

அனுபல்லவி

கீர்த்தி பிரதிஷ்டைக்காக சேர்த்துபிணைத்ததில்லை
கர்வம் பெருமை யாசை வைத்தாலும் கிடையாது
சித்தம் ததாகாரமாய் சிந்தனை பண்ணிவந்தால்
இச்சையன்னியில் நானுமேதோ ஆவேசம்போலானேன் (ஸ)

சரணம்

ஸ்வயமாய் புதிதாய் சொல்ல சுளுகு ஸாமர்த்தியமில்லை
பூர்வானுஸாரத்தினுல் புத்திக்கிசைந்தபடி
அபத்தமிருந்தாலும் பெரியோர்கள் க்ஷமிக்கவேணும்
பாலன் விஷமம் செய்தால் மாதா ஸஹித்தாப்போலே (ஸ) 1

திவ்யமங்கள மூர்த்தி சேர்வைகிடைத்தாலும்
தயவுபொழியும் கடாக்ஷவீக்ஷணத்தாலும்
பஜித்து அண்டையில் நித்தியம் புசித்து வளர்ந்ததாலும்
ஸர்வகர்ம ஸஞ்சித வேர் அறுபட்டுப் போனதாலும் (ஸ) 2

## (37)

(ராகம் - பைரவி)

பல்லவி

உமக்கென்ன உபகாரம் பாரும்
உலகத்தில் கண்டு தேறும் (உ)

அனுபல்லவி

காமமோஹம் பேச காரியமென்ன
காரணகுரு வெங்கடேசுவரரே (உ)

சரணம்

ஆயிரந்தரம் அருள் செய்தீராகிலும் பதினுயிரந்தரம்அருள்
செய்தீராகிலும்
எல்லோருக்குமது ஏறுமோ, பெய்யும்மழை சிப்பிகளிலாகிலும்
முத்ததுண்டாமோ கூறும்

தாயும் தமரும் தன்னுடலாசையும் தவிர்த்திருக்குமோ யாருக்கும்
வாயும்வலுவும் ஞானவழியும் துறவும் வார்த்தை சொல்வார்களே
போரும் (உ) 1

என்ன சொன்ஞரிவர் எழுந்திருக்காமலே இரவுபகலும்பார்த்து
இன்னபடியாகும் அவர் சொன்னது உண்மையென்றெண்ணி
மனஸிலேற்றி அவர்
சொன்ன வழியே நடந்து ஆத்மநிலே கடல் சோதித்து உணர்ந்து
பார்த்து
ஸன்னபின்ன ஜட சைதன்ய ஸம்பந்தத்தையெல்லாம்தீர்த்து (உ) 2

ஆவரணுதிகளழிந்து அகண்டநிலே அனுபவமாய் வரல்லேயா
தீவிரமாம் திவ்ய போதானந்தாமிருதம் தேன் போல் ருசி தரல்லேயா
ஸ்தாவராதிகளே தன்மயமாய் சொல்ல தரணியில்வெகு தொல்லேயா
தீவிரஞானத்தால் தேசம் பிரஸித்தியுள்ளார் தினமும்
அனுபவிக்கவில்லேயா? (உ) 3

## (38)

(ராகம் - சுருட்டி)

பல்லவி

சந்திரோதயமாச்சே போதசந்திரோதயமாச்சே
பிரபோத சந்திரோதயமாச்சே (ச)

அனுபல்லவி

இந்திராதி முனீசுவராளுக்கும்கூட
எட்டாத வெங்கடேசுவரரால் (ச)

சரணம்

அறிவு அம்புதி விருத்தியாச்சே
மனதில் ஆம்பல் மலர்ந்ததாச்சே
பெருகிற ஆனந்தம் கேணியதாச்சே
சொல்லமுடிவில்லாத ஸுகமதாச்சே (ச) 1

காயமும் வேருச்சே
காமாதி கள்ளர்பயமும்போச்சே
ஸ்வயமென்னும் பதம்பொய்யாச்சே
ஹம்ஸோஹம் பாவனே மெய்யாச்சே (ச) 2

காமகுரோதமும் போச்சே
மோகயிருளும் போச்சே
ஸ்வபாவமுக்தி ஸபலமாச்சே
ஏகாந்த நிர்மலவெளியாச்சே (ச) 3

கண்டதிருசயம் போச்சே
தோன்றின கானல் ஜலமும்போச்சே
அண்டமுனிவருக்கு மரிதாச்சே
அபரிமிதானந்த ஸுகமாச்சே (ச) 4

ஜாதிவர்ணாசிரமம் போச்சே
வேதசாஸ்திரம் வெறும்பேச்சே
ஆதியந்தமில்லாத அறிவாச்சே
யாருக்கும் கிடையாத அனுபவமாச்சே (ச) 5

## (39)

(ராகம் - காம்போதி)

பல்லவி

ஸச்சிதானந்தமாய் தானிருந்தும் மறந்தவர்போல்
அதெப்படி முன்னிருந்தார் அன்னமே (ஸ)

அனுபல்லவி

அற்புத மீதற்புத மீதற்புத மீதைதன்னிடத்தில்
அச்சமுற யிடமில்லேயே (ஸ)

சரணம்

மனதுண்டோ மறந்தறிய வபுஷுண்டோ பிறந்திறக்க
மலமுண்டோ நிர்மலத்தில் சரிபெரிது சிறி துண்டோ

ஜாதிவர்ணமதிலுண்டோ ஸாக்ஷியென்ன ஸாக்ஷியமுண்டோ
நிறைந்த ஸுகஸாகரத்தில் நிஷ்கள ஸகளமென்ன
அற்புத மீதற்புத மீதற்புத மிதுவே (ஸ) 1

வாய்திறக்க யிடமில்லை மௌனஸங்கல்பமில்லை வந்தது
போனதுமில்லை
ஆதியந்தம் நடுவுமில்லை அவித்யை உபாதியுமில்லை
முக்தனுன என்னிடத்தில்
'பாதி' என்றும் 'நேதி' என்றும் பாதித்த ஸ்வப்னமென்றும்
அற்புத மீதற்புத மீதற்புத மிதுவே (ஸ) 2

அஸங்க உதாஸீனராய் அபரிச்சின்ன பூரணராய் அழிவற்ற ஸ்வரூபராய்
நிரந்தரராய் ரஸகனராய் பரிபூர்ண காமராய்
நித்தியராய் பரிசுத்தராய் தாமிருந்தும்
மலடிமைந்தன் வர்க்கமகிமையிதுவே அற்புத மீதற்புத
மீதற்புத மிதுவே (ஸ) 3

## *(40)*

(ராகம் - முகாரி)

பல்லவி

எங்குமாக ஏனலைகிருய், மனமே
எண்ணமற்றயிடத்திலே நீ நிலைத்திராய் (எ)

அனுபல்லவி

சாடியோடியே வருவாய் காடு மேயாதே மனமே
தேடிபாராய் ஸத்குருவை மோடியாகவே தினமே (எ)

சரணம்

கற்பகாலம் ஞானமில்லாமல் கர்மம் செய்தால்
துக்கஹேது தான் ஜன்மம் போகாது
அற்பகாலம் பிரம்மம் அகமென்றறிருந்து ஆராய்ந்து பார்த்தால்
அப்புறம் ஜன்மம் வராது
கர்ப்ப வாதனை துவக்கி கிழமாய் விழும்தன்னிலும்
ஸ்வல்பமானுலும் அதில் ஸுகமுண்டோ ஆகையாலே (எ) 1

பஞ்சபூதத்தால் முடைந்த பாண்டத்தை பார்த்தால்
நெஞ்சும் மனமும் குமட்டிவரும்
ரஞ்சிதமென்றெண்ணாதே அதை தோலாலே போர்த்தி
வஞ்சனையாய் மூடியிருக்கும் அஞ்சுகோசத்தை பிரித்து
பஞ்சுபோலே பறக்கடித்து கோசபாவனையைவிட்டு மிஞ்சினதாய்
நீ யிருடா (எ) 2

லிங்கதேகம் வசம்பண்ணியே நிர்மலமாக "அஹம் பிரம்மாஸ்மி"
என்று நீ இராய்
கங்குகரையற்ற ஆனந்தகடல் தன்னில் முங்கியனுபவித்தே யிராய்
வெட்கமில்லையோ உனக்கு வம்பு வீண் அளப்பதற்கு
அங்கமற்ற ஆத்மஸுகம் நிரம்பவே யிங்கிருக்க (எ) 3

மோஹாந்தகாரமற்று நீயிராய் சுகாஸனத்தில் ஏகாந்தஸ்தலத்தில்
நீயிராய்
நீ பாஹ்யார்த்த திருஷ்டியற்று இராய் - மனமே, வஸ்துவினிடத்தில்
நிலைத்தேயிராய்
ஜோதிர்மயமானவரை சுத்தபரிபூரணரை
ஸ்ரீமத்வெங்கடேசுவரரை சிந்தையில் தியானம் செய்வாய் (எ) 4

## (41)

(ராகம் - ஆனந்தபைரவி)

பல்லவி

உபகாரத்திற்கு பதிலுபகாரம் செய்ய வேறே
உலகத்திலொன்றும் காணேனையா (உ)

அனுபல்லவி

அபராதியாவேனே அடியேனிந்த
அகிலமுழுது மறிவுமயமாய் தோன்றுதையா (உ)

சரணம்

உடல்பொருளாவி யிவ்வுலகும் உமக்கீந்தாலும்
ஒருமொழிக்கு விலை பெறாதையா
உடலாதிபிரபஞ்சத்தி லொன்றும் உமக்கில்லை யதில்
உம்மைத்தவிர வேறுண்டோ, ஐயா (உ) 1

ருணபாதகனென்று நீதியுரைத்தால் இந்த
ருணம் தீர்க்க மாட்டேனையா
குணரஹிதரென்று கொண்டாடுவேன் அல்லாமல்
குவலயத்தில் என் செய்வேனையா (உ) 2

கூட்டுக்குள் அடைபட்ட புழுவுக்கு உபதேசத்தால்
குளவிக்கு உதவியுண்டோ ஐயா
நாட்டுக்குள் வெங்கடேசுவரரே
அவ்வாறுபோலே நானென்ன சொல்வேன், ஐயா (உ) 3

## *(42)*

*(ராகம் - ஸௌராஷ்டரம்)*

பல்லவி

அறிவு தானென்று அறிந்தவர்க்கு
அன்னியமுண்டோ அதை நீ பாராய் (அ)

அனுபல்லவி

குருவுண்டாகி குறி குணம் வந்து
மருவும் ஆனந்தகோச மைந்தும் (அ)

சரணம்

பஞ்சபூதபிரபஞ்ச விகாரம் அஞ்சுதன்மாத்திரை
அறிந்த பிரகாரம்
கோசவிஷயம் குறிக்கும் அந்நேரம்
மிஞ்சினதே யது வேதாந்தஸாரம் (அ) 1

கற்பித பிரபஞ்சமிதென்றும்
கானல் ஜலம்போலே கண்டும்
ஸ்வப்னத்தில் கண்டஸுகமிது
அற்பமாமிது ஆகாதென்றும் (அ) 2

பெண்டுபிள்ளைகள் பொருளென்றும்
அன்று மாதவர் சொன்னதையறிந்தும்
கண்டு கண்டு கருத்தில் கலந்து
நின்றதுதானே நினைவாய் நினைந்து (அ) 3

மட்டில்லா வேதசாஸ்திரம் கொண்டு
அதை சட்டி சட்டுவம்போலே கண்டு
குட்டி மார்க்கத்தை அறிந்துகொண்டு
வெட்டவெளியாகவே நின்று (அ) 4

பருவம் கண்டு பாக்கியங்கள் வந்து
தரவும் எங்கள் வெங்கடேசுவரர்
குருவின் ஸன்னதி கண்ட ஜன்மங்கள்
ஸர்வபாவனமாமவர் தங்களை (அ) 5

## (43)

(ராகம் - கல்யாணி)

பல்லவி

வாராரோ என்னைப்பாராரோ, முக்தி
தாராரோ என் ஸ்வாமி (வா)

அனுபல்லவி

ஆருருள்ளம் தன்னில் சேரார் உலகெங்கும்
கூருகியே நின்ற நூருயிரம் கணங்கள் (வா)

சரணம்

சண்டமாருதம்போலே அண்டம்பொடி தூளாக்கி
வண்டமாயையை அவர் விண்ட விமலபோதர்
தொண்டர் மனதில்நின்று கண்டபவ மறுத்து
அகண்டானுபவத்தை விண்டே வாக்குகள் கொண்டு (வா) 1

ஸத்துசித்தானந்த அத்வைதியே இவர்
ஒருத்தர் எதிரில்லாத வஸ்து இவர் என்று
பக்தி செய்தவர் ஜீவன் முக்தியடைய நல்ல
சத்தியமாய் இவர் முக்திஸாதனம் கொண்டு (வா) 2

ஸத்துசித்தானந்தர் அபரிச்சின்னர் அருளினாலே
ஈசரே இவர்க்கொரு நாசப்பிறவியில்லை
ஈசர் அவர் ஸ்வபிரகாசர் என் குரு
பிரம்ம வெங்கடேசுவரர் இங்கே (வா) 3

## *(44)*

*(ராகம் - ஸௌராஷ்டரம்)*

பல்லவி

சிதஹம் பரிபூர்ணம் தேஹம் நாஹம்
பூர்ணம் பிரம்மைவாஹம் *(சி)*

அனுபல்லவி

சித் ஏகமே நானென்று தைலதாரைபோல்
சிந்தித்தபிற்பாடு தேஹ ஜகத்துண்டோ *(சி)*

சரணம்

அறியேன் நானென்று சொன்னால்
எங்கம்மா மலடி என்றால் ஒக்குமோ
எனக்கு நாக்கில்லை என்று எப்படி சொல்லுவாய்
எங்கும் பரபிரம்மம் எல்லாம் நீதானடா *(சி) 1*

அறிந்தபின் விவகாரங்கள் மனஸே ஆமோவென்று
சங்கித்தாக்கால் தூங்கி முழித்தவன்
ஸ்வப்னம் சொன்னாப்போல்
ஸ்வஸ்வரூபம் தன்னைசொல்லி மகிழ்ந்தாப்போல் *(சி) 2*

அஞ்ஞானி போல ஞானி ஸமனன்றோ
ஆகாரவிவகாரத்தில் ஏது அடையாளம்
என்று நீ கேட்டாக்கால்
கர்த்தா அக்ஞானி அகர்த்தா பிரம்ம நிஷ்டன் *(சி) 3*

ஊன்றிய பாறையின்மேல் பிரவாகங்கள்
ஓடியும் அசையாதுபோல்
ஒன்றின்மேல் ஒன்றாக விருத்தியடைந்தாக்கால்
கல்லுபோல் அந்தக்கரணம் அசையாது *(சி) 4*

ஆடியே கூத்தாடியும்தான்
அவன் தானே பாடிகைகொண்டு நாடியே
கும்பத்தில் அணிகண்டாப்போல்
ஊன்றியே சித்தத்தில் ஒன்றே அஹம் என்று *(சி) 5*

விபசாரி காரியம்போல் விவகாரம்
மேலாகச் செய்துவந்தாலும் சோரபர்த்தாவின்மேல்
சித்தம் லயித்தாப்போல்
ஸ்வஸ்வருபம் தன்னிலே சித்தம் ததாகாரம் (சி) 6

ஞானிக்கு விவஹாரங்கள் உண்டேயானுல்
கல்மஷம் அற்றிருப்பார்
நிக்ஷேபம் கண்டவர் போல்
நிரதிசயானந்தத்திலிருப்பார் (சி) 7

உன்மத்தன் பாலனைப்போல் ஸஞ்சரிப்பார்
ஊமையைப்போல் வாயை மூடிக்கொண்டிருப்பார்
பஞ்சேந்திரியங்களிலே யிருந்தாலும்
பார்த்துக்கொண்டே யிருப்பார் (சி) 8

பாணிபாதங்களினுல் ஸஞ்சரிப்பார்
ஸ்தூலத்தில் ஸ்தூலமாயிருப்பார்
ஸூக்ஷ்மத்தில் ஸூக்ஷ்மமாயிருப்பார்
ஜோதி வெங்கடேசுவரர் பாதம் நமாமி (சி) 9

## (45)

(ராகம் - மத்யமாவதி)

பல்லவி

ஸாக்ஷி சைதன்னியம் ஆனேன் என்றும்
ஸத்குரு கிருபையினுலே (ஸா)

அனுபல்லவி

காக்ஷி கண்டதில் நின்று ஸூக்ஷித்திருந்துறைந்து
ஈக்ஷித்ததினுல் வந்ததை யுபேக்ஷித்தொருவிதமாய்
தீக்ஷணைசெய்து விகாரமிழந்து தாக்ஷியில்லாமலே 'தத்' பதமாகிய
தீக்ஷித்தவனை தியாகம்செய்ய அதிதீக்ஷிண்ய திவாகரன் போலவே
(ஸா)

சரணம்

மாயாஉடல் கருவி என்றும் மற்றொருவருக்கும்
வாயாலுரைசெய்யாது கண்டும்
வானுக்குள் நின்றும், ஹ்ருதயானந்த நிலைகண்டும்
ஒருவருக்கும் பிரமியாது அனுபவம் என்றும்
ஏகாந்த நிர்மலத்தில் யோகசயனம்கண்டு
போகாந்தரங்களுக்குள்ளும் தாகம் தணிந்துகொள்வாய்
பாகாயுறைந்து பராபரவெளியிலே தேகம்
மறைந்தது தேஜோவானுகியே யோகநிலை
அதீதநிலையிலே சோகம் மறந்து ஸ்வபாவமதாகியே (ஸா) 1

தேகாதி பிரபஞ்சம் வேறுகி தேவாதிகளுக்குள்ளும்
மோகபாசம் அறுத்து நீக்கி முக்காலத்திலும்
சாகாக்கால் என்றும் நோக்கி விதவிதமாகி
வேகாததலையாகி காயாபுரியில்
மனம் நாயாய் திரிந்து உலகில்
பேயாடுவார்கள் ஸம்பிரதாய மறிந்துகொள்வாய்
ஞாலமடங்கியே நானறிவாகியே மாயை துலங்கியே
மறையோர் கர்மங்கள் செய்ய நடுங்கியே
சின்மயமாய் தானுய் சாயை ஒதுங்கியே ஸமரஸம் தானுய் (ஸா) 2

சிரவணுதி ஸாதனத்தினுலும்
ஜன்மங்கள் கோடி தபம் ஈச்வரார்ப்பணத்தினுலும்
தரணிபுகழும் ஸ்ரீகுரு வெங்கடேசுவரரை
சிந்தித்ததாலும் புத்திவிவேகத்தாலும்
தாமாய் உலகுக்கெல்லாம் சிவமாய் நிறைந்த
நானும் பாவதோஷாதிகளுக்குள்ளும்
அவரனுக்கிரஹத்தினுல்
சிவமொரு சிந்தனை சேதனமாய்
அவனிவனென்றும் அரூபமதானுல் (ஸா) 3

## (46)

(ராகம் - ஸாவேரி)

பல்லவி

யாரடா, உன்னை யறிந்துபாரடா, பரமாத்மா என்று
தேரடா, தேர்ந்தால் உனக்கெதிர் யாரடா (ஆ)

அனுபல்லவி

ஸ்தூலஸூக்ஷ்ம காரணனுடா நீ
துரீயமான பொருள் தானேடா
ஆறுவிகாரங்கள் தானேடா நீ
அருமையாகி நின்ற அறிவுதானேடா (ஆ)

சரணம்

போக்கு வரத்துடல் தானேடா நீ
பூரணமாகி நின்ற பொருள் தானேடா
சேர்க்கும் நாமரூபம் தானேடா
சேதனமாய் நின்ற சிவன் தானேடா (ஆ) 1

தோன்று மவஸ்தைகள் தானேடா நீ
தொடர்ந்து வந்த ஞான துறையோடா
மூன்று விருத்திகள் தானேடா நீ
ஸுஷும் சக்தி தானேடா நீ (ஆ) 2

கருவிகரணங்கள் தானேடா நீ
அத்தைக் கண்டறிந்த ஞானக்கண்ணேடா
காலம்மூன்றும் கழிந்தவனேடா நீ
காரணமாய்நின்ற கருத்து தானேடா (ஆ) 3

மாறிவரும் உடல் தானேடா நீ
மாசில்லாத வான்மதியோடா
குறியும் குணமும் தானேடா நீ
குரு வெங்கடேசுவரர் தானேடா நீ (ஆ) 4

## (47)

(ராகம் -மத்யமாவதி)

பல்லவி

இந்தவேளை யறியாமலுன்னை எந்தவேளை யறிவாய் (இ)

### அனுபல்லவி

அந்தமானதோர் மனுஷ்ய ஜன்ம மரிதல்லவோ
கிடைப்பது ஐயையோ (இ)

### சரணம்

சாஸ்திரம் பலகோடியிருக்கிறது
ஸாதனம் நன்ருய் நாலிருக்கிறது
நேத்திராதி அந்தக்கரணமுண்டடா
வெகுநேர்த்தியான விவேகமுண்டடா (இ) 1

பாத்திரம் நீ பருவம் உண்டடா
பாருக்குள் பெரியோருண்டடா
ஸூத்திரதாரிபோலிருக்குதே யுந்தன்
ஸ்வரூபமாம் அதை பிரதீதி மறைக்குதே (இ) 2

காரணகாரியங்கள் தோன்றுதே
காயமும் வேருக காணுதே
ஆரணம் பொய் சொல்லாதடா
ஆத்மா நீ தானுமடா (இ) 3

பூரணமாய் பொங்குதே
பொல்லாத ஜன்மம் நீங்குதே
தரணி எல்லாம் தயங்குதே
தன்னேயறியாதே மயங்குதே (இ) 4

ஓடமிருக்கிறபோது கடக்கணும்
உடலுக்கு காலன்வரும் காணடா
பாடாமல் பாடுதடா சுருதிகளும்
நீ பார்த்து முக்தி சேரடா (இ) 5

மூடபுத்தியை துரத்தடா
ஜீவன்முக்தி வழி மனம் நிறுத்தடா
கூடஸ்தராம் ஈசன் இருக்கிருர்
எங்கள் குருவெங்கடேசுவரர் இருக்கிருர் (இ) 6

## (48)

(ராகம்-தோடி)

பல்லவி

ஜீவா சிவன் நீயடா, சிந்தையை விட்டால்
சின்மயம் நீ தானடா (ஜீ)

அனுபல்லவி

அகம் தேகமில்லாமல் ஸோகம் பாவனை பண்ண (ஜீ)

சரணம்

மிருத்திகையில்லாமல் பாண்டம் யுக்தியினுலுண்டாமோ
விதையில்லாமல் முளைமுளைத்து விருக்ஷம் காச்சு பழமாமோ
அப்பு வன்னியில் அலை நுரையுடன் அம்புதி விளங்குமோ
அறிவன்னியில் தோன்றுமோ தன்னைவிட (ஜீ) 1

அக்கினியில்லாமல் தூமமாவர்த்தித்து மூளுமோ
ஆவன்னியில் பயஸுடன் கிருதமுண்டாய் ஆகுதிபண்ணகூடுமோ
ரஜ்ஜுவிலே தோன்றும் ஸர்ப்பம் யூகத்தால்
பழுதையன்னியிலாகுமோ
பிரக்ஞை யன்னியில் கட சருவாதிகளது ஏர்க்குமோ புஜிக்குமோ
(ஜீ) 2

பருத்தியன்னியில் நீலபேத படங்களாய் வெகுவிதங்களாகுமோ
ஸமர்த்தியான சராசரவாதிகள் ஸத்தையன்னியில் ஸுகியாகுமோ
நிறுத்தி நிலையில்லாது நித்தியானந்த ரஸமறிந்துண்ணகூடுமோ
ஸத்குருஉபதேச மன்னியில் ஸதானந்த நிலையாகுமோ (ஜீ) 3

## (49)

(ராகம்-சங்கராபரணம்)

பல்லவி

மனதே என்னை கொல்லாதே
உன்சொல் இனி செல்லாதே (ம)

அனுபல்லவி

கொல்லாதே மனதே, நீ குறையற்ற ஸுகமானேன்
எள்ளுக்குள் ளெண்ணெபோ லெங்கும் நிறைந்த
என்னை கொல்லாதே (ம)

சரணம்

கனவுபோலே இந்த பிரபஞ்சம் மனக்கல்பித மென்றதையறிந்தும்
அதை தனது பாவனை பண்ணி தானென்றுமெண்ணி
உன்னது என்னது என்று யில்லாததை
யுண்டுபண்ணி கொல்லாதே (ம) 1

செல்லாப்பணம் செலுத்தப்படுமோ
ஜகத்தென்னும் பிரமைவிடுமோ யுன்னை
தள்ளிமெள்ள அத்தை தானே தானுகி
அல்லலற்று அகண்டானந்த ஸுகமானேன் (ம) 2

கானலே ஜலமென்று பிரமித்துக்கண்டு
கால்வலித்தோடி யிளைத்து ஸ்நானபானுசமனம்
பண்ண ஜலமற்று அகண்டஸாகரம்
கண்டு அமிழ்ந்தேன் உன்வசமாகேன் (ம) 3

ஸத்குரு தயவினுல் பார்த்து
ஸகல சின்மாத்திரமாய் தீர்த்து
நித்திய சுத்தபிரம்மமென்றும் நிஜபோதமென்றும்
சுத்தவெளி தன்னில் தேர்ந்தும் நிஜமானேன் (ம) 4

ஸ்வப்னஜாகிரம் விட்டு துரத்தி ஸ்வதஸித்தமென்றதை
மலர்த்தி முழித்தால், பாலமிர்தமென்னும்
'அகம்பிரம்மாஸ்மி' என்னும் நித்திய அபரோக்ஷம் கண்டு
நிஜபோத ஸுகமானேன் (ம) 5

## (50)

(ராகம் - மோஹனம்)

பல்லவி

திரும்பவந்தால் வரட்டும் எந்த ரோகமும்
சேரவந்தால் வரட்டும் (தி)

அனுபல்லவி

திரும்பவந்ததோர் ஜனனமரண ரோகம்
தீர்க்க மருந்து தந்த தேசிகரே வாரும் (தி)

சரணம்

ஆத்மாவோ நிர்விகாரர் அந்தக்கரணமோ ஜடம்
சிதாபாஸன் மித்தியாபூதன் ஸுகதுக்கம் யாருக்கு
இனி ஸாக்ஷி குருஸன்னிதானத்திலே
சிதாபாஸன் அகங்காரம் தானே புஜிப்பன் (தி) 1

பவக் கடல் துலைந்தால் நமக்கினிபடராது
கர்மவினை சேரவந்து நீங்கள்
தீர்ந்தமுறிகிழித்து வாரம் வையாமலே
வாங்கி புஜியுங்கள் (தி) 2

இந்த தேகம்விட்டா லுனக்கினி
வந்து தரப்போகிறுளோ ஸந்தி பார்த்து
நீங்கள் வந்த கடமையை எல்லாம்
பந்தவீட்டில் தானே வந்து புஜியுங்கள் (தி) 3

துடர்சீட்டு கிழிந்துவிட்டால் நமக்கினி
துடராது ஜென்மவினை வெங்கடேச மூர்த்திகிருபையாலே
எந்தன் சடலம்தான் பூமியில் வந்து
ஜெனியாமல் இருக்கட்டும். (தி) 4

## (51)

(ராகம் - கல்யாணி)

பல்லவி

ஸம்ஸாரமாகிற ஸர்ப்பம் கிட்ட இருந்தாலும்
இனி எனக்கு அது அல்பம் (ஸ)

அனுபல்லவி

அஸாரமென் றறிந்ததே கல்பம்
அவனியை பரிக்கிற ஆதிசேஷனே தல்பம் (ஸ)

சரணம்

குருமூர்த்தி வருவதற்கு முன்னே
கொத்தி பிடுங்க வந்தது சுற்றி என்னே
பரிபூர்ண ஹரிபக்தி க்ஷமை வந்த பின்பு
பயப்படாதே என்று சொன்னாரே என்னை (ஸ) 1

தவிக்கும்போது முன்வந்து குதித்தாரே
என் தாபத்திர யாக்கினியை தணித்தாரே
அவித்தை சாந்தி கெருடமந்திரத்தை ஜெபித்தாரே
அகண்டவிருத்தியாகிற தடியாலே யடித்தாரே (ஸ) 2

அருமையறிந்தவர் முன்னே ஆதி வெங்கடேசுவரர்
வந்து நின்றாரே திருவாயினால் நீயும் நானும் ஒன்றாய்
தேகேந்திரிய பிரபஞ்சத்தை கொல்லாமல்
கொல்லுவோ மென்று சொன்னாரே (ஸ) 3

**(52)**

(ராகம் - மோஹனம்)

பல்லவி

இந்த ரகஸியம் சொன்னீரே யானால்
இருக்கிறேன் நான் உமக்கு ஸொந்தமாய் (இ)

அனுபல்லவி

அம்மையில்லாதொரு செல்லிபிறந்ததும்
அப்பன் முலேகுடித்து அபிவிருத்தியானதும்
யாருக்கும் தோன்றாமல் அரூபமாய் ஜகத்தைப் படைத்ததும்
அஹோபலர் தயவினால் அதற்கு அர்த்தம் அறிந்ததும் (இ)

சரணம்

ஈக்ஷணமில்லாமல் பூதம் பிறந்ததும்
கல்பகம் தலைகீழாய் உத்பன்னமானதும்
கல்பசு கன்றுக்கு இரங்கிப்பால் கொடுத்ததும்
காற்றைப்பிடித்து கண்கலசத்தில் அடைத்ததும் (இ) 1

மலடிமகன் மனோராஜ்யம் ஆண்டதும்
வானத்து மலர்கொய்து நாரில்லாமல் தொடுத்ததும்
மச்சிலுக்கு முயல்கொம்பு தச்சிட்டுச் சமைந்ததும்
மரித்தவன் படைவெட்டி ஜெயித்தவ னுண்டதும் (இ) 2

கலத்தில் இடாமல் தீயற்றுச் சமைத்ததும்
கண்டத்தில் நாவில்லாதவன் புஜித்ததும்
காட்டினில் கந்தர்வநகரம் போயடுத்ததும்
கானல்ஜலத்தில் ஸ்நானம் பண்ணி பானம் செய்ததும் (இ) 3

பழுதையில்பாம்பு ஸ்தாணுபுருஷனை கடித்து
பயந்தோடி கால்ஒடிந்து பல்லுகள் தகர்ந்ததும்
பாருக்குள் நபும்ஸகன் ஸ்திரீபோகம் புஜித்ததும்
பட்டணத்தலங்காரம் பொட்டையன் கண்டதும் (இ) 4

இருசியோடு ஸத்புருஷன் போகம் புஜித்ததும்
இந்த ஆகாசத்தை ஓர் அம்புனலசைத்ததும்
எழுலோகத்து புழுதியை யிலக்கிட்டு குறித்ததும்
எழுகடல் ஜலத்தையும் எறும்பொன்று குடித்ததும் (இ) 5

## (53)

(ராகம் - மோஹனம்)

பல்லவி

சொல்லப்படாத ஸுகத்தை
அனுபவத்தா லறியவேணும் (சொ)

அனுபல்லவி

அல்லல் படுத்துகிற மனமே இதுவென்று
காணப்படாது கண்டாய் (சொ)

சரணம்

அந்தகனுல் நவரத்ன பரிக்ஷை யறிய முடியப்போமோ
கோடிகிரந்தாவலோகனம் பண்ணினதினுல் அவித்தைதான்
சாகுமோ
கோடிமந்திரங்களை ஜபித்தால் அதனுல் அகங்காரம் நசிக்குமோ
மணி மந்திரங்களால் ஆனதோர் சித்தவிருத்தியினுல்
ஸமபாவனை வருமோ, மனமே (சொ) 1

இருளை யிரும்புலக்கையினுல் அடித்தோட்டினுல் போகுமோ
எருதைப் பிடித்து கறந்ததினுல் ஒரு பிள்ளைக்கு பாலாகுமோ
அவனியிலுண்டான கர்மமெல்லாம் செய்தால் அதனுல் அவித்யை
போகுமோ
தத்வப்பொருள் ஸ்வானுபூதியில்லாது சாஸ்திரத்தால்
ஸ்வப்ரகாசமாகுமோ, மனமே (சொ) 2

கையிலுள்ளநெல்லிக்கனியைக்காண கண்ணுடி பார்ப்பானேன்
மெய்யாபரணம் கழுத்திலிருக்க, வீடெங்கும் தேடுவானேன்
பொய்யான இந்த பிரபஞ்சத்தை தூரவிரட்டியபின்
மெய்யாய் நிறைந்த பரபிரம்மம் தானென்றறிய அலைவானேன்
மனமே (சொ) 3

காடாந்தகாரம் நிவாரணமாக்கி விளங்கும் பாஸ்கரனுர்
மூடமதியை துரத்தியடிக்கும் குருவெங்கடேசுவரனுர்
தத்துவபாடங்கள் சொல்லி ஆத்ம போதந்தரும் பரிபூர்ணதேசிகனுர்
பவவாரிதியை கடத்தி வைக்கும் ஒடமாம் சரணத்தை
பஜித்திரு, மனமே (சொ) 4

**(54)**

(ராகம் - மோகனம்)

பல்லவி

ஞானநிஷ்டாள் மகிமை யுரைக்க நாவிலடங்காது (ஞா)

அனுபல்லவி

ஆனுல் அவர் குணம் நானுமறிந்ததை
அன்பாக சொல்லுகிறேன் மிகவும் (ஞா)

சரணம்

ஆதியில்லாத சரீரத்தைக் கண்டறிந்து பிரமியார்கள் பிராரப்த
கர்மத்தைக்கண்டு மனதிலேபார்த்து மகிழ்ந்துகொண்டு
இதில் ஆஸக்திவைத்தால் அனர்த்தம் வருமென்றறிந்து
மஹாத்மாக்களாய்
பித்தரைப்போலே ஜகத்திலிருந்தவர்கள் பிரம்மவிசாரம் செய்வார்
மிகவும் (ஞா) 1

தாமரையிலேநீர்போலே ஜகமெல்லாம் தான்வேருகியிருப்பார்கள்
பூமியிலுள்ள புளியுமோடும் போலவே போகம் புசித்திருப்பார்கள்
நாம் அந்த பரபிம்மம் அகமஸ்மி நாமென்று நன்ருயிருந்துகொண்டு
பாமரானீ நல்லவார்த்தை சொல்லி பரிசுத்தமாக்கி வைப்பார் மிகவும்
(ஞா) 2

சித்துக்குண்டோ இந்த தேகாதிபோகங்கள் சற்றும் தானில்லே
என்பார்கள்
கர்த்தாவாய் போக்தாவாயுள்ள ஜனங்களேக்கண்டே
நகைத்திருப்பார்கள்
கர்த்தரைப்போலே ஜகத்திலிருந்து அவர்கள் பேதித்திருப்பார்கள்
பக்தாளே கேளுங்கள் பரமபுருஷர்களுடைய பாக்கியத்தை என்ன
சொல்வேன் மிகவும் (ஞா) 3

ஸ்தாணுபுருஷனேப்போலே ஜகமெல்லாம்தான் பார்த்திருப்பார்கள்
வீணுக்கன்ருே ஜீவனுகயிருந்தோமென்று மெத்த
நகைத்திருப்பார்கள்
வேணத்தக்க கர்மம் வேதங்கள் சொன்னுலும் மெய்யாக உண்மை
கொள்ளார்கள்
சேஷித்த உலகமெல்லாம் நம்முடைய சித்விலாஸமென்பார்கள்
மிகவும் (ஞா) 4

கந்தையும் பீதாம்பரமும் ஸமனுக கண்டே மகிழ்ந்திருப்பார்கள்
தந்தையும் தாயும்போலே பக்ஷமாய் பிறரையும் பார்த்திருப்பார்கள்
வந்தியாபுத்திரனுக ஜகமெல்லாம் வான்மயமாகயிருப்பார்கள்
முன்னிருந்தபடி யிருப்போமென்றும் முக்தியில்லே என்பார்கள்
மிகவும் (ஞா) 5

அந்தியில்லே ஸந்தியில்லேயவர்களுக்கு அனுதினமும் வெளிச்சம்
சிந்தையில்லே ஸ்நானமில்லே யவர்களுக்கு சித்தாய்
நிறைந்திருப்பார்கள்
சிந்தையிலே பிரம்மாகமஸ்மி நாமென்றும் தெரிந்தும் ஸ்துதி
செய்வார்கள்
நிந்தனேயில்லே யவர்களுக்கொருவஸ்து நிச்சயமாயிருக்கும் மிகவும்
(ஞா) 6

அவர்கள் உதரத்தில் நெல்லியிலேயளவு அன்னங்களிட்டால்
பவரோகமற்று யினி பாரில் பிறவார்கள் இது ஸத்யம்
உபநிஷத்துக்களும் வேதங்கள் நாலும் உரைக்கும் அவர் மகிமை
ஜீவன்முக்தாளுடைய தீர்ந்த நிலேசொல்ல ஆதிசேஷனுக்கும்
முடியாது மிகவும் (ஞா) 7

அவர்களிருக்கும் ஸ்தலங்கள் அறுபத்தாறுகோடி தீர்த்தம்
அவர்களிருக்கும் ஸ்தலங்கள் ஆதிகாசி கைலாஸம்
அவர்களிருக்கும் ஸ்தலங்கள் தில்லேயம்பலம் மாயூரம்
அவர்களிருக்கும் ஸ்தலங்களுக் கொப்பு யாராலும்
சொல்லப்போமோ மிகவும் (ஞா) 8

## *(55)*

*(ராகம் - கல்யாணி)*

பல்லவி

மானத்துடனே போடி மாயை மானத்துடனே போடி (மா)

அனுபல்லவி

வானெத்த குரு வெங்கடேசுவரரிங்கே ஒரு தியானத்தில் உண்டு
அவர் ஞாலத்தில் உண்டு சொன்னேன் (மா)

சரணம்

வாஸனு வசத்தாலே வந்தவழிகள் அறிவேண்டி.
கோசத்துக்கப்பாலே நான் குடியிருப்பது அறியாயோடி
பாசக்கொடியறுந்தும் ஆசைக்கடல் கடந்தும்
வாசல்படி கடந்த மாசற்ற ஜோதியடி. (மா) 1

தத்வமறிவேனடி என் கிட்டே தாறுமாறு ஏண்டி.
சித்ருபனடி எங்கும் சிறந்த ஞானமடி
வஸ்துநிலையை நானுற்றுணர்ந்த பரிசுத்த
ஸ்வருபனுன அத்விதியம் நானடி. (மா) 2

குஷ்டரோகமயம் உன் குஹ்யம் தீண்டிப்பிறவேண்டி
கிட்டகூடாதுபோடி நாதாந்த திருஷ்டி எனக்குண்டு போடி
பட்டப்பக விருட்டை கிட்டவரவொட்டுமோடி
துஷ்டமாயை ஞானம் சுட்டு விரட்டுமடி. (மா) 3

## (56)

(ராகம் - கேதாரகௌளம்)

பல்லவி

இவருக்கு நானென்ன செய்தேனோ தெரியாது
என்னையிப்படி செய்தார் (இ)

அனுபல்லவி

கயிறும் தோண்டியும்போலே காயத்தோடிருந்த என்னை
காளையும் கடுவாயும்போலே காயமெனக்கிருக்க தாமாக்கினுர் (இ)

சரணம்

பெண்டுபிள்ளையில்லாமல் பேருமூருமில்லாமல்
நன்றுதீதொன்றுமில்லாமல் நாட்டில் வழக்கில்லாமல்
கண்டகர்மங்கள் செய்ய கால்கையுடலில்லாமல்
அகண்ட பெருவெளியுருவமாயொரு ஆதரவுமில்லாமல் செய்த(இ) 1

புதுப்பானை ஈப்போலே போகமெனக்கில்லாமல்
பூமிவிஷயமும் பொய்யாய் மதுவுண்ட நாவினால் நீருண்ண அறியாது
சதுர்வித மறைகள் புராண சாஸ்திரமதிலே
எள்ளளவு மாசையில்லாமல் செய்தார் (இ) 2

அசுவத்தபிர தக்ஷிண மாதித்திய நமஸ்காரம்
அகிலகர்மங்களெல்லாம் விசுவாஸமாக செய்து
விருத்திபாதையொழிக்க செய்தார் நசுவரமாமிந்த நாட்டில்
எங்கள் நாதன் குரு வெங்கடேசுவரராய் (இ) 3

## (57)

(ராகம் - எதுகுல காம்போதி)

பல்லவி

என்னைத்தவிர வேறேயில்லை என்றுபதேசம்செய்த
குருவை நான் மறவேன் (உ)

அனுபல்லவி

முன்னே செய்த தபம் மூர்த்தீகரித்துவந்தென்
மோகம் தீர்த்த வெங்கடேசுவரநாதனே (உ)

சரணம்

பூதமும் நீயல்ல பொறிபுலன் நீயல்ல
வாதமும் நீயல்ல வாக்கு விவகாரமாமே
சோதனை செய்து நாமரூபத்தை தள்ளினால்
வேதம் கடந்த பொருள் ஆகுமென்றாரென்னை (உ) 1

ஆதியும் நானே அனாதியும் நானே
சோதித்தறிந்து கொண்டேன் ஜோதிமயமாய் என்னை
போதிக்கும் மஹா வாக்கியானுபவித்தால் என்னை
சோதித்தறிந்து அகண்டபூர்ணமாம் என்று (உ) 2

கையென்றும் காலென்றும் காடென்றும் புரமென்றும்
பொய்யென் றறிந்துகொண்டு பூர்ணவடிவாய் நின்றேன்
என்னை மெய்யென்று சுருதியுக்தி யனுபவத்தினால் எனக்கு
கைநெல்லிக்காய்போலே காட்டினாரதிசயம் (உ) 3

பட்டையுடுத்தி பணிபூண்டு திரியுமந்த
பாக்கியம் வேறல்ல பார்க்க மனோவிகாரம்
கட்டையில் கள்ளன்போல் காணும் பிரபஞ்சமிது
சுட்டுக் கரைத்து ஸுகஸாகரமானேன் (உ) 4

## (58)

(ராகம் - ஸெளராஷ்டரம்)

### பல்லவி

வாக்குக்கும் மனஸுக்கும் எட்டாத வஸ்துவை
வானிலே கண்டுகொண்டேனே (வா)

### அனுபல்லவி

யாருக்கும் கிடையாது ஆனந்தமானந்தம் பார்க்க கண்ணாயிரம் வேணும்
அத்தைபார்க்கிற பேருக்கு காணும் தேவர் யாருக்கும் கிடையாது
காணும் (வா)

### சரணம்

ஸத்துசித்தானந்த ஸம்பத்துண்டாகியே சாசுவதபிரம்ம மிதென்றும்
அன்ருத ஜடதுக்கமான மனஸுக்கு அன்னிய மன்னியமென்னும்
எந்தன் சித்தத்திலே கண்டு சேஷித்து நின்றது
சிதாபாஸனே யல்லவென்றும் பரம அத்வைதப்பொருளை
அகமென்றும் அறிந்தநிலையிது வென்றும்
ஜீவன்முக்தி ஸுகமிதுவென்றும்
யோக நித்திரை தன்னிலே தோன்றும் (வா) 1

கர்மவலைகளை கண்டிக்க நானொரு
கத்தியெடுத்துகொண்டேனே
இந்தகர்மபல பலஜன்ம விகாரத்தை
தானே தவிர்த்துகொண்டேனே
இந்தபொம்மைக் குள்ளேயும் புறம்பாயும் இருக்கிறபோதம்
அறிந்துகொண்டேனே எங்கும் தன்மயமாய்க்கண்டேனே
நல்ல மர்மமறிந்து கொண்டேனே (வா) 2

நாசசரீரத்திலே காட்டினரே நால்வேத சாஸ்திரத்தினலே
பஞ்சகோசங்களென்னும் கோட்டையை யிடித்த
குருவெங்கடேசுவரராலே
யாரும்பேசாத பேச்செல்லாம் பேசிக்கொண்டு நான்
புகழ்ந்து யிருக்கையினலே பின்னும்
காசாசைகொண்டு கலங்கும்பேர்களுக்கு
காரியமே இங்கில்லாததினலே எங்களீசன்
குருநாதனலே மூன்றுவாஸனையு மற்றதினலே (வா) 3

## (59)

(ராகம் - சுருட்டி)

பல்லவி

அகப்பட்டு கொண்டாயா சித்தா
நீ அகம்விட்டு நின்ருயா (அ)

அனுபல்லவி

அகப்பட்டுகொண்டாயா ஆனந்தவாரிதியில்
கூப்பிட்டும் கேளாத குணதீத ரஹஸ்யத்தில் (அ)

சரணம்

கண்கொள்ளா ஜோதிமயத்திலே களங்கமற்ற நிர்பயத்திலே
நித்தியானந்த கூடத்திலே நிஷ்களானந்த புரத்திலே (அ) 1

ஏகமானயிடத்திலே ஏழும்மாறும்பதத்திலே
போகமற்றயிடத்திலே பிரம்மானந்த மதத்திலே (அ) 2

பத்து மாறும் பதத்திலே பஞ்சவர்ணமற்ற நிறத்திலே
ஸித்தியான ஸ்திரத்திலே சிதானந்த புரத்திலே (அ) 3

## (60)

(ராகம் - ஸௌராஷ்டரம்)

பல்லவி

ஏதென்று யினிநான் சொல்வேன் என் ஸ்வாமிநாதா!
ஏதென்று யினிநான் சொல்வேன் (ஏ)

அனுபல்லவி

யோக ஸித்தாந்த வேதநாதன் செய்த ஹிதத்தை
என் குருநாதன் செய்த ஹிதத்தை (ஏ)

சரணம்

அப்போதே தூணில் உதித்ததும் அன்று பிரஹ்லாதருக்கு
சென்று தாபம் தீர்த்ததும், ஸ்வாமி
இப்போதெனக்காய் வந்ததும் ஹிதம்சொல்லி
அரசடியில் யிந்தவேஷமானதும், ஸ்வாமி (ஏ) 1

அஸ்திபாதிப்ரியம் பிரித்ததும் அகண்ட
ஸச்சிதானந்தம் நீயே பிரம்மமென்றதும், ஸ்வாமி
ஏத்தியே மோக்ஷமளித்ததும் ''ஏகமேவ அத்விதியம்''
நீயே பிரம்மமென்றதும், ஸ்வாமி (ஏ) 2

அடிக்கடி வளிவில்வந்ததும் 'அகம்பிரம்மாஸ்மி'
என்று ஆணை பாஷையிட்டதும்
துடுக்காய் பேதமறுத்ததும்
ஸோயம் தேவதத்தனைப்போல் பரிபூரணமாய் நிறைந்ததும் (ஏ) 3

அருவிபோல் கருணைவைத்ததும் அடிக்கடி வரும்
ஜன்மம் ஆற்றிமாற்றிப் போட்டதும், ஸ்வாமி
பரவி எங்கும் நிறைந்ததும் பார்த்து
ஜீவபிரமை போக்கி தீர்த்து ஆண்டவிதத்தை நான் (ஏ) 4

## (61)

(ராகம் - மத்தியமாவதி)

பல்லவி

பிரம்மானந்தத்தை கண்டு பேசாதிரு, மனமே (பி)

அனுபல்லவி

தர்மமோ யிதுசொல்ல தரணியோர்களுக்கு யிந்த (பி)

சரணம்

வேதாதீதமாகியே விதிநிஷேதமில்லாமல்
போதானந்த ரூபமாய் பூரணவடிவாய் நின்ற (பி) 1

ஸர்வபரிபூரணராகியே ஸச்சிதானந்தராகியே
கமனமும் ஒடுங்கியே கேவலாத்மாவில் கூடியே (பி) 2

நித்தியானந்தராகியே நிர்விஷயானந்தராகியே
ஸத்திய ஞானனந்த சாசுவதராகியே (பி) 3

ஸங்கவர்ஜிதராகியே ஸமரஸ வடிவாகியே
வெங்கடேசுவர தேசிகர் விமலபோத ரூபமாகியே (பி) 4

## (62)

(ராகம் - ஆரபி)

பல்லவி

ஐயா! நீர் தந்தது ஆனந்தமானாலும்
அதிசயமாகவே தோனுதையா! (அ)

அனுபல்லவி

மெய்யான குரு வெங்கடேசுவர நாதனே! வேதாந்த வேத்யனே!
நாதாந்தமூர்த்தியே! (அ)

சரணம்

கண்டமில்லாமல் அகண்டமாய் தோனுது
கருவி கரணங்கள் கண்டாலும் வீணது
அண்டமுனிவர்க்குள்ளும் தானென்றுதோனுது
அடிநடுமுடிவுமில்லாமல் வான் தன்னை பூணுது (அ) 1

பழகப்பழக மெத்த பாக்கியம் வருகுது
பரமஸுகானந்தம் பரவசம் தருகுது
அழகான அறிவுத்தியால் அங்கமெல்லாம் உருகுது
ஆனந்தவெள்ளம் கங்குகரையற்று பெருகுது (அ) 2

கருணைமிகுந்த கடாக்ஷத்தினால் வந்த
காக்ஷியைகண்டு கலந்து உல்லாஸமாகி
அருணபிரகாசம்போல் அண்டமெல்லாம் ஜொலிக்குது
அவருடைய மகிமையை யாரிடம் சொல்லுவேன் (அ) 3

## (63)

(ராகம் - தன்யாஸி)

பல்லவி

அவித்தை வசத்தையடையாதே, மனமே
ஆனந்தாப்தியில் அமர்ந்திராய், மனமே (அ)

அனுபல்லவி

கொஞ்சமாய் ஒருவித்தை படித்தால்
பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணமண்டலத்தில்
மிஞ்சினபேருண்டோ என்பார்
கொஞ்சியே கர்வத்தை யடைந்து கொக்கரிக்கும், மனமே (அ)

சரணம்

பக்தஜனங்களான பேர்கள், மனமே
உத்தமசுலோகனை கீர்த்தனம் செய்தால்
கத்துகிருளென்று சொல்லுவார்
ஸர்வகாலமும் காது கேட்கப்படாமல் கரிக்கும் (அ) 1

ஸாதுக்கள் கதையை கேட்க, மனமே
சிரத்தை யுள்ளவன்போலே வந்து தலையாட்டி கேட்கும்
வாதுக்காகிலும் யிங்கே வருவார்
மகத்தான தர்க்கத்தால் வாய்மூட அடிக்கும் (அ) 2

அஞ்ஞானமானதோர் விருக்ஷம், மனமே, அதில்
அனுதினமும் காமகுரோத லோபமோகங்கள் தளிர்க்கும்
ஞானமாகிற கத்தியாலே அதை வேரோடு வெட்டி
வெங்கடேசுவரரைச் சேராய் (அ) 3

## (64)

(ராகம் - புன்னுகவராளி)

பல்லவி

ஆடடி மானே, அகண்டமென்று ஆடடி மானே (ஆ)

அனுபல்லவி

ஆடடி மானே, அஸங்கோஹம் நானே, பார்வையில்
வேறற்ற பிரத்தியக் பிரம்மம் (ஆ)

சரணம்

நானுவாய் பார்த்து பிரபஞ்சத்தில்
நானின்னதென்றுடிய கூத்து தானுக சைதன்யம் வேருக தீர்த்து
''தத் த்வம்'' பதார்த்த ஸ்வரூபமே சித்து (ஆ) 1

சித்தே ஜகத்து தேஹம் எனக்கென்ன ப்ரதக்கு
நித்தியானந்தோஹம் நிலையிப்போ எனக்கு
நிர்க்குணனந்தத்தில் கொண்டு ஒடுப்பிக்கும் (ஆ) 2

பற்றுதலற்று பரானந்தமேலிட
உற்று மானுபிமான மயக்கத்தை
தீர்த்து ஆடாமலாடுமிந்த ஆனந்தகூத்து (ஆ) 3

தான் பிறரற்று ததாகாரமே வடிவுற்று
ஏங்காமல் எது வந்தாலும் நிலைத்து
தூங்காமல் தூங்கும் ஸுகானந்த கூத்து (ஆ) 4

## (65)

(ராகம் - சங்கராபரணம்)

பல்லவி

சேர்வதும் எப்படியோ ஸ்ரீஸத்குருபாதம்
சேர்வதும் எப்படியோ (சே)

அனுபல்லவி

மங்களமான மஹாராஜ ஸ்ரீ குரு
மலையாசலம் வந்து மகிமை யறியவென்று
இங்கிதமாகவே எடுத்து உரைத்திடும்
மங்களமாகவே கேட்டு புகழ்ந்திட (சே)

சரணம்

அன்னைக்கருக்குழியை கடத்தி வெளியில்
வந்து சொல்லப்படாத துக்கத்தை அனுபவித்து
வெல்லப்படாத மஹத்துக்கள் சரணத்தை
காணப்படுமிந்த கருத்துக்கள் அறிவை (சே) 1

அஞ்ஞானகாயம் அழுக்கை விலக்கியே
அந்தகாரமான மாயை துலக்கியே
பிரக்ஞானமான பிரகாசம் ஜ்வலிக்கவே
பரபிரம்ம ஸ்வரூபத்தை பார்த்து பணியவே (சே) 2

வலைக்குள் அகப்பட்டு தயங்கு மத்ஸ்யம் போல்
ஸம்ஸாரதுறையிலே ஸுஷுப்திபோல் முழுகாமல்
நிவிருத்திக்கரையில் நின்று நினைவை தெளியவைத்து
நிர்க்குண பிரம்மத்தை நிலையாக நிறுத்தியே (சே) 3

ஸ்ரீ வெங்கடேசுவர குருவையனுதினம்
பாதாரவிந்தத்தில் பணிந்திடுவாயே
பரமகுருவின் பாதம் பணிந்திருப்பாயானல்
நித்யானந்த ஸுகம் அனுபவிப்பாயே (சே) 4

## (66)

(ராகம் - ''கோமதி யருள்புரிவாய்'' என்ற மெட்டு)

பல்லவி

ஆனந்தம் ஆனேன் நானே, ஸச்சிதாந்தம் ஆனேன் நானே,
பரபிரம்மானந்தம் ஆனேன் நானே (ஆ)

அனுபல்லவி

ஊனுமுடலு மற்று நாணுவிகாரங்களற்று
தானுக எங்கும் தோற்றி நானுக எங்கும் தோற்ற (ஆ)

சரணம்

மாயாவிகாரமற்று மந்த ஹாஸப்பொருளை
ஏகாந்த நிலையுற்று ஏகாந்த (ஆ) 1

கர்ம பந்தங்கள் அற்று கைவல்யஸுகம் தந்த
பிரம்மநிலை யடைந்து (ஆ) 2

அவித்தை வினைகருகி ஆனந்தஸுகம் தந்த
ஸ்ரீவெங்கடேசுவர குருவை சேர்த்து (ஆ) 3

## (67)

(ராகம் - ஸௌராஷ்டிரம்)

பல்லவி

தன்னைத்தானறியவேணும் தத்துவத்தால்
தன்னைத்தானறியவேணும் (த)

அனுபல்லவி

தன்னைத்தானறியவேணும் தான் அவனுக தோணும்
சொன்னதும் பொய்யில்லை காணும் ஜோதியதே உண்மை காணும் (த)

சரணம்

வாதிகள் வழக்கு தீரவானுக்குள் நின்றும் ஜோதியைக் கண்டுடன் சேர
ஆதியான உடல் மாற, அனாதியான பந்தம் தீர, போதமென்னும்
பூரணத்தில் ஏற
பொல்லாத கர்மவாஸனையை விட்டு மனம் சீராய் வையகம் பொய்
யென்றோத
உபநிஷத்தென்றும் கூற, அதிலே நின்றும் போத வெள்ளம்
பொங்கிவர,
பேதைகளும் கரையேற, ஜாதிவர்ணங்களும் தீர, அபேதைகளும்
உள்ளம்தேற (த) 1

பஞ்சபூதங்களை பார்த்து அதிலுண்டான அஞ்சுகோசங்களை தீர்த்து
மனசஞ்சலமறுத்து, புலன் ஐந்தையுமடக்கி, அதில் மிஞ்சினதை
கண்டு நீ களித்து
மேலாம் பதமாய் அசஞ்சலமாகவே நிறுத்தி, அதிலே நின்றும்
பஞ்சணையிலே படுத்து பார்த்து
பரஸுகத்தால் கொஞ்சமோ காணிந்தகூத்து கொஞ்சமில்லாமலே
எதிர்த்து
ஸஞ்சிதாகாம்மியமற்று தஞ்சமாம் குருவை கார்த்து (த) 2

பாசவலையில் சுத்தி வாடி அதற்குள் கர்மவாசலுண்டனேகம்கோடி
மனவாசலால் நடந்து நாடி
ஆசையாம் ஒருத்தி வாடி மனவாசலை அடைத்து அவள் மூடி வழி
மறைப்பள் நேசமுடனே நடந்து ஓடி
நினைவுகொண்டு மாசில்லாமணி விளக்கை நாடி
மனஸுருகி வாஸனென்னும் குருவெங்கடேசுவரரை கண்டு கூடி
ஈசன் நானென்று கொண்டாடி வாஸனைகள் விட்டோடி (த) 3

**(68)**

(ராகம் - ஸஹானா)

பல்லவி

அதிக ஸாமர்த்தியம் மாயை உந்தன்
வெகுவித நாட்டியம்



அனுபல்லவி

அகிலபிரபஞ்சமாய் ஆனதும் போராமல் அகண்ட ரஸம் தன்னே
மறைத்தாய் தெரியவொட்டாமல் (அ)

சரணம்

ஜதையாக மூன்று குணத்தினுல் ஜகமெல்லாம் ஈன்று
வினேயாலே ஜீவர்கள் மோகிக்கவே பார்த்தாய்
பவஸாகரம் தன்னில் முழுகிபோகவே பார்த்தாய் (அ) 1

ஜகத்து அஸத்தென்றும் தேஹம் நாஹம் பரபிரம்மம் என்றும்
தெரிந்த பேரை கூட திகைக்கப் பண்ணியே வைப்பாய்
அகடித சௌரியம் அஹோ உந்தன் கூத்து (அ) 2

ஸஹஸ்ரத்தில் ஒருத்தன் உன்னேயும் பார்க்க ஸாமர்த்திய கர்த்தன்
ஸர்வமும் பிரம்மமாய் தான் தானே ஸர்வமாய்
ஸ்வாமி வெங்கடேசுவரர் குருகிருபையினுலே (அ) 3

ஸ்வரூபம் மறந்து ஸம்ஸாரத்தை ஸுகம்போல் நினேந்து
துஷ்கர்ம ஸத்கர்ம பலன்களெல்லாம் கொண்டு
செத்து பிறக்க வைத்தாய் சற்றுமறிவில்லாமல் (அ) 4

தான் பிறரென்றும் சதுர்வித வர்ணங்களென்றும்
தாய் தந்தை பந்து தன முண்டு எனக்கென்றும்
ஸம்ஸார ஸாகரத்தில் தானே உழலவைத்தாய் (அ) 5

சுவரில்லா சித்திரம்போல் உந்தன் ஸ்வரூபம் அஸத்தியம்
ஜரையில்லே நரையில்லே ஜனன மரணமில்லே
கரையில்லே உன்னுடைய காரியவிசித்திரங்கள் (அ) 6

ஸ்படிக மண்டபத்தில் சுவானம் தன்னே தவிர கண்டவிடத்தில்
சாடி ஓடிக்கொண்டு கூடிக்குலேக்கும் போல்
நானுவிகல்பித நாய் போலலேயவைத்தாய் (அ) 7

## (69)

(ராகம் - புன்னுகவராளி)

பல்லவி

மாயை இப்படி செய்வாயோ
மஹத்தாதி பிரபஞ்சமாய் ஆவாயோ மெய்போலே (மா)

அனுபல்லவி

பாயும் சரமும் காற்றும் வாழ்வும் மனமும் வேகம் ஓயாதோ
விகல்பங்கள் ஒருபோதாகிலும் சற்றே (மா)

சரணம்

உதயத்தில் குருடனுய் உலூகம்போலாச்சுதே
ஒளியாய் இருந்த தத்வம் தெரியாமல் போச்சுதே
மதியினில் அபிமானம் அதிகமாய் ஆச்சுதே
துரீயம் ஸகளமென்று தெரியாமல் போச்சுதே (மா) 1

உலகம் பதினுலும் நொந்துமிகவே வாடி
காகம்போலே ஓடி கண்டவிஷயம் நாடி
மோகவாரிதி தன்னில் மூழ்கி மெத்தழுது
ஏகமென்கிற ஞானம் இறந்து போச்சையோ (மா) 2

அரியவெங்கடேசுவரர் குருவின் கிருபையினுல்
மதியைநிறுத்தி யிந்தஜகத்தை சின்மயமாய்
பரதத்வம் ஸதானந்தம் கருத்திலே ஸ்திரமாய்
பார்த்தபேர்களுக் கெல்லாம் மதித்து நிர்பயமாய் (மா) 3

## (70)

(ராகம் - மோஹனம்)

பல்லவி

பிரமையை தூரவிட்டு விடடா - பிரம்மஸ்வரூபமதாகி இருடா

அனுபல்லவி

சுமையேன் சுமந்து கொண்டு உமையாபூதம்போல் ஏண்டா
ஏண்டா ஏண்டா அலேந்து சாகிருய் (பி)

சரணம்

அவித்தை என்னும் பெண்ணை வேட்டாயே
ஆத்மஸ்வரூபத்தை அறியாது கெட்டாயே
பவத்தில் முழுகி மிஞ்சி பட்டாயே
பஞ்சகோசமும் நானென்று கெட்டாயே
ஜகத்தில் கர்ம வேரை நட்டாயே
பகுவான சாஸ்திரத்தை கேட்டாயே
மகத்துக்கள் சரணத்தை ஸ்துதித்து நித்தியமாக பணிவாய்
பணிவாய் பணிவாய் சொன்னேன் சொன்னேன் *(பி) 1*

ஜீவத்துவம் உனக்குத்தான் ஏதடா
சுத்தசைதன்ய வஸ்து நீ தானடா
நாமத்தை முதலாக்கி தள்ளடா
நல்ல புத்தியை பரிபாலனம் பண்ணடா
பரமாத்மாவென்பதும் பொய்யோடா
இத்தருணமே விசாரித்து பாரடா
எள் மாத்திரமானாலும் உன்னைத் தவிர வேறேகாணேன்
காணேன் காணேன் சொன்னேன் சொன்னேன். *(பி) 2*

தன்னை விசாரித்து பார்த்தாயோ
உன் தன்னிலே தன்னை யறிந்தாயோ
உன் கர்மம் இன்னதென்று அறிந்தாயோ
நித்திய கர்மானுஷ்டானத்தை செய்தாயோ
பெருமை சிறுமை விட்டு பொறுமை பூஷணத்தை அணிவாய்
அணிவாய் அணிவாய் சொன்னேன் சொன்னேன். *(பி) 3*

ஆசையால் கெட்டு அலைந்தாயே
உன் அகங்காரத்தால் பிடிபட்டு நொந்தாயே
ஆவரணத்தை பூட்டி கொண்டாயே
அவிவேகத்தால் கோபமது கொண்டாயே
மோகத்துடன் கூடி கெட்டாயே
நிலையாத ஸம்ஸாரத்துள் பட்டாயே
காமகுரோதத்தாலே அலைந்து நித்தியமாக கெட்டாய்
கெட்டாய் கெட்டாய் சொன்னேன் சொன்னேன். *(பி) 4*

ஹிதம் சொன்னேன் காதில் பட்டதோ
எளிதான வழியில் விட்டதோ
மதபேதங்களெல்லாம் அற்றதோ
மகத்தான விஞ்ஞான வன்னி சுட்டதோ

அஹம் பிரமை என்பதும் அற்றதோ
இந்த ஆசிரம தர்மங்கள் விட்டதோ
ஸ்வியகுரு ஸ்ரீகுரு வெங்கடேசுவரர் கிருபையால் ஆனேன்
ஆனேன், ஆனேன், சொன்னேன், சொன்னேன் (பி) 5

## (71)

(ராகம் - குருவைப் பணிந்து கடைத்தேறு - என்ற மெட்டு)

பல்லவி

சிறுக்கி நடையும்பிடி இடையும் உடையும் கண்டு
சிந்தை உருகலாமோ, மனமே

அனுபல்லவி

பொறுக்கி எடுத்த ஞானம் போகுமோ சொன்னேன்
கறிக்கு பாதி போன சுரைக்காய் விரைக்காகுமோ (சி)

சரணம்

அலையில் துரும்பதுபோல்
அலைந்து திரிந்துமிந்த வலையில் சிக்கின மான்போல்
மயங்கி திரிந்தொருக்கால்
தலையிலிடித்த தென்று
தாழக் குனியாயோ சொன்னேன்
தலையிலெழுத்துக்குத்தான் என்ன செய்யலாம் (சி) 1

தோலும் இறைச்சியுடன் சேர்ந்த உதிரம் செய்யும்
காலும் தலைமுலையால்
கண்ட உதிரமிது
நாறுமென்று தெரிந்தும்
நரகம் புஜிக்கலாமோ
பாலும் பழமும் உண்ண பாக்கியம் இருக்குங்கால் (சி) 2

மாயா உலகத்தோடு மயங்கித் திரிந்தும்
இந்த காயா புரியை மனம்
கை விடும் காலத்தில்

பேயாய் திரியவேண்டாம்
பிரம்ம நிலைக்கடலாழ்ந்து
வெங்கடேசுவரரை யறிந்து கொள்வாய் (சி) 3

## (72)

(ராகம் - நாதநாமகிரியை)

பல்லவி

கோபம் செய்யாதே, மனமே, நீ
பாபம் செய்யாதே மனமே (கோ)

அனுபல்லவி

பூவின்மணத்தை புருஷனறியும் போதே அபர பிரம்ம பாவத்தை
காணவே
கூவிபணிந்து குருவின் பாதத்தில் ஸேவித்து கொண்டால் சிதானந்த
மாகுவாய் (கோ)

சரணம்

பக்தியை தேடவேணும் சுருதியில் யுக்தியை அறிய வேணும்
சுக்தியில் ரஜதம் போலே ஜகத்தில் நீ சக்தியறிந்து
ஸதா சிவமாகிற முக்தியறிந்து மோகாதிகளை போக்கி
வியக்தா வியக்தமும் தானாய் போகுவாய் (கோ) 1

துஷ்டர்களெத்தனையோ ஜகத்தில் சிஷ்டர்களெத்தனையோ
வியஷ்டி ஸமஷ்டி விதமாயிருந்தாலும் ஸ்ருஷ்டிக்கு முன்னே
ஜகத்துண்டோ சொல்லடா கஷ்டமாம் கர்மத்தை விட்டுத்
தொலையடா
நிஷ்டையில் தானே நிஜருபமாயிருடா (கோ) 2

காமத்தில் போகாதே போனக்கால் தாமஸம் வந்துவிடும்
ஆமோ இனி சொல்லு தாமஸம் செய்வதும் பிரேமையுடனே
சிவராமனை பாரடா க்ஷேமமடைவாய் ஸுகமடைவாய் சொன்னேன்
உந்தன் கோமதியை தானே கொண்டாடி கொள்ளடா (கோ) 3

## (73)

(ராகம் புன்னாகவராளி)

பல்லவி

சுந்தரகுருவை நிரந்தரம் பணிந்து நான் தொந்தமகன்றேனே

அனுபல்லவி

பந்த மோக்ஷமென்னும் சிந்தனை தவிர்ந்த இடந்தன்னில்
எந்தனை இருந்திட அருள்செய்தார் (சுந்தர)

சரணம்

சுஷுப்தியிலும் மறையால் இருந்ததை சோதித்து தெளிய
இதற்காக ஜீவேசன் என வேறாய் நோக்கிய என்னை
அருளாலே தன்மயமாக்கின (சுந்தர)

எப்போதும் நாம் பிரம்மம் ஆவோமென்னும் எண்ணுவதே மர்மம்,
அப்போதிலும் சொன்னார் இப்போதிலும் தன்னாய்
எப்போதும் நீ பிரம்மம் எனவே அறியப்பண்ணும் (சுந்தர)

## (74)

(ராகம் தோடி)

பல்லவி

ஆத்ம ஞானவலைக்குள்ளே நான் அகப்பட்டு கொண்டேனே, விதியே!

அனுபல்லவி

பத்மலோசனர் முகத்தில் விழித்தபலனோ யிது நானறியேன் (ஆத்ம)

சரணம்

'தத்வமஸி' என்னும் மருந்தை கூட்டி, தாம்பூல சர்வணத்தால்
ஊட்டியே, யுக்திஸாரம் மிஞ்சியே,
ஸம்யோகத்தில் என்னுடன் கெஞ்சியே,
நிந்தியானந்த நிலையை நிறுத்தியே, உருவேத்தியே,
வைத்து கொடுத்தார், என்னமோ
அதில் மயங்கினேன், அத்தை தயங்கினேன் சற்றே *(ஆத்ம) 1*

, அகத்திலென்றும் புறத்திலென்றும், அடுத்து கொண்டவர்க்கு
ஆகியே, ஸுகத்தை உள்ளுக்குள்ளூட்டியே
சொந்தமாய் என்னை பாராட்டியே, இகத்தாரென்னை ஏசவே
இதத்திலே அவர் மதத்திலே, ஜகத்தில் ஒன்றுமில்லாமல்
ஆக்கியே, செய்தவரிவர் செய்தவரிவரென்னும் *(ஆத்ம) 2*

'தத்'பத சுருதி விளைவுதானோ?
தலையிலே பிரம்மன் எழுத்துத்தானோ?
இப்படி என்றும் நானறியேன், இந்த சித்பரமே அப்பிரமேய
'தத்'பத சுருதி தெரியுமோ, தர்மிகளல்லோ நான் கர்மிகளல்லோ
அப்ரமேய சிதாத்மரூப, அசலமாம் வெங்கடேசுவர மாமவ *(ஆத்ம) 3*



# வேதாந்த வண்டு

*(ராகம் - புன்னுகவராளி)*

பல்லவி

வண்டே நீ தூது போய்வா மஹானுபவர் பாதம்
வணங்கி மகிமை யறிந்துவா *(வ)*

அனுபல்லவி

வண்டே உனக்கொரு மகரந்தம் இருக்குது
மனமே குருபாதத்தில் வணங்கிவா தினந்தோறும் *(வ)*

சரணம்

நாரதாதிமுனிதேவர் வந்துநாடி யடிவணங்கும் தத்துவர்
பக்தபிரகலாதருக்குப் பால்மகள் ஸமேதராய்
பருத்த தூணிலுதித்தார் பரமகுருவே ஹரி *(வ) 1*

எங்கிலுமோடித்திரியாதே குரு இருக்கும் ஸ்தலம்
சொல்லுகிறேன் கேளாய் அனைவரும் ஜீவன் முக்தர்களாகி
வேதாந்த விசாரம் பண்ணுவதுவே யடையாளம் *(வ) 2*

தேசாதிதேசம் வெகுசிலாக்கியம், திருவிசைநல்லூர் ஸ்தலயோக்கியம்
அவர் சேர்வைக்காக மனம் வாடும் வகையைச்சொல்லி
விரும்பிமொழிகள் கேட்டு திரும்பி வரவேணும் *(வ) 3*

ஆனந்த அம்புதியில் அமர்ந்தேன் - அரவிந்தம்போலே
மனம்மலர்ந்தேன்
அற்புத விக்ரக மலர்பாத ரஸத்தில் அமர்ந்தேன்
உல்லாஸமானேன் அனுபவ நிஷ்டையானேன் *(வ) 4*

ஆதியந்தமற்ற ஜோதி, அடியேனுக்காக அவதரித்து
என் அஞ்ஞானம்போக்கி அரசடியில் அனுக்கிரகித்த
அடையாளம் சொல்லி மறுசேதி கேட்டுவா *(வ) 5*

அஹம்பிரம்ம மென்றுரைத்து, என் நல்லஜீவபிரமை துலேத்து
அஹம்பதார்த்தம் அனுக்கிரகித்த விசாரத்தினுல்
அல்லும்பகலும் நித்திரையில்லே என்றே உரைத்து (வ) 6

ஸப்தவாரிதிகள் போலே, தயவுவைத்தடியேன் மேலே,
கர்மஸாகரத்தைக் கடத்தி கரையில் விட்ட உங்கள் கருணே
மறக்கப் போகவில்லே என்றுரைத்து (வ) 7

வான்முதலுலகம் பதினுலும் வளர்ந்து பூர்ணமானுலும்
அவர் மங்களவிக்கிரஹ மலர்பாத சேர்வைக்காக
மனஸூதவிக்கும் வகையை தெரியச்சொல்லு (வ) 8

ஸ்வர்காதிபோகம் முதல் லோகம் திருசியமாகி மறைந்தாலும்
மதுரமான வலச்செவியில் அனுக்கிரகித்த
மஹிமை மறக்கபோகா தென்றுரைத்து (வ) 9

தூஷ்ணீம் பூதாவஸ்தையினுலே சுஷுப்திபோலே ஜகம் மறந்தேன்
கர்ம ஸாகரத்தை கடத்திக் கரையில் விட்ட
கருணே மறக்கப் போகாதென் றுரைத்து (வ) 10

ஆறுஸமாதியிருந்தாலும் ஹடயோக ரஸம்புஜித்தாலும்
அந்தராத்மாவைக் கண்ட அந்தரங்கம்
அதுவே லக்ஷியமாச்சு தேன்றேயுரைத்து (வ) 11

இந்திரியாதிமுதல் தேகம் எங்கும் ஸஞ்சரித்தாலும்
உளவுசொன்ன உபநிஷத்து விசாரத்தினுல்
ஊணுறக்கமு மில்லே என்றுரைத்து (வ) 12

ஸார்வபௌமனுகிலும் ஸத்தியலோகம் ஸஞ்சரித்தாலும்
ஜீவன்முக்தி யம்புதியில் திவலேயும் காணேமென்று
தெரியச் சொல்லி எங்கள் தேசிகனுருடனுக (வ) 13

பசு பலவர்ணமாகிலும் பால்வர்ண மொன்றதுபோல்
ஜாதிபேதங்களற்று ஸமரஸமாய் குளிர்ந்த
ஸந்தோஷம் சொல்லி ஸம்பாஷணே பண்ணி வா (வ) 14

சிலஸ்திரீகள் வீட்டில் கிரககிருத்தியங்கள் செய்தாலும்
சோர பர்த்தாவின் மேல் தியான மிருக்கு மாப்போல்
ஸ்வரூபத்திலே மனதுபிடிபட்ட தென்றுசொல்லி (வ) 15

இரும்பை ஸ்வர்ணமதுவாக்கும்ஏத்த ரஸவாதிகள்போல்
தினம்தோறும் சிரவணத்தால் ஜீவனை சித்தாக்கி வைத்த
தயவை மறக்கப்போகாதென்றுரைத்து (வ) 16

நானுதி புஷ்பவகை ரஸத்தை இராட்டில் ஒன்ருக்கினதுபோல்
அகில உபாதி தள்ளி அகண்டமே ஆத்மாவென்று
அந்த லாபம் கண்ட அந்தரங்கம் சொல்லி (வ) 17

சதுர்த்த பிரம்மங்கள் கால்களாக ஸதாசிவமஞ்சத்தின்மேல்
சயனம்பண்ணுமெங்கள் ஸத்குருகிருபையினுலே
சதுர் வேதார்த்த பலன் தந்தாரென் றுரைத்து (வ) 18

ஜகத்து பிரவிருத்தி யறிந்தாலும்தேகவாஸனை மறந்தாலும்
குறிப்புச் சொன்ன வசனம் மறவாமலே
குளவிபோல் ததாகாரமானே னென்றுரைத்து (வ) 19

ஜனகஸனகாதி முனிவர் கேட்கும் சிலாக்கியமான பிரம்மநிஷ்டை
பந்த பவங்கள் தீர்க்கும் பங்கஜ மலரடியில்
பணிந்தேனென்று பதேபதே சொல்லி சொல்லி (வ) 20



## பிரும்ம ஸ்வரூபம்

பல்லவி

நானே தன்யன் கிருதார்த்தோஹம் எங்கும்
வான் போல் நிறைந்த சின்மாத்ரோஹம்

சரணம்

அகண்டம் அத்வைத ததாகாரம் அது
தானே பிரகாசஞ் சிதாகாரம்
கண்டவத்தாலே ஸதாகாலம் கண்டும்
காணு நிலையே சிவாகாரம் (நானே தன்யன்) 1

பந்தம் மோக்ஷம் பந்துபசாரம் மன
விருத்தியற்றதே ஸதாசாரம்
அந்தமற்றதே அதிஸாரம் ஆனந்த
பூர்ண கனஸாரம் (நானே தன்யன்) 2

காலத்திலுமழி வற்றோஹம் கல்ப காலத்திலுமழி வற்றோஹம்
கதிரோனே விளங்கும் பிரகாசோஹம்
அத்புதமாமதி ஸூக்ஷ்மோஹம்
அபரோக்ஷ ஸாக்ஷாத்கார பிரும்மோஹம் (நானே தன்யன்) 3

மிருத்யுவுக்கு மிருத்யு வானோஹம்
மூனு காலத்திலுமழி வற்றோஹம்
ஸத்குருவை வாஞ்சித்த தன்யோஹம்
ஸமரஸமான கிருதார்த்தோஹம் (நானே தன்யன்) 4

சாஸ்திரவிதிச்சடங் கற்றோஹம் ஜாதி
வர்ணாசிரம தர்மம் அற்றோஹம்
கோத்திர சூத்திரமென்றும் பார்த்தோஹம்
சொர்க்காதிபோகம் திரிணி காலோஹம் (நானே தன்யன்) 5

ஏகாந்தத்திலே ஏகாந்தோஹம் இளம்
பாலாதித்தன்போல் கிரணோஹம்
அஹந்தை மமதைக்கு அதீதோஹம்
ஆனந்த புங்காதி புங்கோஹம் (நானே தன்யன்) 6

பேசப் பேசப் பேச்சில்லாதோஹம் பிருமாண்ட
பிண்டமேக மானேஹம்
வாசிவழிநோக்கிக் கொண்டோஹம்
ஆடுஞ்சிதம்பரத் தேஜோஹம் *(நானே தன்யன்) 7*

ஆசாரியாரருள் பெற்றேஹம்
அஹோபலர் பாதத்திலுற்றேஹம்
விசாரித்தறிந்து சேஷித்தோஹம்
அவாங்மன கோசர மானேஹம் *(நானே தன்யன்) 8*



## அத்வைத தாலாட்டு

ஆதி அந்தமற்ற அதுவானவரை நான் தாலாட்ட
அகோபலரே எந்தனுக்கு அனுமதிகள் பண்ணும்மைய்யா (1)

எங்கும் நிறைந்த வஸ்து எனக்காக ரூபமதாய்
வந்து கிருபை பொழியும் மஹிமை சொல்லித்தாலாட்ட (2)

மறைபொருளாய் வந்து அவதரித்து
மனமகிழ்ந்து வந்த வஸ்துவே கண்வளரீர் (3)

அஷ்டாங்க யோகியர்கள் புத்திக்கிசைந்திருப்பார்
நவயோகியாவார்கள் நாவிஞல் ஸ்தோத்தரிப்பார் (4)

ப்ரஹ்லாதயோகி அவர்களுக்கு ப்ரத்யக்ஷமான வஸ்து
ஸனகாதிகளுடன் சிந்தை வெளி கண்டிருப்பீர் (5)

எண்ணறிய ஜன்மம் எடுத்தலுத்தாள் என்றுசொல்லி
பண்ணின மாதவங்கள் பலனடைய வேணுமென்று (6)

ஸம்ஸாரம் மாற்ற ஸமயம் இதுவென்று சொல்லி
எனக்காக ரூபம் எடுத்தேன் காணென்ருரோ (7)

அநேக ஜன்ம புண்ணியபலன் ஆர்ஜிதமாய் மாதவங்கள்
ச்ரவணம் மனனம் என்னும் சங்கையற்ற கண்ணுற்றே (8)

ஸாதுஸங்கம் என்னும் அந்த சங்கையற்ற பட்டடையை
ஸத்து சித்தானந்தம் என்னும் சிரப்ரபையை (9)

பொறுமையெனும் பூஷணத்தை புத்தி என்னும் பட்டடையை
ஞானரத்தின மென்னும் நவரத்ன சிற்ரெளியை (10)

தாரண, தியான ஸமாதியென்னும் கப்பல்களை
எங்கும் தாமாய் நின்ற ஷட்கோண ராஜியத்தை (11)

வாவென்னும் மைந்தரற்று ஆளுவாரன்னியிலே
என் அக்ஞானத்தாலே அலைகிற வேளையிலே (12)

ஆதியந்த மற்ற வஸ்து அப்போதவதாரமாய்
என் மனதலை யாது நிலைநிறுத்த அரசே வந்தாரோ
என் பரிதாபம் போக்கிவைத்த பராபரரே கண்வளரீர் (13)

மோகமெனும் சத்துருவை காமமென்னும் தாயாதியை
கோசமென்னும் உள்ளே அடைபட்ட கள்ளர்களை (14)

மாயா அவிந்தை யென்னும் ஜீவ மாத்தானே
துவிதமென்னும் பாஷையகாரரோடு அதன் மதத்தை (15)

அடக்கி அரைக்ஷணமே அறுத்து அவர்தலையை
முக்தியென்னும் அரசாளுகைக்கு எனச்காய் அவதாரமாய் (16)

மதமடக்கி மாத்தானே மற்றொருவர் அன்னியிலே
என்னதென்று சொல்லி எடுத்தாள வந்தாரோ (17)

எனதென்று வந்துதித்த ஸ்வாமிகள் தயாபரரோ
அகண்டஸ்வருபர் அவர் கண் வளரும் தொட்டிலிலே (18)

சொல்லுறோம் என்றுக்கால் தோணறதோ என்மனசு
உபாதியே யில்லாத ஒத்தவெளி மண்டபத்தே (19)

காண்டத்ரயங்களென்னும் கட்டில் மேல் கட்டியதால்
ஸாதனங்கள் நாலும் சங்கிலியதாய் விளங்க
உபநிஷத்தினாலும் ஒத்த விளிம்பாயிருக்க (20)

ஸமாதி ஆறுகளும் சதுரான கட்டங்களாய்
ப்ரமாணங்கள் ஆறுகளும் அழகு திருமெத்தையதாம் (21)

ச்ருதிகள் ஸ்மிருதிகள் என்னும் துலங்கும் திருபொம்மைகளாய்
அகார உகார மகார மென்னும் மெத்தையின்மேல்
பரிபூர்ணர்க்கேற்கும் நல்ல பிரணவமென்னும் கண்ணாடி. (22)

தத்துவம் இப்பொருளை ஆட்ட பல திசையில்
வாக்கியங் களாகிற மஹிமையுள்ள கன்னியர்கள் (23)

வந்தடைந்த பேர்களுக்கு வஸ்துநிலை காட்டி.
வடம் தொட்டு ஆட்டும் மஹிமை சொல்லிதாலாட்ட (24)

கிருபை பொழிய கண்கள் கிளிபவழவாய் திறந்து
மனது குதிகொண்ட மழலைசொல் வார்த்தைதனை (25)

என்அங்கங்குளிர அவர் உரைத்த உண்மை தன்னை
சொல்லுகிறோம் நாமிப்போ அவருடைய அனுபவங்கள் (26)

அனுபவிக்கும் பிரம்மநிஷ்டாள் மனமகிழ
அவரனுபவத்தினாலே அறிந்த விதம் கேட்பார்கள் (27)

கோசவிலக்ஷணருக்கு குணரஹிதமான வஸ்து
அவர் கிருபையினாலே அவருரைத்த உண்மைதன்னை
சொல்லுகிறோம் நாமிப்போ கேளுங்கள் பக்தர்களே (28)

உபாதியே இல்லையென்னீர் ஒரொளியே பிரம்மமென்னீர்
பிரகாசிக்கும் வஸ்துவே பரிபூர்ணர் தாமே என்னீர் (29)

உள்ளும் புறமும் ஒன்றுபோலே நிறைந்த
அதிஷ்டானம் ஒன்றொழிய அல்ல ப்ரபஞ்சமெல்லாம்
மித்தை என்று பார்க்க ம்ருதாஸ்தூலம் என்றூரோ (30)

மித்தை வந்து மெய்ப்பொருளைப் போலிருப்பதுவும் எப்படித்தான்
சொல்லுமைய்யா எந்தனுக்கு ஜோதி கிருபாநிதியே (31)

ஸ்வயமே விளங்கும் தேஜோமயமே என்றீரோ
இந்திராதி லோகமுதல் இடைவெளியே தோன்றூமல்
புத்திக்கு அதீதமாய் பூர்ணரே தாமே என்னீர் (32)

புத்திக்கு அதீதமாய் பூர்ணமேயானல்
இப்போ அவதாரம் எடுப்பானே என்றீரோ (33)

இப்போ அவதாரம் எடுத்து வந்த செய்திதன்னை
சொல்லுமைய்யா எந்தனுக்கு ஜோதி கிருபாநிதியே (34)

சொல்லென்று கேட்க ஸ்வயம்ஜோதி ஏதுசொல்வர்
அநேக ஜன்மம் தோறும் அன்னை உதிரம் தன்னில்
அடைந்ததொரு துக்கத்தை அனுபவிக்க மாட்டாரே (35)

தபஸ்ஸுகளைப்பண்ணி சித்தம் ஒடுங்கையினல்
ஸமாதியிருந்து சிரவணமது கேட்கையினல் (36)

சிரவணத்தை தன் மனதில் சந்ததம் தானிருத்தி
நிதித்யாச சுத்தியினல் சித்தம் தெளிவானல் (37)

நித்திய நியமங்களினல் சித்தம் பழுத்ததினல்
உத்தமமான சிஷ்யனுக்கு உரைக்க இது தருணமென்று (38)

உத்தமர் வாக்கியங்களால் உரைப்பாரென்றூரோ (39)

வாக்கியங்களால் முதலான வஸ்துவை காணுமட்டும்
ஸர்வம் ஸத்தியமாகும் ஜகம் ஸத்யமென்பாரோ (40

தன்னைத்தான் கொல்லுதற்கு ஸாந்நித்தியம் பண்ணுவரோ
தொடர்ந்து வந்த பொய் தன்னை போக்கறதெப்படிதான் (41)

முன்னல் அடிபணிய சிந்தை முறுவலிட
தானே ஒரு வார்த்தை சந்தோஷத்தோடுரைப்பார் (42)

ஸர்வம் அநித்தி யமென்றே சகல ப்ராணிகளும்
ஆசையுடன் பண்ணும் கர்மம் அநித்திய பலத்தையடையலையோ (43)

மித்தை வந்து மெய்யை மறைக்கும் ஜடமல்லவோ,
வரபாத வழி பண்ணி தொழுவலேயோ (44)

வேண்டும் வரத்தை விரும்பக்கொடுக்கலேயோ
ஆனாலும், ஐயா, அதிஷ்டானம் தானன்றோ (45)

கண்ணாடிக்குள்ளே கலந்து முகம் தெரிந்தால்
பொய்யன்று பார்க்க பிரயோஜனமும் உண்டோ (46)

பொய்யான நித்திரையைப் பண்ணும் பரிபூர்ணா
சொப்பனத்தில் கண்டு தொடர்ந்து வியாக்ரம்போல (47)

அலறி முழித்தவரும் அப்போதெழுந்திருந்து
சொப்பனம் போல் விளங்கும் வியாக்ரத்தையும் காட்டிவைத்து (48)

அதுபோல் அனுமானத்துடன் அநேகவித ஸம்மதிகள்
உள்ளறிந்து பார்க்கிறபோது உன்னறிவு தோன்றலேயோ (49)

ஈஷணாத்ரயங்களை விட்டு ஸத்தியமான வஸ்துவதாய்
அவஸ்தாத்ரயங்களிலே அனுபவ ஸாக்ஷியுமாய் (50)

இருக்கிற வஸ்துவை இப்போது நாமறிந்தோம்
எட்டாத வஸ்துவை தானாய் அறிந்துகொண்டோம் (51)

அழுக்கற்ற வஸ்துவை ஆதிஅந்த மற்றவரை
காட்டியென்றோ நாமறிந்தோம் காரணருக்கும் காரணமாய் (52)

காட்டறோம் என்றாக்கால் கடபடங்கள் அல்ல அது
ஸ்தோத்திரங்கள் சொல்ல வென்றால் சொல்லுக்கடங்காது (53)

தியானமது பண்ணினால் தன்மனதுக் கெட்டாது
அறிவோம் நாமென்று சொன்னால் அவர் விஷயம் ஆகாரோ (54)

சாந்த நரசிம்மர் என்னும் ஸத்குருவின் பாதமலர்
பூண்டவர்களின் ஜன்மம் அறுத்தெறியும் புண்ணியரோ (55)

பவபயங்களை போக்கி பாமராள் சங்கைவிட்டு
அலையாத அகண்ட ரஸம் தந்தவரே சரணம் (56)

நிலையா பவக்கடலை நீந்தி கரையேற்றி
அகண்ட ஏகரஸம் எமக்களித்த ஆதிகுருவே சரணம் (57)



# தொட்டில் பாட்டு

போனேன் அகண்ட ரஸ ஸாகரத்திலென்னுளும் தானே
அமர்ந்ததிலே தனித்துடனே ஜகத்தை காணேன்
ஸர்வபூதங்களிலும் தாமிருப்போமென்று தன்னிடத்திலே
ஸகலமும் தரித்திருக்கிறதென்றும்
அகம் மதி மமதையினல் அறிவழிந்து போனல்
அகிலகர்மம் செய்தாலும் புருஷார்த்த பலத்தை காணேன் 1

விடிந்தவுடனே நதியில் வந்து விழுந்து குளித்தாலும்
வெளுத்தவஸ்திரம் தரித்து குழச்சிட்டு போட்டாலும்
சொடிந்த நிலம் தேய சிவபூஜை பண்ணினலும்
மணி அக்ஷமாலைகளை அணிந்தாலும் பலத்தை காணேன் 2

தொண்டையெல்லாம் வறண்டு கட்டி மண்டை இடிஇடிக்க
இரண்டு உதடும் உலர்ந்து இரு தாளும் வலியெடுக்க
கண்டதெல்லாம் ஸர்வகாலம் கத்தி நரம்பு யிசிக்க
உண்டோயிதனுலே உபரதி பிராப்தி காணேன் 3

ஆகமபுராணங்களை யரைத்துக்குடித்தாலும்
உலகமெல்லாம் ஸஞ்சரிக்க யோகமிருந்தாலும்
ஏகமான அகண்ட வெளிஞான மற்றுப்போனல்
ஏழுகோடி மந்திரத்தை ஜபித்தாலும் பலம் காணேன் 4

சாடி விழுந்தோடுகிற மனதை வசமாக்கி
நாடி யிந்த வஸ்துவிலே நாமரூபங்கள் நீக்கி
மேடு பள்ளமில்லாத வெளியது கண்ட பின்பு
வீட்டிலுள்ள ஸம்ஸாரம் தன்னைவிடவேறு காணேன் 5

காமகுரோத லோபமோகமென்னும் ஸர்ப்பஸமூகங்கள்
கார்த்து மந்த ஸம்ஸார பித்தை வெகுநாளாய்
ஸ்ரீமத்குரு கிருபை லபித்து சின்மயமானவுடன்
சீக்கிரமாய் பித்தெல்லாம் கரைந்துபோச்சு - சிவோஹம் 6

ஸ்தலரஹிதமானவருக்கு ஸஞ்சாரமேது
ஸச்சிதானந்தருக்கு துக்காதி ஏது
மலரஹிதமானவருக்கு ஸ்நானதி ஏது
வாக்குமனஸற்றவருக்கு வசனதி ஏது-சிவோஹம் 7

புத்தியில்லை மனமுமில்லை அத்வைதம் தானே
முக்தியில்லை பந்தமில்லை என்றெனக்குச் சொல்லி
யுக்திசொன்ன குருவெங்கடேசுவரனுர் கிருபையால்
பக்தியுடனே பணிந்து அகண்டமானேன் - சிவோஹம் 8

## ஊஞ்சல்

ஸத்குருஸ்வாமிமேல் ஊஞ்சல் பாட
ஸரஸ்வதியும் கணபதியும் காப்பதாமே
அனுதினமும் என்மனஸில் அமர்ந்து வாழ
அஹோபலரும் லக்ஷ்மியும் அனுக்கிரஹிக்க
சித்ரூபரானவர்மேல் ஊஞ்சல் பாட
ஜகத்ரஹிதமானவரே போற்றி! போற்றி!
ஜன்ம பயம் அற்றவரே - ஆடிரூஞ்சல்
சின்மயானந்தரே - ஆடிரூஞ்சல் 1

மாயையோடு அவித்தை மஹாமேருவாக
மண்டலங்கள் ஏழுமொரு பந்தலாக
உபநிஷத்துக்கள் நாலு கால்களாக
ஒங்காரமென்னும் பக்க பத்தியாக
வேதங்கள் நாலு சங்கிலியதாக
சமதமாதி ஆறு பலகையாக
திரயமான காண்டங்களும் விட்டமாக
கோசமற்ருர் என்று ஒரு கொடுங்கை வீச
குணரஹிதமானவரே - ஆடிரூஞ்சல்
குருஸ்வாமி நரஸிம்ஹரே - ஆடிரூஞ்சல் 2

அகார உகாரமது மேல்கட்டியாக
ஐம்பத்தோரக்ஷரமும் பூந்தொட்டிலாக
வர்ணமென்னும் ஸமூகமதே மும்மனுக்களாக
ஆதாரமென்னும் வாழைக்குலே கமுகமதாக
பதங்களென்னும் பதினென்றும் பத்திமாலையாக
பவஸாகரம் வற்றடித்தவர்க்கு - ஆடிரூஞ்சல்
பரமதயாபரருக்கு - ஆடிரூஞ்சல் 3

பதஸமூஹ வாக்கியமதே நாலு தீபமாக
பிரதிபலிக்கும் பதங்களெட்டும் வாத்தியங்களாக

நாமரூபரஹிதரென்றே நடனமாட
அஸ்மி என்னும் பெண்ணுடனே ஐக்கியமாக
அனைவருக்கும் மேலானவர்க்கு - ஆடிரூஞ்சல்
அத்வைத போதருக்கு - ஆடிரூஞ்சல் 4

அகண்டமெல்லாமுடி அதன்மேல் அழகதாக
அபரோக்ஷமென்னும் ஒரு கிரீடம் - மின்ன
அறுபத்தினாலு கலைகளும் சாஸ்திரங்களும்
அழகாக திரித்ததொரு கஸ்தூரியாக
மதிமுகத்துக் கேற்ற நல்ல திலகம் சாத்தி
மனஸுகுடிகொண்டபூர்ணருக்கு - ஆடிரூஞ்சல்
வையமெல்லாம் பரவினோர்க்கு - ஆடிரூஞ்சல் 5

கடலதுபோல் கருணைபொங்கி கண்மலர்ந்து
கடாக்ஷகிருபை என்னும் ஒருபதக்கமாட
ரத்னமணிகுண்டலங்கள் நிலையதாக
நிர்க்குணமாம் நிலையதிலே - ஆடிரூஞ்சல்
நித்யானந்தத்திலே - ஆடிரூஞ்சல் 6



ஸ்ரீ கிருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

# பகவத்கீதை வசனம்

என்னும்

# ஸ்ரீ பகவத்கீதா ஸாரஸங்கிரஹம்

பாயிரம்

தெய்வ வணக்கம்

## உமாதேவியார் துதி

குலதே வதையே, குருவேயென் னுண்டவரே
(உம்)வடிவே சரணமம்மா! வந்தெனக்கு முன்னடைவீர்!
மலமாயை தீர்த்தவளே, மாஹேசுவரி சரணமம்மா!
பூரண ஸ்வரூபியே! புவனேசுவரி சரணமம்மா!
தர்மாம்பிகையே! தாயே! சரணமம்மா! 5

தாயே! தயாநிதியே! சங்கரியே! ஐங்கரனேச்
சேயாகப் பெற்ற திருவே! முன் வந்தருள்வாய்!
முத்திதரு நாயகியே, முன்னே வினை தீர்த்தவளே!
பத்திரசம் தந்து பவபயத்தை வேரறுத்து
சித்தம் துலக்கிச் சிவத்வ மாற்றிவைத்துப் 10

பித்துறவு தீர்த்தெனக்குப் பேரறிவு தானளித்து
எப்போதும் ப்ரஹ்மரஸம் என்றெனக்குத் தந்தவளே!
கற்பிதத்தை வேரறுக்கும் காந்திமதி காமாட்சி,
ஒப்புயர்வற்றவளே! உத்தமியே! உன் கிருபையால்,
மைப்புயல் வண்ணன் வசனித்த கீதையதைப் 15

பத்தியுட னேயின்று பாங்காக நானுரைக்கப்
புத்தியுடன் வாக்குப் பொருந்த அளித்தருளித்
தட்டுவா ராமற் சாங்கமாக் கூட்டம்மா!
சற்குருவாய் வந்தென் ஜனனபயம் தீர்த்தவளே!
எப்போதும் எம்மை இரட்சிக்கும் ஈசுவரியே! 20
அற்புதமாம் பாதத் தனந்தநமஸ் காரமம்மா!

## சரஸ்வதி துதி

சரஸ்வதியே! யுன்றனேயும் சரணமென்று வந்தடைந்தேன்,
நிரந்தரமா முன்வந்து நீயுமென்னைக் காத்தருள்வாய்;
பரமஹம்ஸர், பக்தர், பழுதற்ற ஞானியர்கள்,
திடமாக வேண்டுமென்று ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியன்று, 25

பகவான்தம் வாக்காற் பதினெட்டு அத்தியாயம்
உபதேசம் பண்ணினதை உற்றவுயிர்த் தோழனுக்கு,
உலகளந்த மாயவனர் உரைத்ததன் ஸாரத்தைத்
தமிழாலே விஸ்தரிக்கத் தாயே! அருள்புரிவாய்.
கருணையுள்ள ஸ்ரீ கிருஷ்ணர் கண்ணுன மைத்துனர்க்குத் 30

தெயவுடனே பார்த்துத் திருவுள்ளம் பற்றினதை
நயமா வுரைப்பதற்கு நாவிருந்து நீயருள்வாய்.

## தேவர் முனிவர் ஆசாரியர் முதலானோர் துதி

மகிமையுள்ள ஈச்வரரே, மாதவரே, வேலவரே,
அகிலவுல கும்துதிக்கும் ஆதி விநாயகரே,
ஞானத்தை நல்கி நலமாக வாண்டருள்வீர்; 35

ஊனத்தை நீக்கி யுயர்வாக வாண்டருள்வீர்;
திங்களொடு கங்கை சிரசிற் றரித்துமலை
மங்கையொரு பாகம் மருவும் பரஞ்சுடரை
அண்டமெல்லா முண்டு அடியளந்த மாதவரை
எண்டிசையும் காத்துநிற்கும் ஏற்றமுள்ள தேவர்களை, 40

எட்டுத்திக்கும் கீர்த்தி யேறும் எதீச்வரரைச்,
சட்டமுட னேபடிக்கும் சாஸ்திரிகள் பாகவதர்,
சங்கரா சாரியரைச், சமயகுரு நால்வர்தமை,
அங்கமறை வேதியரை, அரியபல தேசிகரை,
வேத வியாசரை, விமல முனீச்வரரை, 45

நம்பியவர் பாதம் நமஸ்கரித்து நான் பணிந்தேன்.
அன்புடனே யென்னை யாளுமென்று தோத்தரித்தேன்
எல்லாரும் என்னிடத்தில் இரங்கி அருள் சுரந்து

அஞ்சாதே யென்று அபயஹஸ்தம் தந்தருள்வீர்
நெஞ்சிலுள்ள கிலேசமெல்லாம் நீக்கி யருள்புரிவீர் 50
அத்துவிதம் சொல்ல அருள்செய்து முன்னடைவீர்.

## ஸ்ரீ கிருஷ்ணபகவான் துதி

கிருஷ்ணு! கிருபாநிதியே! கிருபை செய்து முன்னடைவீர்;
விருத்தாந்த மாயிருக்கும் வேதாந்த ஞானிகட்கு
விருப்பமெலாம் விட்டொழிந்து மெய்ப்பொருளைக் கண்டோர்க்குத்
திருப்பதத்தை நல்கியருள் தேவர்குலச் சிங்கமே, 55

ஜகத்தை விளக்கும் செழுஞ்சுடரே, ஆண்டவரே,
அனர்த்தம் தவிர்த்தென் அபீஷ்டம்நிறை வேற்றிவைத்து,
அருச்சுனனுக் குஸ்வாமி அநுக்கிரகங்கள் பண்ணினதை
எப்படியோ நானறியேன் இதமாக வேயுரைக்க
ஒத்தாசை பண்ணி உறுதிப் படவெனக்குப் 60

புத்திக்குள் ளேயிருந்து புருஷோத் தமராயா,
அடியேனுக் காதரவாய் அநுக்கிரகிக்க வேண்டினேன்.

## அவையடக்கம்

பேதையேன் சொல்லுமிதைப் பெரியோர்க ளெல்லாரும்
ஆதரவாய்க் கொள்ளுகைக்கு அவரருளை வேண்டினேன்.
இலக்கியமும் நானறியேன், இலக்கணமும் நானறியேன், 65

கலைக்ஞானம் தானறியேன், கல்வியில்லேன், ஆனாலும்,
சித்திரம்போற் பெற்ற சிறுகுழந்தைப் பாலன்சொல்
புத்தமுதம் போலுவந்து பூரித்துக் கேட்பாள் தாய்,
அப்படிப்போல் என்னிடத்தில் ஆதரவுண் டாமானல்,
எப்படிநான் சொன்னாலும் இதமாக வேயிருக்கும். 70



ஸ்ரீ கிருஷ்ணாய நம:

# பகவத்கீதை வசனம்

என்னும்

# ஸ்ரீபகவத்கீதா ஸாரஸங்கிரஹம்

## 1. கிருஷ்ணாவதாரத்தின் உத்தேசம்

கனப்பொருளாய்க் காரிய காரண வஸ்துவாய்,
நிருபாதியாய், எங்கும் நிறைகின்ற பூரணமாய்,
நாராய ணராய், நடுக்கடலிற் பள்ளிகொண்டு
அனவரதம் கண் வளரும்ஆதியந்த மற்றவராய்,
சகலஜன மத்தனைக்கும் ஸ்தாபக ராயிருந்து 5

சச்சிதா னந்தவஸ்து தாமா யிருந்தவொரு
பச்சைமுகில் மேனிப் பரமரொரு காலத்தில்,
தர்மமொ டதர்மம் சதுர்வேத ஞானமெல்லாம்
மெய்மறந்து கெட்டு விழுமதனைத் தாம்கண்டு,
நன்மையொடு தர்மத்தை ஞானத்தை ஸ்தாபிக்க 10

மகிமையுடன் வந்துதித்தார் வசுதேவர் தம்மனைக்கே,
வந்துதித்தார் பக்தர் மனக்குறைகள் தீர்க்கவென்றே,
அண்டவொண்ணாத் துஷ்ட அசுரர்களைச் சம்ஹரிக்க,
துண்டரிக்க மானபல துஷ்டர்களைச் சிட்சிக்கப்
பொற்கொடியாள் பூமியுடை பாரமெல்லாம் தீர்க்கவென்று, 15

சற்புருடர் தம்மைத் தயவாரட் சிக்கவென்று,
அவதாரம் அன்றுசெய்தார் அகிலாண்ட நாயகரே.

## 2. ஸ்ரீ கிருஷ்ணர் பாண்டவர்களுக்குச் செய்த பேரருட்டிறமை

அவதரித்து வந்த அகிலாண்ட நாயகனார்,
மற்றுமந்த நாளையிலே மலரடிக்கே அன்புசெய்யும்
வெற்றியுள்ள பாண்டவர்க்குச் செய்த பெருங்கருணை 20

தன்னை யிங்கு சொல்லத் தாமோ எனக்கதுதான்,
சொன்னமுனி வியாசர்க்கும் துணிவில்லை யேயுரைக்கச்;
செங்கமலை நாயகனுர் சிருயரும் பாண்டவர்க்குத்
தூதருமாய்ச், சாரதியாய்த், தோழருமாய்ப், பந்துவாய்,
ஆசாரியராய், அதிஷ்டான தேவதையாய்ப், 25

பாவனை பண்ணும் பரிபூர்ண வஸ்துவாய்,
மாளாப் பதம் கொடுக்கும் மாசற்ற ஜோதியுமாய்,
பல்விதமாய்ப் பாண்டவர்க்குப் பகர்கருணை செய்திட்டார்.

## 3. பாண்டவர்கள் பாரத யுத்தம் தொடங்குதல்

வைகுண்டம் வாழ்பதியை மைத்துனரா கப்படைத்து
ஆரும் எதிரற்ற அறிவுடைய பாண்டவர்கள் 30

முன்னை வினைப்பயனுல் முழுமாயச் சூதாடி
மன்னன் துரியோ தனன்தனக்கு வாரியிட்டு
நாடுநகர் ராஜ்ஜியங்கள் நண்ணினதெல் லாம்இழந்து
காடு தலையிழுக்கக் கன்னிதுகில் முள்ளிழுக்கச்
சென்று திரிந்து சிறுமைபல பட்டதன்பின், 35

அக்ஞாத வாசமும் அடைவாகச் செய்துபின்பு,
தரமிழந்த நாடும் தகையும் பெறவேண்டிப்
பாரதப்போர் தன்னைப் பாங்காக மேற்கொண்டு,
சேனை புடைசூழச் சின்னங்கள் தாமுழங்க,
ஆனையொடு தேர்கள் அணியா நெருங்கி வர, 40

மாரதரின் வெள்ளம் மலைபோல் திரண்டுவரச்,
சூரர்தொகை எங்கும் கடல்போலச் சூழ்ந்துவர,
வந்தெதிர்த்து யுத்தம் மலையும் களந்தனிலே,
சுந்தரமாய்ச் சோடணிந்து தொப்பாரம் தானிணக்கிக்,
கண்டவர்கள் கொண்டாடக் கச்சை வரிந்தெடுத்து, 45

அம்புருத் தூணிகட்டி ஆயுதமும் கைப்பிடித்துச்,
சண்டைப் புசத்தில் தனுசெடுத்து நாணேற்றிச்,
செங்கமலை நாயகனுர் தேருகைக்க மைத்துனர்க்கு,
நந்தர்மகன் தேர்விடவே வந்து நடுப்படையில்
விண்டமலர்க் கண்ணுல் விஜயனெங்கும் பார்த்தளவில், 50

கண்டு நடுங்கிக் கருத்தழிந்து வீரியனும்
சிந்தை மிகக்கலங்கி ஸ்ரீ கிருஷ்ண ரைநோக்கி,
அங்கம் பதறி அருச்சுனனும் என்ன சொல்வான்:

## 4. அருச்சுனன் சோகித்தல்

பொங்குகடல் மேனியரே, புண்ணியரே, கேட்டருள்வீர்:
இங்கிவரைக் கொன்று இரத்த வெள்ளம் சேருக்கிச், 55

சம்ஹரித்தி ராச்சியத்தைத் தாமாளத் தேவையில்லை;
வந்த படிக்கே மறுத்துமந்தக் கானகத்தே,
எங்கும் திரிந்து இரந்துபிக்ஷை தானெடுத்து,
உண்டுதிரிந் தாற்போதும் உலகளந்த மாதவரே
எங்கும் படர்ந்து எதிரிதன்னைக் கொல்வேனென்று 60

சிங்கம்போல வீரர் திணியும் செருக்களத்தில்
வந்தெதிர்த்திப் போது மனஞ்சலித்த காரணத்தைக்
கண்டித்துக் கேட்டால் கழறுவேன் கேளுமையா:
அஞ்சலிகள் பண்ணி அடக்கமுடன் கிட்டிநின்று
கொண்டாடிப் பூசிக்கும் குருவும் பிதாமகரும், 65

தந்தை சகோதரரும் தன்னுடைய உற்ருரும்,
சுந்தர மாயிருக்கும் தோழரும் பந்துவும்,
மாமனும் மைத்துனரும், வாஞ்சையுயிர்த் தோழர்களும்,
பேரரும் பிள்ளைகளும் பிரியமுள்ள பந்துவும்,
வந்து நெருங்கி மறங்கொண் டெதிர்த்துநிற்க 70

மற்றவரைக் கொன்றுநான் வாழ்வடைதல் நீதியோ?
ஏழுகடல் போலுமிந்த எண்ணற்ற சேனையெல்லாம்,
சேனையிதைச் சம்ஹரித்துச் சீமைகட்டி ஆள்வதனுல்,
ஏது பலனெனக்கு எழுதரிய மேனியரே.
தேவையில்லை தேவையில்லை சீமைகட்டி ஆளுகைக்கு; 75

தேவரீர் சித்தம் திருவுளத்துக் கொத்தபடி
(என்று) ஆயுதமும் கீழ்ப்போட்டு அச்சுதனுர் சேவடிக்கே
சோகமு டன்விழுந்தான் சூரனென்னும் வீரியவான்

## 5. ஸ்ரீ பகவான் அர்ச்சுனன் சோகத்தை நீக்குதல்

ஓதும்உரை யும்விஜயன் உற்றதுவும் தான்கண்டு,
மாதுவளர் மார்பர் மந்தஹா சத்துடனே, 80

சீர்படிந்த கண்ணால் தெயவுடனே தான் பார்த்து,
ஆதரவாய் மைத்துனனை அன்போ டெடுத்தணைத்துக்
குன்று குடைபிடித்த கோபால மூர்த்தியரும்,
சகலமும் தானறிந்த சர்வக்ஞ மூர்த்தியரும்
அறிந்தெம் பெருமான் அருச்சுனனைத் தான்பார்த்துச், 85

சிறந்தசில வார்த்தை திகழ எடுத்துரைப்பார்.
எங்கிருந்து வந்ததுனக் கோழைமதி தானின்று,
புங்கவர்கள் கொள்ளாப் பொருமல் புகழ்சிதைய?
அறியாயோ நீயெம் அரும்திறமும் ஆற்றலும்,
தெரியாயோ எம் திறங்கள் தேசுடைய வீரனே? 90

பண்ணுவோம் நாம்யுத்தம் படைபிரிந்து போனாலும்
மாயையி னாலே மனசைக் கலக்கிவைப்போம்!
ஆங்காரத் தாலே ஆதிக்கியம் பண்ணிடுவோம்!
கோபத்தை யேவிக் கொல்லுவிப்போம் சேனையெல்லாம்!
மோகத்தை யேவி மோதுவிப்போம் சேனையெல்லாம்! 95

ஆன கொடூரத்தால் அருஞ்செயல்கள் செய்திடுவோம்!
எமக்குத் துணையொருவர் இவ்வுலகில் வேண்டோமே
(எம்) தமக்குத் துணையொருவர் தாரணியில் வேண்டோமே!
ஆனாலும், உன்னை அகன்றுவிடல் நீதியன்று,
வாள்வேந்தே! உன்னாலே வன்போர் முடிக்கவுள்ளம் 100

சங்கற்பம் செய்ததுதான் தவறல் முறையன்று,
கேளா யருச்சுனனே! கிலேசமறச் சொல்லுவதை
அறிவுடையா யானாலும் அந்தோ மறந்து விட்டாய்,
ஆத்ம விசாரத்தை அத்தனையும் கைவிட்டாய்,
ஆத்மாவின் தன்மை அறியச் சொல் வேன்கேளாய், 105

மயக்கம் ஒழிய வருத்தங்கள் தீர்ந்திடவே;
(என்று) ஆதரவாய் மைத்துனர்க்கு ஆத்மஞா னம்உரைப்பார்.

## 6. அர்ச்சுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ணர் ஆத்மோபதேசம் செய்தல்

அழியாத வஸ்துவது, ஆனந்த ரூபமது,
சச்சிதா னந்தத் தனிப் பொருளாய் மேவுவது,
ஆதியந்த மில்லாத அற்புதமாம் வஸ்துவது 110

பிறவாது மண்ணிற்; பெயராது மண்ணை விட்டு,
வானதனைத் தீண்டாது, வாயு அசைக்காது,
ஆன நெருப்பதனை அண்டியே காயாது,
நீரால் நனையாது நிலத்தால் இறுகாது,
சேரும் விகாரமற்ற தேஜோ மயம துகாண். 115

இறப்பும் பிறப்பும் இன்பமொடு துன்பமும்
தொந்தங்க ளெல்லாம் சூக்ஷ்மத்தை ஆராயின்,
எடுத்தஉடலுக்கன்றி ஏதுமதற்கில்லையே,
இந்தஉடல் போனுல் எடுக்குமற்று மோருடலும்,
கந்தையாய்ப் போனவஸ்த்ரம் கழித்தொன்று நூதனமாய் 120

அந்தமுடன் நாமுடுக்கும் அப்பரிசு போலவே,
கொல்வாரு மில்லையதை கொல்விப்பார் தாமில்லை
வெல்வாரும் மில்லையதை வேறுசெய்வார் தாமில்லை
காணும் பொருளெல்லாம் கானற் சலம்போலே,
வீணு யொழிந்து வேருகிப் போய்விடுமே. 125

மாயா வடிவம் மயக்குமவை யிவ்வுலகை
நீயுற்றுப் பார்த்தாயேல் நீங்கி விடு மக்கணமே
அழியாத வஸ்துவந்த ஆத்மாவொன் றேஞான
விழியாலே பார்த்திந்த மெய்மை யறிந்துகொள்ளே.
மண்ணுலகி லுள்ள மனுஷ்யாதி எவ்வுயிர்க்கும், 130

நீர்க்குமிழி வாழ்வு நிலையில்லை நீகண்டாய்.
தலையிலெழுத்தைத் தவிர்க்குகைக்குத் தான் வசமோ?
தரணியிலே வாழ்வொழிந்து சாங்காலம் வந்து விட்டால்,
வாதமென்றும் பித்தமென்றும் வலிப்புநெடு மூர்ச்சையென்றும்,
வெதுப்பென்றும் வேறு சில ஏதுக்கள் வேண்டிடல்போல், 135

இகல்விசயர் கொன்றுர் என்றுன்னைச் சாக்கிடலால்,
நாம்தானே கொல்லுகிறேம் என்றுநீ நம்பாதே,

எம்மாயம் காணுய் இதுவிஜயா நீயறிவாய்,
ஆதலினு லுட்கவலே யாவும் அறவிடுத்துக்
காதலொடு போருக்குக் காண்டீபம் கையெடுப்பாய். 140

## 7. பகவான் அருச்சுனன் கலக்கம் தீர வேறு காரணங்கள் கூறிப் போருக்கு பிரேரேபித்தல்

பின்னுமொரு செய்தியுண்டு பேசுவது நீ கேளாய்;
இன்னமொரு ஏது இசைப்பதையும் கேளாய் நீ.
போர்க்களத்தில் வந்து புறம்வாங்கி ஞலுன்னைப்
பார்க்குமந்த மன்னவர்கள் எல்லோரும் ஏசாரோ?
ஏற்குமந்த மன்னவர்கள் எல்லோரும் ஏசாரோ? 145

வானுலகம் சென்று வாஞ்சையுள்ள தாதைக்கு
ஆனதுணே யாகி அசுரர்குலம் வேரறுத்துக்
காண்டீவத்தைத் தீக்கடவுள் கருதியுண்ண வேதொடுத்து,
ஆண்டகைமை யாற்பெற்ற அரிய புகழ்யாவும்
கானகத்தே வேடுருவம் காட்டி யமர்விளேத்த 150

மானேயிடம் வைத்த மகாதேவ ரைப்பொருத
பேரும் பிரதிஷ்டையும் பிழையாத வீரியமும்,
சீரும் சிறப்பும் திகழநீ பெற்றதெல்லாம்,
கமரிலிட்ட நெய்போற் கஊயவோ நீ நினேத்தாய்?
அவமதிப்புக் கொள்ளவோ அர்ச்சுனு நீ நினேத்தாய்? 155

மானமே யன்ருே மாந்தருக்கு மேலானது
ஊனமதற் குண்டானுல் உயிர்வாழ்த லாகுமோ?
நால்வருணத்தாருக்கும் நலமாக வேயமைத்த
சீலமுறு தர்மங்கள் செய்யாது கைவிடுதல்
நீதியோ நன்மையோ நேரும் அறிவாமோ? 160

ஓதுகின்ற மன்னவருக் குற்ற பகைவென்று,
தம்முரிமை கொண்டு தரணிதனேப் பாலித்து,
செம்மையுறு செங்கோல் செலுத்தல் கடனன்ருே?
படைமுகத்தி லொப்பாரி பார்க்கிறபேர் தாமுண்டோ?
தழுதழுப்பு விட்டுச் சமர்க்குப் புறப்படுவாய். 165

## 8. அர்ச்சுனன் ஸ்ரீ பகவான் பெருமைகளைத் தெரிவிக்க வேண்டிக் கொள்ளுதல்

என்றுபல தர்மங்கள் எம்பெருமான் போதிக்க,
அன்றறிவு வந்து அருச்சுனனு மேதுசொல்வான்
அநாதிபர மாத்மாவே, ஆள வந்த நாயகமே,
உனதமுதச் சொல்லாலே யுள்ளறிவு பெற்றேனுன்.
தேவரீர் மேன்மைதனைச் செப்பியென்றன் சந்தேகம் *170*

யாவையும் போக்கியெனை யீடேற்ற வேண்டினேன்.
பரமாத்மா வுன்னைப் பதருமல் நானறிய
உரமான ஞானத்தை யோதி யுணர்த்திடுவாய்
வைபவத்தைச் சொல்லி மனத்துயரை மாற்றிடுவாய்
மெய்யுணர்ச்சி தோன்றும் விதம்நீ யுரைத்திடுவாய். *175*

மாதவனே! செய்ய மலர்கண்ணு! செம்பவள
வாயோனே! மேலான வானோர் சிகாமணியே!
காயம்பூமேனி கருணு மிருதக்கடலே!
தாயாகி யெவ்வுயிர்க்கும் தத்தளிப்புத் தீர்ப்பவனே!
ஸ்ரீவத்ஸமார்பா! ஜகத்துக்கதிபதியே! *180*
பூவுற்ற பாவை பொருந்துமணிமார்பனே!

## 9. ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அர்ச்சுனனுக்குத் தமது விபூதி மகிமையைத் தெரிவித்தல்

(என்று) ஏத்தித்துதித்து இதயம் அனல்மெழுகாய்ப்
பிரார்த்தித்த போது பகவானு மேது சொல்வார்.
அண்டையிலே கிட்ட வந்து அர்ச்சுனனை தான்பார்த்து
செய்யக்கனி வாய்திறந்து ஸ்ரீ கிருஷ்ண ரென்னசொல்வார். *185*

விபூதி மகிமைதனை விஸ்தரித்துச் சொல்லுகிறோம்:
ஜீவப்பிரகாசம் ஜகத்தெல்லாம் தோற்றுதல்போல்
ஆத்மப் பிரகாசம் அத்தனையும் நாமேயாம்.
அண்டபிண்ட லோகம் அநேககோடி பிரம்மாண்டம்,
அந்தரிட்சம் ஸ்வர்க்கம் அகிலஜக மத்தனையும், *190*

ஸர்வதேவ பூத ப்ரபஞ்சங்க ளத்தனையும்,
அண்டபிண்ட லோகங்க ளத்தனையும் நாமேயாம்.
பலநதியும் ஓடைகளும் பர்வதமும் ஆறுகளும்,
கெங்கை சமுத்திரம் கீழ்லோகம் மேல் லோகம்,
ஸப்த ஸமுத்திரம் சாகரமும் நாமேயாம். 195

அச்வமொடு யானை அடல்சேர் மிருகேந்திரனும்,
உச்ரயிஸ்ஸா மந்த வுயர் பரியும் நாமாமே
ஐராவதமா மடுகளிறும் அஷ்டதிக்கும்
தொய்யாது தாங்கி நிற்கும் தோற்றமுள்ள யானைகளும்,
பாரிஜாத விருக்ஷமும் பார்வையுள்ள பன்மரமும், 200

கற்பக விருக்ஷம் காமதேனு முதலாய்
அசுவத்த விருக்ஷம் அடங்கலும் நாமாமே
அண்டத்திலுண்டான அநேக வித பக்ஷிகளும்,
சக்கிரவா கங்கள் சதிரான ஹம்சங்கள்
கோகிலங்க ளாதி கூறுகின்ற பல்பறவை 205

பக்ஷிக்குள்ளே பகர்கருடன் நாமாமே,
அந்தரங்க பக்த அநேக வித ராஜரிஷி
பராசரர் பீஷ்மர் பக்தியுள்ள ருக்மாங்கர்
மேலான ஞானம் விளங்குசுகப் ப்ரும்மரிஷி
அம்பரிஷி விபீஷணர் அதிக பலி சக்கரவர்த்தி 210

தும்புரு நாரதரும் தோன்று நல்ல யோகிகளும்
சனகாதி யானவுப சாந்தியுள்ள பக்தர்பலர்
பக்தர்களுக்குள்ளே பிரகலாத ளர்நாமே
வேத வியாஸர் விளங்கும் கபில ரிஷி,
வஸிஷ்டரோடு மார்க்கண்டர் மற்றுமுள்ள மாரிஷிகள், 215

அகஸ்திய மஹாமுனியு மந்தணரும் நாமாமே.
கின்னரர் கிம்புருடர் கீர்த்தியுள்ள சித்தர்கணம்,
வித்யாதரராய் விளங்குவதும் நாமாமே
வேதத்து லேசாம வேதமும் நாமாமே
அட்சரத்துக்குள்ளே அகாரமும் நாமாமே 220

கானல் ஜலம் போலே காண்பதுவும் நாமாமே
சுத்த ஜலம் போலே தோற்றுவதும் நாமாமே

அக்கினி மண்டலமும் ஆதித்திய மண்டலமும்
சூரிய மண்டலமாய்த் தோற்றுவதும் நாமாமே.
மேனகையு மாரழகில் மிக்க திலோத்தமையும், 225

ரம்பைமுத லானஅப்ச ரஸ்திரீகள் நாமாமே.
மீனுகி ஆமையுமாய் மிக்க வராகமுமாய்,
தூணில்நர சிங்கமுமாய்த் தோற்றுவதும் நாமாமே.
காச்யபர்க்குப் புத்திரராய்க் கல்யாண சுந்தரராய்,
மாபலிதன் சாலேயிலே மண் அளந்தோர் நாமாமே, 230

சத்ய ப்ரதிக்ஞைபண்ணி க்ஷத்ரியரை வேர்களைய,
பாரத்வா சர்குலத்திற் பாங்காக வேயுதித்த
ஞானம் புகழ்பரசு ராமரும் நாமாமே.
தெசரதர்க்குப் புத்திரராய் ஸ்ரீநக ரயோத்தியிலே
மனுஷ்யாவதாரமாய் வந்துதித்தோர் நாமாமே 235

வசுதேவர் தேவகிக்கு மைந்தராய் எதுகுலத்தில்,
த்வாரகைக்கே கிருஷ்ணனுமாய்த் தோற்றினதும் நாமாமே.
கைத்தலத்து நீயேந்தும் காண்டீப மும்நாமே,
யுத்தத்துக் குள்ளே ஜொலிக்கிறதும் நாமாமே.
பூதஇந்திரி யங்களுக்கும் புத்திக்கும் சாட்சியதாய் 240

அந்தக் கரணவிர்த்திக் கநுபூத சாட்சியுமாய்,
அகமாத்மா வென்று அறிகிறதும் நாமாமே.
பரமாத்மா வென்று பார்க்கிறதும் நாமாமே
சத்தியம் அசத்தியம் தர்மமும் நாமாமே.
சத்துசித் தானந்தம் தாமாய் நிறைந்து கொண்டு 245

ஆனந்தம் தன்னே அடைகிறதும் நாமாமே.
சப்த ஸ்பரிச ரூபரஸ கந்தமுடன்
பஞ்சேந்திரி யங்களுமாய்ப் பார்க்கிறதும் நாமாமே
அறிவுக் கறிவாக ஆராயும் பேர்களுக்கு
அறிவுக் கறிவா யமர்ந்திருக்கு மாத்மாநான். 250

காணப் படுவதெல்லாம் கற்பித மாயைகண்டாய்,
தோன்றப் படுவதெல்லாம் துச்சமென்று நீயறிவாய்.

## 10. ஸ்ரீ கிருஷ்ணர் அர்சசுனருக்கு விசுவரூப தரிசனம் கொடுத்தருளல்

(என்று) இவ்வாறு விபூதியெலாம் இயலாக வேயெடுத்துப்
பார்த்தனுக்குச் சொன்ன பரம கிருபையாளர்
நிர்மல மான விசுவரூபத்தைக் காட்டி நின்றார். 255

திரும்பாமற் பாரென்று திவ்வியசட்சு தான் கொடுத்தார்.
ப்ரக்ஞான சட்சுவினுற் பார்த்தான் தனஞ்செயனும்.
பூலோகம் பாதாளம் புவனம் பதிஞன்கும்.
விசுவரூபம் கண்டான் தனஞ்செயனும் அப்போது
தான் கண்ட தனிப் ப்ரபஞ்ச மத்தனேயும் 260

அண்ட பிண்ட மெல்லாம் அடங்கிற்றவரடிக்கே-
உருத்திரரும் கந்தரும் உமையாள் திருமகனும்
சித்தி விஞயகரும் தாமாய்ச் சிறந்திருந்து;
வருணனும் குபேரனும் வாயுவும் அக்கினியும்,
எமனுடனே இந்திரனும் ஏற்றமுள்ள தேவர்களும், 265

அஷ்டதிக்கு பாலர் அடங்கவுள்ள தேவர்களும்,
அரக்கரொடு சூரியனும் ஆகாச சந்திரனும்,
நக்ஷத்திரங்கள் நவக்கிரகங்கள் உள்ளதெல்லாம்,
ஏகா தசருத்ரர் எண்ணற்ற தேவர்களும்,
அண்டமெல்லாம் இந்திரனும் அர்ச்சுனனும் சாத்விகனும் 270

பரவாசு தேவருமாய்ப் பரிபூரணர் நின்ருர்.
சல்லியனும் பீஷ்மரும் துரோண கிருபா சாரியரும்,
அச்வத்தா மாவோ டடங்கவுள்ள பேர்களொடு,
ஆசாரியர் சேனேகளும் அணியணியாய்க்
கௌரவர்கள் சேனேகளும் காவலர்கள் சேனேகளும், 275

துரியோ தனனும் சோதரர்கள் நூற்றுவரும்,
அண்டபிண்ட மெல்லாம் யசோதை மகன் வாய்தனிலே
கண்ட துண்ட மாகவிழக் கண்டான் அருச்சுனனும்,
தேசதே சத்துள்ள ராஜரா ஜாக்களெல்லாம்
பட்சிகளேப் போலப் பறந்துபறந் தேதிரிந்து, 280

விளக்கில் விட்டிற் போலே விழக்கண்டான் அர்ச்சுனனும்;
வெய்யமிருத்யுப் போலே விழுங்குவதைப் பார்த்திருந்தான்;

பிரளயகால ருத்திரரோ (என்று) பார்த்தே திகைத்திருந்தான்
பார்த்தால் தெவிட்டாது (சுவாமி) பாதாம் புஜத்தழகு,
மார்க்கங்கள் காட்டும் மலரடியும் பொற்சிலம்பும், 285

செம்பவள வாயொளியும் திவ்ய ரத்ன காந்தியும்,
கண்டவர்கள் கண்களுக்குக் கல்யாண சுந்தரமாம்.
பாதாள லோகத்துட் பாய்ந்த மலரடிக்குச்
சங்கர்ஷண ப்ரத்யும்னர் தாம்வந் ததிர்கொண்டு,
படமாயி ரங்கள் தன்னுற் பாதமலர் தாங்கி வைத்து, 290

சுற்றும் விளக்கேற்றித் தூபதீ பம் காட்ட
அந்த மகிமைகண்டு ஆச்சரியப் பட்டிருந்தான்,
அர்த்த சரீ ரமும் ஆகாயத்தே பரவ,
நாசமற்ற லோகத்தில் நாதர் முடிதோற்ற,
சிவனும் அயனும் திருமாலுமிந்திரனும், 295

மும்மூர்த்தி தேவர்களும் மூர்த்தீ கரித்துவரச்
செம்பொன் மணிமகுடம் திவ்யமல ராய்ச் சொரிய
அந்த மகிமைகண்டு ஆச்சரியப் பட்டிருந்தான்.

## (i) மச்சாவதாரம்

வைவ ச்வதமநுவை மாண்பாக ரட்சிக்க
ஊழி முடிவில் உகப்பிரளயம் தன்னிலே 300

ஓஷதிக ளெல்லாம் ஓடத்திலேற்றி வைத்து,
ப்ரளய ஜலத்திற் படர்ந்துவிளை யாடுமந்த
மத்ச்யாவ தாரத்தைக் கண்டு மகிழ்ந்திருந்தான்.

## (ii) கூர்மாவதாரம்

பாற்கடலை யந்நாள் பரிவாக வேயடைந்து
தேவா சுரர்கடைந்து தெள்ளமுதம் கொள்ளுகைக்கு 305

மந்தர பர்வதத்தை மத்தாக வேநட்டு
வாசுகியை நல்ல மணிக்கயிறுப் பூட்டியதில்
வலித்துக் கடைகையிலே மண்ணின் புறங்குழிந்து
உள்ளமுந்திப் போக அந்த ஓங்குமலை மேலுயர்த்தி

வன்முதுகில் தாங்கி வளமா நிறுத்துமந்தக் 310
கூர்மாவதாரமும் கண்டு குளிர்ந்திருந்தான்.

### (iii) வராகவதாரம்

பாதாள லோகத்துள் பார் முழுகிப் போகவன்று
கொம்பிஞ லேயுயர்த்திக் கொண்டுவந்து சூத்திரமாய்
தளர்வொழியப் பூமியினைத் தாபித்து லோகமெங்கும்
நடுக்கங்கள் தீர்த்து நலமாக ரட்சித்த 315
(அந்த) வராகாவ தாரமதும் கண்டு மகிழ்ந்திருந்தான்.

### (iv) நரசிம்ஹாவதாரம்

திருப்பாற் கடல்நடுவில் சேஷன்மேற் பள்ளிகொள்ளும்
ஸ்ரீஹரியைத் தேடித் தேவரெல்லாம் போற்றி நிற்க,
அப்போ தவதரித்து அசுரர் குலம் வேரறுக்கத்
தூண்பிளந்து தோன்றித் துஷ்ட இரணியனை 320
மார்பைக் கிழித்து மாலையிட்டு வீற்றிருந்த
(அந்த) சிம்ஹரூ பங்கண்டு திகைத்தான் தனஞ்செயனும்

### (v) வாமனவதாரம்

வாமன மூர்த்தியாய் வையமெல்லாம் கொள்ளவென்று
பூமிபதியான பலி சக்கரவர்த்தி யைப்பொருந்தி
மாமகஞ்செய் சாலையிலே வந்து நின்று மற்றவனைத் 325

தாமளக்கு மூவடி மண் தாவென் றிரந்திடலும்,
அத்யந்த பக்தியோ டன்று மகாபலியும்,
தானமது பண்ணுத லாகா தெனத்தடுத்த
குலகுருவாம் சுக்கிரன்சொல் கொள்ளாம லன்புடனே
ஓமென்று சொல்லி ஒப்பிக் கொடுத்தபின்பு 330

பாசாங்கு பண்ணும் பரிவுடைய வாமனரும்,
ஓங்கியுயர்ந்து ஒன்று வளர்ந்துநின்று,
உலகமெல்லாம் தம்முடைய ஓரடியால் தாமளந்து,
ஈரடியை வைத்திடலும் எவ்வுலகு முட்டியது;
மூவடிக்கெங் கேயென்று முகில்வண்ணர் கேட்டிடலும், 335

சிரசிலே வையுமெனச் செப்பினர் மாபலியும்,
செப்பியவா றேயவர்தம் சென்னியிலே கால்வைத்து,
பாதாள லோகத்திற் பதிந்துவிழத் தள்ளிவிட்டார்.
(அந்த) வாமன மூர்த்தியின் மகிமைகண்டான் அர்ச்சுனனும்.

### (vi) பாற்கடல் கடையும்போதெடுத்த ஐந்தவதாரங்கள்

அமிர்தம் கடைகிறபோ தாச்சரிய ரூபமதாய்த் 340
தாம்வந்து கிட்டிச் சகாயமது பண்ணுவர்போல்,
ஆமையாய் வந்து அலைகடலைத் தானேற்றி,
ஹம்ஸமாய் வந்து அலைகடலைத் தானமர்த்தி
கூர்மாவ தாரமாய்க் கூடக் கடைந்தெடுத்து,
தன்வந் தரியாகத் தனியமிர்தம் தானெடுத்து, 345

அமரர்களுக் கெல்லாம் அமிர்தம் படைத்தபின்பு,
அசுரர்களுக் கெல்லாம் அதிரூப மோகினியாய்,
கலகம் விளைத்தன்று காட்டிநின்ற தாமிந்த
ஐந்துருவம் கண்டு ஆச்சரியப் பட்டிருந்தான்.

### (vii) பரசுராமாவதாரம்

சூர பராக்கிரமத் தோடுஜம தக்கினிக்குச் 350
சீருடைய மைந்தராய்த் தேசோ டவதரித்துப்,
பாருலகி லேபரசு ராமனென்று கீர்த்தி பெற்றுத்
தனுசதனைக் கையெடுத்து க்ஷத்திரியரை வேர்களைந்து,
கார்த்தவீர் யார்ச்சுனனைக் கண்ட துண்ட மாய்த்தறித்த
(அந்த) பரசுராமர் மகிமை பார்த்தான் தனஞ்சயனும். 355

### (viii) ஸ்ரீராமாவதாரம்

விச்வபதி யாக விளங்கும் தசரதர்க்கு
உச்சமுறும் மைந்தராய் உலகில் அவதரித்து,
த்ரைலோக்ய அதிபதியாய்த் தாசரதி யாயுதித்துத்
தவமுனிவர் பின்சென்று தாடகையைச் சங்கரித்து
அகலிகைசா பம்தீர்த்து, அரனுடைய வில்முறித்து, 360

ஜானகிக்கு மாலையிட்டு, ஜமதக் கினிகுமரன்
பரசுரா மன்தன் பராக்கிரமம் தானடக்கி

அன்புடனே தந்தை அபிஷேகம் சூட்டுதற்கு
ஆயத்தம் செய்திருக்கும் அப்போது துர்புத்தித்
தாய் சொல்லேக் கேட்டு வனவாசம் போம்போது, 365

பரதர் வந்து பின்தொடரப் பாதுகை யும்கொடுத்து
மகரிஷிகள் ஆசிரமங்கள் மாண்பாய்க் கடந்துபோய்ப்
பஞ்சவடி ஆச்சிரமம் வந்து பரிவுடனே
சூர்ப்பனகை மூக்கரிந்து (கர) தூஷணரையும் வதைத்து
மாயமான் பின் சென்று மைதிலியைத் தானிழந்து 370

கண்டு ஜடாயுவுக்குக் கைவல்ய முங்கொடுத்து,
கவந்தவதம் பண்ணிக் கானகமெல் லாம்திரிந்து
சபரிகண்டு பூசைபண்ணச் சந்தோஷ மாய்ப்புசித்து,
அஞ்சனுதேவி மைந்தர் அப்போ தடிபணியக்
கபியரச ரோடு கலந்துசக்கியம் பண்ணி, 375

வாலிவதம் பண்ணி, வந்து கடலடைத்துக்
கும்பகர்ணன் இந்த்ரஜித்தைக் கூடமடி யக்கொன்று
சேனேசமூ கத்தோடு தெசமுகனேச் சம்ஹறித்துப்
பரிவால் விபீஷணர்க்குப் பட்டமது கட்டிவைத்து,
ஜனகர்மகள் மைதிலியும் செந்தழலிற் பாயஅன்று 380

சீதையரை அக்கினியும் ஸ்ரீராமர் முன்பில்வைக்கக்
கொம்பனேயாள் ஜானகியைக் கொண்டு சென்று புஷ்பகத்தில்,
லிங்கப் பிரதிஷ்டைபண்ணி நிர்மலமாய்ச் சேதுவிலே
பரத்து வாசர் ஆச்சிரமம் வந்து பரிவுடனே
தம்பிபர தர்வந்து தாளணேந்து கிழ்ப்படிய 385

அன்புடனே தம்பியரை அடிமடியிற் கொண்டு சென்ருர்.
வசிஷ்டர் சுமந்திரரை மாதாக்க ளேப்பணிந்தார்.
திரும்பி அயோத்திவந்து செம்பொன்முடி சூடிநின்ருர்.
(அந்த) பட்டாபிராமர் மகிமைகண்டான் பார்த்தனும்.

## (ix) ஸ்ரீ கிருஷ்ணுவதாரம்

வசுதேவ ருக்கினிய மைந்தராய் எதுகுலத்தில் 390
தேவகியார் தன் வயிற்றிற் செல்வக் குமாரராய்,
கம்சனென்னும் அம்மானேக் காணுதே யண்ணருடன்

கோகுலத்திற் போயொழித்துக், கொன்ருெழித்துப் பூதனேயை,
வந்தசக டாசுரனே வதைத்தே உதைத்தெறிந்து,
கேசிவிருஷ பாசுரனேக் கிட்டிப்புள் ளாயெறிந்து, 395

பகாசுரன்றன் மூக்கதனேப் பற்றிக் கிழித்தெறிந்து,
இடைச்சேரி தன்னில்வந்து எடுத் துவெண்ணெய் பால்குடித்து,
கோபால ரோடே கூடி விளேயாடி,
பிருந்தா வனத்தில் பெருமான் பசு மேய்க்க,
நான்முகரும் கொண்டொளிக்க நன்ருகச் சிருஷ்டித்து, 400

மடுவில்வந்து தோழருடன் வான்பசுக்கள் மேய்க்கையிலே
விஷஜலங்க ளான்புசித்து விண்ணுலகம் போய்ச்சேர,
காளியனேச் சம்ஹரிக்கக் கடுகிநடந் தோடி வந்து
படமா யிரஞ்சிதையப் பாதம் மிதித்தேறிக்
கூத்தாடி வால்மிதித்துக் கோவர்த் தனமெடுத்து 405

பத்தினிமா ரன்னம் புசித்துப் பரிவுடனே,
விருந்தா வனத்தில்வந்து வேணுகானம்பண்ணி
கோபிமா ரெல்லாரும் கோரணிகள் கொள்ளவென்று,
கோபிமா ரெல்லாரும் கூட்டமதா யோடிவரக்
காணமற் போயொளித்துக் கண்கலக்கம் பண்ணிவைத்து 410

ஜலக்ரீடை பண்ணுகையிற் சேலேயெல்லாம் தானெளித்து
வந்து பணிந்து நிற்க வஸ்திரங்க ளேக்கொடுத்து
அண்ணர்பல ராமருடன் அன்று மதுரை வந்து,
குவலயா பீடத்தைக் கொன்ருெழித்து லீலேபண்ணி,
சாணூர முட்டிகரைச் சாடி விழவடித்து, 415

கம்சனுடைய வீரியத்தைக் காசினியிற் கண்டதில்லே!
ஈரேமு லோகம் இடிந்துவிழ மேற்குதித்து
மாமனேயும் கொன்று வன்கொடுமை நீக்கிநின்ருர்.
(அந்தக்) கிருஷ்ணுவ தாரத்தைக் கண்டே மகிழ்ந்திருந்தான்.

## (x) பௌத்தாவதாரம்

அந்தந்த பூமி அசுரர் மலிந்திடலால், 420
அந்தந்த பூமி அதிபார மாகிவிடப்,
பொற்கொடியாள் பூமி பொறுக்கமாட் டாதாய்ப்

பூபாரம் தீர்த்துப் புண்ணியரை ஓங்குவித்துத்
தர்மத்தை ரக்ஷித்து ஸ்தாபிக்க வேண்டுமென்று,
பூர்ண ஸ்வரூபமாய்ப் புவனமெல்லாம் திரிந்து, 425
பூததயை யாவருக்கும் பொற்புடனே போதித்த
பௌத்தாவ தாரத்தைப் பார்த்தே மகிழ்ந்திருந்தான்.

## கற்கி அவதாரம்

விசுவபரி பாலகராய் விளையாடி லீலே பண்ணிச்
சிருஷ்டி ஸ்திதிலயஞ்செய் சின்மயா னந்தவஸ்து
காரணத்து மெய்ப்பொருளாய்க் கற்கி ஸ்வரூபமாய் 430

அயக் ரீவமூர்த்தி அவதார மாகிவந்து,
வேதசா ஸ்திரங்களெல்லாம் வேண்டி யவரைத்துதிக்க
ஆகம வேதம் அறுபத்து நான்குகலே
அஷ்டா தசபுராணம் அத்வைத சாஸ்திரங்கள்
எல்லாம் விளங்கவைத்து ஏற்றபடி ரக்ஷிக்கும் 435
(அந்தக்) கற்கியவ தாரத்தைக் கண்டே மகிழ்ந்திருந்தான்.

## இன்னம் அநேக ரூபங்கள்

பிரகிருதி புருஷருமாய், பிரபஞ்ச சிருஷ்டி காரணராய்,
திரு பதபதி சேதனராய், ஜகத்துக்கு ரட்சகராய்,
விசுவரூ பத்தாலே விளங்கப் பிரபஞ்சமெல்லாம்,
பரப்பிரம்ம மூர்த்தியின் மகிமைகண்டான் பார்த்தனன்று 440

பாண்டவர்க்குத் தூதருமாய்ப் பார்த்தனுக்குச் சாரதியாய்த்,
தேர்த்தட்டில் நின்று சேனையெல்லாம் தான் பார்த்து,
பல்கடிச்சு மார்தட்டிப் பாரியுத்தம் பண்ணுதற்குக்
கல்லனைகள் கட்டிக் கடிவாளம் கைப்பிடித்து,
தொப்பாரம் கட்டிச் சொரிபணிதி காதிலிட்டு, 445

இட்டதொரு நாமம் ஏழுலகும் சோதிவிட,
(சுவாமி) சாரத்தியம் பண்ணலேயும், தான் செயித்து நிற்பதையும்,
பார்த்தான் மகிமைதன்னைப் பார்த்து நின்ற அர்ச்சுனனும்
முன்னே யுலகளந்து முத்துச் சிலம்பணிந்த
ஸ்ரீபாத மாயிரமாய்ச், சென்று மலேயெடுத்துக் 450

கால்மிதித் தாடிநின்ற கைத்தலங்க ளாயிரமாய்,
செங்கமலக் கண்ணிணைகள் திகழ்நாசி யாயிரமாய்,
பொற்குழைகள் பூண்டு பொலிசெவிக ளாயிரமாய்க்,
காட்டியதோர் விசுவ ரூபமது கண்டஞ்சி
பாதம் பணிந்திறைஞ்சிப் பார்த்தன் துதிக்கலுற்றான். 455

## 11. விசுவரூப தரிசனம் பெற்ற அர்ச்சுனன் பகவானைத் துதித்தல்

நாரணரே, யென்றன் நன்மாமன் சீர்மகனே,
குந்தி மருமகனே, கோவர்த் தனமெடுத்து
மழைகாத்த வள்ளலே, மாலே, மலர்ப்பதத்தால்
எவ்வுலகும் ஈரடியா லெளிதே யளந்துகொண்டு
மாபலியைப் பாதலத்தில் வன்சிறையில் வைத்தவரே, 460

மைத்துனரே, மண்ணளந்தீர், அச்சம் தவிர்த்தருள்வீர்,
விண்டுவே யும்முடைய விசுவரூ பம்கண்டு
ஜனன மரணமற்றேன் தேகபந்தம் தானொழிந்தேன்;
முக்திசித்த ஞானேன்; மோக்ஷபதம் அடைந்தேன்;
அத்தை மகனென்று ஆகடியம் பேசிவிட்டேன்; 465

அம்மான் சேயென்று ஆகடியம் பேசிவிட்டேன்;
மைத்துனமை யாலே வளம் பேசி நானுரைத்தேன்;
இவ்வளவு போதுமையா எங்கள்குல மீடேற,
(என்று) பட்டாடை தாழப் பணிந்து நமஸ்கரித்தான்:
அட்டாங்கமாகப் பணிந்தான் அருச்சுனனும். 470

பார்த்தன் பணிந்திடலும் பரம தயாளருமே
எடுத்தவிச்வ ரூபம் எல்லாம் அடக்கியப்போ,
தெப்போதும் போல இலங்கினார் கிருஷ்ணராய்,
(விஜயன்) பொற்கடகக் கைகூப்பிப் பூந்தேரில் சேர்ந்திருக்க,
அப்பரிசு கண்டு அடக்கி வடிவமெல்லாம் 475

பெருமா னருச்சுனனைப் பிரியமுட னேநோக்கித்
தெருமரலைப் போக்கிச் செப்புவா ரப்போது.

## 12. பகவான் அர்ச்சுனனுக்கு விசுவரூப மேன்மையை அருளிச் செய்தல்

சோதி மயமாய்த் துலங்குகின்ற என்னுருவை
முதற்பொருளாய் யாவுமாய் முன்னின்ற என்வடிவை
காணவல்லா ரிந்தக் காசினியினில் தாமுண்டோ? 480

பார்க்கவல் லாரிந்த ப்ரபஞ்சத்தி லேயுண்டோ?
வேதமெல்லா மோதி வேள்வியெல்லாம் செய்தாலும்
மாதவங்கள் செய்து மகாதான மீந்தாலும்
காணமுடி யாதஎன்வடிவை நீ கண்டாய்.
குற்றமில்லா யோகத்தின் கொள்கையினுல் நீ கண்டாய். 485

கண்டாய் என் மெய்வடிவம் கலங்காதே நீயுமினி
கொண்டாடக் காண்டீபம் கூசாது நாணேற்று.
நாணேற்றி யுத்தம் நடத்துக நீஎன்றுரைத்தார்.

## 13. ஸ்ரீ கிருஷ்ணர் அர்ச்சுனனுக்கு சம்சார ரூபத்தை எடுத்து விளக்கல்

என்றுரைத்து மேலும் எடுத்துரைப்பார் ஸ்ரீ கிருஷ்ணர்
மைத்துனனே, என்றன் வாஞ்சையுயிர்த் தோழனே 490

(ஒரு) விருத்தாந்தம் சொல்லுகிறேன் விருப்பமுட னேகேளாய்
விஷமமாம் சம்சார விருட்சமொன்று கேளாய்,
மேல்நோக்கி வேரிருக்கும் விசுவமெல்லாம் வியாபிக்கும்
அசுவத்த மாகி அசையாம லேயிருக்கும்,
புத்தியென்னும் கப்புப் பெரிதாக வேயிருக்கும் 495

பஞ்சபூதக் கப்புப் பார்க்கச் சிறுத்திருக்கும்,
சப்தாதி விஷயங்க ளான சிறுகப்பு
சுற்றெங்கும் சூழ்ந்து கொண்டு சோபையுட னேயிருக்கும்
வேதங்க ளாமிலைகள் வெகுவாக வேதழையும்,
விஷயபோ கங்களெனும் மென்றளிர்கள் மிக்கிருக்கும் 500

தர்மாதர் மங்களெனும் தண்மையுள பூப்பூக்கும்,
மானுபி மானமென்னும் வடுக்க ளதுவடுக்கும்,

காமக்ரோ தங்களெனும் காய்க ளதுகாய்க்கும்,
சுகதுக்க மானபழம் சோபையுட னேபழுக்கும்,
வெகுவாக வேபருத்து மேல்லோகம் கீழ்லோகம் 505

சேர வளர்ந்து சிறுகொப்பும் சாகையுமாய்க்
குணங்களினால் வர்த்தித்துக் கொள்ளும் வெள்ளம் போலே
திரும்பி விஷயச் சிறுதளிர்கள் தான் தளிர்க்கும்
இப்படிக் கொத்தவிருக்ஷம் இருக்க ஸ்திரங்களற்று
அசுவத்த மாயை அரைக்ஷணத்தில் போய்விடுங்காண்; 510

நாளைக் கிருக் கிறதும் நம்பிக்கை யில்லையே,
போனதது மீண்டும் புனகத் திரும்பிவரும்.
ஜனனமரண மெடுத்துத் திரியுமிந்த ஜீவாத்மா
அநாதியி லுண்டான அவிவேக மாயிருக்கும்.
(அது) அசத்தென்று தானறிந்து ஆசத்தி வையாதே 515

மித்தையென்று காணுமவன் வேதவித்துஎன்றறிவாய்,
ஜகந்தனிலே மானிடர்கள் செய்துவரும் கர்மமெல்லாம்
ஈரேழு லோகம் எங்கெங்கும் வியாபிக்கும்
துக்கசுக மாகிச் சூழ்ந்துவரும் மற்றதுதான்
திக்குவிஜ யம்பண்ணும் ஜயவிஜயா நீகேளாய், 520

(அதற்கு) ஆதியந்த மில்லை அளவில்லை ரூபமில்லை.
வெகுஜன்ம வாசனையாய் வெகுவாக வேரோடி
வைரமது பாய்ந்து மாளா தொருக்காலும்.

## 14. சம்சார நிவர்த்தியாகி முத்தியடையும் மார்க்கமீதெனல்

மகத்சேவை யாலேமனம்துலங்கி நன்மையுண்டாய்,
ஆசாரி யர்கிருபையால் அந்தரங்க நிஷ்டைவந்து, 525
சந்ததமும் சிந்தித்து சதாவிசா ரணைபண்ணி,
விஷயத்தி லேமனசை விட்டுவிடா மல்நிறுத்தி,
வேதாந்த சித்தாந்தம் விசாரித்து எப்போதும்,
கோச விலக்ஷணராய்க் குணத்துக் கதீதராய்,
சரீரத்திற் பின்னருமாய், சச்சிதா னந்தருமாய், 530

அவஸ்தைக்குச் சாட்சியுமாய், அப்புறப்பட்டவராய்,
இந்திரியாகோசராய், எத்திசையும் தான் விளங்கிப்
பிரகாசிக்கும் வஸ்துவாய்ப் பரிபூர்ண நிராமயராய்,
உள்ள வொரு பொருளை ஒப்புயர்வில் லாதவரை
விசாரித் தறிந்து விபரீத மில்லாமல், 535
அசங்கதமாம் ஆசைகளை யடியோடே வேரறுத்தால்,
அனர்த்தம் நிவிர்த்தியதாம் ஆனந்த வியாப்தியுண்டாம்.

## 15. முமுட்சுலக்ஷணம் கூறுதல்

மாளுபி மானமற்று, மண்ணுலகத் தாசையற்று,
துர்ச்சன சங்கமற்றுச் சொல்லரிய அத்வைதம்
நித்தியமும் பண்ணி, நிஷ்காம ஞயிருந்து 540

பந்தமற்ற முத்தனுமாய்ச் சுகதுக்கப் பற்றின்றி
ஆசா பாசங்களற்று, அடரும் மவுட்டியம்போய்,
அயனுலகம் தேவுலகம் அவனி பதிஞன்கும்
திரணமாக எண்ணித் திடமான சித்தத்தால்
இகபர மிரண்டிலும் எள்ளளவும் ஆசையற்று, 545

இருதய மனமிந்திரியங்கள் எப்போதும் தான் திருத்திச்
சகலகர்ம மும்வெறுத்துச் சீதோஷ்ண மும்சகித்துப்,
(பல) தூஷணங்கள் சொன்னலும் சித்தத்திற் காணுதே,
சற்குருவின் பாதத்தைச் சந்ததமும் சிந்தித்து,
மோக்ஷ இச்சை ஆவார்கள் முந்துமொன்றை யெண்ணுர்கள், 550

ஈஷணைகள் ராகத்து வேஷங்களில்லாமல்,
காமக்ரோ தங்களற்றுக் காண்பதெல்லாம் மித்தையென்று,
தேக த்ரயங்களற்றுச் சரீராபி மானமற்று,
லோபமொடு மோகம் நுவலுமத மாற்சரியம்
சேர மறந்து ஜகத்துள்ள பீதியற்று, 555

தேவதைகள் இச்சிக்கும் திருவுடைய கன்னியையும்
திரணமாக எண்ணித் திடமான சித்தத்தால்,
எவனெரு வனுள்ளானே அவனே யெனையடைவான்,
எனக்குரிய மாட்சியெல்லா மிசைந்துடையோன் காணவனே.
தனக்குவமை யிந்தத் தரணியிலே வேறில்லை. 560

கூறுமிக்க மேன்மைக் குணங்க ளுடையான்போல்
வேருெருவர் இந்த விசுவத்தில் கண்டதில்லே.

### 16. ஸ்வஸ்வரூப லட்சணம் கூறுதல்

அசையா மனசுடைய அர்ச்சுன மகாராஜா,
புருஷசிங்க மென்றுரைக்கும் புண்ணியனே நீகேளாய்.
பாஸ்கரனுற் சந்திரனுற் பாவகனு லும்கூடித் 565

தோற்றுவிக்கப் போகாது சொருபத்தின் காந்திதனே,
ஏற்றதெல்லா மோரொளியாய் எத்திசையும் தான்விளங்கும்.
தாக்கரிய சொற்சொரூபம் தானெனன் றறிந்து கொள்வாய்,
வாகுடைய மண்டலத்தே மன்னர்க்கு மன்னவராய்ப்
போர்சிறந்த யுத்தம் பொருதுமொரு கேசரியே, 570

கேட்டு மகி ழென்று கிருபைசெய்வார் கேசவனுர்.
நம்முடைய அம்சமதாய் நாசமொருக் காலுமின்றி,
ஜீவனுக்குச் சாதனமாய்ச் செகந்தனிலே யுண்டாகி,
மனசுடனே ஆறிந்திரி யங்களுக்கும் சாட்சியாய்,
பிரகிருதியுடன் கூடுமிந்திரிய போதக மாயிருந்து, 575

சபையர சாயிருக்கும் தானுமோரம்சமாய்
நிருபாதியாயெங்கும் நிறைந்திருக்கும் வஸ்துவை,
அம்சமென்று சொல்லக்கூ டாதென்று சங்கைவர,
ஆமென்று உத்தரங்கள் அடைவாகச் சொல்லுவார்.
ஆகாசத் தேயிருக்கும் ஆதித்தன் ஏகமன்ருே? 580

கடஜலத் துபாதியினுல் காண்கின்ற பேர்களுக்குத்
திரளான ஆதித்தர் சேர்ந்துதய மானுலும்,
கடங்கள் கடங்கள்தோறும் காணுகிற ஆதித்யன்
ஒருவனன்றி யேபலபேர் உண்டோ உலகத்தே?
விம்பமொன்றே யன்றி வேறுபல விம்பமுண்டோ? 585

பிரதிவிம்பத் தோடுசற்றும் பற்றுண்டோ பாஸ்கரர்க்கு?
அப்படிப்போ லிங்கும் அவஸ்தையுட னேகூடி
ஜீவனென்றும், மாயையென்றும் திடகர்த்த ஈசனென்றும்,
ஸ்தாவர ஜங்கமென்றும் சஞ்சார ஜந்துவென்றும்,
ஜாதிவகை வேறென்றும், நான்விதமாய் கற்பித்துத் 590

தன்கழுத்தி லாபரணம் தான்தேடும் பிராந்தனைப் போல்,
சத்சங்கம் பண்ணுமல் சம்சாரத்தில் உழன்று,
நித்தியமென் றெண்ணி நினைவு கெட்ட மூடருக்கு
அறிவற்ற அஞ்ஞருக்கு அநேகவித மாய்த்தோன்றும்.
நேசமுள்ள தோழனே, நிகரற்ற மைத்துனனே, 595
ஏதுசொன்னே மென்று இதயத்திற் காணுதே
ஆதரவாய்க் கொள்ளென் றநுக்கிரகித்தார் அச்சுதனுர்

## 17. ஜீவாத்மாவின் தன்மை கூறுதல்

சத்தாகிச் சர்வேச் வரராகித் தானிருந்தும்,
ஜீவனறி யாமல்தேகமே நானென்று
கர்த்தாபோக் தாவென்று கண்டதெல்லாம் மேற்போட்டுக் 600

கர்மத்தைப் பண்ணிக் களித்துவெகு வாய்த்திரிந்து,
சரீரம் விழும்போது சாணளப்பான் பூச்சியைப்போல்,
திரும்பியொரு தேகத்திற் சென்றுவிழும் ஜீவாத்மா
தேகமும் போகமும் சேரவிங் கேயிருக்க,
அகலாத இந்திரியமும், அதிஷ்டான தேவதையும், 605

கொண்டு சுழன்று கூறுகின்ற தன்னிலைமை
இன்னவித மென்று, எண்ணத்தெரியாது.
புஷ்பமிருக்க மணம் கிரகிக்கும் வாயுவைப் போல்
அற்புத மாகிஅதி சூக்ஷ்ம மாயிருக்கும்.

## 18. அஞ்ஞானமே பிறவிக்குக் காரணம் என்றல்

(என்று,) பேரருளா லோதிப் பெருமான் மனமகிழ்ந்து 610
மற்றும் சிலவிஷயம் மைத்துனர்க்குக் கூறுகின்றுர்:
பஞ்சேந்திரி யங்களினுல் ஆதரித்த சித்தத்தால்
அனர்த்தமாம் சம்சார அல்லல் விஷயத்தழுந்தி
வாழுமிந்த மாய வாழ்வதனைக் கைவிட்டுப்
பொருக்கனெ வேவிழுந்து போகிறது கண்டிருந்தும், 615

மித்தையை நம்பி, விஷயபோ கம்புசித்துச்,
சத்துருக்கள் சித்தம் தவிடுபொடி யாக்குவித்து,
அஞ்ஞானத் தாலே அறிவிழப்பர் மானிடர்கள்,

சட்டமுட னெண்டிசையும் தன்பெருமை தான்முழங்கச்
சஞ்சரித்து வந்தாலும் தான்கிரியைகள் செய்தாலும் 620
உண்டா யிருந்தாலும் உபக்கிரமித்துப் போனாலும்
சண்டையிடு முக்குணங்கள் சரீரமொடு ஈஷணைகள்,
சப்தத்தோ டாறு ஒத்த விஷயமெல்லாம்,
க்ஷணத்தில் க்ஷயித்துவிடும் தான்பொய்யாப் போய்விடும் காண்.
வளைத்து வளைத்துவரும் மாளா தொருக்காலும், 625

இலக்கமற்ற ஜன்மத்தை எண்ணத் தொலையாது.
மறித்துமிங்கு ஓடி வரும் மாயமிது ஏதென்றால்,
(அதை) அறிந்து விசாரிக்கின் ஆத்மாவே நாமென்னும்,
தேகமொடு போகம் ஸ்திரமென்றிருக்கிறவன்
மூடர்களில் மூடன் முழுதுமஞ் ஞானியவன் 630

ஞானசட்சு தான் விளங்கி நன்றாக வேஅறிந்தால்
தோன்றுவது கானல்ஜலம் சிப்பியதில் வெள்ளியேபோல்,
மோகம் விட்டுப் பார்க்கிறவன் மோக்ஷ ஸ்வரூபிகண்டாய்.
(என்று) தாமரையாள் மார்பர் தனஞ்சயற்குச் சொல்லிநின்றாள்.

## 19. குருவருளாலன்றி ஆத்மாவை அறியவொண்ணாதெனல்

சமர்த்தனுமாய் அத்வைத தன்னியனுமாய், உன்னரிய 635
சாதனமும் சாத்விகமும் சற்குருவும் சார்ந்தவனாய்
சந்தேகம் நீங்க (வேதாந்த) சாத்திரங்க ளாராய்ந்து,
ஆரும் அதிரக்த குருவின் அநுக்கிரகத்தால்
அந்தக்க ரணம்துலங்க ஆத்மாவைப் போயடைவாய்.
இவையொன்று மன்றியே என்முயற்சி தன்னாலே, 640

சாதனமும் சாத்விகமும் சற்குருவும் தேவையில்லை,
சாத்திரத்தை அப்பியசித்துத் தன்னுடைய எத்தனத்தால்,
அறிவேன்நான் ஆத்மாவை என்கிறதும் ஆகடியம்.
(அதற்கு) இதிகாசம் என்னவென்றால் இப்படிப்போ லேயிருக்கும்
சட்சுவில்லா னுக்குச் சகம்விளங்கும் தன்மைபோல், 645

காதம்வழி சப்பாணி கடுகுநடந் தோடுதல்போல,
ஊமைபல வார்த்தைகளும் உண்டென் றுரைத்தல்போல்,
செவிடனுக்குக் கானவித்தை தெரியுமென்று கேட்பதுபோல்,

வருமெனக்கு என்று சொல்லி வாயடியா லேஅடித்துத்,
திரிகிறது மாத்திரமே, திடளுக ஆத்மாவை 650

அறியப்போ காதுகண்டாய் ஆசாரியர் அன்றியிலே,
வந்தாலும் நில்லாது மரணஜன்மம் போகாது.
சிரவண பலத்தாலே சற்றுண்டு புண்ணியங்கள்
(என்று) உலகளந்த மாதவனுர் உள் மானம் சொல்லிநின்ருர்.

## 20. பரமாத்மாவை அறிந்தவனே ஞானி எனல்

சகல அக்ஷரங்களும் தாக்குடனே மிஞ்சி நிற்கும். 655
அழிவற்ற பிரம்மம் ஆவதுவும் நாம்தானே
புவனத்தை ஆளும் புருஷோத்தமர் நாமே,
இந்தப் படியெம்மை ஏகமாம் வஸ்துவாய்,
அந்தமோ டாதியில்லா அழியாத் திரவியமாய்,
புருஷோத் தமராய்ப் பெரிதான வஸ்துவாய், 660

அறிவாலே எம்மை அறிந்து அடைந்தார்க்கு
சரீரத்திளுலும் தசேந்திரியங்கள் தம்மாலும்
செப்புமனத் தாலுமவர் செய்துவரும் கர்மமெலாம்
நடுவிற் குறையாதே நம்மைவந்து தாமடைவார்.
கிருதகிருத்திய ரென்றுசொல்லிக் கீர்த்திசெய்வர் மஹத்துக்கள் 665

அவருக் கெதிராவார் ஆருமில்லே என்றறிவாய்
(என்று)கடல்போல ருள்கொண்டு கண்ணன் அநுக்கிரகித்தார்.

## 21. அவனன்றி யோரணுவு மசையாது என்றல்

மகிமையுடன் பூமியிலே வந்து பிரவேசித்து,
அதிக பலத்தாலே அவனிபதி ளுன்கினேயும்
சகல பிரபஞ்சத்தைத் தாங்குவதும் நாம்தானே. 670

சங்கதர ராயிருந்து தாபங்கள் தீர்த்துவைத்து,
வனப்பாரு மோஷதிகள் வர்த்திக்கப் பண்ணிவைத்து,
அமிர்தத்தி ளுலேஅனேவர்க்கும் திருப்தி பண்ணி,
சதுர்விதமாம் அன்னங்கள் ஷட்ரச போஜனங்கள்
உருசியறிந்துண்ணும் உள்ளிருக்கும் சூக்ஷமமும் நாம். 675

பசிதாகம் உண்டாக்கும் பண்புள்ள பிராணனும் நாம்.
நடுவிருந்து தான்புசிக்கும் நாலுவித அன்னத்தை
அவயவங்களுக்கு அதிகக் குறைவின்றி,
சமான ரூபியாய் ஜரிக்கப் பண்ணி வைத்து,
ஜாடராக் கிநியாய் தகிக்கிறதும் நாம்தானே. 680

சகலப் பிராணிகளும் தங்கள் தங்கள் தானத்தில்
இருக்க நடக்க எழுந்திருக்கத் தானேடக்
கருத்தில் இருக்கிறதும் நாமென்ற றிந்துகொள்ளாய்.
(என்று) மதிக்க உபதேசம் மாதவனர் பண்ணிவந்தார்.
பூரணமா யெங்கும் பொருந்தி யிருப்பதும் நாம். 685

தாரணியும் தண்கடலும் சகலர்க்கும் கர்த்தரும்நாம்.
அறிவுடனே சாட்சியும்நாம், அஞ்ஞான மூலமும்நாம்
சகலகுண வேதாந்தம் சத்கர்ம சாஸ்திரங்கள்
மகிமையுடன் பண்ணிவரும் மகாத்மாவும் நாம்தானே.
(என்று) உத்தம பார்த்தனுக்கு உபதேசம் பண்ணிவந்தார். 690

## 22. நித்தியமின்னது அநித்தியமின்னது என்று தெரிவித்தல்

பாருலகி லேயொருவர்ப்ர கிருதியுடனே கூடி
நித்தியம் அநித்தியமா நேரும் பொருளிரண்டில்
அநித்தியவஸ்து என்னவென்றூல் அடைவாகச் சொல்லுகிறோம்
தேவதைகள் மனுஷியர் திரியக்குப் பசுவாதி
பாரே முலகிற் பண்ணப்படுவதெல்லாம் 695

பஞ்சபூ தத்தாலே பண்ணப்பட்டேயிருக்கும்.
பண்ணப் படுவதெல்லாம் பார்த்திருக்கவே நசிக்கும்
மாயையென்னும் இந்த வஞ்சனிதா னேஎன்றும்
பலவான நாமமுடன் ஒருநாளும் மாளாது.
மாளாது என்றூலும் மனம்தனிலே எண்ணுதே. 700

பிரம்மத்தியா னம்வந்தால் பின்பு ஒரு நாசமுண்டு
நாசமுள்ள வஸ்துவிலும் நாசமிலா வஸ்துவிலும்
அகண்டவெளி யானவராய் ஆத்ம ஸ்வரூபராய்,

இரக்ஷிக்கும் காத்தருமாய் எல்லார்க்கும் ஈச்வரராய்
பற்றற் றிருக்கும் பலஜந்து சாக்ஷியுமாய் 705

எங்கும் நிறைந்திருந்து எவ்வுயிர்க்கும் தாரகமாய்
கற்பிதத்தை வேரறுக்கும் காரணம்நா னென்றறிவாய்.
(என்று) சட்டமுடன் பார்த்தனுக்கு ஸ்வாமி அநுக்கிரகித்தார்.
பதினெட்டு அத்தியாயம் பழுதுரைகள் வாராதே
திருமறைவில் கொண்டிருந்து சுவாமி அநுக்கிரகித்தார். 710

## 23. அருச்சுனன் பத்திக்குவந்து ஸ்வாமி இவ்வுபதேசம் அநுக்கிரகித்ததாகக் கூறுதல்

மகிமை பெரிதுடைய வாழ் விஜயா நீகேளாய்.
மனுவுக்கு நான் பயந்து வந்துனக்குச் சொன்னதில்லே.
மாலேயொடு மாணிக்கம் மட்டற்ற ஆபரணம்
ஐசுவரிய முள்ளதெல்லாம் அடையவேண்டும்என்றும்
இச்சையினு லேவந்து ஈங்குனக்குச் சொன்னதில்லே. 715

உலகாளும் பாண்டவர்க்கு உபதேசம் பண்ணிவந்தால்,
அதினுலே கீர்த்திநமக் குண்டாக வேண்டுமென்று
வந்துனக்கு நானிந்த மாற்றம் உரைக்கவில்லே.
வெகுதூரம் போய் நடந்து மெய்வருந்தக் கால்கடுக்கத்
துரியோ தனனிடத்தில் தூதுரைக்கக் காரியமேன்? 720

ஏவற் றொழில்செய்து ஏதுமறி யாதவர்போல்
குதிரைக் கசையெடுத்துக் கொச்சைகளேப் போலவே
செருவி விளேயாதே தேர்செலுத்தக் காரியமேன்?
(இது) பரியாசமாகப் பார்த்தென்னேக் கேட்டாக்கால்
உள்ளவிவ ரம்தன்னே உற்றுரைப்பேன் நீகேளாய் 725

பலகாலம் வேண்டிநின்று பக்தர்களுக் காகஇங்கே
அவதார லீலேகள் அற்புதமாய்ப் பண்ணி வந்தோம்.
கதிதானே நாமென்று கருதி யடைந்தார்க்கு
அருமைசெய்து ரக்ஷித்து அபீஷ்டமெல்லாம் கொடுத்து
பரிவாக மோக்ஷமும் பண்பாக வேகொடுப்போம் 730

அத்யந்த பக்தனுமாய் அங்கத்தில் பாதியுமாய்
அத்தையுடை பிள்ளையுமாய் அந்தரங்க மைத்துனனுய்
சித்தசு த்தி பக்திதெசேந்திரிய நித்யகர்மம்
தப்பாமல் பண்ணிவரும் சற்குணன்நீ ஆகையினுல்,
உற்றதனி யேகாந்த உண்மை ரகஸியங்கள் 735

உற்றதெல்லாம் போதிக்க உமக்கே தகுமென்று
வெட்டவெளியாக விவரித்து நாமுரைத்தோம்
சித்தத்திற் கொண்டு த்வைதங்கள் வாராதே,
சத்துருவைத் தான்ஜயித்து சாமர்த்திய வீரியனுய்
உன்னுரிமை பெற்று உகந்திருப்பாய் நீயென்று, 740
நிச்சயமாய்ப் பார்த்தனுக்கு நீலமேக வர்ணர்சொன்னுர்.

### 24. இந்நூலைப் படித்தலின் பயன்

பகவானுபதேசம் பண்ணுமிந்தக் கிதையினைப்
பத்தியுட னேஜபித்துப் போஜனங்கள் பண்ணிவந்தால்,
சற்றுமந்த அன்னத்தால் தோஷங்கள் வாராதே
பட்டினி உபவாசம் உபவாச பலன்கொடுப்பார் 745

சத்தியமே சத்தியமே சந்தேகம் கொள்ளாதீர்.
அச்சுதானந்தர் அநுக்கிரகித்த வாக்கியத்தை
பச்சையுமை பார்வதியும் பங்கயத்தன் நாயகியும்
லக்ஷுமியும் கூட இருதயம் குளிர்ந்திடலால்,
சட்டமுடன் நான்உரைத்த சாராம்ச மாலை தன்னை 750

அப்பியசிக்க வல்லவரும், ஆதரவாய்க் கேட்பவரும்
அர்த்தம் அறிந்து அநுபவிக்க வல்லவரும்,
கிருஷ்ண ப்ரதாபம் கிருபையுடனே முக்தியுண்டாய்,
சுத்தமய மான சொரூபத்தி லேலயிப்பார்.

**பகவத்கீதை வசனம் என்னும்**
**ஸ்ரீ பகவத்கீதா சாரசங்கிரகம் முற்றிற்று.**

**ஸ்ரீ கண்ணபிரான் திருவடித் தாமரைகளே சரணம்**



## ஸ்ரீ மத் பகவத்கீதா ஸாரம்

எங்கும் பரிபூர்ணமாய் நிறைந்த பரப்ரும்மமானவஸ்து
நரநாராயணுளாய் நாமம் தரித்து வந்தார்
பத்ரிகாசிரமத்தில் விடாமல் தபசு பண்ணி
இந்தப் பாருலகில் எல்லாரும் தம்மைப் பார்த்தே பிழைக்கவென்றே
பூமியின் பாரம் இறக்கவந்த புண்ணியஞர்
அர்ஜுனக்ருஷ்ணுளாய் அவதாரம் பண்ணிவந்தார்

குருபாண்டவாள் சேனை கூடியிருக்கறத்தே
''கையில் வில்லெடேன்'' என்று விஜயன் கைகூப்பி நிற்கலுமே
ஸர்வக்ஞரான தயாபர மூர்த்தியவர்-
ஸகலமும் அறிய வைப்பார் ஸர்வக்ஞர், அர்ஜுனருக்கு
ஸுபோதனை என்னுமந்த சொல்லறியா கீதைதன்னை
உலகம் பிழைக்க உரைத்தார் உலகளந்தார்

''பார்த்தனுக்குச் சொன்ன அந்த பரம உபதேசம் தன்னை
பரந்தாமன் சொன்ன பரமாத்ம அத்வைதத்தை
ஸஞ்சயனே! சொல்லும்'' என்று திருதராஷ்டிரர் கேட்க
ஸஞ்சயனும் சொல்வார் திருதராஷ்டிரரைப் பார்த்து
''ஆத்மா பார்க்கிற ரூபம் இல்லை, நாமம் இல்லை
தேகமும் ஏகம் காண்; ஜீவனும் ஏகம் காண்;
கொல்லும் பழியும் கொலையும் இல்லை, பார்ப்பளவில்
ஆயுதமும், நீ, நான், அவாள், இவாள் என்பதெல்லாம்
அத்தனையும் ப்ரும்மமேதாஞெழிய, பின்னும் ஒன்றுமில்லை என்று''

ஸ்வாமி உரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''பிரும்மமே தாஞெழிய பின்னுமொன்றுமில்லை யென்றீர்,
தோன்றுகிறதே துக்க சுகம் பேதபுத்தி அத்தனையும்
ஏனையா, இல்லை யென்றீர்! என்னுடைய ஆண்டவரே!'' என்று

பார்த்தன் கேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வர்-
''அக்ஞான மோகம் அவாள் பேதபுத்தியிது,
வாஸ்தவமாய் பார்ப்பளவில் வஸ்துவன்னியில் வேறில்லை
ஆகமாபாயி யிது, அர்ஜுனு! நீ கேளாய்!

சிலகால விசேஷத்தால் காற்று இதமாயிருக்கும்
அதிசீதகாலத்தே அக்னியும் தான் சுகமாம்
ஒரு காலம் அக்கினியும் துக்கமாகவே இருக்கும்
இதமாகும் காற்றும் விபரீதமாயிருக்கும்
அப்படிப்போல இங்கும் அறியும்காண், அர்ஜுனரே!
சுகமுமொரு வேளையிலே துக்கமாகவேயிருக்கும்
துக்கமுமொரு வேளையிலே சுகமாகவேயிருக்கும்
அதை அறிந்த மஹாத்மாக்கள் அதில் ஆசையற்றிருப்பாள்''

''சரீரத்தைக் குறித்துதான் துக்கமிது என்பாயோ?
இந்த சரீரத்தைக்குறித்து துக்கமே தேவையில்லை?
பழையவஸ்திரம் போனால் புதுவஸ்திரம் கொள்வார்போல்
இந்த நைந்த சரீரம் போனால் உடனே நல்ல சரீரம் வரும்
ஆத்மாவைக் குறித்துத்தான் அதிதுக்கமென்கிறாயோ,
ஆத்மா அஸங்கர், அத்துவிதீயர், நிர்விகாரி
ஸத்ய பரிபூரணத்தைக் குறித்து துக்கமே தேவையில்லை
அவர் பேதமற்றபடியினாலே ப்ருத்வியினால் பாதையில்லை
ஆதாரமற்றதினால் அப்புவினால் பாதையில்லை
ஜ்யோதியவராம் அவரை தேயு சூழவரக் கூடாது
ஈரமற்ற வடிவினால் வாயு அவரை சோஷிக்ககூடாது
ஆகாசாதிகளுக்கும் அதீதர், ஆகையினால்
அவரை ஒரு பொழுதும் அபகரிக்கக்கூடாது
அத்விதீயராகையினால் ஆயுதத்தால் பாதையில்லை
ஜனனமரண மெல்லாம் ஸ்தூல சரீரதர்மம்
ஷட்பாவ விகாரம் சரீராதி தர்மமிது
இப்படி நீ யறிந்து யுத்தமது பண்ணி நில்லாய்
நமக்கு ஸுஹ்ருத்தானபடியானாலே சொன்னோம் ஸ்வதர்மம்'' என்று

ஸ்வாமி உரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
'' ஐயா, தேகம் ஜடம் இது என்று சொன்னீர்,
ஜனன மரணம் இதற்கு கூடாது
ஆத்மா அஸங்கம் என்றீர். அவருக்கும் கூடாது
ஜீவனிடத்திலேயோ ஜனனமரண மெல்லாம்
ஆத்மாவினிடத்திலேயோ? அச்சுதரே! சொல்லுமையா'' என்று

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
ஜனன மரண மெல்லாம் ஸ்தூல சரீர தர்மம்;

ஸ்வர்க்க நரகமெல்லாம் சூக்ஷ்ம சரீர தர்மம்;
சரீரத்வயங்களுக்குத்தான் ஹேது அக்ஞானம்
சரீரத்ரயங்களையும் தான் என்றால், ஜீவனுக்கு
வாஸ்தவமாய் ஜீவனுக்கு வரத்துமில்லை போக்குமில்லை
ஆத்மா அஸங்கர் அவருக்கும் கூடாது
ஆத்மா அதிஷ்டானர் ஆகையினாலே தான்'' என்று

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வர்-
''ஆத்மா, சித்ரூபர், ஸ்வப்ரகாசர், ஆனதினால்
ஆத்மாவிடத்தே அவகாசம் கூடாது
ஜடமாகிற மாயையிலே ஜகத் உண்டாகக்கூடாது
அவாந்தரத்தே இந்த அகிலாதி உண்டாமோ'' என்று

பார்த்தர் உரைக்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''சித்ஜடங்கள் கூடி ஜகமுண்டாம் மெய்போலே
நித்திரை காரணமாம் ஸ்வப்னம் போலே அதிலே
மாயை நிமித்தமதாய் தோன்றும் பிராந்தி இது
யுக்தியினால் பார்க்கும்போது வஸ்து ஒன்றொழிய இரண்டில்லை
அப்படிப்போலே இங்கும் சரீரத்ரயங்களற்ற
ப்ரத்யேகர் ஆத்மாதான், பாரும், தனஞ்ஜெயரே!'' என்று

ஸ்வாமி உரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஒளிக்கும் இருட்டுக்கும் கூடுமோ, மேகவர்ணா!
அசேதனத்திற்கு இச்சேதனம் எப்படி உண்டாச்சு, ஐயா''

பார்த்தர் இதுகேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''ஸ்வயம் ப்ரகாசரவர், ஸம்பூர்ண ரூபரவர்
ஸன்னிதானத்தினாலேதான் ஸர்வமும் ஸ்ருஷ்டிக்கும்
அசேதனத்திலே, த்ருஷ்டாந்தம் அதை உமக்கு சொல்லுகிறேன்
அசேதனமாகிற அயஸ் காந்த ஸன்னதிக்கே
அயஸ் வந்து சேஷ்டிக்க, அர்ஜுனா! காணவில்லையோ?
அப்படிபோல இங்கும் அசேதனமும் சேதனமாம்
அசேதனமாகிற கோமயக் கும்பலிலே
சேதனமான கிருமிகள் உண்டாகலையோ?

அப்படி போல இங்கும் அசேதனமாம் மாயையிலே
சேதனமாகின்ற பிரபஞ்சம் உண்டாகலுமாம்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஸூர்யப்ரகாசத்தால் அயஸ்ஸை தோற்ற வைக்கும் காந்தமதைப்போல்
ஆத்மப்ரகாசத்தாலே அசேதனமும் சேதனமாம்
ஆத்மாப்ரகாசித்த காரணந்தான் ஏதய்யா!''

பார்த்தரது கேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''அப்படிச் சொல்லாதே, அனவஸ்தா தோஷம் வரும்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஸ்தூல சரீரத்துக்கு ஸூக்ஷ்மம் தான் காரணமாம்
சூக்ஷ்ம சரீரம் அஸத்தாய் அமூர்த்தமாய் இருக்கையினுல்
ஸ்தூல சரீரம் ஸத்தாய் ரூபமாய் இருக்கையினுல்
ஸத்தும் அஸத்தும் அதுதான் கூட மாட்டாது
கரணமிருந்தாலும் கர்மங்கள் கூடாது
கரணமில்லாவிட்டாலும் கர்மங்கள் கூடாது
கரணங்கள் அற்ருலும் கர்மங்கள் கூடாது
எது எதுக்குகாரணமோ, ஈசுவரரே! சொல்லுமையா''

பார்த்தன் இது கேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''சூக்ஷ்ம சரீரம் அஸத்தாய் அமூர்த்தமாயிருந்தாலும்
அதுதானே காரணமாம் ஸ்தூல சரீரத்துக்கு
ஸத்தாய் ரூபமாய் இருக்கையிலேதானே,
ஜனன மரண உற்பத்தி நாசத்துக்கு,
தன்மாத்ரை காரணமாயிருக்கையினுல்
அதுதானே காரணமாம்'' என்று

ஸ்வாமி உரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''பஞ்ச விஷய தன்மாத்ரை காரணமோ,
ஏகதன்மாத்ரையோ? ஈசுவரரே! சொல்லுமையா'' என்று

பார்த்தன் அது கேட்க-
பரிபூரணரும் ஏதுசொல்வார்-
''பஞ்ச விஷய தன்மாத்ரைக்கு விகாரம் உற்பத்தி;
ஏக தன்மாத்ரைக்கு விகாராதி கூடாது''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''லிங்கசரீரமது வந்த வழி சொல்லுமையா,
வஸ்துமயமானவரே, சொல்லும்'' என

பார்த்தர் அது கேட்க-
பரிபூரணர் ஏதுசொல்வார்-
''லிங்க சரீரமது வந்தவழி தன்னை
நிர்வசனம் தன்னை பண்ணறியார் நெற்றியில் கண்ணுள்ளோரும்
அது போகும் வழி சொல்லுகிறேம், போர் விஜயா! கேளும்!
ஞானமது வந்தவுடன் லிங்கசரீரம் நசித்து
ஜனனமரணம் தொலைந்து ஜீவன் முக்தாளாய் விடுவார்''
என்றுசொன்னர்.

ஸ்வாமி உரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''சரீரத்தை ஏகமென்றீர் பிரதக்காக தோணறது
ஜீவன் ஏகமென்றீர் தேகாதிகள் தோறும்
தோணறதே, எவ்விதம் சொல்லுமையா, ஈச்வரரே!''
ஆத்மாவை ஏகமென்றீர், அநேகமாய் தோன்றுகிறதே
ஏகமென்று சொல்லறது கூடாது என்று சொல்லுமையா''

பார்த்தனிது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''சரீரமது ஏகம்; நாமரூபம் தான்பிரதக்கு
சட்டிபானைக்குத் தனித்தனியே ம்ருத்திகையுண்டோ?
அந்த ம்ருத்திகைதானன்றோ வெகுபாண்டமாய்த் தோன்றும்.
அப்படிப்போல எங்கும் பஞ்சபௌதிகம் ஏகம்;
சரீரம் பலவிதமாய்த்தான் தோன்றும்
ரூப உபாதியினுல் ஜீவனும் நானுவாய் தோணறது;
ஆதித்தன் ஏகன்; அநேக கடஜலத்தில்
உபாதியின் பேதத்தால் பல விதமாய் தோன்றும்

உபாதி தள்ளிபார்க்கிறப்போது வஸ்து ஒன்றொழிய இரண்டில்லை.
அப்படிப்போல, எங்கும் சரீரத்ரயம் அற்றதினால்,
ஏகராத்மாதான்'' என்று

ஸ்வாமியுரைக்க -
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''சரீரம் விழுகிறதே சகலருக்கும் முக்தியுண்டோ?''

பார்த்தன் அதுகேட்க-
பரிபூரணர் ஏது சொல்வர்-
''சரீரம் எடுப்பதுவும் சரீரம் விழுகின்றதும் அவ்வளவே
தானொழிய, முக்தி ஒருக்காலும் கூடாது,
சரீராபிமானம் விட்டு என்னையடைகிறதே முக்தி'' என்றார்

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''மூர்ச்சை, ஸுஷுப்தி பிரளயத்தில் முக்தியுண்டோ?''

பார்த்தரது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''மூர்ச்சை, ஸுஷுப்தியிலே மூலாக்ஞானம் இருக்கிறதே,
ஆகையினாலே முக்தி உண்டென்பது கூடாது,
ப்ரளயத்தில் கர்மம் ப்ரபலமாக இருக்கையினால்,
அப்பொழுதும் நம்மை முக்தி அடையவும் கூடாது''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''அவித்தையும் ஜீவனும் அநேகமோ ஏகமோ?''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''அவித்தையும் ஜீவனும் ஏகமேதானே ஒழிய
அநேகமென்னக் கூடாததால் அதனை
வித்தையினாலே விசாரித்துப் பார்த்தறிந்தவர்கள்
அத்தனையும் கற்பிதங்கள் என்றெண்ணி
கண்டெதெல்லாம் பொய்யேதான் வேறு
யாதொன்றுமில்லையென்று

நிச்சயித்துப் போட்டவர்கள் நிர்ப்பயமாய் இருப்பார்,
காரிய காரணங்களற்று கவலைக்கெடவேயிருப்பார்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''ஒருத்தனுக்கு பந்தம் வந்தால், உலகமெல்லாம் பந்தமுண்டோ?
ஒருவனுக்கு முக்திவந்தால், உலகமெல்லாம் முக்தியுண்டோ?''

பார்த்தனுரைக்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''ஒருவனுக்கு பந்தம் வந்தால், உலகபந்தம் கூடாது
ஒருவனுக்கு முக்திவந்தால், உலகமுக்தி கூடாது.
அவித்தைக்கு சக்தி அனந்தவிதமாய் இருக்கும்.
த்ருஷ்டாந்தத்தோடு தெரிய உனக்கு சொல்லுகிறேன்
அநேக கடம் ஜலத்தில் ஆதித்தன் தோன்றினுக்கால்
அதிலே ஒரு கடம் உடைந்தால் பிரதிபிம்பத்தோடு ஏகமதாம்
அன்னிய கடத்துக்கு ஹானிவரக்கண்டதுண்டோ?
அப்படிப்போல இங்கும் ஞானம் வந்த ஜீவனுக்கு
பந்த நிவர்த்திகண்டு முக்தி உண்டாம்
பிரதிபிம்ப உபாதியற்ருல் ஜீவனும் பரமாத்வாகவே இருப்பான்
பிரதிபிம்ப உபாதிக்கு காரணம் ஏது என்ருல்,
கடம், ஜலம், காற்று த்ரிவித உபாதியினுல்
தோன்றும் பிரதிபிம்பம்; அப்படிப்போல இங்கும்
சரீரம், அந்தக்கரணம், கர்த்ருத்வம்,
இந்த த்ரிவித உபாதியினுல் தோன்றும் பிரதிபிம்பம்,
கடமுடைந்து ஜலம் கவிழ்ந்து காற்றும்
உபாதியற்று பிரதிபிம்பம் பிம்பத்தோடு ஏகமேதான்
அப்படிப்போல இங்கும் சரீரம், அத்தக்கரணம்,
கர்த்ருத்வாதி த்ரிவித உபாதி விட்டால்
ஜீவனும் ஸ்வயம் ஸ்வருபனுகவே இருப்பான்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வான்-
''கடமுடைந்த மாத்திரத்தில் பிரதிபிம்பம் காணவில்லை
தோன்றவுமில்லை அப்படிப்போல இங்கும் ஞானம் வந்தமாத்திரத்தால்
சரீரம் அந்தக்கரணம் கர்த்ருத்வாதி தோன்ருமல் போகவில்லை
தோன்றுகிறதே, சொல்லுமையா''

பார்த்தனது கேட்க-
பரிபூரணர் ஏதுசொல்வார்-
''எரித்த படம் நியாயம்போல் தோன்றும் ஸ்வபாவமது,
அப்படியே அவர் அத்விதியர் தாமே'' என்றார்

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஜனனமரண மென்றீர், ஜீவனுக்கு பந்தமென்றீர்
அத்விதியர் என்றீர், ஆத்மாவை சொன்னீரே
த்வைதமயமாம் தோன்றுகிறதே, சொல்லுமையா, சுந்தரரே!''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''விசாரியாத தோஷத்தால் த்வைத விருத்தி மெய்போலத்தான்
தோன்றும்; விசாரித்தால் ஜீவனுக்கு பந்தமில்லை, மோக்ஷமில்லை
அவித்தையில்லை, மாயையில்லை, அக்ஞான தோஷமில்லை,
அவித்தையில்லா, மாயையில்லா அவர் அத்விதீயர்தானே'' என்றார்

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''அத்விதியர் என்றால் அவருக்கு அவித்தை கூடாதே''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''காரியமான அவித்தை பொய்யானாலும்
காரணமானதது மெய்யாயிருக்கு மிந்த
திருஷ்டாந்தத்தோடு உமக்கு சொல்லுகிறேன்-
ஸ்வப்னவஸ்தையிலே சோரனைக் கண்டவர்கள்
பயந்து நடுங்கி பரிப்ரமித்துகொண்டவர்கள்
விழித்தவுடன் சோரன் மித்தையாய் போனதுபோல்
பார்த்திருந்த பேர்களுக்கு ப்ரமை அநித்யமாகலையோ?
அப்படிபோல இங்கும் காரியமான பந்தமுக்தி
துக்கசுகம் ஸொர்க்க நரகம் ஜனனமரணம்
அத்தனையும் கற்பிதம் காணென்று நிச்சயித்து
கண்டதெல்லாம் பொய்தான் என,
நிச்சயித்து போட்டவர்கள் நிர்ப்பயமாயிருப்பார்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஒருவனுக்கு முக்தியென்றீர் உலகமெலாம் பந்தமென்றீர்
பொய்யிலே மெய்யுண்டோ, புருஷோத்தமராயா!''

பார்த்தரிது கேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''ரஜ்ஜுவிலே ஸர்ப்பமது இரண்டாகத் தோன்ருது
அத்வைதத்திலே த்வைதம் அத்தைவிடத் தோன்ருது.
ரஜ்ஜுஅது தானென்றறிந்தால் ஸர்ப்பமது தோன்ருது
ஸர்ப்பமென்றுதானறிந்தால் ரஜ்ஜுவிலே தான் ஒளிக்கும்
அப்படிபோல இங்கு த்வைதமது தானென்றறிந்தால்
அத்வைதம் தன்னிலே ஒளிக்கும்
அத்வைதமென்றறிந்தால் த்வைதம் அதிலே தோற்றமாய் ஒளிக்கும்

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ரஜ்ஜுவிலே ஸர்ப்பமது இரண்டாகத் தோன்றவில்லே
அத்வைதத்திலே த்வைதம் அநேகமாய்த் தோன்றுகிறதே''

பார்த்தரது கேட்க-
பரிபூர்ணர் ஏதுஉரைப்பார்-
''ஸொர்ணத்தில் ஆபரணம் தோன்றும் வெகுவிதமாய்
அப்படிப் போல் அத்வைதத்தில் த்வைதம் அநேகமாய்த் தோன்றும்
ஸொர்ணம் விவர்த்தமதால் தோன்ருது ஆபரணம்
பரப்ரும்ம விவர்த்தமதாய் பின்ஞென்றும் தோன்ருது''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''அறிந்துமிருக்கிருன், அந்நியருக்கும் சொல்கிருன்,
அனுபவஞானம் அவாளுக்கு ஏன் இல்லே, ஐயா''

பார்த்தரது கேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''சித்தமது ஏகாக்ரமற்று அஸம்பாவனே
ஆனவர்க்கு எப்போதும் அனுபவம் வாராது.
விபரீத பாவனேகள் மெய் போலவேத் தோன்றும்
விபரீதபாவனேக்கு காரணமேது என்ருல்

பூர்வஜன்மவாஸனையினுல் திருச்யம் மெய்போலவே தோன்றும்
திருச்யமாம் குதிரைகள் யானை சேனை குரு பாண்டவர்கள்
ஆசார்யாள் சிஷ்யர்கள் அத்தனையும், மித்தையென்ருர்
குதிரைகள் யானை சேனை குரு பாண்டவர்கள்
ஆசார்யாள் சிஷ்யர்கள் அத்தனையும்,
தன்னைத்தவிர வேறு இல்லை'' என்று சொன்ஞர்

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''குதிரைகள் யானைகள் சேனை குரு பாண்டவர்கள்
குரு சிஷ்யாள் எல்லாரும் தன்னைத்தவிர வேறு இல்லை
அப்படி சொன்னீராஞல் பிரதக்காய் அது தோன்றுகிறதே''

பார்த்தரது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''சித்த சுத்தி வாராத தோஷமே காரணந்தான்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''எதஞலே சித்த சுத்தி வரும், ஈசுவரரே! சொல்லுமையா!''

பார்த்தரது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
வர்ஞசிரமங்களை வகை வகையாய்ச் சொல்லி
''இன்னபடி கர்மங்கள் என்று சொல்லியது வேதங்கள்
மாயனவன் கட்டளை சொன்னபடி செய்து
கர்மங்கள் உள்ள தெல்லாம் பக்தியுடன் பண்ணிவந்து
பலத்யாகம் செய்து வந்தால் சித்த சுத்தி வந்து சேரும்
தேகாத்ம புத்தி விட்டு வ்யவசாய புத்தியிலே
ஏகமென்று தானறிந்து ஸ்வகர்ம சித்தி பெற்று
ஞானவாஞக எந்நாளும் தானிருப்பான்
ஸ்வகர்ம சித்தி வந்தால் அவனுக்கு ஒரு துக்கமில்லை
ஆதியிலே அன்றே அயன் உரைத்தார் என்று சொன்ஞேம்
இப்போ வேதமுகத்தாலே வெளியாகச் சொல்லுகிறேம்
க்ஷத்ரியாளுக்கு தர்மம் தனுசு எடுத்துப் போரிடுவது
பிராமணுளுக் கென்னவென்ருல் சமதமாதிஸம்பத்து
வைச்யனுக்கெது வென்ருல் வியாபாரம் பண்ணுவது
சூத்ரனுக்கெது வென்ருல் சிச்ருஷை பண்ணுவது

சொன்ன ஸ்வதர்மத்தை பண்ணுமலே யிருந்தால்
பாவம் வந்து சூழ்ந்து பாழ்நரகத்தில் வீழ்வாள்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''பாவமது வந்து சூழ்ந்தாலும் சூழட்டும்,
பாழ் நரகத்தில் வீழ்ந்தாலும் விழுகிறேன்,
இந்தப்பார் மன்னன் என்னும் கீர்த்தியை விட்டு விட்டு,
பிக்ஷை எடுக்கப் புகுந்தாலும் புகுகிறேன்
ஸகலமும் ஸஹித்து ஸர்வ கர்ம ஸந்யாஸம்
பண்ணிக்கொண்டாலும் கொள்ளுவேன், பரமாத்மாவே!
இந்த குடில ஸ்வதர்மத்தை கோவிந்தா, பண்ணறியேன்,
கோவிந்தா! கோவிந்தா!'' என்றே குலேந்திருந்தான்

பார்த்தனிப்படியுரைக்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''ஸர்வகர்ம ஸந்யாஸம் பண்ண வேண்டுமென்று
சொல்லவென்றுல் நாம் மாட்டோம்; ஸ்வதர்மத்தைப் பண்ணுவதுடன்
பலத்யாகம் பண்ணுமலே யிருந்தால்
சித்தசுத்தி வந்து தேகாத்ம புத்தி விட்டு
வ்யவசாயபுத்தியிலே ஏகமென்று தானறிந்து
ஸ்வகர்ம சித்தி வந்து ஞானம் வரமாட்டாது''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வான்-
''ஸ்வதர்மம் ஸ்வதர்மம் என்று சொல்லுகிறீர், சுந்தரரே!
சமதமாதி யன்றோ ஞானத்தின் ஸாதனமாம்?''

பார்த்தனது சொல்ல-
பரிபூர்ணர் ஏதுரைப்பார்-
''விப்ராளுக்கன்றோ வேண்டின கர்மமெல்லாம்
க்ஷத்ரியாளுக்கெது வென்றுல் தனுஸ்ஸெடுத்து போரிடுவது
வைச்யனுக்கெது வென்றுல் வியாபாரம் பண்ணுவது
சூத்ரனுக்கெது வென்றுல் சிச்ரூஷை பண்ணுவது
பலவிதமும் கர்மம் தன்னே பழுதறவே பண்ணி வந்தால்
பலத்தையிதுதான் கொடுக்கும் நம்முடைய ஸ்வதர்மமே.
உன் ஸ்வதர்மதத்தை நீ சற்றேனும் பண்ணிவந்தால்
நமக்கும் சம்மதமாம், நீயும் சங்கல்பத்தையடைவாய்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''ஐயா! வேதங்கள் ஏன் ஐயா, வெகுவிதமாய் சொல்கிறது
கர்மத்தையும் மந்திரத்தையும் உபாசனையையும் தத்பலத்தையும்
யோகத்தையும் லோகத்தையும் வேதத்தையும் தேவதையும்
நானுவிதமாக சொல்லுகிறதேன்? ஸ்வாமி!
ஞானமே சாதனமென்று எப்படியாகும்? ஐயா!''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''நிஷ்காமனுயிருந்தால் கர்மம் ஞானத்தின் சாதனமாம்
ஸகாமனுய் பண்ணி வந்தால் தத்பலத்தையும் தானடைவான்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''ஐயா, இந்திரன் சந்திரன் வருணபகவான் வாயு
ஆசாரியாள் அக்கினி இஷ்டி ஹோமாதி
கர்மங்களும் அசுவமேத யாகங்களும் ஞான ஸாதனம்
ஆகமாட்டா தாகையினுல் வேதங்கள் தானே
அநேக கர்மங்களுக்கும் இரண்டு பலன்களிலே
எப்படி ஹேது, ஐயா, கோவிந்தா! சொல்லுமையா''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''அதிகாரியைக் குறித்து அநேகமாய்ச்சொல்லுவதும்
அதிகாரியைக் குறித்து அநேகமாய் சொல்லாததும்
அதிகாரி பேதத்தால் அநேகமும் ஏகமேதான்;
திருஷ்டாந்தத்தோடு உமக்கு சொல்லுகிறேன்
கொஞ்சமும் ஐயம் அதிலே கூடாது; எல்லா கர்மமும்
ஞானத்தில் முடிவு பெறுவதால் ஏககர்மமே ஒழிய அநேக கர்மம் ஆகாது
சொற்ப ஜலாசயங்களின் பலன்களெல்லாம்
ஏகமகாஜலமாம் நீர்பெருக்கில் அடங்கிக்காணவில்லையோ?
அதுபோலவே பலகர்மங்களின் சொற்ப பிரயோஜனம் எல்லாம்
ஞானமாம் ஆத்மலாபத்தில் அடங்கிக்கிடைக்கிறது
அதனுல் தான் எங்கும் வேதங்கள் தானே வெகுவாய்
கர்மத்தையும், மந்திரத்தையும், உபாஸனையும்,தத்பலத்தையும்
யோகத்தையும், லோகத்தையும், வேதத்தையும் தேவதையையும்

நாஞவாய் சொன்ஞலும் எல்லாம் ஞானத்தில் முடியுமென்பதால்
நாஞவாய் சொன்ன கர்மமெல்லாம் ஞானஸாதனம்தானே'' என்று

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''ஏகமேப்ரும்மமென்று வேதத்திலே சொல்கிறதே
வெகுவிதமாய் கர்மத்தையும் வேதமேன் சொல்லிற்று?''

பார்த்தனிது கேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''பாலனுக்கு தாயார் வயத்துவலி போக
''மிளகைக்குடி'' என்ருல் ''வேண்டாம் எனக்கு'' என்பான்
''வெல்ல மிந்தா'' என்றவுடனே மிளகையும் தான்குடிப்பான்
அப்படிபோல எங்கும்
ஸ்வதர்மம் என்று தான் மிளகை சொல்லிற்று வேதம்
பலமென்னும் வெல்லத்தை ஸத்யமாய் சொல்லிற்று''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''பண்டிதாளானவர்கள் பலத்தை அஸத்யம் என்பாள்
அபண்டிதாளானவர்கள் பலத்தை ஸத்யம் என்பாள்,
ஏதய்யா ஸத்யம் என்று சித்தம் அலேகிறதே''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''பவுண்டரீகம் அசுவமேத யாகம் அதிராத்ரம்
அக்கினி ஹோத்ரம் தன்னே அபிமானம் பண்ணுபவர்கள்
பரமார்த்தம் தன்னே விசாரிக்க மாட்டார்கள்
வித்தையினுல் அத்தை விசாரித்துப் பார்த்தவர்கள்
கற்பிதங்கள் என்று சொல்லி கண்டதெல்லாம் பொய் என்று
நிச்சயித்துப் போட்டவர்கள் நிர்ப்பயமாயிருப்பார்
காரியகாரணங்களற்று கவலே கெடவே இருப்பார்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''ஞானிக்கும் கர்மிக்கும் பேதமெது சொல்லுமையா''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-

''ஞானி அகர்த்தாவாயிருந்து கொண்டு அத்தனையும் மித்தை என்பார்
கர்மி கர்த்தாவாயிருந்துகொண்டு அத்தனையும் ஸத்யம் என்பான்
ஆகையினாலே அதுவே விசேஷமேதான்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''ஞானத்தை ச்ரேஷ்டம் என்றீர்; கர்மத்தை இஷ்டமென்றீர்
ஏதய்யா ஸத்யமென்று சித்தம் அலைகிறதே''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''ஞானி சுத்தஅந்தக்கரணனாயிருந்து ஞானத்தை ச்ரேஷ்ட மென்பான்
கர்மி அசுத்தஅந்தக் கரணனாயிருந்து கொண்டு
கர்மத்தை ச்ரேஷ்டமென்பான்
ஆகையினாலே அதுவும் விசேஷமேதான்
ஆகையினாலே ஸ்வதர்மம் விடக்கூடாது
சுத்த அந்தக்கரணனுக்கும் அது சொல்லக்கூடாது''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
நானும் சுத்தஅந்தக்கரணனாயிருந்து கொண்டு ஸ்வதர்மத்தை கைவிடுகிறேன்
ஸ்வதர்மம் துக்ககரமாய் ஹிம்சையாய் இருக்கையினால்
ஞானம் சுபகரமாய் அஹிம்சையாய் இருக்கையினால்
நான் ஞானவானாய் இருந்து கொண்டு ஸ்வதர்மத்தை கைவிடுகிறேன்''

பார்த்தனிதுசொல்ல-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''துக்ககரமென்று ஸ்வதர்மத்தை விட்டவர்களுக்கு
உலகத்தில் ஜென்மமெடுத்த வினை தப்பாது
ச்ரேஷ்டர்களால் அனுஷ்டிக்கப்பட்டதனால் தானும் அனுஷ்டித்து
சகலருக்கும் சொல்லிவந்தால்
ஸாது வென்று சொல்லி சகலரும் சொல்லுவார்கள்
உன்னைக்குறித்து ஒரு கர்மமும் தேவையில்லை
லோகரக்ஷார்த்தமாய் பண்ணி நில்லாய் பார்த்தா!''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''அகிலம் பிழைக்க அனுஷ்டித்தார் யாருமுண்டோ?''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''அநேகம் மஹாத்மாக்கள் அனுஷ்டித்து கொண்டுவராள்
நாம் அறியாதது ஒன்றுமில்லை, ஆக்ஞை செய்வார் யாருமில்லை
தெரியாதது ஒன்றுமில்லை, சிக்ஷிப்பார் யாருமில்லை,
இருப்பினும் நாமும் அகிலம் பிழைக்க கர்மத்திலே இருக்கிறோம்
ஞானியென்று சொல்லி ஸ்வதர்மத்தை விட்டுவிட்டு
கர்மத்தை பண்ணாமலேயிருந்தால் மனஸு ஸொரூபத்தில் நில்லாது
விஷயத்தில் நிற்குமது; விஷயத்தில் நின்றாக்கால்
பந்தத்தைத்தான் கொடுக்கும்; ஸொரூபத்திலே நின்றால்
ஸ்வரூபத்தை தானடைவான்; சொன்னேன் நான்'' என்று

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''சுபம் தரும் காரணத்தை சொல்லுமையா, சுந்தரரே''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''இச்சித்த பொருளில் இச்சை என்றும் வைக்காதே
அநிச்சபதார்த்தத்தை அனாதரவு பண்ணாதே
இரண்டும் சமமாக பார்த்துவந்தால் தத்பதத்தைத் தானடைவர்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''சோகார்ணவத்தை கடக்க உபாயமதை சொல்லுமையா, சுந்தரரே''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணரும் ஏது சொல்வார்-
''பக்தியென்னும் ஜோட்டை பரிவுடனே தானணிந்து
ஞானமென்னும் தெப்பத்தில் நன்றாகவே ஏறி
நிர்த்வேஷராகி நிரந்தரமும் நீயிருந்தால்-அப்பொழுது
ஸ்வதர்மானுஷ்டானம் சொல்கிறதும் கேட்கிறதும்
சகலமும் உன்னைவிடும்; நீயும் தானாகவே யிருப்பாய்'' என்று

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''தானாயிருக்கின்ற ஸாதனத்தை சொல்லுமையா''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''ஸத்துக்களாகிற தடாகத்தில் போயிறங்கி
ச்ரவணும்ருதத்தாலே ஆசையென்னும் சேறலம்பி
நிர்வைரம் தன்னுலே நீந்திக்கரை ஏறி
வைராக்கிய சூரியனுல் சோகார்ணவத்தை வற்றடித்து
முக்தியென்னும் தீபத்தால் மோகாந்தகாரம் தன்னை நீக்கிவிட்டாயாஞல்
பிரத்யேக ஆத்மாவாய் பரமாத்மாவாய் நீயிருப்பாய்
அப்பொழுது ஸ்வதர்மானுஷ்டானம் சொல்கிறதும் கேட்கிறதும்
சகலமும் உன்னைவிடும் நீயும் தாஞகவேயிருப்பாய்
ஸத்துக்கள் ஸேவையினுல் சகலமும் விட்டுப்போம்
சாதுக்கள் ஸேவையினுல் துஸ்ஸங்க நாசம்வரும்
மகத்துக்கள் ஸேவையினுல் விஷயவாஸனை நசிக்கும்
மகாத்மாக்கள் ஸேவையினுல் ஆத்மாவாய் தானிருப்பாய்
தரிசித்த மாத்திரத்தால் ஜனனமரணம் தொலையும்
நமஸ்கரித்த மாத்திரத்தால் நல்லதொரு ஞானம் வரும்
பிரச்னமது பண்ணி வந்தால் பாவமது மோசனமாம்
கிட்ட இருந்தால் க்ருபைக்கு பாத்திரமாம்
அண்டையிலே இருந்தால் அவர் கிருபைக்கு பாத்திரமாம்
தத்பதார்த்தத்தை தாஞய் அனுக்ரகிப்பார்
அனுக்ரகித்த மாத்திரத்தால் அனுபோக ஞானம்வரும்
அனுபோக ஞானம் வந்தால் அக்ஞானநாசம் வரும்
அக்ஞான நாசம் வந்தால் விக்ஞான போதம் வரும்
விக்ஞான போதம் வந்தால் எங்கும் வெளியாகவே நிறைவாய்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''அவர் லக்ஷணங்கள் இன்னதென்று, நிர்மலரே! சொல்லுமையா''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணரும் ஏது சொல்வார்-
''ஸர்வம் சமஞகி சகலருக்கும் பந்துவாய்
நிர்த்வேஷராகி நிரந்தர நிஷ்டருமாய்
நிர்குண ப்ரும்மத்தை சித்தத்தில் வைத்தவராய்
ஏழுசமுத்திரமும் ஏகமாய்ப் போஞலும்
பன்னிரெண்டு ஆதித்யர் கூடி உதித்தாலும்
பிரளயாக்கினி வந்து பிரபலமாயெரித்தாலும்

துலையாத செல்வம் மலைபோல் குவிந்தாலும்
ஸ்வயமாய் தேவேந்திரன் அமுதமது தந்தாலும்
மலைபோல அசைவற்று வஸ்துமயமாய் இருப்பாள்
அநேக சுபகரங்கள் மேன்மேலும் வந்தாலும்
அன்னியர் சுகம்போலே அவர்களதை பாவிப்பார்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''பாஷை அவர்களுக்கேது? பரிபூர்ணா! சொல்லுமையா''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது உரைப்பார்-
''அகிலமநித்யம் ஆத்மாவே நித்யமென்பார்
பிரபஞ்சம் அநித்யம் பரமாத்மா நித்யமென்பார்
தேகம் அநித்யம் ஸ்வரூபமே நித்யமென்பார்
த்வைதம் அநித்யம்'' ஸ்வஸ்வரூபமே நித்யமென்பார்

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''ஸ்தித ப்ரக்ஞை நிஷ்டையை தெரிய எனக்கு சொல்லுமையா''

பார்த்தனது உரைக்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''ஸர்வம் ஸமனாகி ஸகலருக்கும் பந்துவாய்
நிர்த்வேஷராகி நிரந்தரம் நிஷ்டருமாய்
நிர்குண ப்ரும்மத்தை சித்தத்தில் வைத்தவராய்
தேகாபிமானமற்று ஆனந்தத்தை அடைந்து
சரீராபிமானமற்று இருப்பாள் ஸ்திதிப்ரக்ஞாள்
லோகவிவகார ஒன்றிலும் ஆசையற்று
ஜகத்தாசையற்று இருப்பாள் ஸ்திதிப்ரக்ஞாள்
சகல இந்திரியங்களையும் தன்னிடத்தில் தானிருத்தி
தத்துவ விசாரத்தால் சகலமும் மித்தையென்று
தியான ஸமாதியிலே தானாகவேயிருப்பார்
ஆதிவியாதி அநேகவித ஸம்ஸாரம்
தாபத்ரயங்கள் துக்க சோக மோஹங்கள்
பந்துமித்ர களத்ர ஐச்வர்யாதிகளுக்கு
ஹானியேதும் வந்தாலும் சற்றும் சலியாமல்
அன்னியர்க்கு ஹானிவந்தால் போலவேத்தானிருப்பாள்

வேண்டும் சுபகரங்கள் மேன்மேல் வந்தாலும்
அன்னிய சுபம்போலே அவாள் அதை பாவிப்பாள்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஸ்தித ப்ரக்ஞ நிஷ்டை எனக்கு எப்போது வரும் ஐயா''

பார்த்தரது கேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''ப்ரியங்காதி, சித்ரகாம ஸர்வப்ராப்த மனோகதமெல்லாம்
உந்தனை விட்டுபோனால் ஸ்திதப்ரஞ்ஞரென்று உரைத்தார்
உன்னைவிட்டு போகாமலே யிருந்தால் ஸ்திதப்ரக்ஞரல்ல என்றார்
உன்னைவிட வேறென்று இரண்டாகத் தோணினக்கால்
சாக்ஷியதாகவே பார்த்திருப்பாய்'' என்று சொன்னார்

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஐயா! ப்ரியங்காதி சித்ரகாம ஸர்வப்ராப்த மனோகதமெல்லாம்
உந்தனை விட்டுபோனால் ஸ்திதப்ரக்ஞன் என்று சொன்னீர்
உந்தனைவிட்டு போகாமலேயிருந்தால் ஸ்திதப்ரக்ஞன் இல்லை என்றீர்
உன்னை விட்டு இரண்டாக தோணினக்கால் ஸாக்ஷியாக
பார்த்திடுவாய் என்று சொன்னீர்
அபிப்ராயம் கூடவில்லை, அச்சுதரே! சொல்லுமையா''

பார்த்தன் உரைக்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''உன் ஜாக்ரத் அவஸ்தையிலே தோன்றுகிற துக்கசுகம்
ஸ்வப்பனவஸ்தையிலே தோன்றுகிற துக்கசுகம்
ஸுஷுப்தி அவஸ்தையிலே தோன்றாமல் போனதுபோல்
உன் ஜாக்ராவஸ்தையிலே உன்னைவிட்டு போகும்போது
ஸ்திதப்ரக்ஞனே நீ ஆவாய் காண்'' என்று

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஸுஷுப்தி அவஸ்தையிலே சரீரமும் ஜகத்தும்
சுகதுக்கம் இரண்டும் தோன்றுகிறது இல்லை, ஐயா!
ஜாக்ராவஸ்தையில் சரீரமும் ஜகத்தும் மனதும் இருப்பதினால்
சுகதுக்கம் இரண்டுகளும் தோன்றாமல் எப்படிப்போம்''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏதுரைப்பார்-
''ஜாக்ராவஸ்தையிலே பூதங்கள் விழித்திருக்கிற
போது ஸ்திதப்ரக்ஞன் நித்திரையில் இருப்பது போல் இருப்பான்
ஸுஷுப்தி அவஸ்தையிலே பூதங்கள் தூங்கும் போது
ப்ரும்ம விசாரம் தன்னிலே ஸ்திதப்ரக்ஞன் ஜாக்கிரதையாயிருப்பான்'' என்று

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஒரு பகலுக்குள்ளே இரவுபகல் எப்படி உண்டாச்சுதய்யா''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏதுசொல்வார்-
''சூரிய உதயமானவுடன் மற்ற பக்ஷிகளுக்கு உலகமெல்லாம் தெரியும்
உலூகத்தின் திருஷ்டிக்கு ஒன்றும் தெரியாது''
அத்தனை பேதமுண்டு அக்ஞானிக்கும் ஞானிக்கும்'' என்று

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''மனோநிஷ்டையென்று மறுத்து நீர் கேட்பீரே,
மனது லயமடைந்து விஷய வாசனையும் நசித்தால்
மாதவரே! முக்தியுண்டென்று சொன்னீரே,
மனது லயிக்காதே, விஷயவாசனையும் போகாதே,
மோக்ஷமது உண்டா? முகுந்தரே! சொல்லுமையா''

பார்த்தனுரைக்க-
பரிபூர்ணரும் ஏது சொல்வார்-
''மனது லயமடைய வேணுமென்று தேவையில்லை
மன்னவனே! மனது ஸத்துமயமாகி
ததாகாரமாய் இருந்தால், விஷயாதி வாசனையும்
அத்வைத வாசனை ஆகவேதான் இருக்கும்
மோக்ஷமது தானே முடிந்த அவஸ்தை'' யென்றார்

''சகல நதிகளும் ஸமுத்திரத்திலே போய் விழுந்தால் தான்
அதிகமாகாது
சகல நதிகளும் ஸமுத்திரத்திலே போகாமலே இருந்தால் தான்
குறைச்சலாகாது
சகல நதிகளும் ஸமுத்திரத்திலே போய் கலந்தால் தான்
கலக்கமாகாது

அப்படிப்போல எங்கும் சகலவிஷயம் வந்தாலும் சந்தோஷம் வாராது
சகல விஷயம் வராமலிருந்தாலும் தான் துக்கம் தோன்ருது
ஜலத்தோடு ஜலமாக ஏகமாகவே விளங்குமாப்போல்
ஆனந்தத்தோடு ஆனந்தம் ஏகமாகவே இருப்பார்''

''ஆபூர்யமாணன், அசலபிரதிஷ்டன்
சகலமும் தன்னது அன்றென்று அவன்
தாணுகவேயிருந்தால் அவனுக்கே பந்தமில்லே!''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''விவேகமற்ற பேர்களுக்கு பந்தமது எப்படியோ''

பார்த்தனுரைக்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''அற்ப சந்தோஷம் வந்தால் ஆனந்தத்தையடைவார்
அத்யந்த துக்கம் வந்தால் அதிதுக்கமாயிருப்பாள்
சகலமும் என்னதென்று என்னதென்று கூறி
அபிமானம் பண்ணுகையால், அவனுக்கே பந்தமுண்டு''

ஸ்வாமி உரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஞானிக்கு ப்ராரப்த கர்மத்தால் பிரயோஜனம் இல்லாவிட்டால்
ஆரப்த போகம் அவன் புஜிக்க காரணம் ஏன்?''

பார்த்தனுரைக்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''வேகத்துடனே விசையுடனே எய்த அம்பு
வேகம் தெளிந்தால் விழுந்துவிடும் பூமியிலே
ஆரம்பித்த போகமவர் புஜித்து நசித்தபின்பு
இந்த ப்ராரப்த தேகம் விழும், ஜீவன் பரமாத்மாவாயிருப்பார்''

''அதுஎப்படியென்ருல், இதில் ஒரு திருஷ்டாந்தம்
''அதிபால ரோதனத்தால் ஆட்டிவிட்ட தொட்டிலது
நித்திரை வந்தாலும் நில்லாமல் ஆடுமது
விசை தீர்த்தமாத்திரத்தில் ஆடாதே நிற்குமது
அப்படிப்போல இங்கு பாலனுக்கும் தாயாருக்கும்
லாபாலாபங்கள் அவர்களுக்கு அதிலே சற்றுமுண்டோ?''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''ஞானி போகாமலிருப்பானேன், கர்மிபோய் போய் வருவானேன்?''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது உரைப்பார்-
''ஞானி தான் பண்ணின கர்மத்தையும் மந்திரத்தையும்
யக்ஞதான தபோபலத்தையும் புனராவ்ருத்தியன்னியிலே
மறுபடியும் மறுபடியும் போக்குவரத்தில்லாது
பரமேச்வரார்ப்பணம் பண்ணி பரிபூர்ணராயிருப்பார்
அக்ஞானி தான் பண்ணின கர்மத்தையும் மந்திரத்தையும்
யக்ஞத்தையும் தானதபோபலத்தையும்
இன்னுமொரு ஜன்மத்துக்கு வேணுமென்னும் இச்சையினுல்
யக்ஞமது பண்ணுகையால் மறுபடியும் மறுபடியும் ஜன்மம்
எடுத்து வருவானவன்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏதுசொல்வார்-
''ஆரப்த போகம் அநித்ய மென்று சொன்னீரே,
ஞானிக்கும் அன்ன ஜல பானத்தில் இச்சைவரக் காரணமேன்?''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏதுரைப்பார்-
''தேஹதாரணைக்கு இச்சையாய் ப்ராரப்தம் என்றறிவாய் பார்த்தா நீ!
இச்சையாய் ப்ராரப்தம் என்று கர்மம் பண்ணட்டும்
கர்மத்தை பண்ணினுல் பண்ணட்டும், பண்ணுமல் தான் இருக்கட்டும்
பண்ணினுலென்று பலனென்றும் வாராது தான் அகர்த்தன்எனும் ஞானிக்கு
பண்ணுமலிருந்தாலும் பிரத்யவாயம் வராது
தண்ணீர் குடிக்கவென்று தாகமெடுத்தவர்கள்
பூமியின் கண் ஜலத்தை போயடையுமாப்போலே
சாதனங்களாலும் உபாயங்கள் தன்னுலும் சாதித்தால் தான் அடைவன்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''சாதனங்கள் இன்னதென்று சொல்லுமையா சுந்தரரே''

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணரும் ஏது சொல்வார்:
''பசுவை கறந்து பாலே காய்ச்சி அமுதிட்டு
கடைந்தவுடன் வெண்ணேயைக்கண்டெடுப்பது போல்
பசுவை கரக்கிருப்போல் ஸ்வதர்மத்தைப் பண்ணிவந்தால்,

பாலேகாய்ச்சுகிருப்போல் இந்திரியங்களே தபசினுல் வற்றடித்து,
ஆற்றுகிருப்போலே அகந்தைதனே அடக்கி,
அமுதிடுகிருப்போல பாஹ்யேந்திரியங்களே அடக்கி,
வ்ருத்தியாகிற கயிற்றை மனதாகிற மத்திலே தான் பூட்டி,
ஹ்ருதயமாகிற தாழியிலே திருத்தி
கடையும்போது ஏகரஸமான வெண்ணே
எங்குமாகி பெருகும் பிரும்மம் என்னும் வெண்ணெதன்னே
திரட்டி எடுக்கும்போது கர்மமென்றும் தானென்றும் காணுது ஏகமேதான்''

ஸ்வாமியுரைக்க-
தனஞ்ஜெயனும் ஏது சொல்வார்-
''இரண்டாகக் காணுத போனதொரு காரணத்தை
சொல்லுமையா எனக்கு, சுந்தரரே!'' என்று சொன்ஞர்

பார்த்தனது கேட்க-
பரிபூர்ணர் ஏது சொல்வார்-
''குந்தாளம் கொண்டு கூலிக்கு போனவர்கள்
புதை பணம் கண்டெடுத்தால் குந்தாளம் தேடுவரோ?
குந்தாளம் தேடுவரோ பின் கூலிக்கும் போவாரோ?
அப்படிப்போல எங்கும் பிரும்மம் என்னும் பொற்குடத்தை
பேர்த்தெடுத்த மாத்திரத்தால் கர்மமென்றும் தானென்றும்
காணுது இரண்டாக, கண்டுகொள்ளும் பார்த்தா!'' என்ருர்

## பயன்

பார்த்தனுக்கு கிருஷ்ணன் பரிவுடன் உரைத்த கதை
அருச்சுனனுக்கு கிருஷ்ணன் அனுக்கிரகம் பண்ணினதை
ஸுபோதனே அர்த்தத்தை சொன்னவர்கள் கேட்டவர்கள்
கற்றவர்கள் கேட்டவர்கள் கைவல்யத்தை அடைவார்
அர்த்தம் தெளியும் அனுபவ ஞானம் வரும்
சித்தம் தெளியும் திடமான பக்தியுண்டாம்
அச்சுதனுர் பாதம் அடைவார் எளிதாக
மாதவர்தம் பாதம் மறவார் ஒருநாளும்
ஆனந்த சித்கனத்தில் அமர்ந்து லயித்திருப்பார்.

## ஸ்ரீமத் பகவத் கீதா ஸாரம் ஸம்பூர்ணம்



## மங்களம்

பவபயங்கள் போக்கிவைத்து பரமபதம் தந்தவர்க்கு
பக்தி வைராக்ய நிலே தந்தவர்க்கு
நேதி நேதி வாக்கியத்தால்;
நிச்சயங்கள் காட்டி வைத்த நிர்மலர்க்கு
ஜெயமங்களம் நித்ய சுபமங்களம்

அக்ஞானம் போக்கி வைத்து ''ப்ரக்ஞானம் ப்ரும்மம்'' என்று
''அஹமஸ்மி'' பதம் காட்டி வைத்த ஆத்மாவுக்கு
''தத்வமஸி'' வாக்யத்தால் தன்வடிவை என்வடிவாய்
தானுய் நிறைந்திருந்த சாக்ஷிவஸ்துவுக்கு (ஜெயமங்களம்)

''அயமாத்மா ப்ரும்மம்'' என்று அனுபோகத்தை காட்டி வைத்து
ஆதியந்தமில்லாத அனந்தருக்கு
ஸத்து வடிவாய் விளங்கும் தரணி பதினுலுக்கும்
சித்தாய் நிறைந்திருந்த சின்மயருக்கு (ஜெயமங்களம்)

சாக்ஷிநிலே கண்டவர்க்கு தன்மயமாய் ஆனவர்க்கு
ஸத்து சித்தானந்த ஸத்குணருக்கு
ஆனந்தத்தால் விளங்கும் அவனி பதினுலேயும்
அற்புதமாய் பார்த்திருந்த ஆத்மாவுக்கு (ஜெயமங்களம்)

வேதமென்னும் தன்விளக்கை விஸ்தரித்து தானெடுத்து
சாஸ்திரமாம் காட்டில் ஜடிதியிலே புகுந்து
ஞானமென்னும் தீபத்தால் காடு பஸ்மமாக்கி
கர்மபந்தம் போக்கிவைத்த கர்த்தாவுக்கு (ஜெயமங்களம்)

ஹ்ருதயமென்னும் மண்டபத்தில் எந்தனுட ஸத்குரு
வெங்கடேச பெருமானே ஏத்தி வைத்து
நித்தியமாய் பூஜைபண்ணி இஷ்டமாய் ஸ்தாபிக்க
திடமான பக்தி தந்த நிர்மலருக்கு (ஜெயமங்களம்)



இந்நூலில் காணப்படும் பாடல்களைப்பாடியவர் செங்கோட்டை ஞானி ஆவுடை அக்காள் என்பவர். ஏறக்குறைய 350 ஆண்டுகளுக்கு முன்னம் வாழ்ந்த ஆவுடை, கன்னி கழியாமலேயே கணவனை இழந்து கைம்பெண்ணாகி, பின்னர் இறையருளாலும், ஸ்ரீதர வேங்கடேச ஐய்யாவாள் என்ற புகழ்பெற்ற ஸத்குருவின் கிருபையாலும், பெரும் ஞானியாக விளங்கி, வேதாந்தஸாரமாய் பல பாடல்களை இயற்றி, உலகோர் ஏத்தி வணங்கும் உன்னத நிலை பெற்றார்.

ஆத்மானுபூதியின் மேலீட்டால் வெளிவந்த அவரது அருட்பாடல்கள் அவரது பேரின்ப நிலையைக் குறிப்பதுடன், பல அரிய வேதாந்த சிந்தனைகளையும், ஸாதனைகளையும் அள்ளிக் கொட்டும் ஊற்றுக்கள்.

தெள்ளத் தெளிந்த தமிழில், எளிய நடையில் அமைந்துள்ள இந்த பக்தி ஞானரஸப் பாடல்கள் திருநெல்வேலி ஜில்லாவில் கர்ண பரம்பரையாக பரவிவந்து ப்ரஸித்தி பெற்றவை. அவற்றில் சில பாடல்களை ஸ்ரீ இராமஸ்வாமி தீக்ஷிதரும், ஸ்ரீ வைத்தியநாத பாரதியும், 1894லிருந்து 1910வரை சிறு புத்தகங்களாக வெளியிட்டனர். ஆய்க்குடி ஸ்ரீ வேங்கடராம சாஸ்திரிகள் மேலும் பல பாடல்களைத் தேடித் தொகுத்து மிகச் சிறப்பான ஒரு பதிப்பை 1953ல் வெளியிட்டார்.

அதன் பின்னும் பல அன்பர்கள் தங்கள் வசமிருந்த, ஸ்ரீவித்தை சோபனம், ஸ்ரீ பகவத்கீதா ஸாரஸங்கிரஹம், அனுபோக ரத்னமாலை போன்ற பாடல்களை கொடுத்து உதவினார்கள். அவைகளும் இப்பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளன.